உலோகாராட்டியரான ஸ்ரீகிருஷ்ண பகவான் மஹாபலசாலியாயிருந்த பகாசுரனைச் சம்ஹரித்ததை அவன் தம்பியாகிய அகாசுரன் கேள்விப்பட்டு வியசனமுற்று, கோபமுடையவனாய் யோசித்து, அந்த ஸ்ரீகிருஷ்ணபகவானையும் கோபாலபாலர்கள் யாவரையும் நாசஞ்செய்து விடுகிறேனென்று கம்சனுடனே சபதஞ்செய்து அவனிடத்தில் செலவுபெற்றுக்கொண்டு வந்தானென்றும், மாயாமூர்த்தியான ஸ்ரீபகவான் அந்தத் துராத்மாவாகிய அகாசுரனையும் நிமைப்போதில் சம்மரித்தாரென்றுஞ் சொல்லுகின்றது.

ஒருநாள் காலையில் ஸ்ரீகிருஷ்ணபகவான் இடைப்பிள்ளைகளை வேணுநாதத்தினால் கூப்பிட, அப்போ சகலரும் நித்திரைதெளிந்து ஸ்ரீகிருஷ்ணபகவானருகில் வர, அவர்களைநோக்கி இன்றைக்கு நாமெல்லோரும் வனத்திலிருக்கவேண்டியிருக்கிறது. ஆகாரத்தைச் சேகரித்துக் கொண்டு வாருங்கள் என்றுகூறி இராமகிருஷ்ணனிருவருந் தங்கள் கன்றுகளை ஓட்டிக்கொண்டு போனார்கள். அப்படியே இடைப்பிள்ளைகளும் நாநாவித ஆகாரங்களைச் சேகரித்து, தங்கள் கன்றுகளையும் ஓட்டிக்கொண்டு, நல்ல புல்லுகளுள்ள வனத்து நிழலிலே விட்டு விளையாடிக் கொண்டிருந்தார்கள் அப்போ நவரத்தினங்களாற் செய்த நாநாவித பூஷணங்கள் அணிந்துகொண்டிருக்கிற ஸ்ரீராமகிருஷ்ணர்கள் தோழமார்களுடன் அங்கே காட்டிலிருக்கிற தளிர்களையுங் காய்களையும் சிலர் மாலையாகக்கட்டிக் கழுத்தில் போட்டுக்கொண்டும், சிலர் புஷ்பங்களினால் அலங்கரித்துக்கொண்டும், சிலர் பூங்கொத்தைத் தலையிற் சொருகிக்கொண்டும், சிலர் மயில் தோகையை அலங்கரித்துக்கொண்டும், சிலர் வெள்ளைக் குன்றிமணி செகப்புக் குன்றிமணிகளைக் கோவையாகக்கோத்து அங்கங்களி லணிந்துகொண்டும், யமுனாநதிமணல் திட்டிலே உட்கார்ந்து போஜனம் பண்ணிக்கொண்டிருந்தார்கள்

அப்படி பண்ணுகையில் பரிகாசமாய் ஒருவனுடைய அன்னத்தை ஒருவன் திருடி அவன்கண்டால் கொடுத்து விடுகிறதும், கொஞ்சத் தூரம்போய்ப் படுத்து ஒளித்துக் கொள்ளுகிறதும், சிலர் ஸ்ரீகிருஷ்ணபகவானை ஓடிவந்து சேஷ்டிக்கிறதும், சிலர் புல்லாங்குழல் ஊதுகிறதும், சிலர் அதைப்போல ஈசல் கொட்டுகிறதும், சிலர் மாட்டுக்கொம்பை ஊதுகிறதும், சிலர் பக்ஷிகளுடைய நிழலை அநுசரித்து ஓடுகிறதும், சிலர் அன்னங்களுக்குச் சரியாய் நடக்கிறதும், சிலர் மணல் திட்டினில் கூட்டமாயிருக்கிற கொக்குகளின் நடுவில் உளுக்காருகிறதும், சிலர் குரங்குகளுக்குச் சரியாய் மரமேறுகிறதும், சிலர் தவளையைப் போலத் தத்தித்தத்தித் தாண்டுகிறதும், சிலர் நதிகளிலுந் தடாகங்களிலும் மூழ்கி விளையாடுகிறதும், சிலர் சலத்தில் நிழலைப்பார்த்துப் பரிகாசஞ்செய்து கொள்ளுகிறதும், சிலர் தாங்கள் கூவுகிறதற்குப் பிரதித்தொனிகேட்டால் சண்டைக்குப் போகிறதும், இப்படி மிகவும் ஆச்சரியகரமான விளையாடல்களைச் செய்துகொண்டிருந்தார்கள்.

ஹேவீர் மஹாராஜனே! பரமயோகீசுரர்களாலும் அடைவதற் கருமை

யான ஸ்ரீபகவானே இந்தச்சிறுபிள்ளைகள் தங்கள் நேத்திரங்களுக்கு சாக்ஷாத்காரமாக எளிதில தேசிக்கவும, ஸ்பரிசிககவும, ஆலிங்கனஞ்செய்யவும், கூடியுண்ணவும், வேடிக்கையாக யிருக்கவுமான பேறனைப்பெற்றாகளே! இவர்களைக்குறித்து நான என்னவென்று தோததிரஞ் செயவேன? இப்படியிவளையாமென்ற சிறுவாகளையும ஸ்ரீபலராம கிருஷ்ணாகளையும கமசனுககினையின்படி வநத அகாசூரனனவன பாாதது, நமமிட சகோதராகளாகிய பகாசுரனையும பூதனையையும சில நமது பநதுககளையுங கொனறவன இநத ஸ்ரீகிருஷ்ண பகவானல்லவா வெனறு நினைதது, இவனையும இசசிறுவாகளையுங கனறுகளையும ஒருமிகக விழுஙகி நாசஞ்செய்யுமபடி உததேசிதது, பாவதாகாரமான மலைபபாம்பின சொரூபததை வகிதது, குகையையொதத நாசியையும் வாயாநது, அகோரமான வாயைததிறநது, பூமிமடடததில யாவாகளும நுழையுமபடி படிகளிருபபதுபோனற கீழுதடும, மேகமண்டல மளாவியமேலுதடும மலைச்சநதுகளை யொதத கோரைபபலலின நடுசசநதுகளும, பாவத சிகரம் போனற பலலின வரிசைகளும, விசாலமாறகம போலிருககிற நாககின ளைபபும, ஊழிபபெருங காறறுககொபபாகிய சுவாசஙகளும, எரிகினற தீபோனற கணகளும விளஙகுமபடி, இவாகள வருகினற மாறகததில நுழைநதுபோக வழியிலலாமல படுததுக கொணடிருநதான.

அவனைக, கோபாலாகள கண்டு, இபபடிபபட்ட ஜநதுவை இதுவரையிற் கண்டதிலலை இது லோகததையெலலாம விழுஙகிவிடுமபோலிருக்கிறது ஆகிலும பகாசுரனைககொனற சுவாமி யிருககிறாரெனறு பயபபடாமல விளையாடிககொணடிருநதாாகள அநதமலைபாமபானது இடபபிளளைகளையுங கனறுகளையும விழுஙகிப பினபு ஸ்ரீகிருஷ்ண பகவானையும விழுஙக யததனமாயிருக்கையில, அபபோ ஸ்ரீகிருஷ்ணபகவான தமககுத தோழனமாாகளாயும தம்மிட திருவடிகளைச சரணமடைநதவாகளாயு மிருககிற இடபபிளளைகள ஆபததை அடைநதாாகளே! அவாகளைச சீககிரததில நிவாததிசெயய வேண்டுமெனறு திருவுளமபறறி, அநத அகாசுரன வாயினிற பிரவேசிததாா அப்போ சகல தேவாகளும அகாசுரனவாயில ஸ்ரீகிருஷ்ணபகவான பிரவேசிததாரே! இனியென்ன துனபம வருமோ? எனறு விசனப்படடுக கொணடிருககையில், அநத அகாசுரன மெததக களிபபுடன அவாகளையு மறறவாகளையும புசிககயததனிததான.

ஸ்ரீகிருஷ்ணமூாத்தி அவாகளைப் படசிக்கிறதற்கு முனனமே அவனைச் சங்கரிககவேண்டுமெனறு நிசசயிதது, அவனவயிறறில் விருததி அடைநதார் அபபாலநத அசுரன் உளநுழைநத ஸ்ரீகிருஷ்ணபகவான வளாசசலைபபொறுக்க மாட்டாமல நெஞசடைபபட்டு,கண்விழிபிதுஙகி, நாககைநீட்டிககொண்டு இறந்தான். அபபோ அவன தலையைபபிளநதுகொண்டு முனனே ஸ்ரீகிருஷ்ண பகவான் வந்தாா இடபபிள்ளைகளுங கன்றுகளும அவன் விஷாககினியால வராமலிருக்கையில், ஸ்ரீபகவான் கிருபைகூாநது கடாட்சிததாா அநதப பார்வையின் பிரபாவததினலே அவர்கள் தொநதிரை நீங்கி, வெளியில் வநதார்கள்.



அகாசுரன் வதை

ஸ்ரீகிருஷ்ண பகவானுககு விரோதியானாலும அவாதிருமேனி சம்பநதப பிரபாவததால சகல பாபமுமபோய அநத அசுரனிடததி லிருநது ஒரு ஒளி உணடாகி, ஸ்ரீகிருஷ்ணபகவானைப பிரதடசணஞசெயது, அவரிடததிலேயே லயிததது அநத ஆசசரியததைச சகலதேவாகளும பாாதது புஷபமாரி சொரிய, அபசரஸதிரீகள நடனஞசெயய, கநதாவாள கானஞசெயய, இப்படி சகல வாததியஙகளுடன சுவாமியைத தோததிரஞசெயது தஙகள் லோகததை அடைநதாாகள. இராமகிருஷ்ணுள முதலிய சகல கோபாலா களும் தஙகள தஙகள கனறுகளுடன கூடிககொணடு சுகமாயிருநதாாகள.

# பதின்மூன்றுவது அத்தியாயம்.

கலி விருத்தம்

கோபாலதனயாகளுங கோகுலததுக் கிருட்டினனுங் குளித்துமூழ்கிப்
பூபாலமன்னவாபோல விருட்சததினகீழிருநது புராதன வன்னத்தைத்
தாபமுடன் புசித்திருககுந தருணமதிற சதுர்முகனுந்தனைமறந்து
பாபமிதென்றெண்ணுமற கன்றினையுஞ சிறுவரையும் பரித்ததாமால்.

ஸ்ரீகிருஷ்ணபகவானும கோபாலதனயாகளும குளிாநத நீரோடைகளில் தீாத்தமாடி எல்லாரு மொனறுகசசோநது விருக்ஷஙகளினகீழ் உடகாாநது தஙகள் தஙகள் சிககஙகளில மிருதியாகவைதகிருநத ததியோதனஙகளே அவரவாகள அமுதுசெயயுந தருணததில, அமபர வீதியில நின்றும ஸ்ரீகிருஷண லீலாநுபவஙகளேப பாாததுககொணடிருககினற சதாமுகபக வான் ஸ்ரீபகவானுடைய யோகமாயா விசேஷததினுல தனனேமறநது, இநதக் கோபால சிறுவாகளேயும கனறுகளேயுங கொணடுபோயொளிதது, ஸ்ரீஸவாமி யினுடைய லீலேகளேப பாாததுக கொணடிருநதாரெனறு சொலலுகினறது.

ஸ்ரீசுகமுனிவா பரிக்ஷிததுவை நோககி, ஸ்ரீகிருஷ்ணசுவாமியின் கதையி லிருககிற மதுாமான ரசததை உமமாலே நன்ருய அறியபபடுகினறது அசத தாயிருககிற விஷயாதிகளில உமமிடமனது செலலாமலிருபபதறகு மெததச சநதோஷிககிறேனெனறு மிகவும ரகசியமான கணணனுடைய கதையைச சொலல ஆரமபிததாா அகாசுரன வாயினில புகுநது மிகவும இளபபடைந திருககிற இடபபிளளேகளேயுங கனறுகளேயும விசாலமாகியும மனேுககிய மாகியும சமீபததில தாமரைபபொயகையுடன மிகவுங்குளிாசசி பொருநதியு மிருககிற யமுநாநதி மணலதிடடிற கழைததுவநது, அககனறுகளே ஓட்டிக கொணடும இடைபபிளளேகளே அழைததுக கொண்டும போய அநத இடைப பிளளேகளே நோககி ஸ்ரீகிருஷ்ணபகவான ஒருவாாததை அருளிசசெயகிறாா. நாமெலலாரும இவிடததில போஜனம பணணுவோம நீஙகள கனறுகளுக் குத தணணீா காடடிககுளிபபாட்டி, சமீபததில பிலனுளள விடததில மேய விடுஙகோளென்று ஆஞயாபிததனா.

அவவண்ணம செயத கோபாலபாலாகள மணறகுனறில தஙகள சிககததி லிருககிற நாநாவித அனனஙகளேக கையிலெடுததுககொணடு, ஸ்ரீகிருஷ்ண பகவானுககு நாலுபககததிலுங தாமரைககாயைச சுததின இதழபோல சூழ்நதுகொணடு, அவருடைய முகததைபபாாதது, சிலா அனனஙகளேப புஷப இதழகளில வைததுககொணடும, சிலா இலேகளில வைததுககொணடும சிலா மாநதளிா முதலியவைகளில வைததுககொணடும, இபபடி நாநாவித பாததிரஙகளில அனனஙகளே வைததுககொணடு வெகுகளிபபுடன போஜ னஞ் செயதாாகள அபபோது ஸ்ரீகிருஷ்ணபகவான தமமிட திருககையி லிருககிற பிளளாஙகுழலே அரையிற சொருகிககொணடு, இடது கடகததில வஸதிரமும ஊதுகிற மாடடுககொமபும ஏநதிகொணடு, அவவிடததிருககை யில் ததியோதனததையும வைததுககொணடு, சமஸத கோபாலாள நடுவி லிருநது பரிகாசவாாததையால அவாகளேச சநதோஷப படுததிககொணடு, பிராகிருத சிசுவைபபோல போஜனமபணணுகிறாா அபபடி பண்ணுவதைச சகல தேவாகளும ஆகாயததிலிருநது பாாதது ஆசசரியப படடுககொண டிருந்தார்கள்.

அந்தச் சமயத்தில் எதிரில மேய்ந்துகொண்டிருந்த கன்றுகள மறைந்து

விட்டன. கோபாலர்கள் அந்தக் கன்றுகளைக் காணோமென்று நடுங்கி, போஜனம் பண்ணத்தோணாமல் விசாரப் பட்டார்கள். அச்சிறுவர்களை ஸ்ரீகிருஷ்ண பகவான் நோக்கி அருளிச்செய்கிறார்: நீங்களொன்றுக்கும் விசனப்படவேண்டாம். உங்கள் கன்றுகளை நான் ஓட்டிக்கொண்டு வருகிறேன். நீங்கள் பயமில்லாமல் போஜனஞ் செய்யுங்கோள் என்று சமாதானம் பண்ணி, கண்ணன் கையிலிருந்த ததியோதனத்தைப் பாதி போஜனஞ்செய்து, மற்றப்பாதியைக் கையிலேதானே வைத்துக்கொண்டு, அந்தவனமெல்லாங் கன்றுகளைத் தேடிக் காணாமல் திரும்பவும் போஜனஞ்செய்த இடத்திற்கு வந்தார். அவ்விடத்தில் பிள்ளைகளொருத்தருமில்லை. அப்படி யிருக்கையில் பிரம்மதேவரானவர் அந்தக் கன்றுகளையும் இடப்பிள்ளைகளையும் மறைத்துவைத்தால் கண்ணன் திருவிளையாட்டைப் பார்க்கலாமென்றெண்ணி ஓர் பர்வதக் குகையில் அடைத்துப் போட்டு அந்தர்த்தானமாய்ப் போயினார்.

அப்போ சுவாமியானவர் கன்றுகளும் இடப்பிள்ளைகளும் எங்கேபோனார்களோவென்று ஆலோசித்து, இது பிரம்மாவினுடைய காரியமென்று தெரிந்துகொண்டு, இந்தக்கன்றுகள் போகாமற்போனால் பசுக்கள் பாலகரவாதே! பிள்ளைகள் போகாவிட்டால் அவர்களின் தாய்தந்தைகள் சோகிப்பார்களே! என்று எத்தனை பிள்ளைகள் தமக்குத் தோழன்மார்களாக விருந்தார்களோ! அத்தனை பேர்களையும் அவ்வவர்கள் அங்க பேதமில்லாமலும், வயதிலும், அளவிலும், வண்ணத்திலும், குறியிலும், நடையிலும், பேச்சிலும், தொனியிலும், வஸ்திர பூஷணம் முதலாகியதுகளிலும், எவ்வளவேனும் வித்தியாசந் தோன்றாமலும், கன்றுகளையும் அப்படியே ஒன்றுமொன்று குறைவின்றி நூதனமாய்ச் சிருஷ்டி செய்து, அந்தப் பிள்ளைகளோடே தாமும் விளையாடி, கன்றுகளையும் ஓட்டிக்கொண்டு வீட்டுக்குப் போனார் என்று அருளிச்செய்கிற சுகமுனிவரை நோக்கிப் பரிக்ஷித்து மஹாராஜன் கேட்கிறான்.

வாரீர் பரமயோகியே! இடப்பிள்ளைகளையுங் கன்றுகளையும் ஆருடைய அம்சமாகச் சிருஷ்டிசெய்தார்! இவர்களைச் சிருஷ்டிசெய்த பின்பு பிரம்மதேவனால் அபகரிக்கப்பட்ட இடப்பிள்ளைகளுங் கன்றுகளும் என்னகெதியானார்கள்? அதுகளை விஸ்தரித்தருளிச்செய்யவேண்டும் என்று வினவுகிற அரசனை நோக்கிச் சுகமுனிவர் அருளிச்செய்கிறார், வாரீர் பரிக்ஷித்து மஹாராஜனே! கண்ணபிரானானவர் கொஞ்சகாலங் கோபாலர்களாயுங் கன்றுகளாயு மிருக்கவேண்டுமென்று திருவுள்ளங் கொண்டு, அப்படியே அந்த உருவமாகவானார். பிரம்மதேவனால் மறைத்துவைத்திருக்கப்பட்ட கோபாலருங் கன்றுகளும் மலையின் குகையில் சவத்தின் தன்மையா யிருந்தார்கள், கண்ணன் தம்மிட அம்சமாயிருக்கிற இடப்பிள்ளைகளோடே மாயா சொரூபமான கன்றுகளையும் ஓட்டிக்கொண்டு ஊருக்குச் சமீபத்தில் வரும்போது, அக்கண்ணனோடு யாவருந் தங்கள் தங்கள் பிள்ளாங் குழல்களை ஊதினார்கள். அவ்வோசையைக்கேட்ட அவர்வர்களுக்குரிய தாய்தந்தைகள் வெளியில்வந்து பார்த்துக்கொண் டிருந்தார்கள்.

அப்போது தங்கள் தங்களை கிரகங்களில் கன்றுகளை தானே போய்ச்சேர்ந்தன. கோபால சிறுவர்களுந்தாமே சென்றார்கள். அந்தந்த பிள்ளைகள் வருவதைக்கண்ட தந்தைகள் ஆலிங்கனஞ் செய்துகொண்டார்கள். தாய்மார்களோ பிள்ளைகளை அதிக அன்புடன் எதிரேயோடிவந்து கட்டிக்கொண்டு, உச்சிமுகந்து மடியினில் வைத்து முலைகொடுத்து, அவர்களுக்கு மங்களஸ்நானஞ் செய்வித்து, திலகமிடுதல் தலைவாரிக் கொண்டை முடித்தல் திருஷ்டிசுத்தல் தண்டை சதங்கை முதலிய ஆபரணங்கள் அணிதல் உபசாரங்களோடே போஜனஞ் செய்வித்தல் ஆகிய வினைகளைச் செய்தார்கள். இப்படி நாளுக்குநாள் தங்கள் தங்கள் பிள்ளைகளின்பேரில் அன்பு விருத்தியடைந்தவர்களாயிருந்தும், அவர்கள் ஸ்ரீகிருஷ்ண பகவானோடே கலந்து விளையாடிக் கொண்டிருந்தார்கள். இப்படியே பசுக்களுந் தங்கள் கன்றுகளைக்கண்டு ஓடிவந்து முகந்து, சரீரமெல்லாம் நக்கி, பாலை உண்ணக்கொடுத்து, மிகவும் அன்போடிருந்தன.

இப்படி ஒருவருடைய வறையில் நடந்துகொண்டிருந்தது. பின்பு ஒருநாள் பலபத்திரன் சகல இடையர்களோடே கோவர்த்தனபர்வதத்தில் பசுக்களையாவையும் ஓட்டிமேய்த்துக் கொண்டிருக்கையில், அப்போது சமஸ்த பசுக்களும் எருதுகளுடன் எக்காளமிட்டு, வாலை உயரத்தூக்கிக்கொண்டு, ஒரேபாய்ச்சலாக இடைச்சேரி அருகில் மேய்ந்துகொண்டிருக்கின்ற கன்றுகளருகில் வந்தன. அப்படி வருகையில் கோபாலர்கள் யாவரும் கூடியவரையிலோடிவந்து பார்த்து, பசுக்களை நிறுத்தமாட்டாமல் போனார்கள். அந்தப் பசுக்கள் கன்றுகளை முகந்துபார்த்து நக்கிக்கொடுத்து, மடிகொள்ளாமல் சுரந்து கீழே விழுகிற பாலை ஊட்டக்கொடுத்துக் கொண்டிருந்தன. அப்போது கோபாலர்கள் மிகவும் இளப்பையடைந்து, கொஞ்சம் வெறுப்புடன் இடைச்சேரிக்குச் சமீபத்தில் கன்றுமேய்த்துக் கொண்டிருந்த பிள்ளைகளிடத்தில் வந்து நீங்கள் சமீபத்தில் கன்று மேய்த்துக் கொண்டிருந்தமையால் பசுக்கள் ஓடிவந்ததென்று கோபித்துக்கொண்டனர்.

பின்பு அருகில் வரவர அவர்கள் கோபந்தணிந்து, சந்தோஷத்துடன் பிள்ளைகளைக் கட்டிக்கொண்டு, மடியில்வைத்து, உடம்பின் தூசியைத் துடைத்து, முத்தமிட்டு, உச்சிமுகந்து, ஆனந்தமடைந்தனர். அதைப் பலபத்திரன் பார்த்து, இதென்ன ஆச்சரியமென்று சந்தேகித்து, இந்தக் கன்றுகளிடத்தில் பசுக்களிருக்கிற அன்பும் பிள்ளைகளிடத்தில் கோபாலர்களிருக்கிற விசுவாசமும் சரியானதாயிருந்தாலும், ஸ்ரீமந்நாராயணன் அம்சாவதாரமயிருக்கிற கண்ணபிரானிடத்தில் எனக்குச்சினேகம் விருத்தி அடைவதுபோல இந்த இடைப்பிள்ளைகளிடத்திலுங் கன்றுகளிடத்திலும் சினேகம் விருத்தியாகிற படியால் இவர்களெல்லாரும் பகவத்மசமாயிருக்கவேணுமென்று நிச்சயம் பண்ணித்தனது யோகத்தினாலுணரும்போது, அத்தனைபேரையும் ஸ்ரீகிருஷ்ணபகவானாகவே கண்டார். பின்பு பலராமன் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியினிடம் சமீபஞ்சென்று, தேவரீருடைய பிரபாவத்தைச் சனகாதிகளுங்கூட அறியமாட்டார்கள். தேவரீருடைய மாயையால் அடியேனும் இவ்வளவுகாலம் மோகத்தை அடைந்திருந்தேன்

## ஸ்ரீமத்பாகவதபுராணவசனம்.

இப்போ தேவரீருடைய கிருபா பிரபாவத்தாலே மோகந்தெளிந்து உம்மிட மகிமையைக் கண்டேன் என்று தோத்திரஞ்செய்கிற பலபத்திரனைப் பார்த்து, தான் சர்வசொரூபியாயிருப்பதையும் அதினுடைய காரணத்தையும் அவருக்குச்சொல்லி, மற்றகோபாலர்களுடன் சந்தோஷப்பட்டுக் கொண்டிருந்தார். அப்படியிருக்கையில் பிரம்மாவானவர் பார்த்து நாம் ஒளித்துவைத்த கன்றுகளும் இடைப்பிள்ளைகளும் வெளியில்வந்து விட்டார்களோ வென்று ஆச்சரியப்பட்டு, ஓடிப்போய் மலையின்குகையில் பார்த்தார் அப்படிபார்க்கையில் அதுகள் அங்கிருக்கக்கண்டு, திரும்பியுமவர் இவர்களைப் பார்க்கிறபோது வயது, ரூபம், பூஷணங்கள், நடத்தை இவையெல்லாம் சரியாயிருக்கக்கண்டு, இதென்ன ஆச்சரியமென்று யோசனைசெய்து ஒன்றுந்தோணாம லிருந்தார்.

உடனே ஸ்ரீபகவானுடைய கிருபையால் அந்தச் சிறுபிள்ளைகளையுங் கன்றுகளையும் நீருண்டமேகம் போலிருக்கிற சரீரத்துடன் திவ்விய பீதாம்பர மணிந்து, நான்கு புஜத்துடன் சங்குசக்கிரம் முதலிய திவ்வியாயுதங்கள் கிரீட குண்டலம் முதலிய ஆபரணங்கள் தரித்து, ஸ்ரீவத்சமென்கிற மருவுடன் சூரியனுக்கொப்பான காந்தியுடையவர்களாகவே கியான திருஷ்டியிற்கண்டு, ஆனந்த பரவசராகி, மெய்மறந்து, மீட்டுந்தெளிந்து, அன்னவாகனம் விட்டிறங்கி, சொர்ணதண்டத்தைக் கீழேபோடுவதுபோல் சாஷ்டாங்கமாகத் தம்மிட நான்குசிரசிலிருக்கிற கிரீடனுனியை ஸ்ரீகிருஷ்ணபகவானிட திருவடிகளில் பொருந்த வணங்கி, அஞ்சலி அஸ்தனாய் தோத்திரஞ் செய்கின்றார்

# பதினான்காவது அத்தியாயம்.

### கலி விருத்தம்

பரித்திடும் பிரம்மதேவன் பாலகன்றுகளின் சீறைத
தெரிந்திடச் சக்தியற்றுத் தேவகிபுதல்வன் றனைக
கரிதனைக் காத்தமாயா கண்ணனே யண்ணுவென்று
விரிவுடன் தோத்தரித்து விளம்பியஸ் துதியிதாமால்.

சிருஷ்டி கர்த்தாவாகிய பிரம்மதேவன் தன்னாலடைக்கப்பட் டிருக்கிற கோபால சிறுவர்களைக் குறித்தும் கன்றுகளைக்குறித்தும், இப்போ ஸ்ரீபகவதம்சங்களான கோபகுமாரர்களைக் குறித்தும் கன்றுகளைக்குறித்தும், காரணம் நிச்சயமாக அறிதற்குச் சக்தியற்றவராகி, ஸ்ரீகிருஷ்ணபகவானைப் பரமவைதிக வேதாந்த நிர்ணயார்த்த விசேஷங்களால் ஸ்துதிசெய்தாரென்று சொல்லப்படுகிறது.

## பிரம்மதேவன் ஸ்தோத்திரம்.

வாரீர் நீலமேக ஸ்வரூபரே! பீதாம்பரத்தையும், குருவிந்த மணிகளிழைத்த கர்ணபூஷணமாகிய மகரகுண்டலங்களையும், மயூரபிஞ்சங்கள் முதலிய சிரோவாபரணங்களையும், சுகந்தபரிமள புஷ்பமாலிகைகளையும் அணிந்து முகாரவிந்தத்தில் விளங்கும் அர்த்த சந்திராகார லலாடத்தில் கஸ்தூரிதிலகமாத்தவ புண்டரத்திற்குச் சிகரத்தைப்போல் பிரகாசிக்கும்படி முன்னெற்றிச் சுட்டியைத் தரித்து, புள்ளாங்குழல் முதலியவற்றை இடையிற்செருகி, மதுரமாகிய வாசனைவீசுகின்ற திருத்துழாய் மாலையைத் தரித்து, திருவடித்தாமரைகளில் சதங்கைகள் சாமகானஸ்வரம் போலச் சப்திக்க, லீலாமானுஷ விக்ரஹராய் இளங்கன்றுகளைக் காணாமல் தேடுகின்ற சாமான்யச் சிறுவனைப்போல் பிருந்தாவன மார்க்கங்களில் சஞ்சரித்துக் கொண்டிருக்கிற உம்மை நமஸ்கரிக்கிறேன். பூபார நிவாரணஞ்செய்து தர்மங்களை ஸ்தாபித்துச் சாதுஜனங்களைச் சந்தோஷிப்பித்துச் சகலபுவனங்களையும் இரக்ஷிப்பதற்காகவும், சிருஷ்டிஸ்திதி ஸம்ஹாரகர்த்தாக்களான எங்களை அநுக்ரஹிப்பதற்காகவும், ஸ்ரீமஹாபாகவதர்களை இரக்ஷிக்கும்படி திருவவதரித்த அவதார பரமரஹஸ்யங்களை அறிந்தநுபவிக்கப் பரமயோகீந்திரர்களுக்கே உரிமையா மல்லாமல், அடியேன் முதலிய லோகேசர்களுக்குத் தரமாகுமோ

வேள்விமுதலிய தானதர்மங்களைச்செய்து ஜனித்த புண்யபுருஷர்கள் ஸ்வர்க்கமடைந்து சுவானுபவங்களை யநுபவித்து மறுபடியும் பிரபஞ்சத்தில் ஜன்மித்துப் பாக்யவந்தர்களாய் இருப்பார்களே யல்லாமல், உமது மாயாகுண விசேஷங்களை அறியத்தகுந்தவர்களாவார்களோ? உமது பரமகிருபையால் ஜன்மாந்தரங்களில் மஹாபுருஷர்களாயிருந்து ஸ்ரீபாகவதாபிமானத்தையுடையவர்களாய் ஜனித்த மகானுபாவர்கள் சர்வவிசேஷ தர்மங்களையுணர்ந்து, சர்வகாலமும் ஸ்ரீபகவத் குணங்களை யநுபவஞ் செய்து, நிரபேக்ஷர்களாய் வேதோக்தக் கிரமமாகச்செய்த சர்வகர்மங்களையும் ஸ்ரீகிருஷ்ணார்ப்பணஞ் செய்து, சகலமந்திராதி தேவதைகளாலும் அடியேன் முதலிய லோககர்த்தாக்களாலும் மதிக்கப்பெற்று, ஸ்ரீபகவானாகிய தேவரீருடைய கல்யாணகுண வைபவங்களை யறிந்து பிரமமாநந்தத்தை யநுபவிப்பது மன்றி, தேகாந்தியத்தில் பரந்தாம விபவைஸ்வரியங்களையும் அடைகின்றார்கள்

ஸ்ரீவிபுவே! உம்மை மகான்களாகியும் தத்வஞானிகளாகியும் இருக்கின்ற ஸ்ரீமகாபாகவதர்கள் காம்யமான யாதொரு புருஷார்த்தங்களையுங் கோராமல், உம்முடைய திருவடிகளையே சரணமாக வடைகின்றார்கள் புண்ய பலசித்திகளைக் கோரின சேவான்களாகிய சிலர் தான்யப்பொட்டுகளை மாத்திரத்தை தான்யராசிகள் தங்களுக்கு லபிக்க முயற்சி செய்கிறதுபோல் சுத்காமங்களை யாசரித்து, மகா மனவருத்தங்களைக் கொண்டு, உம்மையன்றி யிதர தேவதைகளால் காம்யமாகிய ஸ்வல்ப பலனை யடைந்து, மனதுக்குச் சமாதான சுகத்தை யடைகின்றார்களே யல்லாமல் ஸ்ரீபகவத்பிராப்தி சித்திக்க

ஸ்ரீமதபாகவதபுராணவசனம்

திருமபுஜிதேவியினிலே ஸ்ரீ அசசுதரே! இநதப பிரபஞசததில பூாவம பலசித்திகளைச சோநத அனநதம யோகிகள யோகாபபியாசஙகளைச செயது; இசசையினபடி புருஷாாததஙகளை யடைநது, ஞானயோகஙகளை யடையாமலிருநது, பினபு சதபுருஷ சகவாசஙகளினுல அனநதமான சதகாமஙகளைக கைஙகரியாாததமாகத தேவரீருககுப பிரீதிசெயது, அதனுல ஸ்ரீபகவதபகதி ஜனிககபபெறறு உடனே வேதோகதமான பரமவைதிகஞானததைககொண்டு ஸ்ரீபகவதஸவரூபததை அறிநதனுபவிதது, தகஷணததில பிரமமானநத வைபவாதிசயமான உமது திவவிய பரநதாமமாகிய உததம மகிமையை யடைகினருாகள.

ஸ்ரீமானுடைய சிஷ்கனாகிய ஸ்ரீ அனநதரே! பரமமுனீநதிராகள அறிநது சேவிககததககசவாபமான மகா மகிமைகளையும, வேதவேதாநத சூததிரஙகளாலறிநதனுபவிககததக சேவிககத தகுநதமாகிய ஸவரூபாதி சயஙகளையும உளளவராகிய உமககு நமஸகாரஞ செயகிறேன வாரீா அகிலபுவன காததாவாகிய ஸ்ரீ அரியே! பரிசுதத தததுவநிசசய திரிகாலவேதிகளான மகா விதவசஜனஙகள, அநத ஜனமாாஜித தபோபலததினுல மனததைககொணடு ஒருகாலததில இபபூமியிலுணடாகினற பூரேணுககளையும, ஆகாயததிலுண டாகினற பனிததிவலைகளையும, நகஷததிராதி கணஙகளின பிரகாசஙகளி னுடைய பரமாணுககளையும அறிநது அளவிடச சகதிகொணடபோதிலும உமது திவயாவதாரஙகளின ரகசியஙகளை யறியச சகதிகொளள மாட்டாாகள. இபபிரபஞசததில அவதரிதத மகானுபாவாகளாகிய புணயசாலிகளாயிருக கினற பரமபாகவதோததமாகள ஸ்ரீபகவத ஸவரூப பரமாாதத நிசசயததை யுணாநது, நிஷகாமாகளாகி, இசசையறறு, ஸவரூபதாமமான சகல கைஙகரி யஙகளிலீடுபடடு, புணயசாலிகளாகி, உமது திருவவதார மகிமைகளை யுணாநது ஆனநதிதது, மகாபுருஷாாததமான பரகதியை யடைவதறகு யோக கியாகளாகினருாகள.

ஜகனனுதரரயும பரமாகமாயும யிருககினற தேவரீரிடததில எனது தபோபலததினுற பெறறுகெகாணட இநத அணடாதிபததிய காவததினுல எனனை மறநது, உமது மகிமைகளை யறியாமல வியாததமாய் எனது சாமாததி யததைத எனனையணுகிய தேவரீரிடததிலேயே பிரயோகிதது அபராதஞசெய் தேன அதைதத திருவுளததிற கொளளாமல சேவகனிடததில பிரபுவைப போலும, சிஷயனிடததில ஆசாரியனைபபோலும, புததிரனிடததில பிதாவைப போலும, க்ஷமிதது ரக்ஷிககவேணடும இவவணட கோடிகளில ஒவவோரண டததிறகுள அனநத ஸவரூபஙகளுணடா யிருககின்றன. அநத ஸ்வரூபங களுககுளளே ஒரு ஸவரூபததை யுடையவனுயிருககினற அடியேன உமது விஸவாகார பரிமாணமசஙகளில பரமாணுவுககு நிகராவேனே? ஸ்வாமி! அடி யேனசெயத அபராததைதத தேவரீரேக்ஷமிததுத தேவரீருடைய கிருபைக குப பாததிரனுக அடியேனை ரக்ஷிககவேணடியது.

ஸ்ரீபதம காப்பரான லோகாராட்டியரே.! இப்பிரபஞ்சாதமகமான

ஸ்தூலங்களுக்கெல்லாம் மஹாஸ்தூல ஸ்வரூபியாகிய தேவரீர் மஹாப்ரளய காலத்தில் என்னையும் கௌரீநாதாமுதலிய லோகேசர்களையும் சர்வவுலகங்களையும் சர்வசக்தியிலே லயிக்கச்செய்து, லோககுருவாகி, ஒன்றுமறியாதவரைப்போல் மாயாஸ்வரூபராகி அப்ரளயஜலத்தில் வடபத்ரசயனராய் விஹரித்து, நாரங்களை யாஸ்ரயித்து, அவற்றையே அயனமாக உடைத்தாய் ஸ்ரீமந்நாராயணனென்று நாமதேயத்தை யுடையவராகி, என்னையும் லோகேசர்களையும், சர்வவுலகங்களையும், யதாப்பிரகாரம் விளங்கச்செய்து, எனக்கு ஹிரண்யகர்ப்ப நாமதேயமச்சத்தால் பத்மகர்ப்ப அஜப்பிரம்ஹ சதுர்முகாதி நாமகரணங்களைத் தந்தீர். ஓ சதுர்முக பிதாவான ஐயனே! இந்தப் பிரபஞ்சத்தில் குழந்தையைக் கர்ப்பத்திலேதாங்கிய தாயானவள் சிசுவானது சலிக்கின்ற காலப்பக்குவங்களில் ஒருவேளையுதறிக்கொண்டால், அதனது பாதஸ்பரிசத்தைக்குறித்துத் தன்னையுதைத்ததென்று குற்றமாகநினைத்து வெறுக்கமாட்டாளோ, அதுபோலத் தேவரீரும் அடியேன்செய்த அபராதங்களை க்ஷமித்தருள வேண்டும்.

தேவரீர் என்னை உமது நாபீகமலத்தில் சிருஷ்டித்தீர் அப்போது நான் அந்த நாபீகமலத்தில் நின்று ஒன்றையுங் காணாமல்வெகுகாலம் வரைக்கும் கீழும் மேலும் அலைந்து உலாவியுழன்று சுழன்றேன் ஸ்ரீயோகீஸ்வரேஸ்வரரே! உமது அபிசந்தமத்தின் யோகமாயா சங்கல்பத்தினால் சர்வ வுலகங்களையுஞ் சிருஷ்டித்து, அவற்றினுள் வியாபித்து, சர்வமுந் தாமாகி, சர்வப்பிரபஞ்சங்களையுந் தம்முள் வஹித்து, பின்னரவற்றினுள் பிரவேசித்து, ஏகராகி, பரமாணு ஸ்வரூபங்களுக்கெல்லாம் சூக்ஷ்மதரராகி நித்யராய் விளங்குகின்றீர், உமது கிருபையால் சிருஷ்டியாதியில் என்னைக் கடாக்ஷித்து, சர்வவேதங்களையும் எனக்கு உபதேசித்து, உம்முடைய விராட்ஸ்வரூப மகிமைகளைத் தரிசிக்கச் செய்தீர் அதுபோல இந்த அவதாரத்தில் ஸ்ரீவசுதேவதேவகி தேவிகளான தம்பதிகள் உம்மைப் பிள்ளையாகப் பெற்றுக்கொள்ளச் செய்ததுமல்லாமல், அவர்கள் உமது நிஜஸ்வரூப ஸேவையைக்கண்டு சேவிக்கவுங் கிருபைசெய்தீர் அவர்களே மிகுந்தபாக்யவான்கள் மேலும் ஸ்ரீயசோதாப்பிராட்டி ஸமஸ்த பிரபஞ்சங்களையும் உமது நாபீகமலத்தில் கண்டுகளித்து ஆநந்தத்தை யடையும்படி யருள்செய்தீர் ஆகையினால் இப்படிப்பட்ட உமது பிரபாவாதிசயங்கள் யாவராலுணரத்தக்கது.

ஸ்ரீ பரமாத்மாவே! இந்தப் பிருந்தாவன புண்யக்ஷேத்திரத்தில் நீர் ஏகராய்வசித்தீர். க்ஷிமிஷத்தில் நிகிலகோபால பாலர்களாயும் கன்றுகளாயும் பிரகாசித்தீர் பின்னும் சர்வஸ்வரூபங்களும் தேவரீராகவே கண்டுசேவிக்கச்செய்தீர் பிறகு யதாப்பிரகாரம் யசோதா புத்திரனாகப் பிரகாசித்துக்கொண்டிருக்கின்றீர். ஸ்ரீ அனந்த ஸ்வரூபாத்மகரான பரமாத்மாவே! விவேகஹீனர்கள் தங்கள் அக்கியானத்தினால் எதிரிலே தோன்றும் பழுதையைச் சர்ப்பமென்று பிரமித்து, ஞானசீலர்களுடைய அருளைப் பெறுமளவும் பழுதையென்று யதார்த்தத்தை யுணராமலும் சர்ப்பப்பிரமை நீங்காமலு மிருக்கிறது போல, ஸ்ரீபகவானாகிய உம்முடைய ஸ்வரூபதாமங்களை யறியாதவர்களாகி, அநித்திய

மாகவிளங்கும இபபிரபஞசங்களை நிததியமாக நினைததும, ஜனனமரணாத்மக மான இநதச சரீரங்களையே தங்களுக்கு ஆதமமாகவும சரீரபோஷணாதிகிருத தியங்களே புருஷாரததமாகவு மெணணியும, தங்களாதமாவையே பரபபிரம ஹமாக நினைததுச சமஸாரபநதமே மோக்ஷமாகி அடையத தககவாகளாயும இருககினறாாகள அவாகளைபபோல மூடதவஙகளை யனுசரிதத அடியேனனை னெனறு சொலலுவேன

வாரீர செளலபியராகிய ஸ்ரீபுருஷோததமரே! இநதப பிரபஞசததினுள் ஸ்ரீபிருநதாவனப பிரதேசஙகளில வாசஞசெயது கொணடிருககினற பாககி யங்களை யோசிக தானவில, இநதகோபாலா கோபிகைகள கனறுகள இவா களுள ஒருவருடைய ஸ்ரீபாதரேணு கிடைககுமாகில நானும மறறுமுளள தேவதைகளும அநாதியிலலாத பாபஙகளைச சமபாதிதத புருஷாகளும மறறவை களும ஜனம சாபலயஙகளையடைநது முததியைக கொடுககததகக புணய சாலிகளாய விடுவோம. உமது திவயஸவரூபததைக கொலலநினைதது மாயா ரூபமாகிவநத பூதனை முதலிய அசுரஜனஙகளைச சாஹரிதது, அவாகளைக குலகோததிரஙகளுடனே பகததாகளுடைய கூடடததிலே சோதது, ஸ்ரீமகா பாகவதாகள அடையததகக உமது சாரூபபிய பதவியை அடையச செயதீா.

வாரீா சாவலோக காததாவான எனனையனே! ஸ்ரீகிருஷண குணஙக ளாகிய மஹிமாதிசய யோகமாயா சேஷடித உமதுபால லீலாகுணசாமாததிய மாகிற வஞநதரததில, யதுவமசமாகிற தடாகததில, உமது ஸ்ரீபகதஜனஙகளி னுடைய முகஙகளாகிய தாமரைப புஷபஙகளை மலரசசெயயுமபடி ஸ்ரீவசு தேவதேவகீ காபபமாகிற பாவதசிகரததில நினறு முணடான சூாயபகவானே ஸ்ரீபரம பாகவத சதகோஷடிகளாகிற சமுததிரததிறகுச சநதோஷஙகளை யுணடுபணணுமபடி நநதகோபககிரகமாகிய ஆகாயததில உதயமாய வருகினற ஸ்ரீகிருஷண பகவானாகிய பூாணசநதிரனே! உமமை நமஸகரிககிறேன வாரீா ஸவாமி! உமககு நானசெயத அபராதஙகளைக குறிதது எனது பிரமஹகலப பரியநதம உமமுடைய நாமஸமரண பூாவமாக உமககு அனநத நமஸகாரங களைச செயகினறேன. எனறிவவிதமாகபபிரமமதேவா ஸதுதிகளைச செய்தார்.

கேளீா பரிகூஷிதது மகாராஜனே! இவவிதமாய ஸ்ரீ சதுர்முகனனவர் ஸ்துதி பூாவமாகப பூசிதது, ஸ்ரீபகவானுடைய திருவடித தாமரைகளுககுச சாஷடாஙகமாகத தணடன சமாபபிதது, முனதான வஞசிததநாலததி லிருக கப்படட மணறகுனறுகளினமேல கோபால குமாராகளையும மேய்நதிருநத விடததில கனறுகளையும விடடு விடடு; சமஸதமான ரிஷிகணஙகளமுதலிய யாவரும ஸதுதிககத தனது சததியலோகததிற செழுநதருளினாா கேளீா சுகிாதவானாகிய மகாராஜனே! அபபோது இநதகோபால சிறுவாகள தஙகள தங்கள் *திவயகரஙகளினால ஒருவருஷததிறகு முனனேநதின ததியோதன கவ ளஙகளை அபபோது ஈான வஹிததுபோல எணண முடையவாகளாகி, தங் களுக்கு நறறுணைவரான ஸ்ரீகிருஷணபகவானை யனறிய போஜனஞசெய்து

மனமில்லாதவர்களாகி, ஸ்ரீமகாபாகவதர்கள் தங்களுக்குக் கிடைத்த ருசிவர்க்கங்களை ஸ்ரீமாதவார்ப்பித மாக்காமல் புசியாதவர்களாயெப்படி யிருப்பார்களோ அவர்களைப்போல் சும்மாயிருந்து, ஸ்வாமிவருகின்ற திசையைநோக்கி, எங்களன்புள்ள பிராணசகாயா! சீக்கிரமாயவாரும் சகலகன்றுகளும் யதாஸ்தானமவந்து சேர்ந்து இதோ சமீபங்களில் மேய்ந்து கொண்டிருக்கின்றன. என்றுசொல்லி அழைத்தார்கள்.

அப்போது பிரம்மாவினால் வஞ்சித்து விடப்பட்ட கன்றுகள் சமீபத்தில் மேய்ந்துகொண்டே வரும்படியாய் ஓட்டிக்கொண்டு பின்னேவந்த ஸ்ரீபகவானும் அதிப்பிரியத்துடன் புன்னகைகொண்டு, கன்றுகளை மெய்விட்டுவந்து, அந்தப் பிரம்மாவினால் வஞ்சித்து விடப்பட்டவர்களா யிருக்கிற கோபாலதனயர்களிடஞ் சேர்ந்து, அவர்கள் சொல்லும் உபசாரங்களை யங்கீகரித்து, சம்பிரமவார்த்தைகளை வசனித்துக்கொண்டு சந்தோஷித்தவராய்ப் போஜனஞ்செய்தார். பின்பு அந்தக்கோபால குமாரர்களும் போஜனஞ்செய்தார்கள். வாரீர் மஹாராஜனே! அந்த மகாபுண்ணிய சாலிகளான கோபால குமாரர்கள் தங்களுக்குப் பிராணேசரான ஸ்ரீகிருஷ்ணபகவானைப் பிரிந்த ஒரு சம்வத்ஸர காலமும் அரைக்ஷண காலமாகக்கழிய, ஸ்ரீபகவானுடைய யோகமாயையினால் மயங்கி ஒன்றுந் தோற்றுமலிருந்தார்கள். அவர்களப்படி யிருந்ததும் ஆச்சரியமல்ல ஓ அரசனே! ஸ்ரீகண்ணபிரானைவர் எல்லாரும் போஜனஞ்செய்தான பின்பு கோபாலர்களை அழைத்துக்கொண்டு, கன்றுகளை மேய்த்துக்கொண்டு அங்கங்கேயிருக்கிற குளிர்ந்த தோப்புகளிலும் வெண்மணற் குன்றுகளிலும் நதீதடாக தீரங்களிலும் சம்பிரமத்துடன் விளையாடி, யதாஸ்தானமாகிய ஸ்ரீபிருந்தாவனத்தில் வந்துசேர்ந்து வேடிக்கையாக லீலைகளைச்செய்து கொண்டிருந்தார்.

அப்படியிருக்கின்ற சமயத்தில் ஸ்ரீஇருஷிகேசரானவர் அந்தச் சிறுவர்களுக்கு ஒருகுகையைப்போல் உலாந்திருக்கின்ற அமமலைப்பாம்பின் சரீரசாமத்தைக்காட்டி விளையாடிக் கொண்டிருந்தார். சூரியாஸ்தமனகாலம் நேரிட்டது. யாவரும் கன்றுகளைச் சேர்த்துக்கொண்டு ஸ்வாமியினுடைய உத்தரவின்படி திரும்பினார்கள். அத்தருணத்தில் ஸ்ரீபகவானானவர் மயிற்றோகைகள் நானாவிதங்களான புஷ்பமாலைகள் திருத்துழாய் மாலைகள் இவைகளையணிந்து, வேணுவைப் பவளம்போன்ற திருவதரத்திலவைத்த தூதிக்கொண்டு எழுந்தருளினார். அவருடன் ஸ்ரீபகவானைச் சிலாகித்து ஸ்துதிசெய்துகொண்டு சிறுவர்களும் வந்தார்கள். அப்போது லோககுருவாகிய பரமாசாரியரை மஹாபாவனர்களாகிய பிரியசிஷ்யர்கள் ஸரத்தாபக்தி வாத்ஸல்யத்துடன் சூழ்ந்துவருகின்றதுபோல இந்தக்கோபால பாலர்களுடன் திவ்யகன்றுகளும் ஸ்ரீபகவானைச் சூழ்ந்துகொண்டு, மதுரஸ்வரங்களை அனுசரித்து அணியணியாகப் பின்தொடர்ந்து வந்தன. ஸ்வாமியானவர் கோபாலர்களும் கோபீஜனங்களும் நேத்ரோத்ஸவங்களாகச் சேவித்து ஆனந்திக்க ஸ்ரீகோகுலத்தில் பிரவேசித்தார். ஸ்ரீநந்தகோபர்முதலிய கோபாலர்களையும் கோபிகா ஸதிரீஜனங்களையுங் கண்டமாத்திரத்தில் அவர்களெல்லாரும் அறிந்து ஆச்சரியப் படும்படியாக,

இந்தச் சிறுவர்கள் அந்தப் பிருந்தாவனத்தில் மலைப்பாம்பினால் தங்களுக்கு நேரிட்ட ஆபத்தையும் ஸ்ரீகிருஷ்ணபகவான் அதை விமோசனஞ்செய்து அந்த மலைப்பாம்பைச் சம்ஹரித்துத் தங்களை ரக்ஷித்த விருத்தாந்தத்தையுஞ் சொன்னார்கள்.

இப்படியாகச் சொல்லிக்கொண்டு வருகின்ற சுகரைப்பார்த்துப் பரீக்ஷித்து மகாராஜன் சொல்லுகின்றான்: ஸ்ரீகுருசிரேஷ்டரே! கோபால கோபிகா ஜனங்களுக்குத் தாங்கள் அதிகமாகிய விரதநோன்புகளை யநுஷ்டித்துப் பெற்றுக்கொண்ட தங்கள் புத்திரர்களின் மேலுண்டாயிருக்கின்ற பிரீதிகளைப் பார்க்கிலும், ஸ்ரீநந்தகோப யசோதாப் பிராட்டிகளுடைய தப்பியலப் புத்திரராகிய ஸ்ரீகிருஷ்ண பகவானிடத்தில் அனந்தவிதமாக அன்புசெலுத்தியிருக்கும்படி நேரிட்ட காரணமென்ன? அதை எனக்குக் கிருபையாகச் சொல்லக்கடவீர் என்றுகேட்ட மகாராஜாவைப் பார்த்துச் சுகர் சொல்லுகின்றார்: சகல பிராணிகளும் தங்கள் தங்களுடைய ஆன்மாவினிடத்தில் அதிகப்பிரீதி கொள்வது போல, புத்திரதாராதிகளிடத்தில் பிரீதி கொள்வார்கள்; ஆகையால் அந்த ஆன்மாவே இந்த ஸ்ரீகிருஷ்ண சுவாமியாக இருப்பதினால், அதிக பிரீதிகொள்வதற்குக் காரணமாச்சுது. உலகத்தில் பகவானுடைய திருவடிகளைப் பணிந்து தோத்திர முதலியவைகளால் பூசித்தால், தர்மமுதலிய நான்கு புருஷார்த்தங்களையு மடைந்து நித்தியர்களோடே கூடிச் சுகமாயிருப்பார்கள்.

# பதினைந்தாவது அத்தியாயம்.

கலி விருத்தம்

கண்ணன் கன்றினை மேய்த்திடுங் காலையில்
அண்ணன் றேனுகாசுரனை யதஞ் செய்ததும்
வண்ணன் யமுனாநதி மாடு காளிந்தியின்
நண்ணும் காவம் போக்கியது நவிலுவாம்

ஸ்ரீகிருஷ்ணபகவான் பசுக்களைமேய்த்துப் பாலனஞ்செய்துகொண்டிருக்கின்ற தருணத்தில் ஸ்ரீபலராமர் தேனுகாசுரனைச் சம்ஹரித்ததும், ஸ்ரீகிருஷ்ண பகவான் ஸ்ரீயமுனாநதிமடுவில் சஹகுடும்பனாய்வந்திருந்த காளியநாமதேய சர்ப்பராஜனுடைய விஷபங்கஞ் செய்ததுஞ் சொல்லுகின்றன.

ஸ்ரீ விவேகமுள்ள அரசனே! கோகுலப் பிருந்தாவனத்தில் வாசஞ்செய்துகொண்டிருக்கின்ற ஸ்ரீகிருஷ்ணபகவானானவர் தமக்குப் பௌகண்ட வயதாகியபருவம் வந்தவுடனே, நம்பி மூத்தபிரானாகிய ஸ்ரீபலராமருந் தாமும் தங்களுக்குச் சமான வயதுகளையுடைய கோபால சிறுவர்களுடனே கூடி,

கோபாலப் பிரபுக்களெல்லாருஞ் சம்மதிக்க அவ்விடத்திலுள்ள சமஸ்தஜனங்களையும் மேய்த்துக்கொண்டு, ஸ்ரீகண்ணபிரானாகிய பகவானும் பலதேவ பிரானும் வேணுகானங்களைச் செய்துகொண்டு, அந்தப் பசுக்களுக்கும் தங்களுக்கும் திவ்யபரிமளங்களைத் தரத்தக்கதாயும், மஹாமதுர ஸ்வரங்களோடு சப்திக்கத்தக்க விசித்திர வண்டுகள் சூழப்பட்டிருக்கின்ற நாநாவித புஷ்பங்களுக்கு ஆலயமாயும், மிருகபட்சி சமூஹங்களுக்கு இருப்பிடமாயும், தாமரைத் தடாகங்களும் பலவிருக்ஷ வனங்களுமுள்ளதாயுமிருக்கின்ற ஸ்ரீபிருந்தாரண்யமாகிய புண்ய வனங்களிலே லீலா விநோதார்த்தங்களாக விளையாட வேண்டுமென்று பிரவேசித்தார்கள். அப்படிப் பிரவேசித்த மாத்திரத்தில் அந்த ஸ்ரீகிருஷ்ணபகவான் ஸ்ரீபலபத்ர பகவானைப்பார்த்து மகாப்பிரீதியோடும் இதனைச் சொல்லுகின்றார்.

வாரீர் மகானுபாவரே! இந்தப்புண்யாரண்யம், மகாலக்ஷ்மிஸ்வரூபமானது. உமது திருவடிக்குப் பாத்திரமாக உம்மையுபசரித்து அர்ச்சித்துத் தான்சுகித்தமடையும்பொருட்டு அநுகுணமான மிகுந்த ருசிவாக்கங்களைத் தராநின்ற பலங்களையுடைய குளிர்ந்திருண்ட தோப்புகளிலுள்ள நாநாவித விருக்ஷங்களை வகித்தும், நிர்மலமாயிருக்கின்ற குளிர்ந்த தீர்த்தங்களையுடைய தடாகங்களைப் படைத்தும், தனக்குப் புத்திரமித்திர களத்திராதி பரிஜனங்களைப்போலச் சூழ்ந்திருக்கின்ற நாநாவித மதுரஸ்வர வண்டுகள் முதலிய மிருகபட்சி சமூகங்களின் சப்தமாகிய ஸ்துதிவசனத்தை வசனித்துக்கொண்டிருக்கிறது. தனக்கு நிஜபர்த்தாவாகியும் தேவசிரேஷ்டராகியுமிருக்கின்ற நீர் தனது மகாரண்ய ஸ்வரூபமாகிற கிரகத்திற்கு எழுந்தருளுகின்ற விபவாதிசயங்களைக் குறித்துத் தனது பாபநிவாரணமாகும்பொருட்டு, விருக்ஷங்களாகிய தன்னுடைய ஸ்வரூபம் வெளிப்படக் குளிர்ந்த மந்தமாருதக் காற்றுகளை வீசாநின்ற வாயுதேவனாகிய பாத்திரத்தினாலே அம்மகாரண்யத்திலுண்டாகிய நதிப்பிரவாகத்தின் அலைகளின் திவலைகளைக்கொண்டு, அர்க்கிய பாத்தியாதி உபசாரங்களைச் செய்து, வானப்ரஸ்தாசிரம தம்பதிகளைப்போலிருக்கின்ற அவ்விருட்சக் கிளைகளாகிய அஸ்தங்களினாலே அவற்றிலுள்ள புஷ்ப பல விசேஷங்களை உமக்குச் சமர்ப்பித்து, சகலதேவதா ஸமூகங்களால் அர்ச்சிக்கப்படாநின்ற உமது திவ்ய திருவடித் தாமரைகளுக்குத் தண்டம் சமர்ப்பிக்கின்றதுபோலத் தோற்றுகின்றது.

வாரீர் ஆதிசேஷாம்ஸ மகாபுருஷரே! மகாரிஷிசிரேஷ்டர்கள் தங்கள் தபோயோக மாகாத்மியத்தால் உம்மைத் தியானித்து ஸ்துதிகள் செய்வதில் தங்கள் மனது திருப்தியடையாமல், காமரூபர்களாய இவ்வண்டுகளின் ஸ்வரூபங்களை வகித்து மகாபாவனங்களாகிய உமது சுகீர்த்திகளைக் கானஞ்செய்வதுபோல வண்டுக்கூட்டங்களெல்லாம் தேவதாஸ்வர ரீங்கார நாதத்துவனிகளால் கீர்த்தனங்களைச் செய்துகொண்டு உம்மையே சூழ்ந்திருக்கின்றன. ஓ தேவபுருஷனால் ஸ்துதிக்கப்படுகின்ற திவ்ய புருஷ சிரேஷ்டரே! இவ்வனலட்சுமியானவள் தனது கிருஹத்திற்கு நீர் எழுந்தருளினீரென்கிற சந்தோஷத்தினால் மயிலுருவங்களைக்கொண்டு ஆநந்தத்துடன் நர்த்தனஞ் செய்வதுபோல, அநேகமயில்கள் கூத்தாடுகின்றன. உமது இஷ்டஜனங்களாகிய கோபி

சாஸ்திரிகள் தங்கள் கடைக்கண்பார்வையினால் உம்மைச் சேவித்துத் திருப்தி யடைவதுபோல, இவ்வன லட்சுமியானவள் மானபேடுருவங்களாகக் கொண்டு, உம்மைப் பார்க்கிறாளென்று சொல்லத்தக்கதாய் அநேகம் மானபேடுகள் உம்மையே பார்த்துக்கொண்டு மேன்மை யடைகின்றன. ஓ பிரம்ஹ பிரபுவே! ஓ லோகநாயகரே! ஓ ஸ்ரீபலதேவரே! நீர் வாரும் என்றழைக்கின்றது போல அநேக குயில்கள் உம்மைநோக்கி மதுரஸ்வரமாகச் சப்திக்கின்றன.

வாரீர் என்னுடைய நற்றுணைவராகிய புருஷசிரேஷ்டரே! இந்தப் புண்ய பூமியிலுள்ள நதிகளும், நதிதீரங்களும், மடுக்களும், புண்ய ஓடைகளும், பர்வதங்களும், வனங்களும், ஆரண்யமார்க்கங்களும், வெள்ளைமணற் குன்றுகளும் விஜனஸ்தலங்களும் விருத்தியடைகின்ற சர்வஜந்துக்களும் உம்முடைய திவ்ய பாதாரவிந்த ஸ்பரிசத்தினாலும், கிருபாபூர்ணமான கடாக்ஷவீக்ஷணயத்தினாலும், மகாபரிசுத்தத்தை யடைந்து மேன்மைகளடையா நிற்கின்றன. வாரீர் அரசனே! ஸ்ரீகிருஷ்ண பகவானானவர் இவ்விதமாய் அந்த மகாவனத்தைக் குறித்து வர்ணனைகளைச்செய்து ஸ்ரீபலராமரையும் கோபால பாலர்களையுங் கூட்டிக்கொண்டு, அந்தப் பசுக்களைப் பசும்புல்லுள்ள நதிதீரங்களிலும் பர்வத சிகரங்களிலும் மற்றுமுண்டாகிய ஸ்தலங்களிலும் சர்வதா மேய்த்துச் சந்தோஷித்தராய் விளையாடிக்கொண்டிருந்தார். அப்போது சகலதேவர்களும், ரிஷிகணங்கள் முதலிய தபோமூர்த்திகளாகிய யாவரும், இந்த பாலகிருஷ்ண விநோத சரித்திரங்களைத் துதிசெய்துகொண்டிருந்தார்கள்.

அந்தச் சமயத்தில் இந்த ஸ்ரீபகவானாகிய கோபால மூர்த்தியானவர் ஸ்ரீபலதேவ சகிதராகி, அவ்வாரண்யங்களிலுள்ள தடாக நதி முதலானவைகளில் மலர்ந்திராநின்ற தாமரை முதலான புஷ்பங்களினுடைய தேனைகளையுண்டு மதித்திருக்கின்ற வண்டுகள் இனமாகச்சேர்ந்து சந்தோஷமாக ரீங்காரம் பண்ணுகையில், அந்த நாதங்களை யநுசரித்துக் கீதங்களைப்பாடுவார். ஒவ்வோரிடங்களில் அன்னங்களினுடைய நடைகளையும் ஸ்வரங்களையும் அநுசரித்து, தாமும் பிரதித்துவனிகளைச்செய்து யாவரையுஞ் சந்தோஷிப்பித்து நகைக்கச்செய்வார். சிலவிடங்களில் மயில்கள் தமது சிறகுகளை விரித்துக் கொண்டு நர்த்தனங்கள் செய்வதைப்பார்த்து, தாமும் அம்பரவீதியில் நின்று நடிக்கும் தேவப்பெண்கள் நாணும்படியாய் நர்த்தனங்களைச்செய்வார். யானைக் கூட்டங்களுக்குச் சமீபங்களிற்போய்த் தாமும் அதுகளைப்போல ஒய்யாரமாக நடந்து காட்டுவார். சக்ரவாளம் முதலிய பட்சிகளின் சப்தங்களை யநுசரித்து விளையாடுவார். இப்படி யாவருஞ் சந்தோஷிக்கும்படி லீலைகளைச் செய்து கொண்டிருக்கின்ற சமயத்தில், இவர்களுடைய பசுக்கள் யாவும் வெகுதூரத்திற்போய் மேய்வதைக்கண்டு, துணைவர்களெல்லாருஞ் சந்தோஷிக்கவும் அந்தப் பசுக்கூட்டங்கள் திரும்பியடையவும் ஸ்ரீகிருஷ்ணபகவான் அப்பசுக்களை இவ்வாறழைத்து உபசரிப்பார்.

ஓ பூர்ணசந்திரோதயமே! ஓ கௌதமி! ஓ கங்காபவானி! ஓ ஸ்ரீபாகிரதி! ஓ மஹாராஜபுத்ரீ! ஓ நீலமேகமாலிகையே! ஓ சிந்தாமணி! ஓ சர்வஜனமநோ

கரீ! ஓ சர்வமங்கலாகரீ! ஓ பாரதீ! ஓ தேவீ! ஓ தரித்ரீ! ஓ எங்களுக்குச் சுபத்தைக் கோருகின்ற ஸ்ரீமகாலக்ஷ்மீ! ஓ மந்த மாருதீ! ஓ மந்தாகினீ! ஓ சுபாங்கி! நீங்கள் யாவரும் எங்கள் பேரில் தயவுசெய்து சமீபமாக நடந்து வாருங்கள் ஓ லோகமாதாவான பார்வதீதேவி! ஓ கமலாக்ஷீ! ஓ அரம்பையே! ஓ இந்திராணீ! ஓ கோரதநமே! வாருங்கள்! வாருங்கள்! என்று இதயாதி நாமதேயங்களைச் சொல்லி உபசாரமாக அழைத்தார் அந்தப் பசுக்களெல்லாம் அம்மாவென்கிற கம்பீரத் துவனிகளுடன் வெகுவேகமாய்த் திரும்பி ஓடிவந்து ஸ்ரீபகவானைக் கண்டு சந்தோஷத்துடன் சூழ்ந்துகொண்டன அந்தப் பசுக்களுக்குத் தெளிந்த நீரோடைகளில் தாகங்களைத் தணிவித்து, ஒரு குளிர்ந்த தோப்பிலிருக்கும்படி கடாக்ஷித்து, பின்பு ஸ்ரீபலராம கிருஷ்ணர்களிருவரும் கோபால பாலர்களும் அவ்வனப்பிரதேசங்களில் விளையாடிக் கொண்டிருந்து, எல்லாரும் இளைப்புற்று உட்கார்ந்து கொண்டிருந்தார்கள் அப்பொழுது ஸ்ரீபலதேவரானவர் ஒரு கோபால பாலனுடைய துடையின்பேரில் தமது திருமுடியை வைத்துக்கொண்டு சயனித்தார்.

அதைப்பார்த்த ஸ்ரீகிருஷ்ணபகவான் தமது மூத்தபிரானுக்குச் சந்தோஷமுண்டாகத் திருவடிகளை மெதுவாக வருடி, தளிர்களைக்கொண்டு குளிர்ந்த காற்றுவரும்படி விசிறிச் சகலோபசாரங்களையுஞ் செய்தார் ஸ்ரீபலதேவரும் இளைப்புதீர்ந்து, தாமும் ஸ்ரீபகவானும் மதுரசுஸ்வரங்களாகப் பாடியும், ஆடியும், கைகொட்டியும், நகைத்தும், இவ்விதங்களாய் அவ்வனத்தில் விளையாடினார்கள் அப்போது கண்ணபிரானானவர் இளைப்புற்று நித்திரைசெய்ய நினைத்தவளவில், சில சிறுவர்கள் தங்கள் துடைகளின்மீது உபசாரமாகச் சயனித்துக் கொள்ளச் செய்தார்கள் அவர் திருமேனியெங்குஞ் சிறுவேர்வை யொழுக்கக் கண்டபொழுது சிலர் இளந்தளிர்களைக் கொண்டு வேர்வையாற்றினார்கள் சிலர் சிரத்தையுடன் ஸ்ரீபகவானுடைய திருவடித் தாமரைகளைக் கைகளினால் ஒற்றிவருடினார்கள் இந்தப்பிரகாரம் ஸ்ரீமாதவப்பிரானுக்கு அந்தச்சிறுவர்கள் ஸ்ரீபரமபதத்தில் ஸ்ரீ அனந்தகருட விஷ்வக்சேனாதி நித்யசூரிகள் பிரம்மானந்த பரவசர்களாய் பிரேமோபசாரஞ் செய்வதுபோல உபசரித்து, தங்களுடைய அனேக ஜன்மங்களில் சம்பாதித்த பாபங்களாகிற வனங்களை ஸ்ரீமாதவனுடைய திருவடியிற் பொருந்திய மனதாகிய அக்னியினால் தஹிக்கச் செய்துகொண்டார்கள்.

அந்தச்சமயத்தில் ஸ்ரீபலராம கேசவர்களுக்குச் சிலர் தண்டம் சமர்ப்பித்து வினயத்துடன் சொல்லுகின்றார்கள். ஓ திவ்வியபுருஷ ஸ்ரேஷ்டர்களே! கேளுங்கள், இந்த ஸ்ரீபிருந்தாரண்யமானது கொஞ்சதூரத்தில் பனங்காட்டில் மதுரமான கனிவர்க்கங்களைத் தருகின்றது அக்கனிகள் ஒருவருக்கும் உபயோகமில்லாமல் தரையில்வீழ்ந்து வியர்த்தமாகின்றன அவ்வனத்துள் தேனுகாசுரனென்னும் பெயரையுடையவன் அனேகருடனே வாசமாய் மனுஷ்யர்களைப் பக்ஷித்துக் கொண்டு இருக்கின்றான். அதனால் எப்படிப்பட்ட பராக்கிரமசாலிகளான வீரர்களும் அத்திசை நோக்குவதில்லை, இப்பொழுது தோற்று

கின்ற பரிமளம் அவ்வனத்திலுள்ள பழங்களின் வாசனைகளே, ஆகையால் நீங்கள் உங்கள் பக்தர்களாகிய எங்களுக்கு அந்தப் பழங்களை யனுபவிக்கச் செய்யவேண்டும் என்று பிரார்த்திக்கின்ற கோபால குமாரர்க ளெல்லாரையும் ஸ்ரீ பலராமகேசவர்கள் அழைத்துக்கொண்டு, அந்த அரண்யமார்க்கங்களைக் கடந்து அவ்வனத்தில் பிரவேசித்தார்கள். ஸ்ரீபலபத்ர மூர்த்தியானவர் அந்த விருக்ஷங்களைத் தம் இரண்டு கரங்களினால் குலுக்கி, அதன் கனிகளைப் பூமியில் விழத்

அதுகளுதிர்கின்ற சப்தங்களைக் கேட்டமாத்திரத்தில் கழுதையுருவமா யிருக்கிறகொடியவசுரனானவன் கோபமுடன் புறப்பட்டு, தான் வருகின்ற நடையினால் பூமியதிர்ந்து நடுங்க, தனது இரண்டு கால்களும் இரண்டு ஈட்டிகளைப் போற் காண, வாலகுச்சானது யர்த்தண்டம்போலத் தோற்ற, சகலமான கோபாலகுமாரர்களும் பயப்பிராந்தி யடையும்படி ஓடிவந்து, பின்புறங்காட்டி பின் பாயச்சல் பாயந்துள்தித்து, தன் பின்காலகளைக்கொண்டு ஸ்ரீபலதேவருடைய விசாலமான மார்பின்மீது கோபத்துடன் உதைத்துத் திரும்பி, ஸ்ரீபலராம ரைக்கடிக்கவந்தான். அதை அவர் தப்பித்துக்கொண்டார். அவ்வளவில் அந்த வசுரன் தன்கண்களிலே நெருப்புகளைக் கக்கிக்கொண்டு, மஹாசௌரியத்துடன் கோபமதிகரித்து மறுபடியு முதைத்தான். அத்தருணத்தில் ஸ்ரீபலராம மூர்த்தியானவர் அவனுடைய நாலுகால்களையுஞ் சேர்த்துப்பிடித்து, அலட்சியமாயொருகரமுதறிக் குலுக்கிச் சக்ராகாரமாகச் சுழற்றி, அந்தவேகத்தினால் அவன் பிராணனை யிழக்கச்செய்து ஓர் மரத்தின்மீது வீசியெறிந்தார். அந்த அசுரபிணம் விழுந்த பனமரங்கள் ஒன்றின்மேல் ஒன்றாய்விழுந்து நாசமடைந்தன.

வாரீர் மகாராஜனே! ஸ்ரீ அனந்தபகவானானவர் இந்தத் தேனுகாசுரனை லோகோபகாரமாகச் சம்ஹரித்தும், அதனால் அவனுடைய பந்துக்களாயிருந்த கழுதை ஸ்வரூபங்களை யுடைய அனேகங் கொடிய வசுரர்கள் இந்தத் தேனுகனைப் பார்த்துத் துக்கித்து, மிகவுங் கோபித்து, அந்த ஸ்ரீபலராமகிருஷ்ணர்க ளிருவரையுந் துரத்திக் கொண்டோடி வந்து, இவர்களை ஹிம்சிக்க நினைத்து, மகாபராக்கிரமங்களுடன் யுத்தஞ் செய்தார்கள். அத்தருணத்தில் இந்தத்திவ்விய புருஷர்களிருவர்களும் அந்தக்கழுதை ஸ்வரூப ராக்ஷஸர்களுடைய பின்னங் கால்களைச் சேர்த்துப் பிடித்து, சக்ராகாரமாகச் சுழற்றி, அந்தப் பனைமரங்க ளில் மோதியரைந்து யாவரையுஞ் சங்கரித்தார்கள். இந்த ஸ்ரீபலராமகிருஷ்ணர் களுடைய பராக்ரமமாகிய பெருங்காற்றினால் விருக்ஷங்களில் மோதப்பட்டு வீழ்ந்த இவ்வசுரர்களுடைய சரீரகண்டங்கள் பூமியில் வீழ்ந்து யிறைபட்டுக் கிடக்கின்ற அவ்வனமானது, அப்பொழுது ஊழிக்காலத்தில் அனந்தமேகங்க ளால் சூழப்பட்ட ஆகாசத்தைப்போல விளங்கிற்று.

கெடுதலாய அந்தக் கனிவர்க்கங்களை ஒருவரையும் பறிக்க வொட்டாம லும் பொறுக்க வொட்டாமலும் துன்பம் செய்துகொண்டிருந்த தேனுகாசுர னையும் அவன் பந்துக்கள் முதலியவர்களையும் ஸ்ரீஹரியானவர் ஸ்ரீபலராம சகி

ந்ராயிருந்து நாசஞ் செய்து சகலகோபால பாலர்களும் வேண்டியவரைக்கும் கனிவர்க்கங்களைப் பறித்துச் சாப்பிடும்படி பண்ணி, பசுக்களையு மேய்த்துத் திருப்தியடையச் செய்தார் அந்தச் சமயத்தில் இந்தமஹாபுருஷர்கள் செய்தவிநோதங்களைப்பார்த்த தேவதைகள் பாரிஜாதாதி புஷ்பவருஷங்களை வருஷித்துத் துந்துமி வாத்தியங்களைக் கோஷிப்பித்தார்கள் கின்னரஸ்திரீகள் பாடினார்கள் அப்ஸரஸ்ஸுகள் நர்த்தனஞ் செய்தார்கள் சித்தசாரணர்கள் தேவகானங்களால் ஸ்துதிசெய்தார்கள் அதன்பின்பு ஸ்ரீகமலலோசனன் ஸ்ரீபலராமருடன் பசுக்களை மடக்கித்திருப்பிக்கொண்டு வேணுகானஞ் செய்து வந்தார்

இப்படி அவர்கள் ஆனந்திக்கும்படி கடாக்ஷித்துக்கொண்டு ஸ்ரீபலராம கிருஷ்ணர் கோகுலத்தில் பிரவேசிக்கவும், கோபாலபாலர்களும் தங்கள் தங்கள் கிரகங்களுக்கு வந்து சேர்ந்தார்கள். ஸ்ரீரோஹிணி யசோதா புத்திரர்களாகிய ஸ்ரீபலராம கிருஷ்ணர்களிருவர்களும் அந்தத்திருவீதிமார்க்கங்களிலிருக்கின்ற கோபஸ்திரீகள் மிகுந்த பக்திபூர்வகமாக அர்ச்சித்து ஆசீர்வதிக்கச் சந்தோஷமாகத் தமது கிரகத்திற்கு வந்தார்கள் ஸ்ரீரோகிணி யசோதைகளாகிய இருவர்களும் இவ்விரண்டு புத்திரர்களுக்கும் வென்னீரைக் கொண்டு சிரமங்கள் தீரும்படி தகுந்த உபசாரங்களைச்செய்து, பரிமளமணிந்து, திவ்யாபரணங்களையலங்கரித்து, வஸ்திரங்களை யுடுத்தி, மதுரமாகிய பலகாரங்களுடன் அன்னங்களைப் புசிக்கச்செய்து, புத்திரர்களுடைய மதுரவசனங்களால் திருப்தியடைந்து, மிருதுவான சயனங்களை யமைத்துப் புத்திரர்களைச் சயனிக்கச் செய்து, தாங்களும் சுகித்திரையிற் சுகித்தார்கள் வாரீர் ராஜசிகாமணியான பரிக்ஷித்து மகாராஜனே! இவ்விதங்களாகச் சிலநாள் ஸ்ரீபலராம கிருஷ்ணர்களிருவர்களும் அந்த கோகுலப் பிருந்தாவனத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்தார்கள் இப்படி இருக்கின்ற நாள்களில் ஒருநாள் ஏதோ ஒரு காரியமாக ஸ்ரீபலராமர் ஸ்ரீகிருஷ்ணபகவானுடன் பிருந்தாவனத்திற்கு வராமல் பாடியில் நின்றுவிட்டார்

ஸ்ரீபகவானானவர் சகல கோபாலர்களோடும் பசுக்களை யோட்டிக்கொண்டு அரண்யமார்க்கத்திற் பிரவேசித்து நாநாவிதமாக விளையாடிக்கொண்டு போகும்போது, எல்லாக் கோபாலர்களும் இளைப்புற்று. சமீபத்திலெங்கும் தீர்த்தங்கப்படாமல் தாகமேலிட்டு, ஸ்ரீயமுனாநதியில் காளியனென்னுஞ் சர்ப்பமிருக்கும் மடுவில் பசுக்களுடன் ஜலபானஞ்செய்து மூர்ச்சையடைந்தார்கள் அப்பொழுது ஸ்ரீகிருஷ்ணபகவான் தம்மையே சரணமாகவடைந்திருக்கிற கோபால குமாரர்களையும் கோக்களையும் தம்மிட கடாக்ஷத்தினால் பிழைப்பித்தார் அப்போது அவர்கள் பசுக்களுடன் நித்திரை செய்தெழுந்தவர்களைப்போல எழுந்திருந்து சந்தோஷமாகச் சஞ்சரிக்கலானார்கள் கோபாலகுமாரர்கள் நாமெல்லாரும் தாபம் பொறுக்க மாட்டாமல் பிராணனுக்குத் துணிந்து ஸ்ரீகிருஷ்ணனென்று இந்த விஷஜலத்தைச் சாப்பிட்டு மரித்துப்போனோம். பசுக்களும் அப்படியேயாயின. இப்படி கோக்க

ளோடும இறநது போன நாம நமதையனுகிய ஸ்ரீகிருஷணபகவானுடைய பரி பூரண கடாகஷ வீகஷணயததினல பிழைததோமலலவா ; என்று அவரை ஸ்து திசெயது வாழததிஞாகள

# பதினாருவது அத்தியாயம்.

## கலி விருத்தம்

தோமபடு யமுனை நதி நீரததில
வாமபட விருநத சாபப ராசனறன
ஆமபடுவ செருவமாதி யநதமும
போமபடச செயது நிரததனம புலவினா

ஸ்ரீபகவான யமுனைநதிநீரமாகிய மடுவில வநது சோநதிருநத காளிய னெனனுஞ சாபபததை நிகரஹமஞசெயது அவனுடைய பணடவியினுசசி யில நிரததனஞ செயதாரெனறு சொலலுகினறது

வாரீா மகாராஜனே! சகலலோக நாயகரான ஸ்ரீகிருஷணபகவான காளிநதி மடுவின விஷதோஷஙகளை நீககுமபொருடடும காளிய சாபபராஜனை அமமடு வில நினறு வெளிபபடுததவும, அநதப புணயநதிநீரததம யாவருககும உப யோகபபடச செயயவுஞ சஙகலபிததுக கொணடு, அநதககாளிய சாபபரா ஜனுடைய மனோபீஷடபபிரகாரம வரஙகளைக கொடுதது கிருபைசெயதார என்று சொலலிய சுகபபிரமம ரிஷியைபபாாதது பரீகஷிததுமகாராஜன சொல லுகினருன வாரீா சாவோததமரே ஸ்ரீபுருஷோததமனுடைய திவயசரிததிரங களைக கேடகவேணடு மெனகிற ஆசைமேலிடடிருககினற எனது செவிககா னநதமாகத தககதாகப பகவானுகிய ஸ்ரீமாதவனுனவா அமமடுவிலுள அனேக யுகஙகளாகத தனபநதுககளோடும வாசஞ செயதுக கொணடிருநத காளிய சாபபராஜனை நிகரகஞசெயத விதஙகளையும, அவன அநத மகாநதியில வா சஞ செயதிருநத காரணததையுஞ சொலலியருள வேணடும. என்று பிரார்த் திததுககேடட அரசனைபபாாதது ஸ்ரீசுகபபிரமமரிஷி சொலலுகிருா

கேளும ஜனநாயகனே! யமுனைநதிப பிரவாகததில பிரிநதோடுகின்ற ஓா மடுவில வாசஞசெயகினற காளியநாமதேய சாபபராஜனுடைய விஷாககினிசசு வாலைகளினல அநதமடுவின ஜலமானது எபபோதும கொதிததுக கொணடி ருககும அநத ஜலததுககு நேராய ஆகாசவீதியிற பறககினற படசிகள யா வும விஷவேகததினல சோகிதது வீழநதழியும. அநதஜ்லததின லுண்டாகிய அலைகளின் திவலைகளைக காறருனது கொண்டுவநது வீசுதலினல், அம்மடு வின சமீபஸ்தலங்களிலுள்ள விருடசம, கொடி, செடி, பூணடு, இவைமுதலி யதும உணடாகின்றதே யிலலை ஆயினும ஒருகடபபை விருடசமானது ஸ்ரீய

கவானுடைய கரசரண ஸ்பரிசங்களுக்கு யோக்கியமாகும்படி தனது பூர்வ ஜன்ம புண்யவசமிருந்தபடியால், தெய்வீகமாய முன்னொருக்கால் அமிர்தகுடத்தைக் கருடபகவானானவர் பூமிக்குக் கொண்டுவரும்போது இக்காரண நிமித்தமாகவே அந்த விருக்ஷத்தின் மீதிறங்கி, அமிர்த ஸ்பரிசங்களை யுண்டாக்கி, அதற்கு விஷதோஷமில்லாமற் செய்வித்தாரென்று புராணாந்தரங்களிற் சொல்லப்பட்டிருக்கின்றபடியே, அந்த விஷாக்கினியில் நின்றுந் தப்பித்துக்கொண்டு காய் கனிகளுடன் செழிப்பாய் விளங்கிக்கொண்டிருந்தது.

இப்படியிருக்கச் சர்வ பிரபஞ்சங்களுக்கும் மங்கலமுண்டாகச் செய்யும்படி திருவவதரித்திருக்கின்ற ஸ்ரீகிருஷ்ண பகவானென்னும் பிரதாபசாலியாகிய மகாவீரன் மகா உக்ரமான விஷவீரியத்தை யுடைய இந்தக் காளிய சர்ப்பராஜனை இந்த மடுவில் நின்று நீக்கவும், இந்தச் சலத்துக்கு இவனால் நேரிட்ட விஷதோஷங்களைப் போக்கி இந்தத் தீர்த்தத்தை யாவருக்கும் உபயோக மாகும்படி பரிசுத்தஞ் செய்யவும் வேண்டுமென்று நினைத்து முகமலர்ந்து, அந்த விருக்ஷத்தினது நுனியிற் சென்று நின்று, அம்மடுவின் ஜலம் குபுகுபு குபீரென்று சப்திக்குந் தளும்ப அந்த அகாதஜலத்திற் குதித்துக் கலக்கினார். வாரீர் மஹீபாலகா! முதல் மனுவந்தரத்திலே வேதங்களை யபகரித்துச் சமுத்திரத்திலொளித்த சோமுகாசுரனைச் சம்மரித்து வேதங்களை யுத்தரிக்கிற நிமித்தம் ஸ்ரீமச்சாவதாரஞ் செய்து மகாபிரளயஜலமத்தியிற் பிரவேசித்து அந்த சமுத்திரத்தைக் கலக்கின திவ்யமூர்த்தியாகிய ஸ்ரீபகவானுடைய சாதுர்யங்களுக்கு, இந்தக் காளிந்திமடுவொருலக்ஷியமாகுமோ; ஆகாதே.

ஆகையால் இப்படி அளவிறந்த மகாபிரதாப கோபால கண்டீரவரானவர் அம்மடுவைக் கலக்கும்போது உண்டாகிய மகாவேகத்தினால் கொதித்துக்கொண்டிருந்த அந்த ஜலமானது பொங்கி, நூறு வில்லினளவுகோல் பிரமாணம் வரையில் தசதிக்குகளிலும் அவ்விஷஜலத்தினுடைய திவலைகள் மோதின. அத்திவலைகள் பரிசிக்கப்பட்டு அவ்வெல்லைக்குளிருந்த சகல பிராணிகளும் வெப்பமடைந்தன. விருக்ஷ முதலாகியதுகளுந் தீய்ந்தன. அம்மடுவில் அதிசாகசங்களாகிய லீலா சாமர்த்தியத்தினால் கலக்கி விளையாடுகின்ற ஸ்ரீபால கோபால கண்டீரவச் சிறுவனைப் பார்த்த அந்தச் சர்ப்பேந்திரன் தன்னுடைய இருதயத்தில் நின்றும் கோபாக்கினியா லுண்டாகிய சுவாலைகளைக் கக்கினான். அப்படிக் கக்கின மாத்திரத்தில் அம்மடுவின் ஜலமெங்கும் பரவி, தீவிரமாகக் கொதித்துப் புகையெழும்பி, பார்க்கின்றவர்களுக்குப் பிராணபீதியை யுண்டாக்கத் தக்கதாகத் தோன்றிற்று

இப்படி விஷச்சுவாலையைக் கக்கிய இந்தக் காளிய சர்ப்பராஜனானவன் ஸ்ரீகிருஷ்ணனைப் பார்த்து, இதென்ன வாச்சரியம், இவனைப் பார்க்குமளவில் அறியாத சிறுபிள்ளையா யிருக்கிறான் இவன் எனது விஷச்சுவாலைகளோடுங் கூடிய இந்தமடுவில் நானிருக்கின்றேனென்று எவ்வளவும் லட்சியஞ்செய்யாமல், மகாசூரனாய் இவ்வகாத ஜலத்திலிறங்கி, இந்த வெள்ளத்தை மதங்கொண்டயானையைப்போலக் கலக்கி அல்லகல்லோலஞ் செய்கிறான். ஆதலால், இவ்வு

லகத்தா ரெல்லாருங் காணும்படி எனது ரோஷாவேசத்தினு லுண்டாகிய விஷாக்கினியினால் இவனைப் பஸ்மமாகச் செய்து, விஷவீர்ய ப்ரதாப கீர்த்தியை வகிக்கிறேன் என்று தனக்குள்ளே சபதஞ்செய்து கொண்டு வெளியில் புறப்பட்டு, இந்த ஸ்ரீக்ருஷ்ணபகவானாகிய சுத்தவீரனை நிர்த்தயனாய்க் கோராகாரமான விஷாக்கினிகளையுடைய தனது கோரைப்பல்லுகளினால் கடித்து, ஸ்ரீ சேஷசாயியான இந்தப் பாலகோபால திவ்யச் சிறுவனுடைய பாதாதிகேச பர்யந்தம் சுற்றிக்கொண்டான். அப்படிச் சுற்றிக்கொண்ட மாத்திரத்தில் சர்வியாபக அநந்தராத்ம ஸ்வரூபராகிய ஸ்ரீபகவான் சலியாமல் நின்றுகொண்டிருந்தார்.

இப்படி யிருக்கின்ற ஸ்ரீபகவானைப் பார்த்த கோக்களும், ரிஷபங்களும், கன்றுகளும் மூர்ச்சையடைந்து சற்றுநேரத்தில் தெளிந்து துக்கங்கொண்டிருந்தன. இந்தக் கோபால பாலர்கள் சுவாமியினுடைய ப்ரபாவங்களை யறிதற்குச் சக்தியில்லாமையால் மூர்ச்சையடைந்து, சற்றுநேரத்தில் தெளிந்து, மகா துக்கிதர்களாகி, ஒருவரை யொருவர் பார்த்து, அதோ பார்த்தீர்களா; நமது அருமை சுவாமியான ஸ்ரீக்ருஷ்ணரை இந்தப் பாபிஷ்ட ஸ்வரூபமான சர்ப்பமானது கடித்துத் திருமேனியைச் சுற்றிக்கொண்டு இன்னும் விடாமலிருக்கின்றது ஆ ஜனார்த்தனனே! ஆ ஸ்ரீநந்தகோப யசோதா வத்ஸலனே! நாங்கள் இனிமேல் என்ன செய்யப் போகின்றோம், யாரை யடைப்போம் இந்தக்கொடிய சர்ப்பத்தை விடுவிக்கயாதொரு உபாயமும் தோற்றவில்லையே என்று பலவாறாகப் பிரலாபித்துக் கொண்டிருந்தார்கள். பசுக்களும், எருதுகளும், கன்றுகளும், தங்களபீஷ்ட அந்தெய்வ ஸ்ரீக்ருஷ்ணரைப் பார்த்து வாலகுச்சுகளை உயரவெடுத்துக் கொண்டு, அப்போதே தாங்கள் அம்மடுவிற் பாய்ந்து ஸ்ரீபகவானை விடுவிப்பது போலத் தங்கள் மெய்ச்சலை யொழிந்து சர்வேந்திரியங்களையுஞ் சமர்ப்பித்து, அம்மா வென்று வாய்களைத் திறந்து கத்திக்கொண்டிருந்தன.

வாரீர் பூபதியே! அந்தச் சமயத்தில் பூமிகிடுகிடென்று நடுங்கிற்று. ஆகாசத்தில் நின்று குறைகொள்ளிகள் வீழ்ந்தன. மண்மாரிகள் பொழிந்தன. அந்த ஸ்ரீகோகுலத்தி லுண்டாகிய சர்வஜனங்களுக்குஞ் சரீரங்கள் நடுங்கின. மேலும் ஸ்ரீநந்தகோபர் முதலிய கோபாலர்கள் யாவருக்கும் இடதுகண்களும், யசோதாபிராட்டி முதலிய கோபிகைகள் யாவருக்கும் வலதுகண்களும் துடித்தன. அன்றியும் இவைமுதலாகிய அவசகுனங்க ளின்னமும் அநேகம் நேரிட்டன. இவற்றைக்கண்டு பயப்பிராந்த சித்தர்களாய்த் தத்தளித்துக் கொண்டு ஸ்ரீபலராம சஹிதர்களாய ஸ்ரீநந்தகோபர் முதலான கோபாலர்களும் யசோதாதி கோபிகாஜனங்களும் ஸ்ரீஹரியினுடைய விருத்தாந்தங்களை யொன்றுந் தெரியாதவர்களாகி, கோபாலகோகண சமூஹறை யெழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீக்ருஷ்ணபகவான் எவ்விடத்தில் என்ன விதமாயிருக்கின்றாரோ ஒன்றுந்தெரிய வில்லையே யென்று சங்கித்து, ஸ்ரீபகவானிடத்திலுள்ள அன்பினால் ஆரவாரத்துடன் தேடிக்கொண்டு புறப்பட்டார்கள்.

இப்படி வியாகுல சித்தர்களாய் ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய பிரபாவாதிசயங்களை அறியாதவர்களாய மார்க்கங்களில் விசனப்பட்டுத் தேடிக்கொண்டு வருகிற அவர்களுக்கு யாதொரு சமாதான மனோதைரிய திருப்திகளையுஞ் சொல்லாமல், ஸ்ரீபகவானுடைய பிரபாவங்களை யறிந்திருக்கின்ற ஸ்ரீபலராமமூர்த்தியானவர் எப்போதும்போலச் சந்தோஷத்துடன் தாமு மொருவராய் வந்துகொண்டிருந்தார். இப்படித் தேடிக்கொண்டு வருகிறவர்கள் அந்த ஸ்ரீபிருந்தாவன மார்க்கங்களில் எங்கும் கோகணங்களினுடைய குளம்படிகளுடனே கோபாலர்களுடைய காலடிகளுமா யிருக்கக்கண்டு, அவைகளைச் சோதித்துப் பார்த்து வருகின்றார்கள். அப்படி வருகையில் இடை இடையில் அங்குசபத்மம்முதலிய ரேகைகளோடுங்கூடிய மார்க்காபரணங்களாகி விளங்குகிற ஸ்ரீஹரியினுடைய பாதாரவிந்தங்களின் அடையாளங்களைக் கண்டு, அவைகளை ஒருவர்க்கொருவர் காண்பித்துக்கொண்டு, வெகுதூர மார்க்கங்களைக் கடந்து, மகாதுர்ப்பல சங்கடங்களை யுண்டாக்கும் யமுனாநதி மடுவின் சமீபத்திற்கு யாவரும் வந்து சேர்ந்தார்கள்.

அவர்கள் அப்பொழுது அம்மடுவின் ஜலமத்தியில் சர்ப்பராஜனிடத்தி லகப்பட்டுக்கொண்டு தமது சாதுர்யங்களைக் காண்பிக்காமல் சர்ப்பசரீர பாசத்தினாலே பந்திக்கப் பட்டிருக்கின்ற ஸ்ரீகிருஷ்ண பகவானைக்கண்டு, திடுக்கிட்டு ஏக்கங்கொண்டு, ஸ்ரீகிருஷ்ணா! ஸ்ரீமாதவா! ஸ்ரீகோவிந்தா! என்று பிரலாபித்து, இந்த மடுவினிடத்தில் உம்மைவிட்டு மஹாபாவிகளாகிய எங்களைப் பிரிக்கும்படி தெய்வம் பிரதிகூலஞ் செய்ய நினைத்ததோ! என்று தங்களை நிந்தித்து விசனப்பட்டுக் கொண்டிருக்கின்ற கோபால பாலர்களையும், பசிதாகங்களை யொழிந்து மேய்ச்சலை விட்டுக் கண்ணிமையால் ஸ்ரீபகவானையே பார்த்துக் கொண்டிருக்கின்ற கோதனங்களையுங் கண்டு, எல்லாருந் திடுக்கிட்டேங்கி, மஹாசோகத்துடன் அநேக விதங்களாக ஸ்ரீகிருஷ்ணபகவானை யுத்தேசித்து, ஸ்ரீயசோதாபிராட்டியைக் கட்டிக்கொண்டு அலறி வியாகுலப்பட்டு, ஸ்வாமி சரித்ரங்களை நினைத்து, ஆ கிருஷ்ணா! வென்கிற சப்தத்துடன் பிரலாபிக்கத் தொடங்கினார்கள், ஓ கிருஷ்ணா! நாங்களெதிராக வந்த மாத்திரத்தில் எங்களுக்கெதிரில் கெம்பீரமாக வருகின்ற நீர் இன்றையதினம் உபேக்ஷைசெய்து எதிரில் வராமலிருக்கின்றதென்னே?

உமது சௌந்தரியங்களை நாங்கள் சேவிக்கும்படி எங்களுக்கு ஸ்வரூபத்தைக் காட்டாமலும் கிருபையாகக் கடாக்ஷியாமலு மிருக்கின்றீர். நாங்க ளொருசமயத்தில் உடல்களினாலே வெறுத்தாலும் அதுகளைத் திருத்திச் சமீபத்திற்கு வந்து சந்தோஷிக்கச் செய்கின்ற நீர் இன்னும் வராமலிருக்கின்றதென்னே? நாங்கள் பக்தியினாலே ஆ ஸ்ரீகிருஷ்ணா! வென்று அழைத்த மாத்திரத்தில் ஓகோ பிரியமானவர்களே! என்று சொல்லவல்ல நீர் இன்றைக் கென்ன காரணத்தினாலே பேசாமலிருக்கின்றீர்; நாங்களும்மை நினைத்த மாத்திரத்தில் அந்த நினைவுக்குச் சரியாய் நிற்கின்ற நீர் இப்பொழுதென்னவோ [illegible]க்காமலிருக்கின்றீர். என்று இவ்விதங்களாக அந்தக் கோபால

கோபிகாஜனங்கள் யாவரும் பிரலாபித்துக் கொண்டிருந்தார்கள், அத்தருணத்தில் ஸ்ரீநந்தகோப யசோதாப்பிராட்டி முதலானவர்கள் ஸ்ரீபகவானைப் பார்த்து அனந்த விதங்களாகிய பால லீலா சேஷ்டிதங்களைச் சொல்லிப் பிரலாபிக்கின்றார்கள்.

ஆ எங்களருந்தவப் புத்திரனாகிய ஐயனே! பூர்வம் முப்பதுநாளைய சிறு குழந்தையில் மஹாமோஹன காமரூப சுந்தரியாய்வந்த கொடிய ராட்சசியானவள் தன்னிரண்டு குசங்களிலும் அலைந்து கொண்டிருந்த ஆலால விஷத்துடன் அவளுடைய அனந்த பாபசஞ்சித தோஷங்களை முலைப்பாலமுதாக வுண்டு அவள் ஜன்மசாபல்யமாகப் பரிசுத்தங்களை யுண்டு பண்ணின பரம காருண்யனாகிய உனக்கும் இந்தச் சாபத்தின் விஷம் தலைக்கேறியதோ; ஐயையோ! இந்தக் கொடிய சாபராஜன் உன்னைக் கடிக்கும்போது நடுநடுங்கினையோ, மிகவுங் குரூரமான விதியசத்தை நினைத்து இவ்வுலகத்தை வெறுத்தையோ, எங்களை நினைத்துப் பிரலாபித்துத் துக்கிக்கின்றாயோ; ஓ எங்களருமைப் புத்திரனே! ஓ குழந்தாய்! ஆ ஸ்ரீகிருஷ்ணா! இந்தக் கோர சர்ப்பேந்திரனானவன் எங்களைக் கடியாமல் உன்னையேன் கடித்தான், நீ யொருவன் க்ஷேமமாயிருந்து எங்களுக்கிப்படிப்பட்ட அபாயம் நேரிடுமாகில் நீ ரட்சிப்பையே, எங்களையனே! உனக்கு நன்மைசெய்ய எங்களுக்கு வொன்றுந் தோற்றவில்லையே

ஓ ஸ்ரீ கோபகோபீஜன வல்லபா! ஓ ஸ்ரீயசோதா வத்சனே! இன்றைய தினம் நாங்க ளெல்லாரும் உன்னைத் தரிசனஞ்செய்ய வந்திருக்க, உனது கடாக்ஷ வீக்ஷண்யத்தினால் நீ எங்களைப் பாராமலிருப்பது என்னகாரணமோ! உனது ஸம்கேதர்கள் யாவரும் வந்திருக்க நீ பேசாம லிருக்கின்ற கோபமென்னே! நாங்கள் சந்தோஷிக்கும்படி நீ உன்னுடைய திவ்ய பாதாரவிந்தங்களிலணிந்த நூபுரசதங்கைகள் சப்திக்க நாதத்தனங்கள் செய்யாம லிருப்பதென்னே! உனது அன்புள்ள தாயமார்களும் கோபிகா ஜனங்களும் உன்னை அழைக்க வந்திருக்க, அவர்களிடத்தில் வந்து செவிகுளிர ஒருவார்த்தையாவது பேசாமலிருப்பது என்னகாரணமோ! என்று பிரலாபித்து மேலுந் துக்கத்தோடு சொல்லுகின்றார்கள் எங்கள் மனோரத தவப்பலனாகிய ஸ்ரீகிருஷ்ணா! இனி எங்களுடைய கர்மேந்திரியங்கள் குளிரவும், மனது திருப்தியடையவும் மாதுரியமாக வார்த்தை சொல்லுகிறவர்கள் யாரிருக்கிறார்கள்.

எங்கள் சரீரங்களும், கரசரணாதி அவயவங்களும், மகோத்தம தன்யத்தையடைய மேல்விழுந்து சந்தோஷகரமாக விளையாடுகின்றவர்கள் யாரிருக்கின்றார்கள்? எங்கள் நயனங்களுக்குச் சித்திரவிசித்திரமாக அனந்த சாதுர்ய லீலைகளைச்செய்து நாங்கள் கிருதார்த்தர்களாகும்படி கிருபையாகக் கடாட்சிக்கின்றவர்கள் யாரிருக்கின்றார்கள்! ஓ லோககுருவாகிய எங்களையனே! நீ ஸர்ப்பதஷ்டனாகி யிறந்தால் இவ்வுலகத்தில் எங்களுக்கு இகபரஸாதனாதங்களாகிய க்ஷேமகரங்களை யுண்டுபண்ணுகிறவர்கள் யாரிருக்கின்றார்கள்! உனது

சம்பந்தங்கள கிடைததபினபு இனி அனய சமபநதங்களை நாங்களெபபடி இச்சிபபோம ! நீ உனது ஸவரூப தாமததுடன வசிககினற திவயலோக மெதுவோ ! அதுவே எஙகளுககு நீ டுவேே யெனறுசொலலித துககித தாாகள இபபடி ஒருவருககொருவா கட்டியணைததுப பிரலாபிததுககொணடு ஸ்ரீகிருஷ்ணபகவானுடன இமமடுவில நாஙகளும பிரவேசிதது ஸ்ரீஜனார்த தனப பிரீதியாததமாக ஸ்ரீகிருஷ்ணபாதததை யடைவோமெனறு யாவருமஏக காலததில தீாமானிததுககொணடு, ஆஸ்ரீகிருஷ்ணுவெனறு அநத நதியிற பிர வேசிகக யததனிததாாகள

அபபடி விழுகினற சமயததில ஸ்ரீபகவானாகிய பலபததிர மூாததியான வா, ஓ கோபாலாகளே ! ஓ கோபிஜனஙகளே ! ஸ்ரீபகவானுடைய மகிமைகள ஒருவராலறியககூடுமோ ! ஆகையால இவவுலகததின க்ஷேமததுககு உரித தாகிய இககாரியததை நீஙகளறியீாகள ஸ்ரீஜனாததனனாகிய புருஷோததம னுககு யாதொரு குறைவுமிலலை, தைரியஙகளை வஹிததிருஙகள. இவவவதாரம விரோதிகளைச சிக்ஷிககவநத அவதாரமாதலால, நமது பரமோததம குரு ஸவாமியாகிய ஸ்ரீயசோதா வதஸனுடைய பிரபாவஙகளை இனனமொரு நிமி ஷததிலேயே கணடு சேவிககபபோகினறீாகள எனறு இவவிதஙகளாகத தைரி யஙகளைச சொலலி, அவாகளயாவரையும அமமடுவில பிரவேசிககவொடடா மல நிறுததினாா ! இவவிதஙகளாகத தனனைககுறிததுப பிரலாபிககினற ஆயா சனைபபாாதத ஸ்ரீகிருஷ்ணபகவான தாம சாவசகதிமானானபோதிலும லோக மரியாதையைய நீககிவிடமாக வஹிதது, ஒரு முகூாததகாலம ஸதமபிதராய நினறு, பினபு தமது விராடஸவரூப விஸவாகார மஹிமைகளைக கொணடு ஸ்ரீதிருவிகரம ஸவாமியைப போலத திவய திருமேனியை விாததியடையச செயதாா

அவவளவில அநதச சாபபராஜன தனனுடைய சரீரம வருததததை யடையச சஹிககககூடாதவனாகி, தான சுறறிககொணடிருநத சுறறுகளைவிட்டு சடிககினறதை யொழிநது, தனனுடைய பணாமணடலஙகளை யெடுதது, அந தககிவயமஙகள விகரஹஸவருபமை நனருசுபபாாதது, பெருமூசசு விடடுக கொணடு, நாசிகாரநதிரஙகளில நினறு தாவிஷாககினிஜவாலாமாலைகள புகை யோடு பெழுமபப பிரகாசஹீன காஷடாகாரததைபபோல விளஙகினறனன அததருணததில ஸ்ரீகிருஷ்ணபகவான அவலீலையாகப பிடிதது எடுததுக கொலல மனமிலலாமல, அநதப புஜஙகேநதிரனுடைய கணகளிலிருநது விஷ நீாகள வருஷிகக அலக்ஷியமாகக குலாலனுடைய சககரததைபபோலக கிறு கிறெனறு இடசாரி வலசாரியாகச சுறறி, அமமடுவெஙகும ஓடியோடி யலையும படி அககொடிய சாபபராஜனை வீசிவீசி யெறிநது வருததப படுததினாா

மேலும ஆதிபுருஷரான ஸ்ரீகிருஷ்ணபகவான பினதொடாநது அநதச சாபபராஜனைப பிடிதது, அவலீலையாகப பணாமண்டலஙகளின மீதுநினறுஒரு கரததினால அவனுடைய வாலின நுனியைபபறறிததாககி யெடுததுககொணடு



ஸ்ரீ கண்ணன் காளிய நர்த்தனம் செய்தது

# தசமஸ்கந்தம்.

அந்த மடுவின் அலைகளினோசையே மதுரதத்துவனியுள்ள மிருதங்கமாகவும் ஸ்ரீபிருந்தாவனங்களில் வாசஞ்செய்கின்ற மாப்பக்ஷிகளின் சுகத்துவனிகளே கீதகானங்களாகவும் ராசஹம்ச சாரஸ குக்குடாதி படசிகளினுடைய மனோ ரம்யமான துவனிகளே சுரதாளங்களாகவும் ஆகாசவீதியில் தரிசனஞ்செய்து கொண்டிருக்கிற தேவதா கண சமூஹங்களே ஸபாஜனங்களாகவும் திவ்ய மாணிக்கம் விளங்குகின்ற அந்தக் காளிய நாமதேய சாப்பராஜனுடைய அனந்த பணாமண்டல முகசிரங்களே ரத்னகசிதமான மண்டப மாகவும் வஹித்து, அந்தக் காளியனுடைய பாபங்களைப் போக்கிப் பாவனமாகச் செய்யும்பொருட்டுத் தமது கிருபையினால் விசித்திரங்களாக நாத்தனஞ்செய்தார், அப்படி செய்யும்போது விஷத்தை யுண்டுபண்ணத் தக்கதாயிருக்கிற அந்தப் பணாமண்டலங்களில் எதுதலை பெடுக்கின்றதோ ! அப்பணாமண்டலத்தை மிதித்து ஆசபிராசங்களும் மொடுங்கச் சுத்த ஸாத்வீகஞ்சுப்படி நாத்தனஞ்செய்யத்தொடங்கினர்

அப்போது காளியன் அந்த ஸ்ரீபகவானின் வேகம் பொறுக்கமாட்டாமல் விகாரமாய் விறிட்டான் அப்போதவன் தலையின்மீதிருக்கிற மாணிக்க ஒளியினால் சிவந்த திருவடிகளோடே அவன் சிரசில் நாத்தனஞ்செய்கையில் அம் பரவீதியில் அப்சரஸ்திரீகள் முதலியவர்களில் சிலர் மத்தளங்களடிக்கவும், சிலர் பிள்ளாங்குழ லூதவும், சிலர் வீணைவாசிக்கவும், சிலர் லயைபோடவும். அதற்குத் தக்கபடி ஸ்ரீகிருஷ்ணன் லயைதப்பாமல் அவனிட ஆயிரந்தலைமே லேயும் ஓயாமல் நடனஞ்செய்தார் அதைப்பார்த்து சித்தசாத்தியா கந்தருவர் முதலிய தேவர்கள் ஆச்சரியப்பட்டு, புஷ்பமாரிசொரிந்து துதிசெய்தார்கள். அந்தப் புஷ்பவருஷ மத்தியில் நின்று துஷ்டஜன சிக்ஷாவதாரராகிய ஸ்ரீசர்வ ஸ்வாமியானவர் மிகவும் உத்ஸாஹ அதிசயவேகத்துடன் அந்தப் புஜகேந்திரனுடைய பணாமண்டலங்களின்மேல் பிரமஹாநந்தத் தாண்டவங்கள் செய்யும்போது, அந்தக் காளியனானவன் தனது நிஜகாவமழிந்து, பிரதிமுகங்களிலிருக்கின்ற வாய்களின்வழியே கிரமக்கிரமமாக இரக்தமாமசங்களைக் கக்கி, கண்களின்வழியே விஷப்பொறிகளை யுதிர்த்து, நாசிகளின்வழியே விஷஸ்வாசங்களைவிட்டு, மிகவும் பலஹீனனாகி இளைத்து, திக்குவிதிக்குகளைப்பார்த்துக் கொண்டு, பிராணனைவிடாத சபத்தைப்போலச் சாந்தனாகித் தனது ஹிருதயத்தில் சிந்திக்கத் தொடங்கினன்.

## காளியன் சிந்தனை

அகோ ! ஆச்சரியமாச்சரியம்; சர்வ சராசராத்மகமாகிய இந்தப் பிரபஞ்சத்தினுள் விருத்தியடையாநின்ற தேவாசுரகந்தர்வாதி சமூஹங்களும், மனுஷ்யபசுபக்ஷி விருக்ஷமுதலானதுகளும், எனது துர்விஷாக்கினிஜ்வாலைகளின் ஸ்பரிசமாத்திரத்தினால் தங்களாஸப் பிராஸங்களு மொடுங்கி மஹத்தாகிய துன்பங்களையடைந்து மரணமடைவார்களே. ஆ ! இதென்ன வதிசயம் ! இப்படிப்பட்ட கொடிய விஷஜ்வாலைகளைச் சஹித்து எவ்வளவும் லட்சியஞ் செய்யாமல் இந்த கோபால சிறுவன் எனது சஹஸ்தர பணாமண்டலங்களையுஞ்சின்ன

பீனமாக மிதித்து நர்த்தனஞ்செய்கின்றனன்; ஆகையால் இவன் பிராகிருத சம்பந்தமாகிய தேவாதி மஹாராஜன் மனுஷ்யாவதாரங்களைப்போலப் பஞ்சபூதாத்மகமான சரீரத்தையுடையவனல்லன்; சர்வாந்தர்யாமியாகியும், பரப்பிரம்ம ஸ்வரூபனாகியும், ஸ்ரீசர்வேஸ்வரனாகியும் எழுந்தருளியிருக்கிற ஸ்ரீஹரியே யாகவேண்டும். அந்த ஹரியேயல்லாமல் என்னுடைய விஷக்கரேத்தைச் சஹிக்க இதரமானவர்களுக்குத் தரமாகுமோ! என்று சிந்தித்துத் திவ்யஞானம் பிறந்து, மஹத்தாகிய பீதியையடைந்து வந்தனஞ்செய்து, மிகவும் மஹத்தான ஆயாசமுற்றிருந்தான்.

பரீக்ஷித்து மஹாராஜனே! இந்தப் பிரகாரம் ஸ்ரீஹரியினுடைய ஸ்ரீசரணாரவிந்த மஹிமாதிசயப் பிரபாவங்களையடைந்து அதிதுர்ப்பலராகிய தனது பணாமண்டல முழுதுஞ் சாய்ந்து சப்தமற்றதைப்போல அசைவற்றவனாய் வீழ்ந்துகிடக்கின்ற இந்த உரகேந்திரனைப் பார்த்து, இவனுடைய பத்தினிகளான நாககன்னிகைகள் தங்கள் பர்த்தாவுக்கு நேரிட்ட உபத்திரவத்தை நினைத்து மனதில் கிலேசமடைந்து, சிந்தாக்கிராந்தைகளாய்க் கூந்தல்களின் பந்தங்களாகிய ரவிக்கைகள் நெகிழவும் பூஷணங்கள் சரியவும் அலங்கோலமாய்ச் சிக்குப்பட்டு அலைய, குசங்களினிடத்தில் விரிந்திருக்கின்ற மேல் முன்றானைகள் சோர்ந்துவிழக் கண்களில் தாரைதாரையாய் ஜலம் பெருக இனி என்னசெய்யப்போகின்றோம் என்கிற சிந்தனையோடே விசனமுற்றவர்களாகி, ஸ்ரீகோபால சூடாமணியாகிய ஸ்ரீகிருஷ்ணபகவானைப் பார்த்துச் சாஷ்டாங்கமாகத் தண்டன் சமர்ப்பித்து, தங்கள் சிரோபாகத்தினுச்சியின்மீது இரண்டுகைகளையும் அஞ்சலிசெய்து, குழந்தைகளை முன்னிட்டுக்கொண்டு, திவ்வியஞானத்தையுடையவர்களாய் ஸ்துதிசெய்யத் தொடங்கினார்கள்.

## காளியஉரகேந்திரன் பத்தினிகளான நாககன்னிகைகளின் ஸ்துதி.

ஓ சுவாமி! ஜகதீஸ்வரரான தேவரீர் விஷயத்தில் இந்தக்காளியன் செய்த அபராதத்தை அனேககோடி ஜன்மமெடுத்துந் தீர்க்கமாட்டான். பரமகாருண்யரான தேவரீருடைய திருவடிசம்பந்தத்தால் இவனிட்ட சகலபாபங்களும் ஆட்டத்தைக்கண்டு நிவர்த்தியாயின. பிரமன் முதலிய சகலதேவர்களும் ஸ்ரீமகாலக்ஷ்மியினது கடாக்ஷத்தை அனேககாலந் தவஞ்செய்து அடைகின்றார்கள். அப்படிப்பட்ட மகாலக்ஷ்மியே வெகுகாலந் தவஞ்செய்து அடையத்தக்கதாயிருக்கிற தேவரீருடைய திருவடிகளைச் சர்வகாலமுந் தியானஞ்செய்கிற பாக்கியவான்களுக்குச் சொர்க்காதிபோகம் கிடைத்தாலும், ஐம்பதுகோடி பூமண்டலத்தை அரசாட்சிசெய்யக் கொடுத்தாலும், ஒன்றையும் விரும்பாமல் தேவரீருடைய திருவடியில் அர்ப்பித்த துளசியை அபேட்சிப்பார்கள். அப்படிப்பட்ட திவ்யசக்தியையுடைய திருவடியால் அப்பிரயோசகனுயும், கண்டகனுயும் மகாபாபியாயுமிருக்கிற இந்தக் காளியன் சிரசில் நர்த்தனஞ் செய்யும்படி இவன் பூர்வத்தில் எத்தனைகோடி தவஞ்செய்தானோ அறிகிலேம். அகிலாண்டகோடி பிரமாண்ட நாயகராயும், ஜகத்காரணராயும், சுருதி, ஸ்மிருதி,

ஹாச ஸ்வரூபியாயுமிருககிற தேவரீா தவிரகியானமிலலாத இவனபோலொதத மூடாகள செயத அபராதஙகையாக்ஷமிதது ரடசிககபபோகிறாாகள

ஓ பரமகிருபா வதஸலராகிய ஜகதஙிபுவே ! ஒதீனதயாளுவே ! எஙகளுக் குப பாததாவாகிய இவவுரகேநதிரன மஹோநதமன க்ஷமிககக கடவீரெனறு சொலலுகினறோம அலலோம ஜனமஸபாவமான கணடாஹிருதய குரூரபுத தியும, தாாசாரமும, சாவ ஜனபயஙகாமும, ஜாதீயமாயிருககினறவன தான அபபடியிருநத போதிலும உமது பகதஜன ஸதிரீஜாதிகளாகிய எஙகளுடைய சுபாவமான மாஙகலய சமபததை யிழககவும, அலஙகாா ஹீனமாயிருககிற வைதவயததை யடையவும நேரிடுமே யெணறெணணி, கிருபாபயோ நிதி யாகிய உமமைச சரணமாக வடைகினறோம ஆஞைதாளாகிய எஙகள் பொருடடு அவனது அபராதஙகை க்ஷமிதது, தீனவசன ஸதுதிகளை அஙகீ கரிதது, மஙகலகரமாகிய பதிபிஷையை லபிககச செயது ரக்ஷிககககடவீா. ஓ கருணாபயோ நிதியாகிய ஸ்ரீயபபதியே ! உமது ஊழியனாகிய இநதக காளியனு னவன அகஙகார போகசௌகய சாவகுணஙகளழிநது, மஹததரமாகிய அநதப பணாமணடல முடிகளுஞ சிதைநது, ஆசபபிராசஙகளும ஒடுஙகித தததளிததுக கொணடிருககினறான

ஆகையால எஙகளைக் குறிததாவது, அலலது உமது கிருபாமஹிமை யைக குறிததாவது, எஙகள பாததாவாகிய இநதச சாபபராஜனிடததில கிரு பைகூாநது இவன நறகுணஙகளையடைந தியயுமபடி ரடசிககககடவீா எனறு பிராாததிதத மாததிரததில ஸ்ரீபகவானும பாதாரவிநத தாடன நாததனஙக ளிலநினறுஞ சாநதராகி, அபபாசெழுநதருளிக கிருபாபரி பூரணராயக் கடாடசிததாா அபபடி கடாடசிதத மாததிரததில அவவுரகபதியும சிலநே ரம ஆயாச முறறிருநது, பினபு சறறுநேரததில தெளிநது, ஜீவனோடுஙகூடிய பிராணேநதிரியஙகளைச சௌககியமாக வடைநது, தனது பணாமணடல முகஙகளை நனறாகச சீாதிருததிககொணடு, பெரு மூசசுகளைவிடடு, ஆயா சஙகளொழிநது, ஸ்ரீஜலஜநயனரான சுவாமியை நனறாக உறறுபபாாததது பகதியுடன சேவிதது, தனது இரணடு கரஙகளையுங கூபபி அஞசலிசெயது துதிசெயயத தொடஙகினன

## காளியநாமதேய புஜகேநதிரனுடைய வாக்கியம்

வாரீா ஸ்ரீபகவானே ! உமது திவயசஙகலப மாததிரததில ஸ்ருஷடிகளில தமோகுணப பிரதானாகளாயக கொடியவிஷாகனி கணஙகளாக கணடஙக ளில வைததுககொணடு சாபபசரீராகாரஙகளை யுடையவாகளா யிருககிற எஙகளால இவவுலகததிறகுப பயஙகரமாகிய கொடியவினைகள நேரிடுகினறன வேயலலது, ஒரு நனமையுணடோ , எஙகளுககு ஸஜாதீயகோரமும, விஷ சக்தி பலததாலுணடான ரௌதரா காரமும, தைரியமுகூண ரோஷஙகளும, மிகுநத கஙவாதிசயஙகளும விருததிபடைநது கொணடிருக்கின்றனவேயல லாமல், இநத ஜன்மததில லேசமாததிரமாகிலும யாதொரு நனமையும உண்

டாகின்றதே யில்லை ஓ ஸ்ரீநளினநாபரே! எங்களுக்கு ஸஜாதீயமா யிருக்கிற இந்த துஷ்ட ஸ்வபாவகுணங்களை ஒருக்காலும் விட்டொழிகின்றதில்லை அப்படிப்பட்ட எங்களிடத்தில் சர்வலோக ஹிதபரராகிய நீர் உமது பரமகாருண்யாதிசயத்தினால் சிட்சித்துப் பரமோபகாரார்த்தமான நல்லறிவு தோன்றும்படி யருளிச்செய்த உமது கல்யாண குணங்களுக்கு நமஸ்கரிக்கின்றேன். வாரீர் புருஷஸ்ரேஷ்டரே! சர்வ ஜந்துக்களுக்கும் மூலகாரண சமபூதராகிய உமது பதபநாபி விவரங்களில் நின்றும் உண்டாகச் சர்வப்ரபஞ்சங்களையும்

அப்படிப்பட்ட ஆச்சரியகரமான ஸ்ருஷ்டிபேதங்களில் ஸஜாதீய தாமஸகுணங்களும், சாபாகாரங்களும், க்ரூரஸ்வபாவங்களு முள்ளவர்களாய் நாங்கள் ஜனித்து, ஸ்ரீபகவானாகிய உம்முடைய மாயா மோஹன நித்ராஹிதர்களாய் மயங்கி, க்ரூர ஸ்வபாவங்களான காவாந்தகாரத்தில் மூழ்கி ப்ரமித்திருக்கின்றோம் இப்படி நாங்கள் எந்தச் சுகிர்தத்தினால் நன்மார்க்கங்களாகிய பரமதர்மங்களை யறிந்து அம்மாயா சாதுரியங்களில் நின்றுந் தவிர்ந்து உஜ்ஜீவிக்கப் போகின்றோம். வாரீர் ஸ்ரீபகவானே! அகிலலோக கர்த்தாவாகியும் சர்வ ஸ்வாமியாகியும் விளங்குகின்ற உமதாக்கினையால் நிக்ரஹாநுக்ரஹ பூர்வகமாகச் சிட்சித்து எங்களை நியமிக்கக் கடவீர், ஓ ஸ்ரீசர்வேஸ்வரரே! நிகில ப்ரஹ்மாண்ட கோடிகளில் தமது பரமகிருபையால் ஆக்ஞாபிக்கப்பட்டபடி நாங்கள் வசித்துக் கொண்டிருக்கின்றோம் ஆகையால் மஹத்துக்களாகிய ஸ்ரீபாகவதாபிமான ஸ்ரீபகவத்கிருபைக்குப் பாத்திரமாகத்தக்க புத்தி கோசரங்களை யருளிச்செய்து இரட்சிக்கக்கடவீர்

என்னுடைய ஜன்மாந்திரங்களில் என்னையு மறியாமல் எந்த மஹாநுபாவர்களுடைய திவ்யாபிமான கிருபாவலோகனத்த யதிசயத்தை நானடைந்தேனோ: அந்த மஹதபிமானத்தினால் இச்ஜன்மத்தில் இப்படிப்பட்ட உமதருளின மஹாதிசய சுகிர்த பாக்கியோதயங்களை கிடைக்கப் பெற்றேன். இவற்றைக் குறித்து என்னென்று சிந்திக்கப் போகின்றேன், ஆத்மாராமர்களாய்த் தீர்த்தவாதி சயபேக்ஷையற்ற ஞானாதிசயங்களையுடைய சனகாதி திவ்யபரம யோகீந்திரர்கள், வாஞ்சிக்கத்தக்க உமது திருவடித் தாமரைகளினின்றுண்டான மகரந்தாஸ்பத ஸ்ரீரேணுக்களை லபிக்கப்பெற்று உஜ்ஜீவிக்க இன்னமும் பிரார்த்தித்துக் கொண்டிருக்கின்றார்கள் அப்படிப்பட்ட திவ்விய சம்பத்கரமான ஸ்ரீசரணாரவிந்த ஸ்ரீ பாதஸ்பரிசங்களை எனக்குக் கிடைக்கும்படி பெற்றுக்கொண்டேன். இனி எனக்கு எந்தப் பதமானாலுமென்ன; எந்த லோகத்தில் வாசமாயிருக்கச் செய்தபோதிலுமென்ன? உமதருளின வண்ணமே யல்லது வேறில்லை என்று இந்தப் பிரணாமங்களைச் செய்து துதித்தான். வாரீர் தீக்ஷிதனாகிய மகாராஜனே! சர்வகாரிய காரணாத்மகனாகிய ஸ்ரீசர்வேஸ்வரன் இந்தக்காளிய சர்ப்பராஜனுடைய ஸ்துதி பூர்வகமான உபசார வார்த்தைகளை யங்கீகரித்து, அந்த உரகேந்திரனுக்கு நியமிக்கின்றார்.

## ஸ்ரீ பகவானுடைய வாக்கியம்.

வாராய் ஸ்ரீ பகவத் பக்தனாகிய காளியனே! இன்று முதல் இந்த மஹா நதி தீர்த்தத்தில் யாவரும் ஸ்நான பானங்களைச் செய்து சந்தோஷிக்கவும், கோவர்க்கங்கள் மனுஷ்யர்கள் முதலிய சகலஜீவராசிகளுந் தங்கள் தாபந் தீரும்படியாய் நீராடித் தாஹபானஞ் செய்து திருப்தி யடையவும், இந்த நதியை விட்டுவிட்டு நீயும் உனது சஹகுடும்பங்களாகிய புத்ரமித்ர களத்ராதி சர்வபரிவாரங்களும் சமுத்திரத்திற்குப் போய் எனது குணுபவங்களைச் செய்துகொண்டு சுகித்திருங்கள். இந்த யமுனாநதிமடுவில் உன்னால் நேரிட்டிருந்த பூர்வபயங்களை நீக்கி, பிரஸ்துதத்தில் நதிதோஷ நிவாரணங்களையுஞ் செய்து, இம்மாஹாநதி தீர்த்தத்தினை யாவருந் திருப்தியடைந்து புண்யபலன்களை யடையும்படி நம்மால் செய்யப்பட்டது. இப்படி செய்யப்பட்ட இந்தப் புண்யசரித்திரங்களைக் காலையிலும் மாலையிலும் சுசிர்ப்பூதர்களாய் ஸ்ரீபகவத் பக்தி சஹிதத்துடன் குணுபவஞ் செய்கின்ற பலப்பிரதர்களான சுகித ஜனங்களுக்கு, அனந்தாதி புண்யபலன்கள் உண்டாகும்.

மேலும் அவர்கள் குரூரசாபத் தஷ்டங்களாலுண்டாகின்ற விஷதோஷங்களையும் அடையாமலிருக்கக் கடவர்கள். பின்னும் இன்று முதல் இப்பிரபஞ்சத்தவர்களில் யாராகிலும் இம்மகாநதி புண்ய தீர்த்தத்தில் பக்திஸ்ரத்தையுடன் ஸ்நானஞ்செய்து, விரதோபவாச உதகாநுஷ்டான பராயணராய்த் தங்கள் தங்கள் இஷ்டதேவதா பிரார்த்தனைகளைச் செய்து, இந்தப் புண்யதீர்த்தக்கரையில் நித்யாப்யாஸாதி பிதுர்க்கிருத்யங்களையுந் தேவதா யக்கியங்களையுஞ் செய்து, தேவரிஷிபித்ருமானவாதி ருணங்களைத் தீர்த்து, ஸ்ரீபகவத் சமர்ப்பணபுரஸ்கிருதச் சாத்விக திவ்ய மானசர்களாவார்களானால், அப்படிப்பட்ட மஹாத்மாக்கள் தாங்கள் ஜன்மஜன்மங்களிற் சம்பாதித்த துக்க சமூகங்களினின்றும் விமுக்தர்களாய்ப் பரகதியை யடையக்கடவர்கள்.

வாராய் சர்ப்பேந்திரனே! பூர்வத்தில் நீ ஸ்ரீகருடபகவானுடைய பீதியினாலல்லவா உனது நிஜவாசஸ்தானமாகிய ரமணகத்வீபத்தை விட்டு இம்மடுவில் பிரவேசித்திருந்தாய். இனி யாதொரு சத்ருபயமில்லை. எனது ஸ்ரீபாதாரவிந்த குறிகளையடைந்த உனது பணாமுடிகளைக் கண்டமாத்திரத்தில் அந்தப் பட்சிராஜனாகிய கருடனாகப்பட்டவன் உன்னோடிசைவும் விசுவாசமாக ஸ்நேகிப்பானேயல்லது, சத்துருவாக பாவிக்கக்கடவனல்லன் என்று இவ்விதங்களாக ஸ்ரீகோபாலகிருஷ்ண பகவான் கிருபையாகச் சொன்னார்.

இப்படிச் சொன்ன மாத்திரத்தில் அந்தப் புஜங்கேந்திரன் மகாசந்தோஷானந்த பரிதனாகி, தனது பத்னிகளுந் தானுமாயிருந்து பக்திவிசுவாசத்துடன் திவ்யபீதாம்பரங்களுந் திவ்ய பூஷணங்களையும், திவ்யசந்தன புஷ்பதாமபூலாதி மங்கல திரவியங்களையும், அதலவிதலாதி உபலோகங்களில் மிகுந்திருக்கின்ற சகல மனிதர்களுக்கும் அரிதாய்த் தேவதாமசமமாயிருக்கின்ற மகா பரிமளமாகிய ஒரு நீலோற்பல புஷ்பமாலையையும், ஸ்ரீகண்ணபி

ராஜனுக்குக் காணிக்கையாகச் சமர்ப்பித்து, அந்த ஸ்வாமிகிருபையை யடைந்து செல்வப்பெற்றுக் கொண்டு, தனது புத்திரமித்திர களத்திர சமேதங்களுடன் அந்த தயாபரியாயங்களைத் தன்னைச் சேர்ந்து சந்தோஷித்துக் கூறுபவனாய்ச் செய்து கொண்டுவர ஸ்ரீபகவானுக்கு அடிக்கடி தண்டனிட்டு, அஞ்சலிசெய்து துதித்துக் கொண்டு, ரமணக நாமதேய ரத்நாகரத்வீபத்தைக் குறித்துச் சென்றான். ஸ்ரீகிருஷ்ணபகவானின் அனுக்கிரகத்தால் அந்த ஜலத்திற்கு விஷமபோய் பரிசுத்த மாகச்சுதென்று சுக யோகீந்திரர் சொன்னார்.

---

# பதினேழாவது அத்தியாயம்.

சலி விருத்தம்

பண்டு நாளையிற் புள்ளரசன் றனக்
கொண்ட பாரகஞ் செய்த கொடுமையும்
வண்டு தீயினைப் பானஞ் செய்துமனங்
கொண்டு ரட்சித்த கொள்கையுங் கூறுவாம்.

ஸ்ரீஹரிபக்தி லபதனான காளியன் பூர்வத்தில் கருடபகவானுக்கு அபராதஞ் செய்ததையும், ஸ்ரீகிருஷ்ணபகவான் காட்டுத்தீயைப் பானம் பண்ணிச் சகல கோபால கோபிஜன கோவத்ஸங்களை இரட்சித்ததையுஞ் சொல்லுகின்றான்.

வாரீர் தயாபரிபூர்ணரான பிரமமஹரிஷி சிரேஷ்டரே! இந்தக் காளியனென்பவன் தனது நிவாசஸ்தானமாகிய ரமணகத் வீபத்தை விட்டு, தங்கள் சஜாதீயர்களான சர்ப்ப இனங்களைத் துறந்து, தானமாத்திரந் தனது குடும்பத்துடன் வெளிப்பட்டு வரும்படியாய் கருடபகவான் விஷயத்தில் என்ன அபராதங்களைச் செய்தான்? அந்தச் சரித்திரத்தை விசிதமாகச் சொல்லவேண்டுமென்று பிரார்த்தித்தான் அவ்வரசனைப்பார்த்து முனீந்திரர் சொல்லுகின்றார். கேளீர்மகாபாகவத சிகாமணியாகிய பரிக்ஷித்து மகாராஜனே! அந்தரமணகத்வீபத்தில் வாசஞ்செய்கின்ற சகலமான ஜனங்களுந் தங்களுக்கு இந்தச் சர்ப்பங்களுடைய பயங்களெல்லாம் விருக்ஷத்தக்கதாக மாதங்கள் தோறும் மகாவிருக்ஷங்களினடிவாரங்களிலும், பிலத்துவார சமீபங்களிலும், மணற்குன்றுபோல பிரகாசிக்கின்ற புற்றுகளின் சமீபங்களிலும், சுசிர்பூதர்களாய்ப் பயபக்தி விசுவாசங்களுடன் சந்தனகர்ப்பூர சுகந்த புஷ்ப தாம்பூலாதி மங்கல திரவியங்களைக் கொண்டு சர்ப்பங்களை ஆராதித்து, அறுசுவை ரசவர்க்கங்களைச் சமர்ப்பித்துக் கொண்டிருந்தார்கள்.

இந்தச் சர்ப்பங்களும் பருவதின புண்யகாலங்கள் தோறும் தங்களுக்குச் சர்வஜனங்களாலும் சமர்ப்பிக்கப்பட்ட அந்த ஸத்கார பூஜாபாகங்களைத் தங்கள் குலத்திற்கு வைரியாகிய ஸ்ரீ கருடபகவானுக்குச் சமர்ப்பித்து, அவ

ரால் யாதொரு அரிஷ்டங்களையுந் தாங்கள் அடையாமலிருக்கத் தங்களை ஆளா இரக்ஷிக்கும்படி பிரார்த்தார்கள் இவ்விதங்களாக நடந்து வருகின்ற காலங்களில் இந்தக்காளிய புஜகேந்திரனானவன் மகாபல பராக்கிரமனாகிய விஷ வீரிய தைரிய ஸ்தைரியனாகியும் இருப்பதால் காவித்து, தான் மாத்திரம் அந்த வினதைச் சிறுவராகிய பக்ஷீந்திரரை மதியாமலும் தனது பூஜாபாகங்களைக் கொடாமலும் அலட்சியஞ் செய்து கொண்டிருந்தான் அதனால் இந்த வேத புருஷாமச பக்ஷிராட்டாகிய கருடபகவான் கோபத்தீ பிதமானஸராய் அந்தக் காளியனுடைய பணாமண்டல முகங்களைக் கிழித்துச் சம்ஹரிக்க வேண்டுமென்று உத்தேசித்து, அனந்தமான கொடிமுடி சிகரங்களையுடைய ஸ்ரீமகம் மேரு பர்வதராஜனானவன் எழும்பிப் பராக்கிரமாதிசயத்துடன் விஜயஞ்செய்ய வருகின்றது போலச் சுவர்ணமய சரீராகார ஸ்வரூபராய் வெளிப்பட்டார்

இப்படி வெளிப்பட்ட கருடபகவான் அந்த ரமணகத் வீபத்திலுள்ள குளங்களோடு கூடிய பர்வதங்கள், வனங்களிலுள்ள விருக்ஷங்கள், இலைமுதலியவைகள் வேரோடே பறிந்து பறக்கும்படியாகவும், பட்டணங்கள் கிராமங்கள் முதலிய சர்வப்பிரதேசங்களும் நடுநடுங்கி அல்லகல்லோலமாகவும், மகா விசித்திரத்ன சோபிதாகாரங்களாகிய பக்ஷத்வயங்களை ஊழிகால மேகங்களானுண்டாகிய கோரபயங்கர சப்தமேகப் பெருங்காற்றாக ஞண்டாகும்படி வீசிக்கொண்டும், பூமிபதிரந்து பிரதித்துவனிகள் செய்யச் சர்வஜன பயங்கரமாகக் கோஷித்துக் கொண்டும் வந்தார் இப்படி வருகின்ற இந்தப் பக்ஷீந்திரரைப் பார்த்துச் சர்வஜனங்களும் ஆ! ஆ! என்று ஆஹாகாரஞ் செய்தார்கள் சில உத்தமர்கள் சரணமடைந்து பிரார்த்தித்தார்கள் அந்தச் சமயத்தில் இந்தக் காளியனானவன் மகாதீரபராக்கிரம விஷஜ்வாலையில் வீர்யத்துடன் அந்தப் பக்ஷீந்திரரைப் பார்த்து, கோபத்தீபிதனாய்த் தனது பணாமண்டல முகங்களை விரித்துக்கொண்டு, கண்களில் நின்று விஷாக்னிகணங்களுதிர, வாய்களினின்று புகைக்கொழுப்பு, நாவங்களிலிருந்து விஷ ரசங்கள் வழியக் கோரபயங்கராகாரமாகிய யமபாசத்தைப்போல நாகருக்களை நீட்டிக்கொண்டு, மகா உக்ரகோபத்துடனெழும்பி, அந்தப் பக்ஷீந்திரனுடைய சர்வாவயவங்களையுஞ் சின்னாபின்னமாகக் கடித்து, பட்டைகளினுள்ளவைகளுக்குக் கொப்பான விஷரசங்களை மேலுமிழ்ந்து கொழுந்தி மகாவருத்தங்களை யடையச் செய்தான்

அப்போது அந்தக் கருடபகவானும் முன்னிலும் அதிகமான பராக்கிரம வீரியாதிசய ரௌத்திராகார கலயிருக்கிற்குச் சமானமான ஸ்வரூபத்துடன் தமாகினும் தன்னையைக் கொள்ளாதவராய், ஊழிகால ருத்திரனைப்போல உக்ரமான கோபத்தை யடைந்து, இந்தச் சர்ப்பேந்திரன் பேரிற் பாய்ந்து தாக்கி, நகச்சு பரியந்தம் சரீராவயவங்கள் முறிய தனது பக்ஷங்களால் அறைந்து அவனுடைய அனந்த பணாமண்டல முகங்களையுந் தலையெடுக்க வொட்டாமற் கொத்திக் கொத்திக் கிழித்துச் சென்டாய், இரத்தமாம் ஸங்களுதிரும்படி யவன் விஷங்களைக் கொள்ளைகொண்டு, சரீரமாத்திரயத்த

ழுமச்சல்லடைக் கண்களைப்போலத் தமது பாதங்களாலும் மூக்கின் கூர்மையினாலுந் துளைத்துச் சின்னபின்னமாக அடித்தார். அப்படியடிக்குஞ் சமயத்தில் இந்தப் புஜகேந்திரன் இளைத்து, மகாவருத்தத்தை யடைந்து, தனது காவமழிந்து, பிராணப்பிரீதியுடனே எப்படித் தப்பித்துக் கொள்ளப் போகின்றோமென்று ஏக்கங்கொண்டு யோசித்து, சமயம்பார்த்துப் பதறிக்கதறிக் கொண்டு ஓடிவந்து, இந்த யமுனாநதி மடுவில் பிரவேசித்தொளித்தான். அப்போது கருடபகவான், நல்லது இனி எப்போதாவது அகப்படமாட்டாயா? அந்தச்சமயத்தில் உன்னைச் சம்ஹரிக்கின்றேனென்று சொல்லிப்போனார்.

வாரீர் மகாராஜனே! இந்தச்சர்ப்பராஜன் இந்தக் கம்பீரமாகிய மடுவிலிருந்தால் பயமில்லாமல் வாழலாமென்று நினைத்துப் பிரவேசித்ததற்குக் காரணஞ் சொல்லுகின்றேன் கேளும். பூர்வத்தில் மகாதபோநிதியாகிய சௌபரியென்னும் மகாரிஷியானவர் வெகுகாலமாக இந்த யமுனாநதி தீரத்தில் தவஞ்செய்து கொண்டிருந்தார். அப்படியிருக்கின்ற சமயத்தில் சர்ப்பவைரியாகிய கருடபகவான் மிகவும் பசியினால் வருந்தி, இம்மடுவில் பிரவேசித்து, இதில் விருத்தி யடைந்துக் கொண்டிருக்கின்ற ஜலஜந்துக்களை நித்தியராய்ப் பட்சித்துக் கொண்டிருந்தார். அதை அந்தச் சௌபரியானவர் பார்த்து, அப்பனே! பட்சித்தது போதும். இனிமேல் இதிலிருக்கும் ஜலராசிகளை ஹிம்ஸிக்க வேண்டாமென்று சொன்னார். அப்படிச் சொல்லியிருக்கவும் சிலநாள் பொறுத்து ஒருநாள் மறுபடியும் கருடபகவான் அந்தப் புண்யஸரஸில் பிரவேசித்து, ஜலஜந்துக்களை ஹிம்ஸித்துப் பட்சித்தார்.

அப்படிப் பட்சிக்கின்ற சமயத்தில் மற்ற ஹதசேஷமாகிய ஜலஜந்துக்களெல்லாம் மிகுந்த வியாகுலத்தை யடைந்து, பிராணப்பிரீதியினால் இளைத்து ஒடுங்கித் தீனத்துவங்களைக் கொண்டிருந்தன. அம்மஹாரிஷியானவர் இந்த ஜலஜந்துக்களைப் பார்த்து, மிகவுந் தயாளுவாய் ஐயோவென்றிரங்கி, ஆயாசத்தை யடைந்து, இவைகளைக் கொலைசெய்து பட்சிக்காநின்ற இந்தப் பட்சிராஜனிடத்தில் மிகவும் கோபத்தீப்த மானஸராய் அந்தப் பட்சிராஜனை யுத்தேசித்து, இன்றுமுதல் இந்த மடுவில் பிரவேசித்து இதிலிருக்கின்ற ஜலஜந்துக்களை ஹிம்ஸித்துப் பட்சித்தீராகில் உமது பிராணவாயுக்குள் சிதறி உயிரிழந்துபோகக் கடவீரென்று சபித்தார். அந்தச்சாபரகசியம் இந்தக்காளிய சர்ப்பராஜனொருவனுக்கு மாத்திரந் தெரியுமல்லது, மற்றச் சர்ப்ப சமூஹங்களுக்குத் தெரியாது. ஆகையால் இந்தக் காளியனொருவனுமே இந்த நதியிற் பிரவேசித்து, தனது புத்ர மித்ர களத்ர பரிவாரங்களை யழைப்பித்துக் கொண்டான்.

வாரீர் மஹாநுபாவனே! இவையெல்லாமுணர்ந்த சர்வசாக்ஷிபூத சர்வக்ஞனாகிய ஸ்ரீகிருஷ்ணபகவான் சர்வப்பிராணி ஸம்ரக்ஷணார்த்தத்தின் பொருட்டு அந்த உரகபதியை அம்மடுவில் நின்றும் வெளிப்படுத்தி, அவனுக்கு யாதொரு சத்துருபய மில்லாமலிருக்க அபயப் பிரதானஞ் செய்து, மிகவும்

சௌக்கியத்தை யடைந்து ஸ்ரீபகவத் பக்தியுக்த ஸாதுவா யிருக்கும்படி நியமித் தனுப்பிவிட்டு, பின்பு திவ்யபரிமளமாகிய நீலோத்பல புஷ்பமாலையினையும், திவ்யகந்த பீதாம்பரா பரணங்களையும், திவ்யமாணிக்க மரகத இந்திர நீல வச்ராத்ன மாலைகளையும் அணிந்து, இராகுகேதுவினால் கிரகிக்கப்பட்டிருந்த சூரியசந்திரர்கள் விடுபட்டுப் பிரகாசிப்பதுபோல் ஸ்ரீபகவானானவர் அந்த நாகேந்திரனும் நாககன்னிகைகளும் பக்தியுடன் சமர்ப்பித்த திவ்யஸுவர்ணமய ரத்நாபரணாலங்கிருதத்துடன் தமது திவ்யஸ்வரூப தேஜசும் பிரகாசிக்க அம்மடுவில் நின்றும் வெளிப்பட்டு, சகலாப்த ஜன சமூகங்களில் வந்து சேர்ந்தார்.

அத்தருணத்தில் அவருடைய தாய்தந்தைகளாகிய ஸ்ரீயசோதா நந்தகோபர் ரோஹிணி சமேதர்களான சகலகோபால கோபிகாஜனங்களாகிய சகலாப்த ஜனங்களும் மூர்ச்சை தெளிந்து ஆயாசந்தீர்ந்து, ஸ்ரீமாதவப் பிராணனைப் பார்த்து, பிராண லாபத்தை யடைந்த இந்திரிய சமூகங்களைப்போல் சந்தோஷித்துப் பரமானந்த பரிதர்களானார்கள். ஸ்ரீபலபத்திரரும் தமது திருத்தம்பியாகிய ஸ்ரீகண்ணபிரானைக் கண்டு கண்களித்து, ஆனந்தத்துடன் ஆதராதிசயமாக ஆலிங்கனஞ் செய்து சந்தோஷித்தார். சகலகோபால கோபீஜனங்கள் யாவரும் நேத்ரோத்ஸவமாகச் சேவித்துக் கொண்டிருந்தார்கள். ரிஷபங்களெல்லாம் மத்தாகிய செருக்கையடைந்து, வால்களை உயரத் தூக்கித் தலையை யெடுத்துக்கொண்டு, ஆ! கிருஷ்ணா ஜயது ' என்னுமாப்போல் கர்ஜித்து ஊங்கரித்தன. கன்றுகுட்டிகள் ஸ்ரீகிருஷ்ண தரிசன குதூகலத்தினால் அந்த யமுனாதீரத்தத்தினோரங்களில் வால்களை உயரவெடுத்துச் சப்தித்துக் கொண்டு இளமான் குட்டிகளைப்போல் இடசாரி வலசாரியாயோடி விளையாடிச் சம்பிரமங்களை யடைந்தன.

காமதேனுவைப் போலொத்த பசுக்களியாவும் தங்கள் போஷகனாகிய ஸ்ரீகோபால கிருஷ்ணமூர்த்தியைக் கண்டமாத்திரத்தில் சந்தோஷபரிதமானஸத்தால் சரீராவயவங்கள் பூரித்து, ஆ கோவிந்தா ! என்னுமாப்போல் அம்மா வென்று சப்தித்துப் பரமானந்தங்களை யடைந்து ஸ்ரீபகவானைச் சூழ்ந்தன. அந்தப் புண்யதீர்த்தத்தின் ஓரங்களில் பட்டுப்போயிருந்த விருக்ஷங்கொடி பூண்டு முதலிய சகலசமூகங்களுந் தளிரெடுக்குங் காலமாகி வசந்தகாலம் நேரிட்டது போலத்தளிர்த்தன. சகல மிருக பக்ஷி சமூகங்களும் சூரியோதய காலசமீப பஞ்சவுஷக் காலத்தைக் கண்டதுபோலக் கலகலவென்று மஹானந்த வைபவத்துடன் நாநாவித சுஸ்வரங்களுண்டாகச் சப்தித்தன. அப்பொழுது சகலப் பிரமஹண்ய ஜனங்களும், புண்யாங்கனைகளாகிய பிராமமணஸ்திரீகளும், ஸ்ரீநந்தகோப யசோதை முதலாகியவர்களைப் பார்த்து, உங்கள் பூர்வ ஜன்மங்களினுடைய சுகிர்தவிசேஷ அருந்தவப் பயன்களினால் சர்வப்பிரபஞ்ச மனோகரமாய் விளங்குகின்ற மகாதவப் பலமாகிய உங்கள் புத்ரரத்நமானவர் இந்தக்கொடிய சர்ப்பசங்கடத்தில் நின்றும், விடுபட்டு க்ஷேமமாய் வந்து சேர்ந்தார். உங்கள் பாக்யோதய புண்யவசத்தை யென்னென்று துதிக்

கப்போகிறோம்? என்று மிகவும் ஆதரத்துடன் சந்தோஷானந்த பரிதமர்ன ஸ்களாய் ஆசீர்வசனங்களைக் கூறினார்கள்

அந்தக்ஷணத்தில் ஸ்ரீயசோதாப் பிராட்டி ஸ்ரீகிருஷ்ணபகவான் சமீபத் திற்கு அதிக அன்புடன் வந்து, தனது அருமைச்சிறுவனை ஆலிங்கனஞ் செய்து, உச்சிமோந்து, திவ்யதிருமேனி யெங்கும் ஸ்பரிசித்து, தனது இடுப் பின்மீது எடுத்துக்கொண்டு, என்னையனே! என்னப்பனே! எங்கள் குலதெய் வமே! என்று முத்தமிட்டுச் சற்றுநேரஞ் சும்மாவிருந்து, எங்கள் அருஞ்செல் வப் புத்திரனே! உன்னை இக்கொடிய சர்ப்பமானது கடிக்கும்போது மகத் தாகிய ஆபத்துக்களை யடைந்து எங்களை நினைத்துத் துக்கித்தையோ? பதறிக் கதறினையோ? விதியை வெறுத்தையோ? என்னப்பா? ஏன் இடமடுவில் இறங் கினாய்? நீயெப்போதும் தீரபுருஷனென்று அகமிந்து பிரவேசிக்கின்றவ னல்லவா? உனது ஆச்சரியகரமான சேஷ்டிதங்களைக் குறித்து நாங்க ளஞ்சுகின்றோம், எங்களைப் பற்றியாவது மற்றப் பிள்ளைகளைப்போல சாதுவாயிருக்கப் போகா தா? என்று சொன்னாள் இப்படிப் பலவாறு தனது ஆதராதிசயங்களை விளங் கச்செய்து, ப்ரீதியால் நஷ்டகத்னன புத்திரனென்று மாதவனை அடிக்கடி பார்த்துப் பார்த்து, ஸ்வப்பனத்தில் அடைந்த தனமானது நேராகக்கிடைத் ததுபோல புத்திரலப் பிராப்தியாகிய ஸ்ரீபகவானை யடைந்து, அளவிறந்த சந்தோஷாதிசயத்தோடுங் கூடினவளாகி, அந்தச் செல்வச் சிறுகுமாரனை மடியிலவைத்து உகந்து ஆசீர்வசனங்களைச் சொல்லிக்கொண்டு, அடிக்கடி ஆனந்த பாஷ்பங்களை வருஷித்து, நல்ல திருப்தி அடைந்த மனமுடையவ ளாயிருந்தனள்

வாரீர் ராஜேந்திரனே! இவ்விதங்களாக யாவரும் ஆனந்தத்தை யடைந் திருக்கும்போது சூரியன் அஸ்தமனத்தை யடைந்தான் அந்தக் காளிந்தி தீரத்தில் அன்றையதினம் இராத்திரி நந்தகோப யசோதாதேவி முதலிய சக லகோபால கோபிஜன ஆபாலவிருத்தஜனங்க ளெல்லாரும், பசு கன்று விருஷப கணங்கள் யாவும், ஸ்ரீபகவத் சந்தர்சன சந்தோஷத்தினால் பசிதாகங்களை மறந்திருந்து, மிகவும் பொழுது போன பின்பு பசிதாகப் பீடிதர்களாய் அலுத்து, எவரெவர்கள் எங்கெங்கு எப்படி எப்படி யிருந்தார்களோ? அவ ரவர்கள் அங்கங்கு அப்படி அப்படியே சயனித்து நித்திரைசெய்து கொண் டிருந்தார்கள் பசு கன்று விருஷப கணங்களயாவும் அப்படியே மெய்மறந்து நித்திரைசெய்தன அந்த நடுநேரத்தில் மகத்தரமாகிய அந்த மகாரண்யப் பிரதேசத்தில் தெய்வீகத்தா லுண்டாகிய தாவானலமென்கிற ஒரு காட்டுத் தீயானது உற்பவித்து, அம்மகா வனத்திலிருக்கிற விருக்ஷ கொடி பூண்டு கள யாவையும் பற்றி யெரிந்துகொண்டு, நான்கு திக்கிலும் ஜாஜ்வல்ய மான மாய்ப்பொறிகள் சிதற, அதிகோராகாரமாய் மண்ணும் விண்ணும் புகையெ ழும்ப, ஜ்வலித்துச் சூழ்ந்து, வெகுவாக அலுத்துத் தங்கள் தாபந்தீரும்படி சுகமாக நித்திரைசெய்து கொண்டிருக்கின்ற இந்த நந்தவ்ரஜ சமூஹ புண்ய ஜனங்கள்மீது பாய்ந்தது.

இப்படி பாய்ந்த மாத்திரத்தில் யாவரும் திடுக்கிட்டுத் தூக்கந்தெளிந் தெழுந்திருந்து, இத்தீயினால் கொளுத்தப்பட்ட வேகத்தைச் சகிக்கக்கூடாத வர்களாய்ப் பிராணபீதியை யடைந்து, சர்வஜனங்களும் மாயாமனித பாலரா கிய ஸ்ரீஹரியைத்தவிர அன்னியராகிய வொரு ரக்ஷகரையுங் காணாமல், ஆ ஸ்ரீகிருஷ்ணா! ஆ ஆபத்பாந்தவா! ஆ சரணாகத வத்சலனாகிய ஸ்ரீபகவானே! இதோ பார்த்தீரா காட்டுத்தீயானது சமீபத்திற்கு வந்து விடுகின்றது இப் போதே எங்களுக்குச் சகிக்கக்கூடவில்லையே, ஸ்வாமி! இன்னுமுபேக்ஷை செய் கின்றீரோ? தஹித்து விடுகின்றதே இதோவந்து சூழ்ந்துகொண்டதே ஏக காலத்தில் யாவரும் இவ்வக்னி கணங்களால் மகத்தாகிய துன்பமுற்று அலை கின்றோம் எங்களை நீ ரெவ்விதமாக இரட்சிப்பீரோ அறிகிலோம் ஓபத்மாக்ஷ ரே? ஓ ஸ்ரீகிருஷ்ணா! ஓ ஸ்ரீபலராமரே! நீங்கள் மகாபராக்ரம சாலிகளான அதிமானுஷ சேஷ்டித தெய்வ புருஷர்களானகையால், சீக்கிரமாக இந்தக் காட் டுத் தீயைக் குளிரச்செய்யுங்கள்.

உங்களுடைய ஸ்ரீசரணாரவிந்தங்களே கதியென்றும், உங்களுடைய சே வையே புருஷார்த்தமென்றும், நம்பின பக்தஜனங்களாகிய எங்களுக்கு இத் துன்பங்கள் நேரிடலாகுமோ? ஓபரம புருஷர்களே! அதியுக்ரமான இந்தத் தாவானலச் சுவாலைகள் முழுதிலும் மேல் விழுந்து ஹிம்ஸிப்பதப்படி எங்களை ரட்சிக்கக் கடவீர்கள் என்று யாவரு முறையிட்டார்கள் அந்தச் சமயத்தில் ஸ்ரீபகவானானவர் தமது கருணாகடாக்ஷ வீக்ஷணயத்தினால் அவர்களுக்குத் துன்பமில்லா திருக்கும்படி கடாக்ஷித்து, ஸ்ரீஜகதீஸ்வரனாகியும் அனந்த சக்த தேஜோமயனாகியும் விளங்கி, தமது நிஜசக்தியினால் விஸ்வரூபங் கொண்டு, ஒருவரும் தன்னையுணராமல் சங்கல்பித்துக்கொண்டு, அக்னியாத் மக அந்தர்யாமித்வத்தினால் அந்தக் காட்டுத்தீயை அரைக்ஷண மாத்திரத்தில் தாம் போக்தாவுங் கர்த்தாவுமாய் பிரதி பாதிக்கின்ற வேதார்த்தங்களுக்குச் சாட்சியாய் முழுதும் பானஞ்செய்து, ஆசிரதர்களாகிய நந்தகோப ஜனங்கள் யாவரையு மிரட்சித்தார்.

வாரீர் மகாராஜனே! இவ்விதமாக ஸ்ரீ பகவானானவர் காட்டுத்தீயைப் பானஞ்செய்து அரண்யமெங்கும் குளிரச்செய்த பின்பு யாவருஞ் சௌக்கி யத்தை யடைந்திருந்தார்கள். அந்த கோபஜனங்களின் முகங்களுங் கோப பாய்த் தாமரைப்புஷ்பங்கள் மலரச் சூரியன் கிழக்குதிசையி லுதயமானார் ஸ்ரீ நந்தகோபரும் கோபாலர்களும் காலையிலெழுந்திருந்து, பிருந்தாவனத் திற்கு எதிர்முகர்களாய ஸ்ரீபகவதம்ச சம்பூதர்களாகிய ஸ்ரீராம கிருஷ்ணர்க ளுடையமகா மகிமாதிசய குணங்களைக்குறித்து விஜயகானஞ்செய்து கொண்டு திக்குவிதிக்குகளிற்பரவ வேணுகானங்கள் முதலிய ஸ்வரங்களைச் சபதித்து, ஸ்ரீகிருஷ்ணபகவானை யழைத்துக்கொண்டு, சகலகோபாலகுமார கோபீஜன கோகண சமேதர்களாய்ப் பரமானந்தத்துடன் திருவாய்ப் பாடியைவந்து சேர்ந்தார்கள்.

# பதினெட்டாவது அத்தியாயம்.

கலி விருத்தம்

நண்ணு ராம கிருஷ்ணுளெனு நாமர்கள்
பண்ணும் லீலைக் குரிய பராக்ரமம்
கண்டனும் பிரலம்பன்றன் சம்மாறமும்
கண்டு போற்ற சந்தையிது வாமரோ

ஸ்ரீராமகிருஷ்ணர்களாகிய மஹா புருஷர்களுடைய அதிமானுஷ க்ரீடா லீலைகளுக்கு அநுகுணமாகத் தோற்றிய வசந்தகால வர்ணனையும், ஸ்ரீபலராமரால் மஹாபராக்கிரமசாலியும் அசுரஸ்ரேஷ்டனுமாகிய பிரலம்பாசுரனுடைய சம்ஹாரமுஞ் சொல்லுகின்றன.

வாரீர் ஜனநாயகனே! இந்த ஸ்ரீபலராம கேசவ மூர்த்திகள் கோபால பாலவேஷ ஸ்வரூபர்களாய்ச் சந்தோஷாதிசயமான மனோத்ஸாஹங்களுடன் சகல பந்துக்களால் செய்யப்பட்ட ஸ்துதிகளைப் பெற்றுக்கொண்டு, அளவிறந்த கோசமூகங்களைச் சம்ரக்ஷணஞ் செய்து, தங்கள் மாயாசேஷ்டிதங்களால் அனந்த விசித்ர லீலாவிநோதங்களை யாசரித்து, சர்வத்திராளுக்கும் மனோரம்யமாக விளையாடிக்கொண்டிருந்தார்கள். அப்படியிருக்கின்ற சமயத்தில் இரண்டுடலுக்கும் ஓருயிரென்று சொல்ல மனமொருமித்திருக்கின்ற ஸ்திரீபுருஷர்களை யுருக்கச்செய்யவும், சர்வப்பிராணிகளுக்குந் தாபங்களை யுண்டுபண்ணவும், உத்தராயணகாலந் தோன்றியது. வாரீர் உத்தராநந்தனனே! அக்னிபகவானும் யமனும் நிருதியுமிருக்கத்தக்க தென்றிசையில் வெறுப்பில்லாமல் நித்தியமாய் நடந்ததினாலே அதிகமான தாபம் மேலிட்டதால் அதைப் பனியால் தணித்துக்கொள்ள வேண்டுமென்று நினைத்து இமயமலைப் பக்கத்தில் சேர்ந்தானென்று சொல்லவும், தன்னுடைய கிரணங்களினாலே மலர்ந்து பரிமளிக்கின்ற தாமரைப் புஷ்பங்களைப் பனியானது வாட்டுகின்றபடியால் பனிமலையோடு சண்டைசெய்யப் போனானென்று சொல்லவும், சூரியபகவான் வடதிசையைச் சேர்ந்தான்.

இப்படிச் சூரியன் வடதிசையைச்சேர நேரிட்டதாகிய உத்தராயண காலத்தில், மகரராசியிற் பிரவேசித்த சூரியன் அதைவிட்டுக் கும்பராசியிற் போய் அதிலிருந்து மீனராசியிற் பிரவேசித்தான். இப்படிச் சூரியபகவான் ராசியைவிட்டு ராசிகளிற் பிரவேசிக்குந் தோறும் அந்த இமந்தகால சிரமகாலங்களில் நாளுக்குநாள் அஹஸ்கள் அதிகரித்துப் பகற்பொழுது விருத்தியடைந்தது. இரவு அக்சுக்குறைந்தது. இப்படி ராசியைவிட்டு வேறுவேறு ராசிகளில் வருகின்ற திவாகரனுடைய கதிபேத சஞ்சாரங்களினாலே அவனுடைய கிரணங்கள் தினந்தினங்களில் உஷ்ணவிருத்தி யடைந்தன. அதனாலே உலகத்திற்கு அதிகமதிகமாய உஷ்ணஜ்வாலை மேலிட்டது. அந்தக்காலத்தில் ஏரிகள், தடாகங்கள்,

குளங்கள், குட்டைகள், இவை முதலியவற்றில் நாளுக்குநாள் ஜலங் கொஞ்சங் கொஞ்சமாய் வற்றியது. இப்படி நீர்வளங்களெல்லாம் வற்றவே ஆவினங்கள் ஜலபானஞ்செய்யுந் தீர்த்தத்துறைகளெங்குஞ் சேறாய்க்குழம்பின. உடனே சூரியபகவான் மேஷராசியிற் பிரவேசித்தான். இளவேனிற் காலமாகிய வசந்தகாலம் வந்தது. வசந்தமாகிய தென்றற்காற்றுத் திரும்புவதற்கு முன்னய கீழ்க்காற்றும் வாடைக்காற்றும் மாறிக் கொஞ்சம் வேகங்கொண்டு அடித்தன.

அதனால் இந்தப் பூமியினுடைய சூக்ஷ்மாம்சங்களாகிய பூரேணுக்களென்னுந் தூளிகள் அங்கங்கே யெழும்பி ஆகாயமெங்கும் வியாபித்துச் சூழ்ந்திருந்தன. விஷஜந்துக்களாகிய சர்ப்பங்கள் முதலிய குரூர ஜந்துக்கள் யாவும் புற்றுகளினிடமாகிய பிலத்தின் அடிவாரங்களிற் சென்று, பகற்காலமெல்லாந் தங்கி, இராக்காலங்களில் வெளியில்வந்து வாயைத்திறந்து கொண்டு பட்சிப்பதற்குத் தகுந்த சீதளமந்த மாருதம் வராமல் பெருங் காற்றாயிருந்தபடியால் சகிக்கக்கூடாத பிரயாசங்களைக் கொண்டிருந்தன. சகலமான விருக்ஷ லதாகுல்மாதிகள் யாவும் இலைகள் பழுத்து உதிர்ந்தன. சர்வஜன சாதாரணவிஹார அந்த உஷ்ணகாலமானது இவ்வண்டாதிபதியான பிரம்மதேவன் சர்வத்திர சாதாரணமாக இந்தப் பிரம்ஹாண்டமென்னும் பெரியகடாரமாகிய ஒருபாத்திரத்தில் சூரியபகவானுடைய கிரணங்களாகிய உஷ்ணகாலத்தை வசந்தகாலமென்னும் போகொள்ளச் செய்யும்படி, மந்தமாருதமென்னுந் தென்றற்காற்றானது அகஸ்தியபகவானுக்கு வாசயோக்கியமாகிய பொதியமலையினுச்சியிற் றோன்றியது.

அத்தென்றலானது அம்மலைச்சாரலில் விளங்காநின்ற சந்தனமுதலிய வாசனை விருட்சங்களிலுள்ள கனி புஷ்ப கந்தங்களையும் கன்யாகுமரியினுடைய அலைகளினுடைய குளிர்ந்த திவலைகளையுந் தோய்ந்து முற்றிலும் ஸ்பரிசித்துக் கிரகித்துக்கொண்டு, மகாமனோரஞ்சனமாகத் தோற்றி, அக்காலத்திற் சூரியவனாகிய மன்மதனுக்கு மகுடாபிஷேகஞ் செய்யும்படிப் புறப்பட்டு வந்தது. அந்த வசந்தமானது உலகத்திற்குப் பரவியதனால் சிலவிருட்சங்கள் அரும்பெடுத்துப் புஷ்பித்தன, சிலவிருட்சங்கள் புஷ்பித்து இதழ்களை யுதிர்த்தன. சிலமரங்களும் பலகொடிகளும் தளிர்த்துத் தோன்றின. அவற்றுள் மாமரமுதலியவை இலைபழுத்துதிர்ந்து தளிர்த்துத் தோன்றின. அவற்றைப் பார்க்குமிடத்தில் வேனிலாகிய புருஷன் வருகின்றதைக் குயில்கள் சொல்லக் கேட்ட மாத்திரத்தில் விருட்சங்களாகிய ஸ்திரீகள் முன்கட்டியிருந்த கறுப்பு வஸ்திர மங்கலகரமல்லவென்று நீக்கிச் செம்பட்டு வஸ்திரங்களை யுடுத்திக் கொண்டது போலவும்; பூர்வம் தாங்கள் வேரினாலுண்ட ஜலத்தையெல்லாங் காலத்துக்குத் தகுந்தபடியே அக்னிரூபமாக்கித் தங்கள் கிளைகள்தோறுங் காட்டுகின்றது போலவும் விளங்கின.

அவ்விருட்சங்கள் அரும்பிய தளிர்கள் மிகச்சிவந்தும், பின்வெள்ளித் தகட்டையொத்தும், அதற்குமேற் பசுமைகொண்டும் விளங்குகின்றவை

யெப்படியிருந்ததனவென்றால் இந்திரஜால வித்தைக்காரருடைய செய்கையை யொத்திருந்தன மேலும் புஷ்பித்த புஷ்பங்களிலிருந்தும் மகரந்தப்பொடிகளுதிர்க்கின்றவை எப்படியிருந்ததென்றால் - மன்மதனென்பவன் உலகத்திலுள்ள ஸதிரீ புருஷர்கள் யாவரையும்மயக்கும்படி மோகனப்பொடி தூவியதை யொத்திருந்தன. மேலும் சர்வஜந்துக்களுக்கும் இந்த வசந்தகால இரவுகளில் சாதாரண சஞ்சாரமாகிய மதனரதி கிரீடா விசேஷங்கள் மிகுதியாக விளங்கின அன்றியும் சூரியபகவானென்பவன் இந்தப் பிரபஞ்சத்தினிடத்தில் விருத்தியடைகின்ற பசு-பட்சி-விருட்சம-கொடி-இவைமுதலிய சர்வப்பிராணிகளின் சத்துக்களைத் தனது கிரணங்களினால் கிரகித்து, சர்வமனித, 'ஸ்வபாவங்களுக்குச் சத்துவபல தேஜங்களையும், விருக்ஷலதா குலங்களுக்கு உண்டான பலரச ருசிகளையும், மற்றவைகளுக்கு அதற்குத் தக்கவைகளையுந் தோன்றச் செய்தனன்.

அவ்வசந்த காலமானது நேரிட்டமாத்திரத்தில அந்தப் பிருந்தாவனங்களில் தென்றற்காற்றானது குளிர்ந்து வீசுதலினால உஷ்ணரசங்கள் தணிந்து, சாவதர புண்யஜனங்களும் சௌக்கிய மடைந்தார்கள் மிருகபக்ஷிகள் க்ஷேமங்கள் கொண்டன விருக்ஷலதாசமூஹங்கள் எப்பொழுதும் வாசனையோடு கூடிய புஷ்பங்களால சகல சுபமங்களாகர சோபிதங்களாக விளங்கின. விசித்ரபக்ஷிகளின கோலாஹலத் துவனிகளும், கிளிமுதலிய சமூஹங்களினுடைய மகாமாதுரியமாகிய சுஸ்வரநாதங்களும், குயில்முதலிய நாநாவித சுந்தரபக்ஷிகளினுடைய கம்பீர சந்தோஷத்வனிகளும், மயில்முதலிய நாநாவித குதூஹலபக்ஷிகளினுடைய லோகானந்த கரங்களாகிய நாதன சிறப்புகளும், அங்கங்கு நதிதடாக உபவனங்களில விகசிதங்களாயிருக்கிற தாமரைசாதி நாநாவித ஜாதிபுஷ்ப மகரந்த சஹித மதுபானங்களைச் செய்து மதித்தெழும்பின நாநாவித விசித்ரரத்ன ஸ்வர்ணமயாகார ஜாதி பேதங்களால் விளங்குகின்ற ஷட்பத ஜந்துக்களாகிய வண்டுகளின கம்பீர கீதநாத ஸ்வரங்களின் ஓசைகளும், ஏககாலத்தில் சாவ மங்கலகரமாயச் சபதித்தன

இந்தச் சப்தங்களினாலந்தப் புண்யவன மெங்கும் சோபித்து மங்கல ஓசைகளோடும் பிரகாசித்தன. அக்காலத்திற் பெய்ந்தமழையினால ஸ்ரீயமுனாநதியானது விசித்ரமான அலைகளோடுங் கூடிப் பிரவாகித்தது. அந்தப் பெருவெள்ளஜலம் அங்கங்குள்ள தடாகங்கள் - ஏரிகள் - குளங்கள் - ஓடைகள் - மடுகள் - இவைகளுக்குப் பாய்ந்தது அதனால அவைகள் சற்றேறக்குறைய ஜலசமாதியடைந்தன. அதிதீரத்த வளங்களில நாநாவிதமாகிய செந்தாமரை - வெண்டாமரை - செங்கழுநீர் - கருங்கழுநீர் - செவ்வாம்பல் - வெள்ளாம்பல - இவைமுதலானவைகள் புஷ்பித்துப் பரிமளங்களாய் விளங்கின. அந்தத் தென்றற்காற்றானது இவைகளின்மீது வியாபித்து ஸ்பரிசித்துக்கொண்டு அலைகளின் திவலைகளையும் புஷ்பங்களின மதுகரஸ்பரிசங்களையும் வகித்துக் குளிர்ந்து வீசுதலினாலே, அந்தப்பிருந்தாரண்யப் பிரதேசங்கள் முழுதும் முன்னடைந்திருந்த உஷ்ணங்கள் தணிந்து குளிர்ந்து விளங்கின.

இவ்விதங்களாக மிகவுஞ் சர்வாலங்கார சோபித சுந்தராகாரங்களாகப் பிரகாசிக்கின்ற அந்தக்கோகுல பிருந்தாரண்யத்திற்கு, ஸ்ரீ பலராமகிருஷ்ண மூர்த்திகளிருவரும் மற்றைக் கோபாலஜனங்களுடன் சாவகோவின சமூகங்களையும் கூட்டிக்கொண்டுபோய பசுக்களை மேயவிட்டார்கள் அவைகள் மேய்ந்துகொண்டிருந்தன அந்தச் சமயத்தில் அந்தக்கோபாலகுமாரர்களும் ஸ்ரீபலராமகிருஷ்ணர்களும் அந்த ஆரண்ய மார்க்கங்களில் நாநாவித லீலாவினோதங்களாகக்கிரீடித்து அபஹாசிய வார்த்தைகளைப்பேசி நகைத்தும், உத்ஸாஹ பௌருஷவசனங்களால் திக்கரித்தும், சித்த சாஞ்சல்யங்களால் யதேச்சையாய் விஹரித்தும், அன்யோன்யர்களாய் ஒருவருக்கொருவர் கட்டியணைத்தும், விவாஹரசசந்தோஷமானஸர்களாய்ச் சுழன்று சுழன்றோடியும், மஹா விருக்ஷங்களின் நிழல்களில் தங்கி நின்றும், ஒருவருக்கொருவர் கண்களைப் பொத்தி யொளிப்புக்காட்டியும் அவவொளிப்பாட்டத்தி லொருவருக்கொருவர் பயங்காட்டியும் விளையாடினார்கள்.

மேலும் கோபால குமாரர்கள் தங்களுக்கு ஸ்வாதீனபாடங்களாகிய ஸ்ரீ கிருஷ்ண கீர்த்தனங்களைப்பாடி விளையாடினார்கள். யாவரும் அவவாரண்யங்களில் சஞ்சரிக்கின்ற மிருகங்களை யதட்டியோட்டி அவைகளின் பின்னோடியும், சுஸ்வரங்களைத் தரத்தக்கதாகிய பிள்ளாங்குழல்களை நாநாவித மதுர இசைகளுடன் பூரித்தூதியும், கதிவிசேஷங்களாகிய நடைகள நடந்துகாட்டியும், ஒருவருக்கொருவர் ஓடியொளித்தும், வெண்மணற் குன்றுகளைச் சிறுகு பலாகச் சேர்த்து மணற்குப்பலாட்டமாகிய லீலையில் காலகளுந்தியும், தோள்களையுந் தொடைகளையுந் தட்டிக்காட்டிப் பந்துகளை வீசியெறிந்து சிறுகோல்களால் தட்டியெறிந்து பிடித்தும், வெண்மணற் குன்றுகளிற் பாய்ந்து குதித்தும், கோடுகளைக் கிழித்துத் தாவியும், அக்கோடுகளைத் தாண்டியும், விருக்ஷங்களின் மீதேறி ருசிப்பக்குவமான பலங்களைத் தின்று கீழிருந்தவர்களுக்கெறிந்தும், நாநாவித ஜாதிமிருக ஸ்வரூபங்களாகக் கலபித்து விளையாடியும் மஹா விருட்சங்களினுடைய கிளைகளின் மீதேறிநின்று அவற்றிலுள்ள பத்ர பல புஷ்பஜாதிகளுந்திரும்படி குலுக்கியுதிர்த்தும் விளையாடினார்கள்.

அந்தக் கோபால குமாரர்கள் அவ்வாரண்ய மஹாவிருக்ஷப் பொந்துகளிலும் - புதர்களிலும் - குகைகளையுடைய பாவதசிகர பொந்துகளிலும் வரிசைவரிசையாய்க் கட்டியிருக்கிற தேன்கூண்டுகளைக் குறித்துத் தேனீக்களான மதுபக்ஷியாது வண்டினங்களைச் சதுபாயங்களைச் செய்தோட்டி அத்தேனை கிரஹித்தும், அதை ஸ்ரீராமகிருஷ்ணர்களுக்குச் சமர்ப்பித்துத் தாங்களும் பானஞ்செய்தும், திவ்யமூர்த்திகளாகிய இந்த ஸ்ரீராமகிருஷ்ணர்கள் அதி மனோஹரடோலாயமான மானஸர்களாய்க் கிரீடித்து விளையாடுகின்ற சமயங்களில் ஸ்ரீபகவான் களைந்துவைக்கின்ற திவ்யாபரணாதிகளைப் பக்தியுடன் பத்திரமாய்வைத்துக்கொண்டிருந்தும், அவருக்கு வேண்டும்பொழுது மிகவும் பிரீதியுடன் அலங்கரித்தும், காகபக்ஷங்களாகிய இருசெவிகளின்மீது விளங்கிய செல்வசசிரோபட்ச ராஜாலங்கார சிகைகளை ஒருவருக்கொருவர் பற்றிக்

கொண்டு ஜட்டிமல்லமுஷ்டி யுத்தங்களைச் செய்தும், ஜயாபஜயங்களைக் குறித்துப் பந்தயங்கள் கூறித் தாங்கள் வைத்தகுறிகளைப் பூர்த்தி ஸ்பர்சித்தும், ஜயித்தவர்கள் அந்த ஜயத்திரவியத்தைத் ஸ்ரீபகவானுக்குக் காணிக்கைப்பாகச் சமர்ப்பணை செய்தும் ஆனந்திப்பார்கள்

இவையன்றியும் சிலர் வேறைப் புலிகளைப்போலத் தாவித்தாவிப் பாய்ந்தும், சிலர் செம்பிரமாக அசைந்துலாவியும் ஒருவருக்கொருவர் உயர எழும்பித் தங்கள்காலகளினு லுதைத்தும், சிலர் சேவ்யசேவக மித்ராமித்ர ஸ்வரூப பாவங்களை வஹித்து நாநாவித விசித்திர லீலாவினோத சம்பிரமாதிசயங்களுடன் விஹரித்தும் விளையாடினார்கள். சிலதருணங்களில் இந்த மஹாதிசய புண்யவான்களாகிய கோபாலகுமாரர்கள் யாவரும் ஒருகுளிர்ந்த தோப்பில் ஒன்றுகச்சேர்ந்து உட்கார்ந்து இளைப்பாறி, ஸ்ரீபலராம கிருஷ்ணமூர்த்திகளுக்குப் பக்தியுடன் தண்டன் சமர்ப்பித்து, ஓ மஹாநுபாவர்களே! நீங்கள் எங்களை அனந்தவிதங்களால் இரக்ஷிக்கின்றவர்களாகையால், இந்த லீலைகளிலும் நீங்கள் திவ்யாக்கிய ஸ்வரூப பூபாலர்களாயிருந்து எங்களை நியமிக்கக்கடவீர்களென்று பிரார்த்தித்தார்கள் அப்போது பலராமகிருஷ்ண மூர்த்திகள் புன்னகையுடன் அங்கீகரித்தார்கள் அவ்வளவில் கோபால குமாரர்களெல்லாம் அதிசம்பிரம சந்தோஷ பரர்களாய்க் கத்தத ஸ்வரத்துடன் நாநாவித முறைகளைக்கூறி நியாயங்களைத் தீர்க்கச்சொல்லிக் கேட்கின்றவர்களும், அந்த விவகாரத் தீர்ப்புகளில் சந்தோஷித்து ஸ்துதிக்கின்றவர்களும், சஞ்சாரங்களில் ஸ்ரீபகவானுடைய பாதரக்ஷைகளாகிய பாதுகைகளைச் சுமந்துகொண்டு வருகின்றவர்களுமாய் விளையாடினார்கள்

சிலர் மஹாவிருக்ஷங்களினுடைய சிறகிளைகளைக் கொண்டுவந்து பல்லக்கு ஸ்வரூபத்தை நிர்மித்து, அதற்கங்கமாக நாநாவித கொடிகளைக்கொண்டு பின்னி, தாமரைப்புஷ்ப இதழ்கள் முதலிய மல்லிகை முல்லை ஜாஜீயாதி நாநாவித சுகந்த பரிமளங்களையுடைய புஷ்பங்களால் விசித்திரரத்ன ஸ்வரூபங்களாய் அலங்காரஞ்செய்து, அந்த ஆந்தோளிகைகளின் மேல் ஸ்ரீபலராமகிருஷ்ணர்களை யெழுந்தருளச் செய்து சுமந்தார்கள். சிலர் திவ்ய அரம்பையர்களை நாணும்படி அபிநயபூர்வக பரதசாஸ்த்ர லக்ஷணயுக்தமாய் நாட்டியங்களைச்செய்தார்கள் சிலர் கின்னரகந்தர்வாதி ஜனங்கள் வெட்கிக் கூசும்படி நாநாவித மிருதுஸ்வரங்களோடும் பாடினார்கள் சிலர் பாட்டுகளைப் போலப்புகழ்ந்தார்கள் சிலர் வேதாந்தார்த்த நிர்ணய ஸ்ரீபுருஷசூக்தவாக்கியங்களைப் போல முன்னடந்து ஸ்துதிசெய்தார்கள். சிலர் சர்வப்பிரபஞ்ச நியமன சர்மகாம யோக்கிய ஸ்ஹேதுக பலப்ராப்த ஸ்ரீவாசுதேவாக்கிய ஸ்வரூபருக்கு யஜுஸ்ஸாமாதி வேதங்களைப்போல அந்த ஸ்ரீபலராம கிருஷ்ணர்களால் தங்களுக்கு நேரிட்ட அரிஷ்டநிவாரண இஷ்டபலப்பிராப்த மஹிமைகளைக்குறித்துக் காயகபாடக ஸ்வரூபங்களாய்த் துதித்தார்கள்

சிலர் பக்திவிச்வாசங்களுடன் ஸ்ரீகிருஷ்ண குணகீர்த்தனங்களைப் பாடினார்கள். சிலர் ஸ்ரீபகவத் ஸ்வரூபர்களுடைய திவ்யமான உத்ஸவ சேவையில்

நேத்திரானந்தக் கியானோத்தமர்களாய்ச் சேவித்தார்கள். சிலர் ஸ்ரீபலராம கிருஷ்ணர் குணாதிசயங்களுக்குச் சந்தோஷகரமாக நகைத்தார்கள். சிலர் கல்யாணகுண கீர்த்தனங்களினிசைக்குத் தங்கள் கரங்களால் அபிநயங்களைக் காட்டினார்கள். சிலர் ஆனந்தக் கூத்தாடினார்கள். இவ்விதங்களாய் அந்தக் கோபால குமாரர்கள் வனவிகார வசந்தோத்ஸவ சம்பிரமங்களாய்க் கிரீடா விசேஷங்களை அநுபவித்தார்கள். பிறகு திவ்யபுருஷசிரேஷ்டர்களாகிய இந்தப் பலராம கிருஷ்ணர்கள் அந்தப் பிருந்தாவன வீதியில் ஜகன்மாயாமோகன சுந்தராகாரர்களாகி, தேவகந்தர்வயக்ஷகின்னர கருடபன்னகர் முதலிய மகா ஜனங்களை அதிசயித்துச் சந்தோஷிக்கும்படியாய் நடனஞ் செய்தார்கள்.

அப்போது மகா பரிசுத்தமான புண்யஜன்மிகளாகிய இந்தக் கோபாலகுமாரர்களிற் சிலர் வேணுகானங்களைச் செய்தார்கள், சிலர் கலைமான் கொம்பினாற் செய்த துளைக்கருவிகளை யூதினார்கள். சிலர் அந்தத் திவ்ய நாதத்தனங்களுக்குச் சரியாய்ப் பாடினார்கள். சிலர் தங்கள் சிரங்களையசைத்து அபிநயங் காட்டினார்கள். சிலர் இந்தச் சாஸ்திரோக்தமான நாட்டியங்களுக்கு மெச்சி இவர்களைப் புகழ்ந்தார்கள். சிலர் 'மகாதிசயமென்று' வர்ணித்து ஆச்சரியத்தை யடைந்தவர்களாய்த் தங்களைமறந்து அன்யசிந்தையற்றுச் சேவித்தார்கள். இவ்விதங்களாக யாவரும் ஒவ்வோரதிச்ய திவ்யவிஷய கிரியாபரர்களாய் நதீதீரதடாக சமீபங்களிலும், பர்வதங்களின் குகைகளிலும், ஏரிகளோரங்களிலும், பசுவினங்களின் மந்தைகளிலும், குளிர்ந்திருண்ட தோப்புகளிலும் புஷ்ப பலிதங்களான பொதும்புகளினருகிலும், மஹாலீல நடனோத்தியோகாதி அனந்த விசித்ர விளையாட்டுகளைச் செய்துகொண்டு, பசும்புல்லுள்ள இடங்களில் தங்கள் பசுக்கூட்டங்களை மேயவிட்டுச் சந்தோஷபரர்களாய்ச் சம்பரமித்திருந்தார்கள்.

அப்படியிருக்கின்ற தருணத்தில் அந்த மஹாவனத்தில் பிரலம்பாசுரனென்னும் பெயரையுடைய ஒருகொடிய ராக்ஷஸன் ஸ்ரீபலராம கிருஷ்ணர்களையும் மற்றுள்ள கோபால குமாரர்கள் யாவரையும் ஹிம்ஸித்து ஜயத்தை யடையவேண்டுமென்கிற நினைப்பைக்கொண்டு, தன்னுடைய ராக்ஷஸமாயையினால் ஒருகோபால குமாரனைப்போல காமரூபனாய் வேஷமடைந்து, அந்தக் கோபால குமாரர்களெல்லாரும் தங்களி லொருவனென்று நினைக்கும்படி மயக்கி, கபடமானஸனாய் அவர்களில் வந்துசேர்ந்து கலந்து ஸ்நேஹித்துக் கொண்டிருந்தனன். அந்தச்சமயத்தில் சர்வக்கியனாகியும், சர்வமயனாகியும், ஸ்ரீபகவானாகியு மிருக்கின்ற ஸ்ரீகிருஷ்ண மூர்த்தியானவர் அந்த மாயாவேஷதாரியான துராத்மாவானவனை அசுரனென்று தமக்குள் அறிந்து, அவ்வசுரனைச் சிக்ஷிக்கத்தக்க சதுருபாயங்களைச் சங்கல்பித்துக் கொண்டிருந்தும் தாமொன்றும் அறியாதவரைப்போலத் தங்களைக் கொலைசெய்ய வந்த அந்த மாயாகோபால பிரலம்பாசுரனை ஒரு ஜகோபாலனாகவே பாவித்திருக்கிறதாய் அவனை நினைத்துக்கொள்ளும்படி அவனுக்கு மிகவும் அன்னியோன்யமாகிய ஸ்நேஹத்தைக் காட்டினார்.

இப்படி காட்டிய பகவானானவர் உடனே சகல கோபால குமாரர்களை யும் அழைத்து, ஓ பிரியசினேஹிதர்களே! நாமெல்லாரு மொன்றாய்ச் சேர்ந்து, இனி அஸ்தமான காலபரியந்தம் சந்தோஷமாயசில சிலைகளை யோ ரிடத்தில் ஸ்தாபித்து, குறிவைத்துப் பந்துகளடித்து, அவ்விளையாட்டினால் வருகின்ற ஜயாபஜயங்களை யடைந்து, அவற்றிற்குத்தக்க பந்தயங்களை யநுப விக்கத்தக்கதாக விளையாடிக் கொண்டிருக்கலாம் வாருங்களென்று சொன்னார் அப்படி விளையாடுவதற்கு யாவரும் ஒத்துக்கொண்டார்கள் உடனே ஸ்ரீஜ கந்நாதனானவர் தாமொரு பேருத்தியும், ஸ்ரீதாமனென்னும் கோபாலன் தமக்கெதிர் பேருத்தியும், தமமுடைய பக்ஷத்தில் மாயாகோபால பிரலம்பன் ஒருபேருத்தியும், அவனுக்கெதிர் பலபத்திரர் ஒருபேருத்தியுமாகத் தலைவர்க ளாயேற்படுத்தி, மற்றைக் கோபாலர்கள் சிறியவுத்திகளான ஸேவகர்களாக வகுத்து, அவர்கள் யாவரையுங் கணக்குசெய்து இரண்டு பக்ஷத்திற்குஞ் சம மாகப் பாகித்தனர்

இப்படிபகவான் இரண்டினமாகப் பிரிந்தவர்களுடன் அந்த ஸ்ரீபிருந்தா வன மஹாவிசால மாரக்கப் பிரதேசங்களுக்குச் சென்று, மஹா விருக்ஷங் களையும் சிலா ஸ்வரூபங்களையும் லக்ஷியக்குறிகளாக ஏற்படுத்தி, கைகளிற் பந் துகளேந்தி, பாண்டீரவமென்கிற வடவால விருக்ஷத்தி னடிவாரங் கிழலிற் சேர்ந்து, நாமெல்லாரும் இந்தப் பந்துவிளையாடுவோம், இவ்வாட்டங்களில் தோற்றவர்கள் வாஹனமாகி ஜயித்தவர்களைச் சுமந்து, பசுக்கூட்டங்கள் அப் பாறபிரிந்து சிதறிப்போகாமல் அம்மந்தைகளைப் பிரதக்ஷணமாக வந்து மடக் குகிறது அல்லது மஹாவிருக்ஷ சிலா லக்ஷியக் குறிகளைத் தொட்டுப் பிரதக்ஷ ணம் பண்ணி யதாஸ்தானத்திற்கு வந்திறங்குகிறது என்று கட்டளையிட்டார் அப்படியே யாவரும் ஒப்புக் கொண்டவர்களாய் விளையாடிக் கொண்டிருக் கின்ற சமயத்தில், ஒருக்கால் இருவர் கட்சிகளிலும், ஜயாபஜயங்கள் நேரிட்டு பின்பு ஸ்ரீகிருஷ்ணபகவான் கட்சி தோற்றது அப்போது பலபத்திரர் பக்கலி லிருந்த ஸ்ரீதாமன் தமக்கு அந்தரங்க பக்தனானதால், பக்தபராதீனரான சுவாமியானவர் அவனைத் தோளின்மீது வைத்துக்கொண்டார் அப்போதவன் சரீரமாத்திரந் தோளின் மீதிருந்ததேயன்றி, மனது சுவாமியின் திருவடிக ளைப் பற்றியிருந்தன

விருஷபனைப் பத்திரசேனனும், ஸ்ரீபலராமரைப் பிரலம்பனும், வாஹனங் களாகிச் சுமந்து கொண்டு, முன்சங்கல்பப் பிரகாரம் லட்சியப் பிரதக்ஷணஞ் செய்யப் போனார்கள் அவர்களுக்குள் ஸ்ரீதாமனைச் சுமந்து கொண்டு போன ஸ்ரீகிருஷ்ணபகவானும், விருஷபனைச் சுமந்துகொண்டு போன பத்திரசேன னும், லட்சியப் பிரதக்ஷணஞ் செய்து எல்லையில்வந்து சேர்ந்தார்கள். ஸ்ரீபல ராமரைத் தோள்களிற் சுமந்துகொண்டு போன மாயாகோபால வேஷதாரி யான அந்தப் பிரலம்பாசுரன் லட்சியப்பிரமாணப்படி பிரதக்ஷணஞ் செய்து வராமல், கபடனாய் வந்திருக்கின்றவ னாதலால் அவரைக் கொல்லநினைத்து லட்சியங்களைத் தாண்டிப்போனான் அப்படி போகுமளவில் பூர்வம் ஸ்ரீகிருஷ்

ண்பகவானைத் திருணாவர்த்தனென்னும் அசுரசிரேஷ்டன் எடுத்துக்கொண்டு ஆகாசமார்க்கத்தில் போகும்போது தம்மைச் சுமக்கமாட்டாமல் அவன் அதிகதுன்பங்களையடைந்து சுமந்துகொண்டுபோக ஸ்வாமி அவனுக்கு எவ்வளவு பாரமாய்த் தோன்றினரோ ? அவ்வளவு சுமக்கக் கூடாதபாரமாய சகலாரிஷ்டநிவாரண ஜயோத்தமராகிய ஸ்ரீபலராமரானவர் அந்தப் பிரலம்பனுக்குத் தோன்றினர்.

அப்படி தோன்றின மாத்திரத்தில் அவன் ஈதென்ன பர்வத சிரேஷ்டமோவென்று பிரமித்து, மஹாசிரமங்களை யடைந்து, நடக்கமாட்டாதவனாகி அந்தக்கோபால வேஷத்தை விட்டுத் தன்னுடைய நிஜாகாரமாகிய கொடிய ராக்ஷஸ ஸ்வரூபத்தை வஹித்து, ஊழிப்பெருங் காற்றின் வேகத்தைப் பார்க்கிலும் அதிகவேகமாய் ஆகாயமார்க்கத்தி லெழும்பிப்போனன் அப்படி போகும்போது அவ்வசுராகாரம் மேகத்தைப்போலக் காணப்பட்டது மின்னலையும் காந்தியையும் வஹித்தது போலச் சர்வாபரண பூஷிதராகிய ஸ்ரீபலராமர் அவ்வசுரன் தோள்மேல் விளங்கினர் அத்தருணத்தில் அந்தப் பிரலம்பனுடைய தோள்களின் மீது உட்கார்ந்து கொண்டிருக்கின்ற ஸ்ரீஹலாயுதமூர்த்தியாகிய பலதேவர் அதிசயித்து, தைரியத்துடனே தமக்கு வாஹனமாகிய கோபாலவேஷ பிரலம்பனை உற்றுப்பார்த்தார், அப்போது கோரகார நீலஸ்வரூபமும், சிரோபாகத்தில் இரத்தினங்களிழைத்த ஸ்வர்ணமயமான கிரீடகுண்டலங்களும், நெற்றியிற்போய வளைந்த புருவங்களும், நெருப்புப்பொறிகள் சிதறுகின்ற இரத்தவர்ணகார ஜ்வலித்தநேத்ரங்களும், மஹாபயங்கராகாரமாகிய கோரைப்பல்லுகளும், சரீராவயவங்களில் அசுராலங்காரத்துக்குரிய வலயாதி ஆபரணங்களும், அக்கினிக் கொழுந்துபோலே யெரிகின்ற சிவந்த குச்சுமட்டமான மயிர்களுங் காணப்பட்டன

அவைகளைக் கண்ட பலராமர் தங்களை மோசஞ்செய்யவந்த துஷ்டராக்ஷஸனென்று தெரிந்துகொண்டு, சற்றெனினும் வெருவாமல், தீரபுருஷோத்தமராகி, க்ஷணப்பொழுது நிதானித்து, அதிவேகமாய் ஆகாயத்திற் கெழும்பி, அதிசௌரிய பராக்கிரம கோபத்தினால் விளங்குகிற மனமுடையவராய்த் தமது முஷ்டியினால் அவன் சிரோபாகத்திற்குச் சரியாயப்பாய்ந்து, கிரீடத்தை ஒரு கையினலே தட்டிவிட்டு, ஆகண்டலனாகிய இந்திரனானவன் கோபித்துத் தன் வச்சிராயுதத்தினால் மஹாபர்வதங்களைப் பிளந்து சின்னபின்னஞ் செய்தது போல அவனுடைய சிரசுபிளந்து சின்னபின்ன மாயழியும்படி ஓரறை யறைந்து, ஒரேகுட்டாகக் குட்டினர், உடனே அவ்வசுரன் தலைபிளந்து சின்னபின்னமாகச் சிதைய, அவன் சரீரமெங்கும் செந்நீராயப் பெருக, முகத்தில் நின்றும் இரத்த மாம்சங்களொழுக, லோகபயங்கரமாகிய பிராணபீதியினல் கதறிக்கொண்டு பூமியில்வீழ்ந்து பிராணனொழிந்துபோக மரணமடைந்தான். அப்பொழுது சமஸ்தமான கோபாலர்களும் மஹா பலபராக்கிரம வீரியத்தை யுரிய புருஷரா யிருக்கின்ற ஸ்ரீபலராமரால் சம்ஹரிக்கப்பட்டுப் பர்வதாகாரமாய் வீழ்ந்தவனாகிய தங்கள் ஆயர்களி லொருவனைப்போலே, மாயாவேஷதாரி

யாயிருந்த அந்தப் பிரலம்பாசுரனைப் பார்த்துப் பயந்து பிரமித்து ஆச்சரியத்தை யடைந்தார்கள்

பின்பு அவர்கள் பலராமரைப்பார்த்து, ஓ மகாநுபாவரே! இவ்வுலகத்திற்கு உபகாரார்த்தமாக இந்தக் கபடவேஷ துஷ்டாசுரனைச் சமஹரித்து எங்களையெல்லாம் ரக்ஷித்தீர் உமக்குச் சர்வமங்கலமும் உண்டாகக்கடவது என்று ஆசீர்வதித்து அவரவர்களுக்குத் தகுந்தபடி உபசாரஞ் சொல்லி ஆலிங்கனஞ் செய்து கொண்டு, இறந்துபோன பிராதாவானவர் பிழைத்துப் புனர்ஜீவிதராய் வரக்கண்டு களித்தாற்போல மஹாசந்தோஷ சம்பிரமாதி சயங்களை யடைந்தார்கள் உடனே ஆகாசவீதியில் நின்று இந்தத் திவ்ய புருஷர்களுடைய விசித்திரலீலா சேஷ்டிதங்களை நேத்ரோத்ஸவமாக அநுபவித்துக் கொண்டிருக்கின்ற பலிசூதனுதி நாமாங்கித திவ்யபுருஷர்களான தேவதா சமூஹங்கள் யாவரும், இவ்வுலகத்திலுள்ள சாதுக்களுக்குஞ் சகலதேவதைகளுக்குஞ் சத்துருவாயிருந்த கொடியகுரூரனாகிய இந்தப் பிரலம்பாசுரனை வெகு அலக்ஷியமாக ஒரேமுஷ்டியினால் சமஹரித்த ஸ்ரீபலபத்திர ராமரை நாநாவிதங்களான தேவஜாதி புஷ்பங்களை வருஷித்துத் துதித்தார்கள்.

# பத்தொன்பதாவது அத்தியாயம்.

கலி விருத்தம்

பிருந்தை யுள்முஞ்சா ரணியம் பிரவேசித்து
வாமக் க்ரீஷ்ம ருதுக்கால வானனை
காமமாயக் காட்டுத் தீயிலகப்பட்ட
தாமக் கோக்களைக் காத்ததைச் சாற்றுவாம்.

ஸ்ரீபிருந்தா வனத்திலுள்ள முஞ்சாரணிய மென்கிற வனத்திற் பிரவேசித்த போது நேரிட்ட க்ரீஷ்மகால வாணனையும், அங்கு சூழ்ந்துகொண்ட காட்டுத் தீயிலகப்பட்ட கோபாலர்களுங் கோக்களும் முறையிடக்கேட்டு ஸ்ரீகிருஷ்ண பகவானனவர் அவ்வக்கினியைச் சுவாலையோடும் பானஞ்செய்து அந்தக் கோபாலர்களையுங் கோக்களையும் இரக்ஷித்ததையுஞ் சொல்லுகின்றன

வாரீர் பரதகுல சிரேஷ்டனே! மேஷராசியிலிருந்த சூரியபகவான் ரிஷபராசியிற் பிரவேசித்தான் அவன் ரிஷபராசியிலிருக்கும்போது சிறுதென்றலாலும் கீழ்க்காற்றினாலும் உலகத்திற்குச் சௌக்கிய முண்டாயிருந்தது அதைவிட்டு மிதுனராசியிற் பிரவேசித்தான் அப்போது சூரியனுடைய அதியுஷ்ண கிரணங்களால் வெந்தழிந்து போயினவென்று சொல்லும்படி வாடை, கொண்டல், தென்றல், சோழை, என்னும் நான்கு திசைக்காற்றும் ஒடுங்கின.

ஆயிலும் சந்திரகிரணத்திலும், சந்தனத்திலும், பனிநீரிலும், ஊற்றுச்சலத்திலும், மரநிழலிலும் உண்டாகிய குளிர்ச்சியிலுலும், தாமரையிலும், ஆலவட்டத்திலும், முன்றானையிலும், மூச்சியிலும் உண்டாகிய காற்றினலும், உலகத்திலுள்ள ஆத்மாக்களுக்குக் கொஞ்சஞ் சௌக்கியங் கிடைத்தது அப்போது அக்காலத்தைக் கோடைக்காலமென்னும் பெயர் கொள்ளச் செய்யும்படி மேல்காற்றுந் திரும்பியது

அதினால் தூளிகளெழும்பி உலகமெல்லாங் கவியவும், ஆத்மாக்களுக்கு வாயுலர்வும், தேகத்தில் அதியுஷ்ணம் உண்டாகவும் நேரிட்டன அப்போது விஷஜந்துக்கள் லயமடையவும், மற்ற ஆத்மாக்களுக்குச் சந்தோஷமுண்டாகவும், மேகங்கள் தோன்றி இடித்து ஜலத்தைப் வருஷித்தன அதனால் உலகம் சௌக்கியத்தை யடைந்தது இப்படிப்பட்ட கோடைக்காலத்தில் சமஸ்தமான கோபாலர்களும் பாண்டீர மென்னு நாமதேய முள்ள இந்த வட்டாரணியத்தில், விளையாட்டில் விருப்ப முள்ளவர்களாய்த் தங்களை மறந்து விளையாடிக் கொண்டிருந்தார்கள். அந்தச் சமயத்தில் கோவினங்கள் பிரிந்து தங்களுக்கு இச்சையானபடி சுவேச்சையாகப் பசும்புல்லுகளை மேய்ந்துகொண்டு, வெகுதூரஞ்சென்று, மிகவுந் தாஹத்தையுந் தாபத்தையு மடைந்தனவாய் அரற்றிக்கொண்டு, இஷீகமென்கிற அரண்யத்தைத் தாண்டிப்போயின.

அப்போது ஸ்ரீபலராமாநுஜர்கள் முதலிய சமஸ்தமான கோபாலர்களும் பசுவினங்களைக் காணாமல் சிந்தாக்கிராந்தர்களாய் விளையாட்டுக்களை யொழிந்து பசுவினங்கள் சென்ற மார்க்கங்களைத் தெரியாமல், சிலநேரம் நான்கு திக்குகளிலுந் தேடிக் காணாமல், நிமிஷமாத்திரத்தில் நாநாவிதங்களாகிய வியாகுலத்தை யடைந்து, பலதிசையிலும் ஓடி அலைந்து திரிந்து, பசுவினங்களின் குளம்படி அடையாளங்களைக் கண்டு, அம்மார்க்கங்களைப் பிடித்துப் பலவாறாகத் தேடிப் பார்த்தார்கள் அப்படிப் பார்க்குமளவில் அந்தக் கோவினங்கள் முஞ்சாரணியத்தில் வழி தெரியாமல் அம்மாவென்று கதறிக் கோஷிக்கின்ற சப்தங்களைக் கேட்டு, தங்கள் கோதனங்களைக் கண்டுபிடித்து, ஒரேமந்தையாகச் சேர்த்து, ஆயாசங்களைத் தீர்த்துக் கொண்டு, சமஸ்தமான கோவினங்களுடன் தாங்களும் மார்க்கமே பிடித்துத் திரும்பினார்கள் அத்தருணத்தில் ஸ்ரீகண்ணபிரானவர் நீருண்ட காளமேகமானது விசித்தையாகக் கர்ஜிக்கின்றது போல தமது திருவதரத்தில் புள்ளாங்குழலை வைத்து, பசுக்களுடைய நாமதேயங்களைச் சொல்லிப் பிரீதியாக அழைத்தார்

அந்த ஆவினங்கள் யாவும் ஆ ஸ்ரீகிருஷ்ணா! என்கிறதுபோல் அம்மாவென்கிற ஆரவாரங்களுடன் பிரதிகோஷஞ் செய்துகொண்டு, சந்தோஷத்தினால் ஸ்ரீபகவானைப் பின்தொடர்ந்து வந்தன அந்தச் சமயத்தில் தெய்விகமாக ஒரு காட்டுத் தீயானது உண்டாயிற்று அஃதங்கு வீசாநின்ற காற்றினது சஹாயவேகத்தினால் நான்குபக்கமும் வியாபித்து, எங்கும் புகைகளெழும்ப ஜ்வலித்து ஆகாயமளாவி யெரிந்து, சராசரஸ்தாவர ஜங்கமாதிகளையுஞ்

சூழ்ந்து கொண்டு விருத்தியடைந்தது. அப்போது சமஸ்தமான கோபாலர்களும் தங்களைச் சூழ்ந்துவராநின்ற காட்டுத்தீயைப் பார்த்து, மிகவும் பயப்பிராந்தர்களாய்த் திடுக்கிட்டுத் தத்தளித்து, தப்பித்துக்கொள்ள எந்தத்திசையிலும் மார்க்கங்களைக் காணாமல், மிருத்யு பயத்தினால் பீடிக்கப்பட்டார்கள். அவர்களைப்போலவே கோக்களும் நடுநடுங்கிக் கொண்டிருந்தன. இப்படியிருக்கும்போது கோபாலர்கள் யாவரும் ஸ்ரீ ஹரிநாம கீர்த்தனங்களைச் செய்து தங்கள் மிருத்யுப் பயமாகிய ஆபந்நிவாரணத்தை யடைகின்ற ஸ்ரீபாகவத ஜனங்களைப் போல ஸ்ரீபலராமசந்திர ஸஹிதராகிய ஸ்ரீகிருஷ்ணபகவானைச் சரணமடைந்து முறையிடத் தொடங்கினார்கள்.

வாரீர் ஆதிமூர்த்தியான ஸ்ரீகிருஷ்ணபகவானே! ஸ்ரீபலராம சந்திரரே! இந்தக் கொடிய காட்டுத் தீயினால் நாங்களும் கோக்களும் தஹிக்கப்படாமல் இரட்சிக்கக் கடவீர்கள். இதோ உங்களைச் சரணமாக வடைகின்றோம். ஓ எங்கள் குலதெய்வமாகிய ஸ்ரீகிருஷ்ணா! ஓ ஆபத்பாந்தவா! ஓ தீனரக்ஷகா! ஓ சிரோரத்னமே! ஓ தீனதயாளுவே! ஓ ஸ்ரீ ஜகத்ரக்ஷகா! ஓ ஸ்ரீபக்தவத்சலா! தேவரீருடைய நாமாதிசயங்களைப் பலவாறாகத் துதித்து முறையிடுகின்றோம். ஸநேகபந்துக்களாகிய எங்களை இந்தத் தாவானலஜ்வாலையினின்றும் இரட்சிக்கக்கடவீர். எங்கள் சக்தி உபாயங்களாலே தப்பித்துக் கொள்வதற்கு யாதொன்றுந் தோற்றவில்லை. எங்களுக்கு அதி உஷ்ணகரமாகிய ஜ்வாலை தாங்குகின்றதினால் சரீரங்கள் தகிக்கப்படுகின்றன. இனிச் சகிக்கமாட்டோம். ஓ ஸ்ரீகிருஷ்ணா! விரைவாக ரட்சிக்கக் கடவீர் என்று முறையிட்டுத் துதித்தார்கள்.

வாரீர் ஸ்ரீசுபத்ராபௌத்ரனே! இவ்விதங்களாக முறையிடுகின்ற பந்துக்களுடைய தீனவசனங்களைக் கேட்ட மாத்திரத்தில் ஸ்ரீகிருஷ்ணபகவானானவர் கடாக்ஷித்து, சத்கார வசனங்களினால் தாபங்களைத் தீர்த்து, நீங்கள் யாவரும் பயப்படவேண்டுவதில்லை. உங்கள் நேத்திரங்களை மூடிக்கொள்ளுங்கள் என்று நியமித்தருளிய ஸ்ரீபகவானுடைய ஆக்கியாப்பிரகாரம் ஸமஸ்தமான கோபாலர்களும் மிகவும் பயபக்திகளுடன் ஸ்ரீபக்தவத்ஸலரே! யென்று திடசித்தர்களாகி யாவருந் தங்கள் நேத்திரங்களை நன்றாகப் பொதிந்து கொண்டார்கள். அத்தருணத்தில் ஸ்ரீயோகீஸ்வரராகிய ஸ்ரீஹரியானவர் சர்வப்பிரபஞ்ச மாயாத்மக தமது விராட்ஸ்வரூபத்தை வஹித்து, அந்தக்காட்டுத்தீயை அவலீலையாகப் பானஞ்செய்து, அந்தக் கோபாலர்களையுங் கோவினங்களையும் ஓர் க்ஷணமாத்திரத்தில் முஞ்சாரண்யத்தினின்று பாண்டீரமென்னப்பட்ட ஆலமரத்தடியில் தமது மாயையினால் கொண்டுவந்து சேர்த்து நேத்திரங்களை விழித்துப் பார்க்கும்படி நியமித்தருளினார்.

அவர்களும் அப்படியே விழித்துப்பார்த்து, ஸ்ரீபலராம கிருஷ்ணர்கள் ஸஹிதமாய்ச் சமஸ்தமான கோபாலர்களுங் கோவினங்களும் யாதொரு குறைவுமின்றிச் சுரக்ஷிதமாய் முன் தாங்களெல்லாருஞ் சந்தோஷமாகி விளை

யாடிக்கொண்டிருந்த ஆலமரத்தடியில் வந்து சேர்ந்திருக்கக் கண்டு, மஹத்தாகிய ஆச்சரியத்தை யடைந்து, ஸ்ரீபகவன் யோகமாயாப் பிரபாவங்களை யறிந்து ஆனந்திப்பதற்குச் சக்தியில்லாதவர்களாகி, சிலர் அந்தக் காட்டுத்தீயை விழுங்கி நம்மை ரக்ஷித்தாரோ வென்றார்கள், சிலர் காட்டுத்தீயைக் குளிரச்செய்வதற்கு மந்திரங்கற்றவரோ வென்றார்கள், சிலர் ஆயினு மனுஷ்யர்களால் முடியாதென்றார்கள், சிலர் காரியார்த்தமாக இவ்விடத்தில் வந்தவதரித்த தெய்வசிரேஷ்டர்களே யல்லது வேறல்லவென்று மகிழ்ந்து துதித்தார்கள், சிலர் இப்படிப்பட்ட காலங்களை யுணர்ந்து நம்மை ரக்ஷிக்கிற நிமித்தமாக ஸ்ரீ புருஷோத்தமரே இந்த ஸ்ரீக்ருஷ்ணபகவானுக்த திருவவதரித்திருக்கின்றாரென்று சந்தோஷமடைந்து ஸ்துதிகளைச் செய்தார்கள்

இவ்விதங்களாக ஆனந்த பரவசத்துடனிருக்கின்ற சமஸ்த கோபாலர்களையும் கோவினங்களையும் சம்பூர்ணமாகக் கடாக்ஷித்த ஸ்ரீக்ருஷ்ண பகவானவர் கோபாலர்களைப் பார்த்து, வாருங்கள் தனயர்களே! சூரியாஸ்தமான காலம் சமீபமாய் விட்டது இனி யாவரும் கோகுலத்திற்குப் போவோம் பசுக்களுடன் புறப்படுங்கள் என்று, நியமித்துத் தாம் வேணுகானஞ் செய்து கொண்டு, ஸ்ரீபலராமர் தம்முடனவரவும், சமஸ்த கோபாலர்களுந் தங்களை ஸ்தோத்திரங்கள் செய்துகொண்டு முன்பின் சூழ்ந்துவரவும், கோவினங்கள் அதிசந்தோஷானந்தத்துடன் தம்மை மோந்து கொண்டு நான்குபக்கங்களிலும் வியூஹாகாரமாய் வரவும், சகலகோபால கோபிகாசனங்களுக்கு நேத்ரோத்ஸவமாக ஸ்ரீகோகுலத்திற்குட் பிரவேசித்தார்

அந்த ஸ்ரீபுருஷோத்தமராகிய ஸ்ரீகமலலோசனரைத் தரிசனஞ் செய்யாத ஒரு க்ஷணகாலமேனும் அவரவர்களுக்குள்ள பிரீதி அதிசயத்தினால் ஒரு மஹாயுகமாயிருக்கின்ற, அந்த நந்தவிரஜத்தின்மேல் யிருக்கிற ஸ்ரீ நந்தகோப யசோதா ரோஹிணிதேவிகளும் கோபால கோபிகாஜனங்களும் ஸ்ரீபகவானெழுந்தருளக் கண்டமாத்திரத்தில் யாவரும் கண்களிகூர்ந்து ஆனந்த சந்தோஷங்களை யடைந்தார்கள் ஸ்ரீபலராம க்ருஷ்ண சஹிதர்களாய்க் காட்டுத்தீயினின்றும் ஸ்ரீபகவானுடைய பரமகிருபையால் இரக்ஷிக்கப்பட்டுச் சுரக்ஷிதமாக வந்த ஸ்ரீராமநாமதேய ஸ்ரீதாமன்முதலிய சமஸ்த கோபாலர்களும் கோவினங்களுடன் நமதருந்தவப் பயனாகிய ஸ்ரீக்ருஷ்ணபகவான் சர்வகாலமும் நம்மை ரக்ஷிக்கக் கடவரென்று துதித்துக்கொண்டு, அவரவர்கள் தங்கள் தங்கள் யதாஸ்தானமவந்து சேர்ந்தார்கள்

ſ

# இருபத்தாவது அத்தியாயம்.

கலி விருத்தம்.

புண்ணியபுருஷோத்தமன்செய்திடும்
நண்ணுமலீலைக் குணந்திகழ்ச்சதை
எண்ணுலாம்வருஷ சாரகாலத்திற்
பண்ணிரிடுஞ்சவுந்தர்யம்பகருவாம்

ஸ்ரீ புருஷோத்தமருடைய விசித்திரலீலாதி குணங்களுக்கு மிகவுஞ் சஹாயமாத்தங்களாய்த் தோன்றுகின்ற வருஷாகால ஸரத்காலத்தையும், ஸ்வாமியினுடைய சௌந்தர்யங்களையும் வர்ணித்துச் சொல்லுகின்றனர்

வாரீர் ஸ்ரீபரம பாகவதோத்தமனாகிய பரீக்ஷித்து மஹாராஜனே! ஸ்ரீபகவத் கிருபைக்குப் பாத்திரர்களாயிருக்கின்ற மஹாபுண்ணிய புருஷர்களாகிய அந்தக் கோபாலகுமாரர்களியாவரும் தங்கள் தங்கள் கிரஹங்களில் வந்து சேர்ந்து சுகித்து, ஸ்ரீபால விருத்த மஹாஜன கோபாலர்களைப் பார்த்து, இந்த ஸ்ரீராமகிருஷ்ணர்கள் சமஸ்தமான கோபாலர்களையும் கோவின சமூஹங்களையும் முஞ்சாரண்ய தாவாக்னியினின்றும் இரட்சித்த மஹாகுணாதிசயங்களைச் சொன்னார்கள் அப்போது அவர்களியாவரும் தங்கள் செவிக்கானந்தமாக அந்தச் சரித்திரங்களைக் கேட்டுச் சந்தோஷித்து. வாருங்கள் கோபால குமாரர்களே! இந்த ஸ்ரீபலராம கிருஷ்ணர்கள் நம்மையொத்த ஸாதாரண மனுஷ்யர்களல்ல தேவகாரியார்த்தமாகத் திருவவதாரஞ் செய்த மஹாபுருஷ சிரேஷ்டர்களென்று சொல்லி ஸ்தோத்திரங்கள் செய்தார்கள்

வாரீர் சாதுஜனபோஷக சர்வஜனநாதனே! இவ்விதங்களாக ஸ்ரீபகவானானவர் கௌமார கிரீடாதிசயங்களைச் செய்து சஞ்சரித்துக்கொண்டிராநின்ற காலத்தில், சூரியபகவான் தென்றிசையைவிட்டு வந்தபின்பு அத்திசையாகிய ஸ்திரீயானவள் சகியாமல் வியாகுலப்பட்டுப் பெருமூச்சு விடுகின்றாள், அந்த மூச்சைத்தான் உலகத்தார் தென்றற் காற்றென்று சொல்லுகின்றார்கள். ஆதலால் அத்திசையைச்சேர்ந்து அவளை மகிழச்செய்ய வேண்டுமென்று போனானென்னச் சொல்லவும், தானத்திசையைப் பிரிந்தபின்பு அவ்விடத்திலிருக்கின்ற அக்கினி, யமன், நிருதி, என்னும் மூவருந் தங்களிடத்துள்ள கொடுமையை உஷ்ணமாக உலகத்தில் பரவச்செய்து ஆத்மாக்களை வருத்தப்படுத்தும்படியால் உஷ்ணத்தை நீக்கி உலகத்தை ரட்சிக்கும்படி அவர்கள்மேல் யுத்தத்திற்குப் போனானென்று சொல்லவும், தென்றிசையைச் சேர்ந்து கடகராசியிற் பிரவேசித்தான்

அந்தராசியில் சூரியனிருக்கும்போது மேல்காற்று வரவாகக் குறைவுபட்டு உலகத்திற்குங் கொஞ்சஞ் சௌக்கியம் கிடைக்கலாயிற்று அந்தராசியை

விட்டுச் சிங்கத்திற சென்ருன வருஷாகாலம வந்தது அநதருதுவில ஸ்ரீ ஹரியினுடைய லீலாகுணஙகளுக்கு அநுகுணமாக இந்தக கோகுலபிருநதா வனததிலும மறறைப பூமிகளிலும வருஷகால லக்ஷணயுக்தமாய அடிககடி வாடைகாறறும கீழககாறறும திருமபித திருமபிக குளிர்நதுவீசின மண்ட லததைச சூழநது பரிவேஷம நாநாவிதமாகக காணபபட்டு, வருஷககுறிகளை யுணடுபணணிறறு மேகஙகள வடதிசையி லெழுமபி, ஸ்ரீபலராமருடைய திருமேனியைபபோலத தெனறிசையிலே பிரவேசிததாக கடலிறபாயநது, சலபானஞ்செயது, ஸ்ரீ கணண பிரானுடைய திருமேனியைய போலக் கறுதத, நிறததைககொணடு வடதிசையிலடைநது, ஆகாயமெஙகும பரவிக கவிநதன உலகமெஙகும மினனலகளுணடா யிருநதன

ஸ்ரீபலராமா பிரலமபனதலையி லிடிதத இடியின சபதததிற கொபபாய் நீலமேகஙகள காஜிததன சிதரவிசிதரமான இநதிரதனுசு அடிககடிச சூரியகிரணததிற கெதிர்முகமாக ஆகாயததில காணபபட்டது வடதிசையிற றோனறிய கருமேகஙகள சகலமான ஜனசரஙகளுககும விருததியுணடாககி, அவைகளைச சநதோஷிககச செயதன அவவிருணட மேகஙகள ஆகாயததி லிடைவெளியிலலாமல அநதரவீதிக ளெஙகும பரவி வியாபிததது, இவவுலக மெலலாம இருளடையுமபடி செயதன இவவுலகததிககுத தாபததையும ஜலததையுங கறபிககச சததியுளள சூரியபகவானுனவன தனது கிரணஙகளி னால முனமேகஙகள வருஷிதததினாலே, நதீநத மடுககள, ஏரிகள, தடாகங் கள, முதலிய வறறிலுளள ஜலததையும சகல பூமியினது திரவஙகளையும எடடுமாதஙகள வரைககும கிரஹிதது, மறுபடியும வருஷகால சரதகால முதலிய காலபககுவஙகளில தனது கிரணததினு லுணடாகிய மேகஙகளுககு முனகிரஹிதத திரவஙகளை ஜலகிரணஙகளால கொடுதது, வருஷாதி காரி களான பாஜனயாதி தேவதைகளுககு அதிகாரஙகளை வஹிககச செயது, தனது கிரணுமச சமபூதஙகளான மேகஙகளை முனனிடடுககொணடு சரவ வுலகஙகளும க்ஷேமஙகளையடையும பொருடடு வருஷஙகளை யுணடாககி ஜலததை வருஷிததான

இவவுலகததிலகலியுகநதோறும சுருதி ஸமிருதி புராண சாஸ்திரஙகளால வேதோததஙகளாகிய உததம தருமஙகள நசிதது இருளையடைய ஸ்ரீபர மாதம பிரதிபாதக ததவஹீனாகளாய வேதோகத பரம தருமஙகளை விலக கி எபபொழுதும ஆசாரமிலலாமல வேதததிறகு வெளிபபடடவாகளாகிய பாஷணடிகளெனனும சமசாரபநதததிறகுக காரணமாயிருககிற அசத்தான சாஸதிரஙகளையே அனுசரிககிற வாகளிற சிலா விருததியடைநது பிரகாசிப பதுபோல, அநத இருணட காளமேகஙகளானவை திககுவிதிககுளிற சிதறும் படி மின்னபபடட அநத வருஷகாலததில ஜலததை வருஷிப்பதறகுமுன் மேகாடமபர வியாபக தினங்களில லோகோப காரார்த்தமாக ஆகாசவீதி களில பிரகாசிககினற சூரியசநதிர நக்ஷததிரகிரஹாதி கணஙகளுககிளையாய் ஆடிபாடி முதலான இடஙகளில மினமினிப பூசசிகள, பிரகாசிததுககொண் டிருநதன.

இவ்வுலகத்திலுள்ள ஏழைஜனங்கள் விஷயத்தில் அன்புகொண்டு மஹோதாரான புருஷர்கள் அவ்வேழைகளுக்குத் தங்களன்புள்ள வரைக்குங் கொடுத்துத் திருப்தி யடையச்செய்து தாங்களுஞ் சந்தோஷித்துக் கைசலித்து நிற்கின்றார்போல், மேகங்கள் அரவங்களுண்டாகக் காஜித்து சர்வ ஜந்துக்களுக்குந் திருப்தியடையும்படியாக வருஷித்து லோகமெல்லாம் பிரகாசிக்கும்படி அந்தரவெளி தோன்ற நின்றன. மேலும் மஹாபோகங்களை யடையும்பொருட்டு பஞ்சாக்னி மத்தியினின்று ஸ்ரீபகவானைக் குறித்துப் பொறிபுலன்களடக்கித் தபஞ்செய்து தங்கள் சரீரங்களைச் சுருக்கித் தபித்துக்கொண்டிருக்கின்ற காலத்தில் ஸ்ரீபகவான் பிரசன்னமாய் இஷ்டங்களைக் கொடுத்தருளப் பெற்றுக் கொள்வார்களாகில் அவர்கள் எப்போதும்போலச் சரீரம் பூரித்துச் சந்தோஷமடைவதுபோல், கிரீஷ்மகால தாபகிரணங்களால் ஈரங்களைக் கிரஹிக்கப்பட்டு பூமிவரண்டு வருஷஜலத்தைக் கோரியிருந்த இந்தப்பூமியானது வருஷாகாலத்தில் பூர்ணமாய் வருஷித்தபடியினாலே சந்தோஷித்து ஈரங்களை வகித்துப் புஷ்டியடைந்தது.

மழை பெய்யும்போதெல்லாம் ஒடுங்கிநின்று வருஷம் நின்றவுடனே ஜலசமாத்தியாய்ப் பிரகாசிக்கின்ற ஏரிகள், மடுக்கள், கால்வாய்கள், நீரோடைகள், இவைமுதலியவைகளில் தவளைக்கூட்டங்கள் இனமினமாய்ச் சேர்ந்து, சந்தோஷத்துடன் தங்களுக்குவிருத்தியான ஜீவனகாலங்கள் நேரிட்டனவென்று மேககர்ஜனைகளுக்குப்பிரதியாய்ச் சப்தித்தன. இந்திரியவஸ்யர்களாகியும் அற்பவிஷய காமபோக சுதந்திரர்களாகியு மிருக்கின்ற சபலபுத்தியையுடைய புருஷர்களின் தேகம் தனமுதலிய சர்வசம்பத்துக்களும் நல்விஷயத்தி லுபயோகப் படாமல் அபாத்திர விஷயத்தில் வியர்த்த மாகின்றதைப்போல், கேவலம் உபயோகப்படாத சவட்டுப் பூமிகளும் நெருஞ்சில் முதலிய கண்டமாகிய பூண்டுகளின் விளைவுகளுக்கு உபயோகப்பட்டிருந்தன. மேலும் இப்பூமியில் ஜலசமாத்தியால் நாநாவிதவிசித்ர வர்ணங்களாகத் தளிர்த்தும் புஷ்பித்தும் விளங்குகின்ற புற்கள், பூண்டுகள், புதர்கள், கொடிகள், விருக்ஷங்கள் முதலிய சர்வஸ்தாவரங்களையுடைய வனங்கள், நானாவிதவிசித்ர ஆடைகளால் அலங்கரிக்கப்பட்டு அனந்தமான ஆயுதபாணிகளா யிருக்கிற ஓரிராஜாவினுடைய சேனைகளைப்போலச் சர்வசம்பத் கரங்களாய்த் தோற்றப்பட்டிருந்தன.

இந்தப்பிரபஞ்சங்களைத் தெய்வாதீனமென்று உணராமல் விவேகஹீனர்களாய் முன்செய்த சுகிர்தத்தினால் சிலசம்பத்துக்களை வகித்து நானென்தென்கிற துரபிமானங்களை யுடையவர்களாய் அடுத்தவருக்கும் உபயோகமில்லாமல் விருத்தியடைந்து பிரகாசிக்கின்ற லுத்தர்களைப்போல், சில வியவசாய க்ஷேத்திரங்கள் அதிகமழையால் சஸ்யங்கள் நன்றாய் விருத்தியடைந்து பிரயாசப்படுகின்ற உழவர்களுக்குப் பலப்பிரயோசனமில்லாமல் நஷ்டபலத்தை வகித்து விளங்கின. தாங்கள் பூர்வஜன்மங்களின் பலனை அபேக்ஷித்தவர்களாய் ஸ்ரீஹரியினுடைய ஸேவையினாலும் தியான ஸத்காமங்களினாலும்

புண்யங்களைச் செய்து இந்த ஜன்மத்தில் எப்பொழுதும் ஆசார உத்தம வம்சங்களில லோகோபகாரிகளாய விளங்குகின்ற புண்ய ஜனங்களைபபோல, சில பூமிகள் தெய்வானுககிரகத்தினால போதுமானமழையுண்டாககி நல்லஜலத்தை யடைந்து நல்ல பயிர்களால விருத்தியடைந்து விளங்கின இந்திரிய நிக்ரஹங்களை யடையாத யோகிகளுடைய மனது சஞ்சலப்படுவதுபோல, நதிகள் மடுக்கள், காலவாய்கள், இவைகளில பூரணமாயிருக்கின்ற ஜலம் வாயுவேகத்தினால கலங்கியிருந்தன

ஸ்ரீ புருஷோத்தமனுகிய ஸ்ரீ அரியினிடத்தில ஸமாஸ்ரயணமாகிற அன்பைபபெற்று பக்தியோடே மனதைசசுவாமி திருவடியில செலுத்தித சுகதுக்கமுதலிய வினைகளுக்க கஞ்சாத தீரத்துவத்தைக கொண்ட மகா புருஷர்களைபபோல, பாவத்தங்கள இவவருஷா காலத்தி லுண்டாகிய மேககாஜஜனை முதலிய இடிகளாலும பெய்யப்பட்ட மழையினுலும அதனாலுண்டாகிய அருவிஜலத்தினுலும பேதிக்கப்படாமல கலங்காமலிருந்தன. வேதாத்தியயனஞ்செய்கின்ற பிராமமண சிறுவாகள வேதங்களைசசொலவதை யொழிந்து அந்தப்பாடங்களைத தொடங்கும்போது அவைகள அந்தச சிறுவாகளுடைய மனதுக்குச சந்தேக முண்டாககுதலபோல, வருஷஜலசமாததியினால இவவாரணயபூமி புறகள பூண்டுகள முதலியவற்றுல மாாககங்கள மறையப்பட்டனவாகிச சஞ்சரிக்கின்ற மனிதாகளுககு மாாககசநதேகங்க ளுண்டாகின சாவஜனங்களுக்கும ஆனந்தகரமாயத தோற்றுகின்ற மேகபடலங்களினின்றும பிரகாசிக்கின்ற மினனலகள, காமத்தில இச்சையுள்ள புருஷாகளின சித்தங்களைக கலங்கச்செய்யும வேசிகளினுடைய மேனியழகுமகுணங்களும இப்படித்தான நிலையிலலாம லிருக்குமென்று காட்டுவதுபோல அடிக்கடி தோன்றித்தோன்றி மறைந்தன

சூரியமண்டலமபோன்ற இந்திரதநுஸானது சத்வாதி குணங்களால் விருத்தியடையப்பட்ட இந்தப் பிரபஞ்சத்தில சத்வாதிகுண சூனனியாகளாய விளங்குகின்ற பரமாத்மாவாகிய ஸ்ரீபரமபுருஷன பிரபஞ்ச ஸமரக்ஷணாத்தத்தின பொருட்டு வகித்த ஸ்ரீஹரி ஹரஹிரணய கறபாதி ஸவரூபங்களுக்குள்ள வாணங்களைபபோனறிருந்தது இவவருஷாகால சுகலபக்ஷத்தில தினங்களதோறும கலைகள விருத்தியடைந்தும உலகத்தவாகளுககுத தோன்றுமல ஆகாயத்தில சஞ்சரிக்கின்ற மேகசமூகங்களால மறைக்கப்படுகின்ற சந்திரனுனவன, சாவேஸவரனுடைய கிருபையினால இபபிரபஞ்சத்தி னிடத்தில ஸ்ரீபகவதாஞையை வகித்து பிசசேதனன அந்த ஸ்ரீபகவான மாயாபிரபாவங்களால தனது ஸவரூபஞஞான தேஜஸைமறைக்கப்பட்டு மாழ்குகின்ற தன்மை இதுதானென்று காட்டுகின்றவனைபபோ லிருந்தான ஆகாயங்களெங்குமபரவி மினனலுடன கம்பீரங்களாகக காஜிக்கின்ற சூறகொண்ட மேகங்களைபபாாத்து மகத்தாகிய சநதோஷங்களை யடைந்து சிறகுகளை விரித்து நர்த்தனஞ்செய்கின்ற மயிலகளானவை, இவ்வுலகில மகா புண்யசாலிகளாய் ஜனித்து ஸ்ரீஹரிபஜனையைக குணுநுபவமாகச செய்து மகா ஆனந்தத்துடன் நர்த்தனஞ்செய்யுந தனமைகளைப்போலக் காணப்பட்டன

நநதகோப குமாரனுகிய ஸ்ரீமாதவன தமது திருபபவளமபோன்ற அதரத்திலவைதது ஊதுகின்ற புளளாஙகுழலினுடைய வோசையைககேடடு வெட்கபபடடு வாயைமூடிக கொணடனவென்று சொலலுமபடி, குயிறகூடடஙகளெலலாம கூவாமல வாயடஙகி யிருநதன. பூமியிலுறைநதிருககின்ற பிரவாகஙகளைத தமது வோகளினுல கிரகிததது விருததியடைநது சமஸத பிராணிகளுககும மகோபகாரமாய நாநாவித ரஸருசிபலஙகளைத தரததககதாய இநதப பிருநதாவனததில விளஙகுகின்ற விருக்ஷஙகள், சாவேநதிரியஙகளை ஜயிததது மகாபரிசுததாகளாயத தஙகள தபப்பிரபாவததால ஸ்ரீபகவானைச் சநதோஷிபபிதது அவருடைய கிருபையால சாவபலததைக கொடுககததகக சமபததை அடைநது அநுககிரஹிககின்ற தபஸிகளைபபோல விளஙகின. சர்வலோகேஸவரனுன ஸ்ரீகணணபிரானுனவா எனனிடததில் லீலாவிநோதங்களைச்செயயப பாககியததை நான பெறறிருககின்றேன. நீசுவாககவாஸியென்று பெயாபெற றிருநதபோதிலும ஸவாமியினுடைய லீலா விநோதஙகளை அனுபவிககுமபேறு உனககிலலாமையால, நீ எனககுச சமானமலலவென்று தெயவலோகததி லுளள கறபகவனததைப பாாதது பிருநதாவனமநகைதது தேளனஞசெயவதுபோல, அவவிடததிலுளள முலலைககொடிகளெலலாம அருமபெடுததன.

இநதப புணயாரணயஙகளிலும மறறை இடஙகளிலும கலஙகிக குழம்பிச சேறருற சூழபபடடிருககின்ற நீரோடைகள ஏரிகள முதலாகிய இடங்களில இனமினமாய்ச சோநது வணடலகளையுஞ சேறறுப புழுககளையுநதின்று விருததியடைநது அததடஙகளைவிட டகலாமல திருபதியடைநதிருககின்ற சாரஸபட்சி சமூஹஙகள், இவவாதமகோடிகளில ஹிதயஸமஸாரிகள் தேஹாபிமானிகளாயப புததிரமிதர களதர பநதுவிஷயஙகளில துராஸாமோஹ பரவசாகளாயத தேஹமே ஆதமாவென்றும சரீரபோஷணாததஙகளே புருஷாாததஙக ளென்றும பிரமிததிருககின்ற அஞஞானஜனிதஙகளைபபோல விளஙகின. கலியுகததில பிராமணாகள நீசனையடுதது உதரபோஷணஞ செயவதே முககியமாக வெணணி வேதசாஸதிரஙகளை மறநதுவிடுவாாகள. அபபோ பாஷணடாள மீறி வேதததிறகு விரோதமான அசதசாஸதிரததை உபதேசிதது வேதமாககததைப பேதிபபதுபோல, மிகுநத வெளளததினுல ஏரி, கால, இவை முதலியதுகளின கரைகள பேதிககபபடடன.

இபபிரபஞசததில உபகாரிகளாகிய உததமராஜாககளமநதிரி புரோஹிதாகள முதலியூஷிதவஜஜன சதஸஙகபாகளாய சாஸதிரஙகளையும நீதிகளையும ஆராயநது தானதாம பரோபகாரிகளாயச சமஸதமான ஜனஙகளையும தண்ணளியினுல ரக்ஷிககின்றதுபோல, இம மேகசமூஹஙகள சூறகொண்டெங்குமிறைநது வாயுவால கலககப்படடு சாவபூமியுங குளிரச சர்வஜனங்களுஞ சநதோஷிதததத திருபதியடைய வருஷிததன. அதனுல அநதஹாரணயததில வசிககின்ற மஹாரிஷிகளும வானபிரஸதாஸரம ஜனஙகள முதலியவாகளும திருபதியடைநது சநதோஷிததாாகள. அநத பிருநதாவனத

தில் வருஷாகாலத்தில் ஸ்ரீகிருஷ்ணபகவான் ஸ்ரீபலராம சஹிதராய்ச் சமேதமான கோபாலர்களுங் கோவினங்களுஞ் சூழ்ந்துவரப் பிரவேசித்துச் சந்தோஷமாகச் சஞ்சரித்துக்கொண்டிருந்தார். பசுவின் கூட்டங்கள் க்ஷீரச் யாத்ரீகளினாலே மெள்ள உலாவிச் சஞ்சரித்து, ஸ்ரீகண்ணபிரானாலே அழைக்கப்பட்ட வேளைகளுக்குப் பிரீதியடைந்து, தேவாமிர்தத்திற் கொப்பான பாலைத் தாங்கள் சஞ்சரிக்கு மிடந்தோறுந் துளித்துளியாகப் பெருகவிட்டுக் கொண்டு, ஸ்ரீபகவானைப் பிரியாமல் சஞ்சரித்துக் கொண்டிருந்தன.

ஸ்ரீகிருஷ்ண பகவானும் ஸ்ரீபலராம மூர்த்தியையும் கோபால குமாரர்களையுங்கூட அழைத்துக் கொண்டு, பெருமழை வர்ஷிக்கின்ற சமயங்களில் மழையடைப்பான இடங்களில் பக்கங்களை மட்கவிட்டு, விருக்ஷங்களின் [illegible] வாரங்களிலும் பர்வதக் குஹைத்துவாரங்களிலும் பிரவேசித்து, மிகவும் மனோரம்மியமான லீலாவிநோதங்களை யாசரித்துக்கொண்டிருந்தார். அப்போது கோபாலகுமாரர்கள் அவரவர்கள் கொண்டுவந்த ஊறுகாய்களையும், கந்தமூல பலாதிகளையும், ததியோதனமுதலிய சித்ரான்னங்களையும், [illegible] பாறைகளின்மேல் வைத்து, ஸ்ரீபகவத் பிரீதியாகச் சமர்ப்பித்தார்கள். ஸ்வாமி தாம்கொண்டுவந்ததைப் பிரசாதிக்கார்; பின்பு ஸ்வாமிமுதலிய யாவரும் சந்தோஷானந்த பரவசர்களாய் போஜனஞ்செய்தார்கள். பிறகு ஓரிடத்திலே இளைப்பாறி, சம்பிரம வார்த்தைகளை வசனித்துக்கொண்டிருந்தார்கள். இவ்விதங்களாக ஸ்ரீபகவான் கோகுல பிருந்தாவனங்களில் இந்த வருஷாகாலமெல்லாம் ஸ்ரீபலராம சஹிதராய்ச் சகலகோபால கோதன சமூஹங்களுடன் லீலாவிநோதங்களைப் பிரதிதினமுஞ் சஞ்சரித்துக்கொண்டிருந்தார்.

இப்படியிருக்கின்ற காலங்களில் சூரியபகவான் கன்னியாராசியை விட்டுத் துலாராசியிற் பிரவேசித்தான். ஆகாயமும் பூமியும் சகலதீர்த்த பிரவாஹங்களுந் தெளிந்து, மந்தமாருதத்தை யுடையதாயிருக்கின்ற சரத்ருதுவினுடைய லக்ஷணக்குறிகள் விளங்கின. இந்தப் பிருந்தாவனத்தில் துரியாஸ்ரமிகளாயிருந்து, தாரேஷணம், தனேஷணம், புத்ரேஷணம், என்னும் ஈஷணாத்ரயங்களையும், தேவருணம், பிதுருணம், ரிஷிருணம், மனுஷ்யருணம், என்னும் ருணநான்குகளையும், பிரகிருதி சம்பந்தத்தி லுண்டாகிய சுகிருத துஷ்கிருதங்களையும், காமக்குரோதாதி அரிஷட்வர்க்கங்களையும், தானதர்மமுதலிய ஆசார சத்கர்மங்களையும் அநுஷ்டித்து இல்லற வாழ்க்கைகளைத் துறந்த சன்னியாசிகளைப்போல, முன் வருஷருதுவில் [illegible]ண்டு கறுத்த நிறத்தைக்கொண்டு ஆகாயத்தில் பரவி நாடுநகர வனபர்வத சமுத்திரங்களில் நன்றாகவருஷித்துத் திருப்தி யடைந்திருக்கும்படிச்செய்து நிர்மல ஸ்வரூபங்களான வெள்ளைமேகங்கள் சஞ்சாரங்களொழிந்து விளங்கின.

வருஷங்களில் கலங்கலாயிருந்த நதிகள் தடாகங்கள் முதலியவற்றிலுள்ள ஜலந்தெளிந்து, செவ்வாம்பல், வெள்ளாம்பல், செங்கழுநீர், கருங்கழுநீர்,

செநதாமரை, வெணடாமரை, விருததியடைநது புஷபித்து, ஸ்ரீமஹாலக்ஷ்மி வீடடைடபோல விளஙகிய ஆநதா சலமானது யெபபடித தோனறிய தெனறால இநதிரிய நிககிரகநதுக நரிய யோகாரமபத தைககொணடு சித தஙகலஙகி நினறு காலாநதரததில சிததநதெளிநத யோகபுருஷனுடைய மனதைபபோல சுபரகாயபத தோனறியது பிரமசாரியாஸரமததைக யடைநது தாயதநதையாகளை நீஙகிக குருகுலவாசஞ செயவதினுமாதோஹரஞசெயது சரீரபோஷணஙகளைச செயதுக கொளளாததினு நாநாவித ஸரமஙகளால சிதத சௌககிய மிலலாதவாகளா யிருநது கிரகஸதாஸரமஙகளை யடைநது மனது தெளிநது சுகிககினற பிராமமணச சிறுவாகளைபபோல, சூரியபகவானுடைய கிரணஙகளாலும வீசுகினற காறறினாலும ஆகாயமானது தனனை மறைததுக கொணடிருநத மேக கூடட நீங்க விளஙகியது

நலல பெரியோாகளை அடைநது குருகுலவாசஞசெயது அவவாசாரியநுகரகததினாலே வேதோகத ஆதமஹித ததவாாததஙகளை நனறாயப போதிததுத திருபதியடையச செயகினற ஆசாரியனைபபோல, அநதவனததிலுளள பாவதஙகள, வருஷாகால மேகஙகளாற பொழியப பெறற ஜலததைத வகிததுத அநதஜலததினாலே தஙகளை யாஸரயிதத மசாதுனஙகள திருபதியடையுமபடிசெயதன இவவுலகததில ஸமஹாபிமானிகளாய புதரமிததிரகளததாதிகளைச சாசுவதமாக நினைதது சூரியாகலாலே கிரகிககபபடட ஆயுக்ஷீணஙகளை யறியாமல சஞசரிககினற சேதனாகளைபபோல, இமமகாவனததிலுளள சிறு ஓடைகளிலும அலபததடாகஙகளிலும சஞசரிததுககொண டிருககினற ஜலஜநதுககள சூரியகிரணஙகளினால ஜலசமாததிகள குறைநது தஙகள ஜீவனோபாயஙக ளறறபோவதையறியச சகதியிலலாமல நாநாவிதமாகிய தாபததையடைநது தபிததுககொண டிருநதன

இவவுலகததில ஸ்ரீஹரியினிடததில பகதியுகத அனபுகளை யுடையவாகளாகியும, துரபிமானஙகளை யொழிநதவாகளாகியும, சிததசுததியுடனவிளஙகுகினற உததமஞ கியானிகளைபபோல இநத ஆரணயஙகளிலுளள நதிநதமடுககள் ஓடைகளினுடைய பிரவாஹததினாலே சேறறைவகிதத பூபபிரதேசஙகளும சூரியகிரணஙகளால தமது மலினஙகளை யொழிநது சாதாரணமாகச சஞசரிககுமபடி பிரகாசிததன சகலாதம சமதாஸனககியான முடையவர்களாய பரோபகார எணணமுடையவாகளா யிருககினற புணய ஜனஙகளைப போல, ஸ்ரீபகவானுடைய சஞசாரஙகளுககு யோகயமான இநதப பூமியானதுசேறறையும வணடலையும உளளையும விடடுத தனனுள விளஙகிய கொடிகளிலேயும புதருகளிலேயும உணடாகினற மனோஹரமாகிய புஷ்பஙகளையும பலஙகளையுந தநது சமஸதமானவாகளையுஞ சநதோஷிககச செய்தது. தஙகள் குல சிரேஷடனாகிய காளியன தலையை மிதிதது அவனுடைய காவத்தை யடககிய ஸ்ரீகிருஷணபகவான வருகினறாரோவெனறு பயததினால் சாபபஙகள தலையை நீடடி பெட்டிப்பாாபபதுபோல, கரநதலகள அரும்பெடுததன

தம்மிடமாக வந்து சஞ்சரிக்கின்ற நந்தகோப நந்தனனைப் பார்த்து வனங்களும் கிரிகளும் வாராய் மாதவா! எங்களைப் பரிசுத்தர்களாக்கி ரக்ஷிக்கவரும் ஐயனே! என்று கைமேந்தி அழைப்பதுபோல, அக்காந்தள்கள் மலர்ந்தன. வனத்தில் சஞ்சரிக்கும் ஸ்ரீ யசோதா தநயனுடைய திருமேனியின் காந்தி அவ்வனமுழுவதும் பரவினதுபோல, காயாவெல்லாம் மலர்ந்தன. கிரமக்கிரமமாய் உத்தமாசிரம தர்மங்களை வகித்து அவரவர் கிரிய சகல கிரியாகர்ம தர்மங்களையும் ஆசரித்து பரமேகாந்த நிஷ்டையை சந்தடியற்று மௌனவிரதத்தை யநுஷ்டித்த திருக்கு முனிவர்களைப்போல, வருஷாகாலத்தில் மேகங்களினின்று முண்டாகின்ற வருஷங்களினாலும் வாயுவேகங்களினாலுங் கலங்கி நாநாவித விசித்ர அலைகளையும் அவற்றாலுண்டாகின்ற கம்பீரமான வோசைகளையு முடைத்தாயிருந்த சமுத்திரமானது சரத்காலம் வந்தவுடனே சூரியகிரணங்களாலும் அவற்றின் உஷ்ணவாயு வேகங்களினாலும் கலங்கல் தெளிந்து ஆரவாரங்களொழிந்து நிஸ்சப்தமாயுங் கம்பீரமாயும் விளங்கிற்று.

யோகிகளானவர்கள் மனதை ஒருவிடத்தினும் சலிக்க ஒட்டாமல் ஸ்ரீபகவானுடைய திருவடிகளில் நிறுத்தி நிதானிப்பதுபோல, பயிர் செய்து வாழ்கின்ற உழவர்களாகிய உத்தம ஸம்ஸாரிகள் தங்களுக்கும் வெகு ஜனங்களுக்கும் உபகாரார்த்தமாகச் சர்வப்பிரவாஹ ஜலங்கால்வாய்களுக்கு அணைகளைக் கட்டி ஜல சம்ரக்ஷணஞ் செய்தார்கள். ஸ்ரீகிருஷ்ணபகவான் கோபால குமாரர்களுடனே பசுக்களையோட்டிக்கொண்டு வனத்திற்குப் போயிருக்கப்பட்ட மத்தியான காலங்களில் அவருடைய ஸேவை நீங்கியதா லுண்டாகின்ற மனஸ்தாபங்களைக் கொண்டிருந்து அஸ்தமன காலங்களில் அவரெழுந்தருளினவுடனே அந்த ஸ்ரீகிருஷ்ணஸேவா திருப்தியினாலே தேஹேந்திரிய தாபங்களை நீங்கி பக்திக்கியான விசேஷங்களையுடைய சகல கோபால கோபீஜனங்களைப்போல, பூமியிலுள்ள சர்வஜனங்களும் ஸ்ரீயபதியினுடைய கிரணங்களால் தாபத்தை யடைந்து சந்திரபகவானாலே தாபம் நீங்கி திருப்தியடைந்தன.

இவ்வுலகத்தில் வேதோக்தமாகிய கர்மகாண்ட முதலியவைகளில் சேர்ந்து சத்வகுணங்களை வஹித்துச் சந்தோஷிக்கின்றவர்களுடைய சித்தத் திறமேற்ப சாஸ்திரார்த்தங்களைப்போல, விந்தைவிந்தையாக வியாபிக்கின்ற மேகசமூஹங்கள் நீங்கப்பட்ட ஆகாயவீதிகளில் நிர்மலமாய கிரக நக்ஷத்திர சமூஹங்கள் பிரகாசித்துக்கொண்டிருந்தன. கோகுல பிருந்தாவனத்தில் சமஸ்த கோபால கோபீஜன கோவின கோவத்ஸங்கள் தம்மைச் சூழ்ந்து விளங்கும்படி ஸ்ரீபலராம சகிதராய்ப் பூர்ணகிருபா திருஷ்டியை வகித்துப் பிரகாசிக்கின்ற ஸ்ரீகிருஷ்ணபகவானைப்போல, அகண்ட மண்டலாகாரமாயிருக்கின்ற ஆகாயவீதியில் நாநாவிதங்களாகிய நக்ஷத்திரகணங்கள் சூழ்ந்து விளங்கத் தனது ஷோடசகலா பாகங்களையுடைய பூர்ணசந்திரன் பிரகாசித்தான்.

ஸ்ரீகிருஷ்ணஸேவையில் பரிபூர்ண மநோரதர்களாய்; இவ்வனத்திலுள்ள இளங்காற்றினாலே தங்கள் தாபத்தை யொழித்துக்கொள்ளமாட்டாத வர்க

ளாய், ஸ்ரீகிருஷ்ணனுடைய ஆலிங்கனத்தை மனதில் தியானித்துத் தபித்துக் கொண்டிருக்கின்ற கோபீஜனங்களைப்போல், இந்தப் புண்யபூமியிலிருக்கின்ற மகா ஜனங்கள் அந்தச் சரத்காலச் சூரியகிரணங்களால் அதிக தாபங்களை யடைந்தார்கள். அப்படி அதிக தாபத்தை யடைந்தவர்கள் உடனே பிரபன்ன ஜனங்களைப்போல அங்கங்குள்ள உபவனங்களிலும், குளிர்ந்திருண்ட இளந்தோப்புகளிலும், நானாவித பரிமளத்தையுடைய புஷ்பச்சோலைகளிலும் வீசாநின்ற காற்றினால், தங்கள் தாபத்தைத் தீர்த்துக்கொண்டு சௌக்ய மடைந்தார்கள். இந்தப் பிருந்தாரண்யங்களிலும் மற்றயிடங்களிலுமுள்ள மிருகபக்ஷி ஜாதிகள் ஸந்தோஷித்துத் தங்கள் தங்கள் நாயகிகள் சகிதங்களாகச் சேர்ந்து கிரீடித்தன. கர்ப்பமில்லாதவைகள் கர்ப்பப்பட்டன. கர்ப்பந்தரித்திருந்தவைகள் பெற்றுச் சந்ததிகளோடு விருத்தியடைந்தன. கர்ப்பங்களோடிருந்த பசுக்கள் வத்ஸங்களையீன்று ஆநந்த பரவசத்துடன் ஸ்ரீகிருஷ்ணபகவானுக்குப் பிரீதியாக தேவாமிர்தத்திற் சொப்பாகிய பாலமுதை அமிர்தமாகக் கறந்தன. ஸர்வ ஜனங்களுடைய ஸ்திரீ புருஷர்களுடன்கூடி ஆநந்த பரவசர்களாயிருந்தார்கள். கர்ப்பமில்லா திருந்தவர்கள் கர்ப்பப்பட்டார்கள்.

இப்பூமியை யாளுகின்ற அரசனானவன் தனது ஆக்கினையைச் செலுத்துவதினாலே சோரர்கள் ஒடுங்கிய டங்குவதுபோல, பிரதிதினமும் சூரியகிரண ஜாலங்களினாலே உலகக்கண்டனமான துஷ்டஜந்துக்களும் ஆம்பல் முதலிய சில புஷ்பஜாதிக் கூட்டங்களும் ஒடுங்கியடங்கின. அவ்வரசனுடைய ஆக்ஞையால் சமஸ்தமான ஜனங்களும் சந்தோஷங்களை யடைவதுபோல, அக்காலச் சூரியோதய கிரணங்களால் சமஸ்தமான உலகத்தவர்களும் சந்தோஷித்தார்கள். புஷ்ப ஜாதி சமூஹங்களும் மலர்ந்து பிரகாசித்தன. ஸ்ரீராமகிருஷ்ணர்களால் கடாக்ஷிக்கும்படியான பூமியில் சமஸ்தமான பயிர்களும் விருத்தியடைந்தன. நாடு நகரங்களில் சர்வோபசாரங்களுடன் சகல தேவதைகளுக்கு முத்ஸவங்கள் நடந்தன. இந்தக் கோகுல பிருந்தாவனத்தில் ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய லீலாவிநோதங்களுக்குத் தரிய சகலகோபால கோபீஜனமனோரத நிதயமங்கள் மகோத்ஸவங்கள் பிரகாசித்தன.

மேலும், ஸத்காம யாக விரத தான தபோமூர்த்திகளான புண்யபுருஷர்கள் இதனில் உத்தமசத்கீர்த்திகளை அடைந்து தேகமுடிவுகாலத்தில் தேவதாயோனி ஜனிதர்களாய்ச் சரீரங்களைப் பெற்றுச் சர்வாபீஷ்டங்களையு மடைந்து விமானாரூடர்களாய்ச் சகல புண்யலோகங்களையு மடைகின்றதைப் போல, வர்ஷாகாலங்களில் அந்தப்புரத்தில் வசித்துச் சுகிக்கின்ற சமயங்கள் தவிர மற்றுமுள்ள காலங்களில் நீதிசாஸ்திரா நுபவங்கள் செய்துகொண்டிருந்த உத்தம அரசர்கள் வர்ஷாகாலந் தீர்ந்து சரத்காலம் வந்தவுடனே சர்வாலங்கார பூஷிதர்களாய்ப் புறப்பட்டவர்களாயும் வெளிக்கிளம்பிச் சஞ்சரித்துத் தங்கள் இஷ்டார்த்தங்களை யடைந்தார்கள். ஞானவான்களாகிய யதிகள் ஒவ்வொரு ஆசிரமங்களி லடைந்து வர்ஷாகால சரத்காலங்களென்னு மிரண்டு ருதுக்களிலும் சாதுர்மாஸ்யாதி யஜ்ஞ கர்மங்களை யநுஷ்டித்துக்கொண்டிருந்

தார்கள் அன்னியபுரக்கிராமசஞ்சாரிகளாகிய வியாபாரிகள் தங்கள் யதாஸ்தானங்களினின்றும் தாமசீதிகளையும் லாபநஷ்டக் கணக்குகளையும் ஆராய்ந்து சகித்துக் கொண்டிருந்து, வருஷாகாலங்கள் தீர்ந்து சரத்காலம் வந்தவுடனே அலங்கார பூஷிதர்களாய் வெளிப்புற தேசங்களில் சஞ்சரித்து, தங்கள் இஷ்டார்த்தங்களை யடையும்படி வியாபாரங்களைச் செய்தார்கள்.

# இருபத்தோராவது அத்தியாயம்.

கலி விருத்தம்

சாந்து வீசுஞ் சரத்கால நாளையில்
போந்திடும் யமுனா நதி புக்கியே
தோந்த கியானஞ் செய்தவொனி கேட்டஸ்திரீ
நோந்து வந்த நிகழ்ச்சியுங் கூறுவாம்

ஸ்ரீஹரியாகிய கண்ணபிரானானவர் இந்த ஸரத்காலத்தில் யமுனாதீரங்களில் பிரவேசித்து பிரம்மானந்த பரவசராய் வேணுநாத பூர்வகமான சுஸ்வரங்களைக்கொண்டு விண்ணும் மண்ணும் முருகச்செய்ததும், அந்த திவ்ய கானத்தொனிகளைக் கேட்டுச் சகலகோப கன்னிகாஸ்திரீகளும் மனது லய மடைந்து ஸ்ரீகிருஷ்ண குணாங்கிதமான கானங்களைச் செய்ததுஞ் சொல்லுகின்றன.

வாரீர் மஹாராஜனே! ஸ்ரீ அச்சுதபகவானானவர் ஸ்ரீபலராமஸகிதராய் ஸமஸ்தமான கோபாலகோகன ஸமூகங்களுடன் இந்தச்சரத்கால தினங்களில் நிர்மலங்களாயத் தெளிந்த விசித்திரமான ஜலங்களோடு சோபித்துக்கொண்டு கம்பீரமாயப் பிரவஹிக்கின்ற யமுனாநதிமுதலிய தடாகங்களையும், மலர்ந்திருக்கின்ற தாமரைமுதலிய புஷ்பஜாதிகளுடைய சுகந்தபரிமளங்களை அடைந்து வீசாநின்ற தென்றற்காற்றுகளையும், அந்தப் புஷ்பங்களிடத்து உண்டாகிய மதுக்களையுண்டு பூப்பொடிகளைத் தூவிக்கொண்டு நானாவித ஸ்வரங்களோடுகானஞ் செய்து அவ்வனங்கள் தோப்புகள் முதலிய வனமார்க்கங்களிலுள்ள அநந்தவித ரத்நஸ்வரூபங்களையுடைய வண்டினங்களின் ஓசைகளையும், வெகு விசித்ரங்களான மிருகபட்சிகளின் விநோத நாதங்களையும், அநந்தமான வனசரர்களையும், ஸ்ரீகோவர்த்தன முதலிய பர்வதங்களையும், மகாபுருஷர்களையும் கடாட்சித்துக்கொண்டு திரிந்தார்.

அப்போது சிலபுஷ்பக் கொத்துகளையும் இளந்தளிர்களையும் தமது சிரசிற் றரித்துக்கொண்டார். இன்னுஞ் சிலநாளையில் குவலயாபீடமென்னு மத்தகஜத்தின் தந்தங்களை இவ்விதமாகத்தான் பிடுங்குவேனென்று காட்டு

கின்றவரைப் போலத் தாழைமலர்களைப் பறித்தார். வெண்டாமரையினுடைய மலரும்பருவத்தையுள்ள மொக்கை இடது திருக்கையிற் றாங்கியிருந்த பாஞ்சசன்னியத்தை வலதுதிருக்கையிற் றாங்கியதுபோலத் தாங்கி, செந்தாமரையின் மலர்ந்த புஷ்பத்தைப் பறித்து வலது திருக்கையிலிருந்த சுதரிசனத்தை இடது திருக்கையிற்றாங்கியது போலத்தாங்கிச் சஞ்சரித்தார். மனோரம்யமுள்ள புஷ்பங்களைக் கோபிகாஸ்திரீகளின் கைகளில் கொடுப்பது போல, தமது அஸ்தங்களை அங்கங்கு மலர்ந்திருக்கின்ற செங்காந்தட் புஷ்பங்களின் மேல் வைத்தார். இனிமேல் கோபிகாஸ்திரீகளின் கையைப் பிடித்துக் கொண்டு தாம்விளையாடும் வண்ணம் இதுவென்று காட்டுகின்றவரைப்போல, செங்காந்தண்மலரைப் பிடித்துக்கொண்டு திரிந்தார்.

இவையல்லாமல் இன்னும் அநேகவிதவிசித்ர லீலாவிநோதங்களாய் விளையாடி வனமெங்கும் கோக்களைமேய்த்து வேணுகானஞ்செய்து சஞ்சரித்துக் கொண்டிருந்தார். அந்தச் சரத்காலங்களில் கோபகன்னிகைகளாகிய ஐந்து லக்ஷங் குடிப்பெண்களியாவரும் ஸ்ரீபகவானுடைய வேணுகான ஸ்வரங்களைக் கேட்டு, நாளுக்குநாள் ஸ்ரீகிருஷ்ண பகவானிடத்தில் மிகவும் மோகபரவசர்களாகி வீட்டுவேலைகளைப் பாராமல் கூட்டங் கூட்டமாகச் சஞ்சரித்துக் கொண்டு, ஸ்ரீபகவானுடைய லீலாகுணங்களை நினைத்து, சகிஜனங்களை முன்னிட்டுக் கொண்டு, ஸ்ரீகிருஷ்ணனிடத்தில் பற்றின சர்வேந்திரியங்களை யுடையவர்களாய் மனோலயங்களை யடைந்து விளையாடிக்கொண்டிருந்தார்கள். ஸ்ரீகோபால சக்ரவர்த்தியாகி எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீகிருஷ்ண பகவானானவர் தமது சிரோபாகத்தில் ரத்னபூஷணங்களுடன் மயில் தோகைகளினுடைய காந்திகள்விளங்க முன்னெற்றிச் சுட்டியின்னொளிவீசவும், ஜிலுப்பாவுக்கு அலங்கரித்திராநின்ற ஸ்வர்ண புஷ்பங்களும் பரிமளமிகுந்த ஜாதிபுஷ்பங்களும் விளங்கப் பிரகாசித்தார்.

இவையன்றிச் செவிகளிலணிந்த மகரகுண்டலங்களின் ஒளியால் கண்டபாகங்களில் பிரதிபலித்த சுந்தரங்களும், இரத்னகஸ்தூரி திலகாலங்கார ஊர்த்வ புண்டரங்களின் சிங்காரங்களும், ரத்நகுண்டலங் களளைந்த காதுகளை யளாவிய விசால நேத்ரங்களின் பார்வைகளும், மனோரம்யமாகிய பிரவாள அதரங்களும், அவைவிகஸிக்கத் தோற்றுகின்ற இளஞ்சந்திரிகைகளை யொத்த சிறுபற்களி னுண்டாகிய இளநகையிற் காணப்பட்ட சௌரவமும், சங்குபோன்ற கண்டத்திலும் விசாலமார்பிலும் பொருந்திய பூஷணங்களின் காந்திகளுடன் வைஜயந்தியென்னும் வனமாலைகளும் விளங்கவும், மஹாராஜ லக்ஷணத்துடனிருக்கிற அரையினில் அரைநாண் மாலையோடும் சதங்கைகளோடுங்கூடிய ஒட்டியாணத்தினை விறுக்கக்கட்டியிருக்கின்ற பீதாம்பரம் பிரகாசிக்கவும், பரம யோகீந்திரர்களுடைய மனதாகிற தாமரைக்காயினி விருப்பிடமாக உடைய பத்மமுதலிய ரேகைகளால் அலங்கிருதமாகிய ஸ்ரீசரணாரவிந்தங்களின் மலரவும் விளங்கின.

இப்படி விளங்கிய பகவானுடைய சர்வ புவனமோகனகரமாகியும், விசித்திர வர்ணப்பட்டுக் குச்சுகளால் அலங்கிருதமாயியும், மதுரஸ்வரங்களை வரு

ஷிக்கின்றதாகியும் விளங்குகின்ற புள்ளாங் குழலைத் தமது திவ்யாதரத்தில் வைத்து, ஜகன்மோஹனாதிசயங்களை யுண்டுபண்ணும் புருவங்களை நெறித்து, இரண்டு கன்னங்களையும் பூரித்து, ஸ்ரீபெரிய பிராட்டியார் எழுந்தருளி யிருக்கின்ற திருமார்பை நெறித்து, ஸௌரபோகங்களைக் கற்பிக்கின்ற சாதுர்யங்களினால் தாமரைபோன்ற முகம் பிரகாசிக்க, அந்தவேணுவின் ஸ்வரத்துவாரங்களின்மீது இடவலமாகத் தமது மிருதுவாகிய விரல்களின் வைப்பதலைக் கொண்டு சங்கீத சாஸ்திரப்படிக்கு ஷட்ஜ, மத்யம, தைவத, நிஷாத, பஞ்சம, ருஷப, காந்தாரமென்னும் ஸப்தஸ்வரங்களை யுண்டாக்கி, பல ராகபேதங்களோடும் சேதனாசேதனப் பிரபஞ்சங்களும் அத்திவ்ய ஸ்வராமிர்தங்களைத் தங்கள் செவிகளே வாயாகப் பானஞ்செய்து மஹாசந்தோஷங்களைக் கொண்டேயும்படி காந்தர்வ தேவதாகீத சுரங்களால் தமது குழலோசையினால் பாடியருளினார்.



ஸ்ரீ கண்ணன் வேணுகானம் செய்தது

இவ்விதமாகப் பாடுகின்ற ஸ்ரீபகவானுடைய மதுரமான தொனியைக் கேட்டமாத்திரத்தில் அந்தப் பிருந்தாவனங்களில் வாசஞ்செய்கின்ற தபோமூர்த்திகளும், வனவாசிகளாகிய வேடுவர்முதலிய ஜனங்களும், தினந்தோறும் ஸ்ரீபகவானைப் பிரியாமலவருடைய லீலாகுணங்களைத் தங்களுக்கு ஜீவனமாக அநுபவித்து ஆனந்தித்துக் கொண்டிருப்பார் அசேஷகோபாலர்களும், ஆகாயத்தில் விமானரூடர்களாய்ச் சஞ்சரிக்கின்ற தேவகணங்களும், அரம்பையர்முதலிய ஜனங்களியாவரும், ஸ்ரீபகவானுடைய மதுர ஓசைக்குச் சமீபமாகப் பூமியந்தரிக்ஷங்களிற் சூழ்ந்து, பசி தாஹங்களைவிட்டு, நித்யசூரிகளைப்போல அசைவற்று ஆழ்ந்து நின்றார்கள். சபலதமான மிருகபக்ஷிசமு

றங்களும் தமக்குள் உள்ள விரோதங்களை விட்டு ஆனந்தபரவசங் கொண்டிருந்தன.

வாரீர் தீரபுருஷனாகிய மஹாராஜனே! திவ்யாவதாரமூர்த்திகளாகிய ஸ்ரீ பலராமகிருஷ்ணர்களை அர்ச்சிப்பதற்கு ஸ்ரீசதுர்முகப்பகவானால் ஆஞ்ஞாபிக்கப்பட்ட திவ்யாப்ஸரசுக்களின் பூர்ணப் சத்தினால் கோகுலத்தில் வந்துற்பவித்திராநின்ற கோபகன்யாஸ்திரீ பணிகள் ஸ்ரீஹரியாகிய கண்ணனுடைய வேணுகீதங்களைக் கேட்டு, யாவரும்போரிடத்தில் இன்பமினமாகச் சோர்ந்து, பகவத்குண மோஹன மானஸர்களாய்ச் சரீராபிமானத்திற் றுரிய பெண்குணமாகிய நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னு நான்கு குணத்துள் முக்கியமாய்க் காப்பாற்றத் தகுந்த முதற்குணமாகிய நாணமென்பதை லேசமுங் கொள்ளாமல் விட்டு, ஸ்ரீகிருஷ்ண ஸ்வாமியைத் தியானபூர்வமாக ஆலிங்கனங்கள் செய்து, ஒருவர்க்கொருவர் சரீரபரவசர்களாய் ஸ்ரீகிருஷ்ணனுடைய சாதுர்யாதி லீலைகளைப் பரிச்சித்தமாவதற்காக அநுபவிக்கத் தொடங்கினார்கள்.

அஃதெப்படியென்றால்? ஒருத்தி வீராய என்தனப்புள்ள சகியே! இந்த ஸ்ரீமாதவனென்பவர் சகலாபரண பூஷிதராய் விளங்கத் தமது பவழம்போன்ற உதட்டில் வேணுவை வைத்துக் கானங்களைச் செய்கின்ற ஆச்சரியங்களைக் கண்டு, இந்த வனத்திலிருக்கின்ற ஸ்தாவரங்களும் லயித்துப்போனதே யன்றிச் சலிக்கவில்லையே யென்றாள்.

மற்றொருத்தி, வாராய என்தனப்புக் குரியவளே! ஸ்ரீபுண்டரீகாக்ஷரானவர் பிருந்தாவனத்தில் இடவலமாகச் சாவலோக மோஹனகரமாகிய புருவங்களாலபிநயஞ் செய்து தமது பத்மகரங்களின் விரல்களைக் கொண்டு சங்கீத சாஸ்திர மூர்த்தியைப்போல வேணுஸ்வர மூலமாய்ச் சங்கீதரஸங்களை வருஷிக்கின்றதால், இவ்வன விருக்ஷங்கள் தங்கள் தாபந்தீர்ந்து யிருக்கின்ற ஆச்சர்யாதிசயங்களைக் கண்டு களித்தாயோ வென்றாள்.

வேறொருத்தி, ஓ வனிதாரத்னமே! இந்த நந்தகோப தநயனுடைய வேணுநாதத்தைக் கேட்டமாத்திரத்தில் யானைகளும், சிங்கங்களும், மான்களும், புலிகளும், இன்னும் மற்றுமுள்ள மிருகங்களும் விரோதபாவங்களை விட்டு அதிக சிநேகங் கொண்டவைகளைப் போலத் தம்மைத்தாம் மறந்திருக்கின்ற வேடிக்கையைப் பாராயென்றாள்.

மற்றொருத்தி, வாராய அன்புடையவளே! இந்த யசோதா புத்திரனானவர் ஊதுகின்ற குழலோசையைக் கேட்டமாத்திரத்தில் குளிர்ந்த சிறுதென்றற் காற்றானது அக்கினியைப்போலென்னைத் தஹிக்கின்றது, நான் ஸ்தனங்களின்மேல் தரித்த கலவைச் சாந்து கரிந்து தீய்ந்தது, நான் சூடிய புஷ்பங்கள் கருகின, சந்திரகிரணம் அழற்பிழம்பாக விருக்கின்றது, கைவளைகள் சோர்கின்றன, இடையாடையு நழுவுகின்றது, கைகால்கள் துவளுகின்றன. இவ்வாச்சரியமென்னவென்று சொல்லவாயம்மா வென்றாள்.

பின்னொருத்தி, ஓ என்மனதிற்கிசைந்த மங்கையே! மரகதஸ்தம்பம் போன்ற கம்பீர புஜங்களையுடைய ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய புள்ளாங்குழலோசையைக் கேட்டமாத்திரத்தில் அவரெழுந்தருளியிருக்கும் இடத்திற்குச் சமீபத்திலிருக்கின்ற நதியானது கங்கைக்கொப்பாய்ப் பொங்கி, அவருடைய திருவடிமேற் படும்படி அலையைப்புரட்டுகின்ற வேடிக்கையைப் பாரா யென்றாள்.

பின்னொருத்தி, ஓ பிராணப்ரிய சகியே! காளிய நர்த்தன பத்மபுஜரான வர் சப்திக்கின்ற குழலோசையைக் கேட்டளவில் என் செவிகளுக்குக் குயிலோசை யானது நாராசம் காய்ச்சிச் செருகியது போலிருக்கின்றது. புஷ்பங்களைப் பார்த்தால் பயமுண்டாகின்றது. மனமிருந்திருந்து பறையறைகின்றது. தேகத்தில் பசலையுண்டாகின்றது. சந்திரகிரணம் சீதளமாறி உஷ்ணீகரிக்கின்றது, இவ்வதிசயமென்ன சொல்லென்றாள்.

மற்றொருத்தி, ஓ சகிரத்நமே! நளினதளாக்ஷராகிய ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய வேணுகான மதுரஸ்வரங்கள் என்திரண்டு செவித்துவாரங்களிலும் நுழைந்த மாத்திரத்தில் மனதுகளிப்பை யடைந்தது. சரீரமெங்கும் குளிர்ந்தது. ஸ்ரீகிருஷ்ணவிரக தாபஜ்வரம் மேலிட்டது. எனக்குச் சகிக்கக்கூடவில்லையே, எனது சரீரபந்துக்களாகிய சகோதரர்கள் முதலிய ஜனங்களினுக்கின்னும் அச்சந் தோற்றவில்லையே, இதற்கென்ன செய்வேன்? நீ என்ன உபாயஞ் சொல்லுகின்றா யென்றாள்.

வேறொருஸ்திரீ, ஓ சபலாக்ஷி! உன்னைப் போலவே நானும் வெகுகாலமாய் நினைந்து மனமுருகி அச்சத்தை விட்டு, ஸ்ரீபகவதா தீனமாகத் துணிந்திருக்கின்றேன். என்னுடன் சொல்லவேண்டுவதில்லை. உனக்கு ஸ்ரீகிருஷ்ண பகவானிடத்தில் அன்பிருப்பது உண்மையானால், உன்மீதி லாணைப்படிக்கு மற்ற உனது சகிஜனங்கள் மெச்சும்படி என்னுடன் கூடவா வருவையாகில் ஸ்ரீநளின தளாக்ஷரிடத்தில் உன்னை முன்னம் சேர்க்கச் செய்வித்து, பின்பு நானும் அடைகின்றே னென்றாள்.

இந்தப் பிரகாரம் அநேகவிதங்களாக ஒருவருக்கொருவ ருபதேசித்து, ஸ்ரீகிருஷ்ண பகவானிடத்தில் ஆனந்த பரவசர்களாகி, சம்பிரம வார்த்தைகளைப் பேசிக்கொண்டு, கோபிகாஜனங்கள் யாவரும் பிருந்தாவனத்தில் ஸ்ரீகோவிந்தனைத் தரிசிக்கச் சமீபவனங்களினின்று, அவருடைய விசித்ரலீலை முதலிய குணங்களையும் ஜநந மோகனாகார திவ்ய சௌந்தரியங்களையுங் கண்டுகளித்து நேத்ரோத்ஸவமாக ஸேவித்து, தங்கள் மனதில் தியானபூர்வகமாக நிமிஷ நிமிஷத்திற்குக் காட்சியங்கனஞ் செய்து, மோகபரவசர்களாகி, தங்களுக்குள் ளொருவருக் கொருவரைப் பார்த்துத் துதிக்கத் தொடங்கினார்கள்.

வாருங்கள் மிகவும் அன்புடையவர்களே! ஓ ஸ்ரீபகவானிடத்தில் வைக்கப்பட்ட மனதுடையவர்களாகிய திவ்ய சுந்தரவதிகளே! இப்பொழுது

உங்கள் கண்கள் கலித்திரப்பார்த்திகளா? நமக்கெதிரி லிருக்கின்ற ஸ்ரீபுரு
ஷோத்தமர் இந்தப் பிருந்தாவனத்தில் அளவிறந்த கோவினங்கள் சூழ்ந்து
நிற்க, கோபால ஜனங்கள் மகாசந்தோஷத்துடன் பரமானந்த பரிதர்களாயத்
தங்கள் சர்வேந்திரியங்களையுஞ் சமர்ப்பித்துத் துதிக்க, மகா மிருதுவாயுங்
குளிர்ச்சியாயு மிருக்கின்ற மாந்தளிர்களையும், இளந்தளிர்களையும், தாமரை
இதழ்களையும், நாநாவித பரிமளவிசித்திர புஷ்பங்களையுஞ் சேர்த்து மாலை
யாக வணிந்து, திவ்யவஸ்திராபரணாலங்காரராய வேணுகானங்களைச்செய்து,
பாதார விந்தங்களில் விளங்குகின்ற நூபுரசதங்கைகள் கலீர் கலீரென்று
லயப்பிரகாரம் சப்திக்கச் செய்கின்ற விநோதங்களை யென்னென்று ஸ்துதிக்கப்
போகின்றோம்? நாமென்னசெய்யலா மென்றார்கள்.

வாருங்கோள் சகிஜன சமூஹங்களே! இந்தத் திவ்யபுருஷ சிரேஷ்ட
ருடைய ஸ்துதியை நமது வாக்கா லளவிடலாகுமோ? நாமெல்லாரு மொன்
றாகச் சேர்ந்து இப்படிப்பட்ட ஸேவ்யபாதத்தங்களைக் கொள்ளப் பூர்வத்தில்
ஸ்ரீபுருஷோத்தமரைக் குறித்துச் செய்த தபோமௌனவிரத மென்னோ வறி
கிலோம். அவற்றின் பலவிருத்திகளை பிரசன்னங்களாய்த் தோற்றுகின்ற இந்
தத் திவ்யமூர்த்தியின் சேவை நமது நேத்திரங்களுக்கு விசேஷ சம்பத்கரங்
களாக நேரிட்டன வென்று சொல்லித் துதிசெய்தார்கள் இவ்விதங்களாகச்
சிலதருணங்களில் துதித்து ஸ்ரீபகவானைச் சேவித்த மாத்திரத்தில் இதரவிஷ
யங்களை மறந்து, ஸ்ரீகோவிந்த பிரானையே யுத்தேசித்து, ஸ்துதிபூர்வகமாகப்
பின்னும் கானங்களைச் செய்யத் தொடங்கினார்கள்

வாராய் வனிதாரத்னமே! ஸ்ரீகோபால கிருஷ்ணஸ்வாமியின் காரணமில்
லாதகடாக்ஷத்திற் குரியதாகி, ஸ்ரீபகவதநுபவங்களை யநுபவிக்க இந்தப்பிருந்
தாவனத்தில் கேவலம் அசேதன ஸ்வரூபத்தை அடைந்து, ஸ்வரங்களைத்
தராநின்ற புள்ளாங்குழ லாகாரத்தை யடைந்து, ஸ்ரீபகவானுடைய கரங்களை
யாஸ்ரயித்து, சர்வேந்திரியத்தையும் ஜயித்த முமூக்ஷவைப்போல ஸ்ரீபக
வத் திருவதரங்களைச் சேர்ந்து, திவ்யகானங்களி லுண்டானவேதாந்தார்த்த
ரஸங்கள் தங்கிய திருப்பவளாதரச் செல்வங்களைப் பானஞ்செய்துந் திருப்தி
யில்லாமல் விந்தை விந்தையாக ஸப்தஸ்வரத் துவாரங்களாகிய நேத்திரங்கள்
மூடி மூடித்திறந்து, இமைகொட்டுகின்ற கண்களைப்போல அவருடைய ஸ்ரீ
முகாரவிந்தத்துடன் கூடியிருந் தனுபவிப்பதற்கு எவ்வித தவங்களைச் செய்த
தோ? என்று ஸ்ரீபகவ துபயோகியான இக்குழலாகார மூங்கிலைக்குறித்து
எனது நெஞ்ச கதிசயிக்கின்றதே யென்றாள் ஒருஸ்திரீயானவள்.

வாராய் புண்யாங்கனையே! மஹாபுண்ய நதியாகிய யமுனையானது தன்
பிரவாஹ ஜலத்துளிகளால் விருத்தியடைந்த மூங்கிற் புதரிலுண்டாகிய இப்
புள்ளாங்குழலானது ஸ்ரீபகவானை யாசிரயித்துத் தன்னையும் சேதனா சேத
னாத்மகமான சமஸ்த ஜகங்களையும் இனிக்கச் செய்கின்ற சத்கீர்த்தியைக்
கொண்டு, தனது தபோமகிமையினால் சத்புத்திரனைப்பெற்ற ஸ்திரீயைப்போல

மன்னத்தை யடைந்து, தனது ஜலத்தி லிருக்கின்ற தாமரைபுஷ்பங்களில் வாசஞ்செய்து மதுக்களையுண்டு ஆணும் பேடுமாய்க்கூடி மதுரஸ்வரங்களைச் சபிக்கின்ற ராஜஹம்சங்களினுடைய மதுரமான நாதங்களே பாட்டாகிற அமுதங்களாகவும், அந்தப்பதமங்களே மயிர்க்குச்செறிதலாகவும், தனது விசித்திரமான அலைகளே அபிநயங்காட்டுகின்ற கரங்களாகவும் விளங்க; ஸ்ரீ பகவானாகிய நடனமூர்த்தி செய்கின்ற வேணுகான மதுரஸ்வரங்களுக்குச் சகாயியான பாடகியைப்போல விளங்குகின்றது இதைப் பாரத்தானந்திப்பா யென்றாள் ஒருகோப பதிவிரதாசிகாமணி

வாராய் என்றனப்புகுரிய சகிமணியே! ஸ்ரீமந்நாராயணனுடைய பக்த ஜனங்களானவர்கள் ஸ்ரீஹரியின் பிரசன்னமான ஸேவை கிடைக்கப்பெற்ற மாத்திரத்தில் தங்கள் மனதில் பிரமஹானந்தத்தைக் கொண்டு சரீரம்புளகித்து நேத்திரங்களின் வழியே ஆனந்த பாஷ்பங்களை வருஷிக்கின்றதுபோல, இந்த பிருந்தாரண்ய நதீதீரங்களினால் விருத்தியடைகின்ற சமஸ்தமான விருக்ஷங்களும் ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய வேணுகான சுவரானந்தத்தினால் தழைத்துப் புஷ்பித்து, மதுக்களையும் மகரந்தங்களையும் வருஷிக்கின்ற சந்தோஷங்களைப் பாராயென்றாள் ஒருகோபிகா நங்கை

வாராய் ஸ்ரீமாதவனிடத்தி லன்புள்ளவளே! இனி நானென்ன செய்வேன் எனது நெஞ்சமென்னை வஞ்சித்ததன்றோ? எனது பூர்வஜன்மத்தில் நான் ஸ்ரீ ஹரியைக்குறித்து விரதோபவாஸங்களைச்செய்து, அதனால் மெய்ப்பித்து, இந்தஜன்மத்தை யெனடைந்தேனோ? அக்காலத்தில் இவ்விஷயத்தை ஒருவருஞ் சொல்லாமற் போனார்களே, அப்போதே யெனக்கிந்த ஆச்சரியாநுபவந் தெரிந்திருக்குமானால், நான் இந்த காளிந்தி நதீதீரத்தில் இம்மூங்கிலின் வம்சத்தில் இவ்வேணு ஸ்வரூபமாகப்பிறந்து, ஸ்ரீமாதவப்பிரானுடைய திவ்ய திருப்பவளாதராமிர்த பானத்தைச்செய்து, எனதுஜன்மம் ஸபலமாகும்படி திருப்தியடைந்து, ஸ்ரீபகவதநுபவங்களைச் செய்வேனே, என்று பெருமூச்செறிந்தாள் ஒருகோப கன்னிகாசேகரம்

வாராய் ஸ்ரீபகவத்பாதமாகிற தாமரையினுடைய தேனையுண்டு மதித்த வண்டுருவமான விசித்திராங்கனையே! இந்தக்காளிந்தீ நதீதீரத்தில் நந்தகோபருடைய அருந்தவப் புத்திரனாகிய ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய பவழம்போன்ற அதராமிர்தபானஞ் செய்வதற்கு நான் அநுஷ்டிக்கத்தக்குந்த விரத நோன்புகளை எனக்குப் போதிக்க மாட்டுவையோ? என்றாள் ஒருகோபகன்னிகா சிந்தாமணி

வாராய் சுந்தரவதியான பெண்ணே! இந்த பிருந்தாவனமே ஆகாயமாகவும், ஸ்ரீஜனார்த்தனருடைய திருமேனியே நீருண்டமேகமாகவும், இவருடைய வேணுகான ஸ்வரங்களே மேககர்ஜனை யாகவும் பாவித்துக்கொண்டு; இவ்வனத்திலுள்ள மயிலினங்கள் சிறகுவிரித்து ஆனந்த நர்த்தனஞ் செய்தலைப்போல ஸ்ரீபகவானுடைய சிரோபாகத்தி லணிந்திருக்கின்ற மயிற்பிஞ்சங்களசைகின்றன. இந்த வதிசயங்களைப் பாராயென்றாள் ஒருகோபஸ்திரீரத்னம்.

வாராய் ஸ்ரீகிருஷ்ண கிரகாலங்கார சுந்தராந்தநமே! ஸ்வர்க்கலோகத்தில் தேவேந்திரனுடன் கூடிவாழ்ந்து சுகிக்கும்படியான சசிதேவியினுடைய கேளீகிரகத்தைப் பார்க்கிலும் இந்தப் பிருந்தாவனமானது ஸ்ரீகிருஷ்ண பாதபத்ம முதலிய விசித்ரரேகைகளால் அலங்கரிக்கப்பட்டு, ஸ்ரீமகா லக்ஷ்மியானவள் அன்புகூர்ந்த தகுந்த புண்யபூமியாயும் நமக்கு ஜன்மஸாபல்யமாயும் விளங்குகின்றதைப் பார்த்தையோ? என்றுசொல்லி அதிசயித்தாள் ஒருகோப கன்னிகாம்சம்.

வாராய் புண்யாங்கனையே! ஜனார்த்தனனுடைய ஸ்வரூபாதிசயங்களை நேத்ரோத்ஸவங்களாகத் தங்கள் கண்கள் களித்திர ஸேவித்துக் களித்து ஆனந்தித்து, இவருடைய புள்ளாங்குழலின் மாதுர்ய ஸ்வராம்ருதத்தைச் செவிவாயாகப் பானஞ்செய்து, மதோன்மத்தர்களாகி, மனோவியாபாரங்களை மறந்து, ஆகாயத்தில் தங்கள் தங்கள் விமானங்களி லிருந்தபடி மனோலய மடைந்து, திவ்யவஸ்திரங்கள் தளர, அளகபாரத்தினின்று புஷ்பங்கள் நழுவத் தங்கள் சர்வேந்திரியங்களையும் ஸ்ரீகிருஷ்ண பகவத் பிரீதிசெய்த பரமயோகீந்திரர்களைப் போலவிளங்குகின்ற தேவதாஸ்திரீ கணங்களைப் பாராயென்றாள் ஒரு கோப பத்மதள நேத்ரி.

வாராய் சுகுணவதி! இந்தப் பிருந்தாரண்யத்தில் விருத்தியடைந்துகொண்டிருக்கிற சமஸ்தமிருகங்களும் ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய வேணுகானத்தைச் செவியாரக்கேட்டு, சரீரங்கள் புளகித்து, தங்கள் ஜாதிக்குரிய ஆகாரங் கொள்ளுதலையும் நடக்கைகளையும் ஒழிந்து, வால்களை யெடுத்துக்கொண்டு, காதுகளை நீட்டி மருண்டு, சௌம்யபார்வைகளை யடைந்து, ஸ்ரீபுருஷோத்தமனைத் தரிசித்த பரமயோகீந்திரர்களைப் போல விளங்குகின்றதைப் பாராயென்றாள் ஒருகோபாஞ்சன லோசினி.

வாராய் புண்யவதியே! இந்தக் கன்றுகளானவை பசிதாகத்துடன் தங்கள் தங்கள் தாய்களாகிய பசுக் கூட்டங்களை அடைந்து பாலமடிகளைப் பிடித்து உண்கிற சமயத்தில் தங்கள் பரிபாலக விபுவாகிய ஸ்ரீமாதவப் பெருமானுடைய புள்ளாங்குழலின் சுவரமாகிற அமுததாரைகள் செவிவழியாக வந்து நுழைந்து தங்கள் பசிதாஹங்களைத் தணித்துத் திருப்தியை யடையும்படிக்குச் செய்தபடியினாலே, பாலைக்கிரஹிக்க முட்டியுண்ணுமல் சித்திரங்களி லெழுதிய பிரதிமைகளைப்போல ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய ஸ்வரூபத்தில் தங்கள் பார்வைகளைச் சமர்ப்பித்து, ஜன்மசாபல்யமான மேன்மையை யடைந்து, அந்தந்த ஸ்தானங்களில் அப்படி யப்படியே மனோலயமாக ஆனந்தபாஷ்பங்களை வருஷித்துக் கொண்டு நிற்கின்றன அவைகளைப் பாருங்களென்றாள் ஒருகோபவனிதா சித்திரம்.

வாராய் திவ்யசுந்தர ஸ்வரூபபத்மாக்ஷீ! ஸ்ரீகோபால மூர்த்தியினுடைய பரிபாலனத்தினால் விருத்தி யடைந்திருக்கின்ற பசுவின் சமூஹங்கள் ஸ்ரீகிருஷ்ணபகவான் முரளிகான ரஸாம்ருதங்களைக் காதுகளின் சந்தினால் பானஞ்

செய்து திருப்தியடைந்து, வால்களை நெறித்து, முகங்களை உயரத்தூக்கி, சர்வரோம புளகாங்கிதத்துடன் தங்கள் ஹிருதயாரவிந்தங்களில் ஸ்ரீகிருஷ்ண பகவத் ஸ்வரூபத்தை நிறுத்தி, மேய்ச்சலை விட்டு, ஆனந்தபாஷ்பங்களைச் சொரிந்து கொண்டு, மெய்மறந்து நேத்ரோத்ஸவமாகத் தரிசித்துக் கொண்டிருக்கின்றன அவைகளை நோக்குதியென்றுள ஒருகோப தேஜஸ்வியானவள்.

வாராய் ஸ்ரீகிருஷ்ண பகவானை மோகிக்கச் செய்கின்ற மோகனாங்கீ! இந்த அரணியங்களிலுள்ள மகாவிருக்ஷங்களின் கிளைநுனிகளில் வாசஞ்செய்துகொண்டிருக்கின்ற நாநாவித ஜாதிபேத சுகுமாரபக்ஷிகளின் சமூகங்களானவை நமது ஹிருதயேஸ்வரனுடைய பிள்ளாங்குழலின் சப்தாமிர்தங்களைக் காதுகளின் சந்துகளினால் கிரகித்து வியவகாரங்களொழிந்து மகாமௌனீந்திரர்களைப்போல பகவத் ஸ்வரூபத்தை ஹிருதயகமலத்தினிறுத்தி, யாதொன்றினுஞ் சலிக்காமல், தங்கள் நேத்ரங்களை மூடிமூடிச் சிறுபார்வையாகப் பார்த்தநுபவித்து மனோலயமடைந்து விளங்குகின்றன. அவைகளைப் பாராயென்றுள ஒருகோப சௌகுமாரி.

வாராய் சுகுணவதியான வனிதாரத்நமே! இந்த ஆகாயவீதிகளில் சஞ்சரிக்கின்ற மேகசமூகங்களியாவும் ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய வேணுகான கம்பீர மதுரஸ்வரங்களைக் கேட்டு, திக்குவிதிக்குகளெங்கும் பரிமளிக்கும்படியான புஷ்பமாரிகளை வருஷித்து, தங்கள் சரீரங்களாகிய ஸ்வரூபங்களைக் கொண்டு ஸ்ரீபகவானுக்குச் சூரியகிரணங்களால் நேரிடும் சிரமங்களைத் தோற்றவொட்டாமல் மகாராஜோபசாரமாக வெண்பட்டுக் குடைகளைப்பிடித்து உபசரிக்கின்றவைகளைப்போல ஆகாயமார்க்கத்திற் சூழ்ந்து நிழலைக் கொடுக்கின்றன. இந்த ஆச்சரியங்களைப் பார்த்துக் களிக்கப்பாயாக வென்றுள ஒருகோப குணவதி.

வாராய் கோபசுகுமாரவதியான புண்யாங்கனையே! இந்தப் பிருந்தாவனத்தில் விருத்தியடைந்து வாசஞ் செய்துக் கொண்டிருக்கின்ற வேடஸ்திரீகளானார்களின்று பின்னிய வஸ்திரங்களை யுடுத்தி, தளிர்களையும் சிறகுகளையும் அவயவங்கள் மறையச் சாத்திக்கொண்டு, இவ்வன மார்க்கங்களில் வேணுகானங்களைச் செய்து சஞ்சரிக்கின்ற இந்த ஸ்ரீகிருஷ்ண மூர்த்தியினுடைய ஸ்ரீபாத கமலங்களில் அலங்கிருதார்த்தமாயத் தரித்திருக்கப் பட்டிருந்து வனத்திலங்கங்குள்ள புல்லு கொடி புதர்களில் ஒட்டிக் கொண்டதாகிய சந்தனபுஷ்ப குங்குமாங்கித வாசனா திரவியங்கள் கலந்த கலவைச்சேற்றை யெடுத்துத் தங்கள் ஸ்தனபாரங்களிலும் நெற்றிகளிலும் அணிந்து, இந்தவாரணியங்களிலிருக்கின்ற மகாமதுரமான கந்தமூலபலாதிகளைச் சம்பாதித்து, நாநாவிததிவ்ய பரிமள வனபுஷ்பங்களைச் சரஞ்சரமாகச் சேர்த்துத் தங்கள் கரங்களிலேந்திக்கொண்டு, இந்தத் திவ்யபுருஷ ஸ்ரேஷ்டரைப் பிரியாமல் முரளீகான ரஸாமிர்தங்களைச் செவிகுளிரப் பானஞ்செய்து, திருப்தி அடைந்த மனமுடையவர்களாய் மெய்மறந்து, குசபாரங்களினால் இடைதுவளும்படி நடந்துவந்து

இந்தத் திவ்ய மூர்த்திக்கு ஒவ்வொருத்தியாக அந்தக் கனிகளையும் புஷ்பச் சரங்களையுஞ் சமர்ப்பித்துப் பிரமஹானந்த பரிதர்களாய்ச் சந்தோஷிக்கின்றார்கள் இதைப் பார்த்தாயோவென்றுள ஒருகோபகுல சுகவசனி

வாராய் சர்வாலங்கார சோபிதையான சௌந்தர்யவதியே! ஸ்ரீபலராம சகிதராகிய ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியினுடைய முரளீகான திவ்யாமிர்த வருஷ தாரைகளினாலே, இந்தப்பிருந்தா வனங்களிலுள்ள கோவர்த்தனாதி மகா பர்வதங்களிலகடினமாகிய பாறைகளுந் தண்ணீர்போலுருகிக் கரைந்தன. வன விருக்ஷங்களியாவும் தளிர்த்துத் தழைந்து புஷ்பித்தன சமஸ்தமான வன ஜன சமூகங்களும் மிகவும் சந்தோஷாதிசயங்களை யடைந்தார்கள் இந்தத் திவ்யபுருஷனுடைய ஸ்ரீசரணாரவிந்த ஸ்பரிச சத்ஸஹவாசங்களினாலே இந்த அரண்ய பூமிபாகங்கள் ஸ்ரீஹரிதாசர்களாகிய மகா பாகவதர்களைப்போல மகா பரிசுத்தங்களை யடைந்து, ஸ்ரீபகவானை அடுத்திருக்கின்ற கோவினங்களுக்கு இளம் புல்லுகளைக் கொடுத்துச் சந்தோஷிப்பித்தன மகா நதிகளி யாவும் மிகவுந்தெளிந்து பிரவாகிக்கின்ற ஜலங்களினாலே தாகங்கள் தீர்ந்து திருப்தியடையச் செய்தன

அன்றியும், வனவிருக்ஷங்க ளியாவும் புளகித பலபுஷ்பவர்க்கங்களைக் கொண்டு தங்கள் சாகைகளாகிற உத்தம கரங்களால் ஸ்ரீகிருஷ்ணபகவத் பிரீத்யர்த்தமான காணிக்கைகளைச் சமர்ப்பித்தன இவ்வனங்களும், வனமார்க்கங்களும், பர்வதங்களும், குகைகளும், கிரி சிகர கோபுரவீதிகளும், சமஸ்தமான விருக்ஷ லதா குலமாதிகளும், இவ்வனபூமிகளில் வாசஞ்செய்கின்ற சேதனா சேதனாத்மகமான மிருகபக்ஷி சமூகங்களும் புளகிதத்தனவாகி, ஜன்ம பாவனங்களை யடைந்து, ரஜஸ் தமோகுணங்கலந்த ஜாதிவைரங்களற்று, பரிசுத்த மனமுடைய முமுக்ஷுக்களைப்போல பிரமஹானந்த பரவசங்கொண்டு விளங்குகின்றன. இந்த அதிசயங்களைப் பாராயென்றுள ஒரு கோபகன்னிகா சூடாமணி

வாரீர் பரத குலோத்தமனாகிய பரிக்ஷின் மஹாராஜனே! இவ்விதங்களாக இந்த மனோரம்மிய வதிகளாகிய கோபகன்யா மணிகளானவர்கள் பிருந்தாவன மார்க்கங்களில் சஞ்சரித்துக்கொண்டிருக்கின்ற ஸ்ரீபலராம சஹிதராகிய ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியினுடைய அதிமானுஷ சேஷ்டித லீலாகுணாதிசயங்களை யொருவருக்கொருவர் பிரமஹானந்த பரவசர்களாய் வர்ணித்துக் கொண்டு, சர்வ பிரபஞ்சங்களையும் ஸ்ரீகிருஷ்ணமயமாக நினைத்து, டோலாயமான மனமுடையவர்களாய் மனோலயங்களை யடைந்தார்கள்.

---

# இருபத்திரண்டாவது அத்தியாயம்.

கட்டளைக் கலிப்பா.

பஞ்சலட்சங்குடிப் பெண்களாயினோர்
பக்தவற்சலன் தங்கள் மணாளனாய்
மிஞ்சிடும்படிச் செய்ய வேண்டுமென
மேன்மையாங்காத்தி யாயனியைக்குறித்
தெஞ்ச லில்லாவிரதம் மனுஷ்டிக்க
என்னிரிபக்தாக்குச் சாட்சியாம்படி
அஞ்சனைவண்ணனும் மவரிஷ்டம்போல்
அளித்துக்காத்தி ரட்சித்ததைக்குவாம்

ஸ்ரீசர்வ ஸமர்த்தபரராகிய ஸ்ரீகிருஷ்ண பகவானானவர் தம்மை மணாளனாக வரிக்கும் பொருட்டு நந்தவிரஜத்திலுள்ள பஞ்சலக்ஷங் குடிப் பெண்களாகிய கோபகன்னியர் ரத்னங்கள் மரியாதா ஸாதனந்தரமாய ஸ்ரீகாத்யாயனியைக் குறித்து விரதமனுஷ்டித்ததற்குப் பிரஸன்னராகி, அந்தக் கன்யாமணிகளுடைய சித்தபரிபாகங்களை ஸ்ரீ ஹரிபக்தர்களுக்குச்சாட்சியாகும்படி வஸ்திராபஹாரஞ்செய்து, தமது கிருபையால் மங்கலக்கூறையை யருளியதுபோல் வஸ்திரங்களும் மனோபீஷ்ட வரங்களும் கொடுத்ததையும், அவ்வனத்தில் பிராம்ஹணசமூகங்களால் செய்யப்படுகின்ற யாகசாலைக்குக் கோபால குமாரர்களை யனுப்பிவித்ததையுஞ் சொல்லுகின்றன

வாரீர் உத்தமக்கியான சீலமகாராஜனே! இவ்விதங்களாக வருஷகால சரத்காலங்களில் ஸ்ரீபகவானானவர் லீலாவினோதங்களாய வேணுகானங்களைச் செய்துக் கொண்டிருக்கின்ற சமயத்தில் சூரியபகவான் தனுராசியிற் பிரவேசித்தான் ஹேமந்தருதுவாகிய பனிக்காலத்தில் வாடைக்காற்று குளிர்ந்து வீசியது ஆகாயவீதிகளில் மேகங்கள் சஞ்சரித்துக் கொண்டிருந்தன. பகல் அஹஸ்சுக்குறைந்தது சூரியபகவானுடைய கிரணங்களுங் குளிர்ந்து காட்டியது இராக்காலங்களில் அக்கு அதிகரித்தது சந்திரகிரணங்கள் அதிசீதளமாகத் தோன்றின இவ்வுலகத்திலிருக்கின்ற அக்னிகோத்திரங்கள் மிகவுங் குளிர்ச்சியுள்ள இச்சீதள காலத்திற்குப் பயந்து, ஸ்ரீசம்புவாகிய ஸ்ரீருத்ரபகவானுடைய பாலநேத்திரத்தி லொன்றும், இப்பூமியைச் சூழ்ந்துக் கொண்டிருக்கின்ற மகாசமுத்திரத்தி லொன்றும், இவ்வுலகத்தில் விருத்தியடைந்திருக்கின்ற சகலமனித மாளிகைகளி லொன்றும் விளங்கினவே யல்லது சர்வவியாபகமாய்த் தமது ஜ்வாலாமாலைகளைப் பிரகாசிப்பிக்கச் சக்தியற்றதுபோலத் தோன்றின.

இப்படிப்பட்ட ஹேமந்தருது காலத்தில் கோகுலத்திலுள்ள ஆயர்கன்னியாவரும், தங்கள் வம்சங்களும், லோகங்களும், க்ஷேமத்தை யடையும்பொருட்டு

தங்களுடைய குலதாமப்படி அவரவர்கள் வீட்டிலிருக்கின்ற கன்னியாஸ்திரீகளை நியமித்து, அவர்களைக்கொண்டு தங்கள் குலதெய்வமாக விளங்குகின்ற கௌரீதேவியைக் குறித்து விரதங்களை யநுஷ்டிப்பிக்கின்றது வழக்கமான படியால், அவ்வருஷத்து அந்த ஹேமந்தருதுவில் மாதங்களுக்குள் மஹோத்தம மாதமாகிய தநுர்மாதத்தில் முதற்றேதிமுதல் முப்பதுதேதி வரைக்கும் விரத மநுஷ்டிக்கும் படியாய் ஸ்ரீநந்தகோபர் உபநந்தர்முதலிய சமஸ்தமான ஆயர்களும் இந்தஸ்திரீ ஜனங்களுக்கு நியமித்தார்கள் அப்போது அந்தக் கோபகன்னியர் ஸ்திரீகள் யாவரும் ஸ்ரீபகவானிடத்தில் பக்திமன முடையவர்களாகி, ஸ்ரீகிருஷ்ணபகவானைத் தங்களுக்கு மணாளனாக வரிக்கவேண்டுமென்று வெகுகாலமாய் மனதில் தியானித்துக் கொண்டிருக்கின்ற வர்களானபடியால் நல்லசமயம் வாய்த்த தல்லவோ வென்று சந்தோஷித்தார்களாகி, ஸ்ரீகிருஷ்ண பகவத்குண கீர்த்தனங்களைச் செய்துகொண்டு, காளிந்திநதீ தீரத்திற்சேர்ந்து தீர்த்தமாடி, சுசிர்பூதர்களாய் அந்த நதிக்கரையில் திவ்யமான ஈரமணமணலைக்கூட்டி, ஸ்ரீபகவதிதேவி ஸ்வரூபத்தை நிர்மித்து ஆராதிப்பவரானார்கள்

அஃதெப்படி யென்றால், நாநாவித திவ்யாலங்காரங்களையும், மஞ்சட்பொடிமுதலிய விசித்ர குங்குமங்களையும், மிகவும் பரிமளத்தைத் தராநின்ற புஷ்ப கந்தங்களையும் தூபதீபங்களையும், நாநாவித மாதுர்ய பக்ஷ்ய போஜ்யாதி பலகார வர்க்கங்களையும் கந்தமூல கனிமுதலிய உணவுகளையும், ஷோடசோபசாரங்களினால் சமர்ப்பித்து, மிகுந்த பக்தியுடன் கைகூப்பிக் கொண்டு எதிரில் நின்று, ஒவ்வொருவரும் தனித்தனியே ஓ பகவதீ! ஓ காத்யாயனீதேவீ! ஓ மாமாயீ! ஓ மகாயோகினீ! ஓ ஆதீஸ்வரீ! ஓ கௌரீ! ஓ பவானீ! ஓ மகாதேவதேவீ! ஸ்ரீ புருஷோத்தமரான வரை எங்களுக்கு மணவாளராக லபித்தமாத்திரத்தில், பால், தயிர், வெண்ணெய், மஞ்சட்பொடி, சுகந்த சூர்ணங்கள், மஞ்சள்நீர், இவைமுதலிய மங்கள திரவியங்களால் வசந்தங்கொட்டி, நிகிலலோக சுபகரமாகிய நாநாவித மங்கலவாத்தியங்களுடன் ஷோடசோபசாரங்களைச் செய்து சேவிக்கின்றோம் என்று பிரார்த்தனையால் சங்கேதஞ் செய்துகொண்டு உபவாசராகவானார்கள்.

இந்தத் தநுர்மாத முப்பதுநாளும் இப்படி கிரமக்கிரமமாய் பஞ்சஷுஷக்காலத்திற்கு முன்வந்து, அவரவர்கள் முற்றத்தில் அவர்கள் நாமதேயங்களைச் சொல்லி யெழுப்பி யழைத்துக் கொண்டவர்களாகி, யாவரும் தங்கள் குசபாரங்க ளசைந்தாடவும், இடைகள் துவளவும் மத்தகஜங்களைப்போலும் ராஜஹம்சங்களைப் போலும் ஒய்யாரநடை நடந்து, ஸ்ரீபதமதளர்சூழ்ந்து விளங்குகின்ற ஸ்ரீகிருஷ்ண பகவந்நாமாங்கிதங்களான சங்கீர்த்தனங்களைப் பாடிக்கொண்டு, சந்தோஷ மனமுடையவர்களாகி, ஒருவருக்கொருவர் கைகளைக் கோத்துக்கொண்டு, யமுனாநதீ தீரத்திற்குவந்து, மிகவும் பக்தி பூர்வமாக ஸ்ரீபத்திரகாளியைப் பூஜித்து, மீட்டும் தங்கள் மாளிகையிற் சேர்ந்து ஹவிசுகளைப் புசித்துக்கொண்டிருந்தார்கள் இவ்விதங்களாக முப்பது நாளும் விரதயாத்திரையாகச் செல்லும்போது கடைசிநாள் முன்போலவே ஜலஜாக்ஷிக

ளாகிய கோபகன்யா ஸ்திரீகள் யாவரும் ஸ்ரீகிருஷ்ண பகவத்குண கீர்த்தனங்களைச் செய்துகொண்டு, புன்னகையுடன் கூடினவர்களாய் நதீதீர சமீபத்திற்கு வந்து, பரிசுத்தமான ஏகாந்தப்பிரதேசத்தில் சேர்ந்தார்கள்.

இவ்வாறுசேர்ந்த யாவரும் தங்கள் விலையுயர்ந்த விசித்ர வஸ்திரங்களைக் களைந்து அடையாளமாகவைத்து, நிர்ப்பயர்களாய் அம்மகாநதியி லிறங்கி ஸ்ரீ ஹரிரோ ஹரி! என்ற ஸ்ரீபகவன்நாமங்களைத் தியானித்துக்கொண்டு ஸ்நானங்களைச் செய்து, அந்த ஜலமத்தியில் சரஸானந்தத்துடன் ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய லீலாகுண வைபவங்களைப் பாடி, அந்த ஜலத்தை வாரிவாரி யொருவருக்கொருவர் ஜலவசந்தங்களாடி ஆனந்தங்களை யடைந்தவர்களாகி, இந்த ஜகத்திலுள்ளவர்கள் அடைதற் கரிதாகிய பகவத்குணாதிசயங்களை யநுபவித்துக்கொண் டிருந்தார்கள். அந்தச் சமயத்தில் சர்வலோகராட்டியராய் விளங்குகின்ற ஸ்ரீகிருஷ்ணபகவானன்னவர் கோபகன்யா ஸ்திரீகள் தீர்த்தமாடுகின்ற வைபவங்களை அறிந்து, தாம் வெகுதூரத்தி லிருந்து ஏதோவொரு காரியார்த்தமாய் வருகின்றவரைப்போல் தன்னுடன் கூட வந்தவர்களைக் கண் ஜாடைகளைக் காட்டி ஒரு பிரதேசத்தில் சந்தடிசெய்யாம லிருக்கச்செய்து, தாம் ஒருத்தராகப் புறப்பட்டு, சந்தடிசெய்யாமல் மகாமௌனத்துடன் அங்கங்கு மொளித்து, மெதுவாய் உபாயமாக மறைந்துவந்து, தாமே களைந்து வைத்தவரைப்போலச் சாவந்திரர்களுடைய வஸ்திரங்களையும் கிரகித்துக் கொண்டார்.

இப்படி கிரகித்துக் கொண்டவர் உடனே களைந்து, மதயானையைப்போலக் கம்பீரமாக நடந்து, விடபுருஷனைப்போல அந்த வஸ்திரங்களையெல்லாம் கைகளில் சேர்த்துப் பிடித்துக்கொண்டு, தமது லீலைக்கநுகுணமாய ஒத்தபருவங்களையுடைய இந்தக்கோபகன்யா குமாரிகளைப்பார்த்து, பரிகாசங்களாகிய வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு, அந்நதிக்கரையில் தழைத்து புஷ்பித்து விருத்தியடைந் திருக்கின்ற ஒரு கடப்ப விருக்ஷத்தின்மீது தாவி ஏறி, அதன் மீது இவ்வஸ்திரங்களை வைத்து, தாம் அவ்விருக்ஷத்தின்மேல் நின்று, அதன் பூர்வகாம பாபராசிகளை நீக்கிப் பரிசுத்தஞ்செய்து மோக்ஷத்திற்குக் காரணமாகும்படி கிருபைசெய்தார். அத்தருணத்தில் அந்தச் சுந்தரவதிகள் கழுத்தளவு ஜலத்திலிருந்து, ஸ்ரீபகவானுடன் சம்வாதமாக சில சுகுமார வசனங்களை வசனிக்கின்றார்கள்.

வாரீர் ஸ்ரீமுகுந்தகிருஷ்ண பகவானே! நீரிந்த நந்த விரஜத்தி லவதரித்து எங்கள்மனதை யபகரித்ததுமன்றி, எங்களுடைய பாமவைபவமான தனங்களையும் அபகரிக்கின்றது தாமன்றோ? ஏதென்ன ஆச்சரியம்? நாங்கள் களைந்து வைத்த விழுப்பு வஸ்திரங்களை யபகரித்து அவற்றைச் சுமந்துபோகக்கூடுமோ? உமது கிருபையினால் நாங்களை யடிமைகொண்டு எங்கள் இஷ்டங்களைத் தீர்க்கும்படியான அம்மான மகனாகிய மைத்துனனாகவே யிருக்கின்றீர். ஆகிலும் எங்கள் விழுப்பாகிய வஸ்திரங்களை நீர் தொட்டதகாது இப்போது எங்களை மன்னித்துக் கிருபையாகக் கொடுத்து, எங்கள் மானத்தானங்களை நிவிருத்தி ரக்ஷிக்கக் கடவீரென்று பிரார்த்தித்தார்கள்.

களுக்குத் தகுந்தபடி அன்ன விரயங்களைப்பண்ணி, பசுக்கூட்டங்களுக்கு யதேஷ்டமாகப் புல்லு முதலியவைகளால் திருப்தியடையச்செய்து, நாய் முதலிய மிருகங்களுக்குத் தகுந்த ஆகாரங்களைக் கொடுத்து, ஸ்ரீகோவர்த்தனகிரியாவது அதிதேவதைகளைக் குறித்துப் பர்வதங்களைப் பூஜிக்கவேண்டியது.

பிறகு நமது பந்துஜனங்களெல்லாரும் நம்மைச் சார்ந்த மற்றவர்களும் அலங்காரார்த்தமாகத் திவ்ய வெண்பட்டு வஸ்திரங்களைத் தரித்து, திவ்யாபரண பூஷிதர்களாய்த் திவ்யசுகந்த புஷ்பமாலிகைகளையணிந்து, யாவருந் திருப்தியுண்டாகும்படிச் சந்தோஷமாகப் போஜனங்களைச் செய்து, பசுக்களையும், பிராமணர்களையும், யாகாக்கினியையும், ஸ்ரீகோவர்த்தனகிரி பர்வதங்களையும், பிரதக்ஷணஞ்செய்து, மிகவும், பக்தியுடன் சாஷ்டாங்கமாக நமஸ்காரங்களைச் செய்து திருப்தியடையக் கடவீர்கள் வாரீர் கோவைஸ்ய சிரேஷ்டராகிய பிதாவே! நமது வர்ணாசிரமதர்ம விதிப்படி இவ்விதங்களாக ஆசரிப்பது எனக்கு யுக்தமென்று தோற்றுகின்றது இவையத்தனையும் உங்களுக்குஞ் சத்காம யுக்தங்களென்று தோற்றுமாகில், யான்சொன்னபடி ஆசரித்து நடப்பிக்கக் கடவீர்களென்றார்.

வாரீர் சாதுஜனப் பிரீதியுள்ள சுபத்ரா பௌத்ரனே! காலரூபியான ஸ்ரீபகவானானவர் தேவேந்திரன் மூன்றுலகத்திற்கும் அதிபனென்கிற கர்வம் அடைந்திருக்கின்றதை யறிந்து, அவனுடைய கர்வாபகாரஞ் செய்ய இவ்விதங்களாகத் திருவுள்ளம்பற்றினார் அந்தப் பகவானுடைய அபிப்பிராயத்தை யறியாதவர்களாகி, ஸ்ரீநந்தகோபர் உபநந்தர்முதலிய சமஸ்தமான கோபாலர்களும் ஸ்ரீபகவானுடைய வாக்கியங்களை மிகவும் சிரத்தையுடன் அங்கீகரித்துக் கொண்டு, தாங்களெல்லாரும் ஸ்ரீபகவத் கிருபைக்குப் பாத்திரர்களாகி, அந்த இந்திரயாகத்திற்குச் சம்பாதித்து வைத்திருந்த சமஸ்தமான திரவியங்களையுங் கொண்டு, பிராமணர்களுக்கும், பர்வதங்களுக்கும், சமஸ்தமான தேவோபசாரங்களுடன் ஹோமங்களைச் செய்து பூஜித்து, அந்தப் பிராமஹணோத்தமர்களெல்லாருக்கும் மனோபீஷ்டப்பிரகாரம் திருப்தி யடையும்படிப் போஜனங்களைச் செய்வித்து, ஸ்வஸ்திவாசனங்களைப் படிப்பித்து, பசுக்களுக்கு யதேஷ்டமாகப் பசும்புல்லுகளைக் கொடுத்து, தெளிந்த சுத்தஜலங்களைக் காட்டித் தாகந்தணிவித்தார்கள்.

பின்பு அந்தப்பசுக்களை முன்னிட்டுக் கொண்டு, ஸ்ரீகிருஷ்ண பகவானும் சமஸ்தமான கோபாலர்களும், கோபீஜன சமூஹங்களும், மகோத்தம பரம வைதீக பிரமஹண்ய சமூஹங்களும், புறப்பட்டு, சர்வோபசார பூஜாதிரவியங்களாகிய கர்ப்பூர தாம்பூல சுகந்த புஷ்பங்கள் முதலியவைகளையும் சகல பதார்த்த சம்பந்தங்களாகிய பிரசாதங்களையும், பிண்டியாறச்சமைத்த பலவித மகாரசருசிவாக்க பதார்த்தங்களையும் எடுப்பித்துக்கொண்டு, மகாபர்வத சமீபத்திற்குச்சென்று, எல்லாரும் ஓரிடத்தில் விடுதி யேற்படுத்திக்கொண்டு இறங்கினார்கள். அத்தருணத்தில் சர்வேஸ்வரனாகியும், சர்வலோக சரணியனாகியும், சர்வவிஸ்வாகாரனாகியும் இருக்கின்ற இந்த ஸ்ரீகிருஷ்ணபகவானானவர்,

மகாவிலக்ஷண யுக்தமாகியும், கம்பீரமாகியும், சேவிக்கு மவர்களுக்கு மாேேனா ரசுந்தர ஸ்வரூபமாகியும் விளங்குகின்ற ஒருமகா பர்வதாகாரமாக சாக்ஷாத் கரித்தார்

வாரீர் லோகோத்தர சுருணசாலியான பரீக்ஷின்மகாராஜனே! ஸ்ரீபகவானுனவர் இப்படி ஒரு மகாபர்வதாகாரமாகச் சாக்ஷாத்கரித்தது மல்லாமல், ஸ்ரீநந்தர் முதலிய அவ்வாயர் சமூகங்களிலும் தாமொருவராய் விளங்கிக் கொண்டு, யாவர்களையும் பார்த்து, வாருங்கள் மகாபுண்ய சீலர்களாகிய ஆயர்களே! இதோபாருங்கள் நம்மையெல்லாரையுங் கிருபைசெய்து ரக்ஷிக்கும் பொருட்டு ஸ்ரீஹரியினுடைய அம்சசம்பூதரான பர்வதாதி தேவதையானவர்க்கு நீங்களியாவரும் பக்திசிரத்தையுடன் நன்றாக ஆராதித்து, சகல பதார்த்தங்களையுஞ் சமர்ப்பித்துப் பூசியுங்களென்று நியமித்தார் அதைக் கேட்டு ஆயர்களும் அப்படியே மிகவும் பயபக்தி சிரத்தையுடன் அர்க்கியம், பாத்தியம், ஆசமனீயம் சமர்ப்பித்து, மனோபாவமாக ஸ்நானஞ் செய்வித்து, திவ்யகந்தமும் சுகந்தபுஷ்ப மாலைகளுஞ்சாத்தி, பரிமளத் தூபந்தந்து, கர்ப்பூரதீபாராதனைசெய்து, அனந்த திவ்யநாமங்களைச்சொல்லி ஆராதித்து, டங்கா, பேரி, முரசு, பதகளம், டமரகம், காகளம், எக்காளம், பெய்க்காளம், கௌரிகாளம், துத்தாரி, சின்னம், மிருதங்கம், ஜகந்தாளம், பிரம்மதாளம், நாகசுரம், வீணை, வேணு, இவைமுதலாகிய வாத்தியங்கள் சப்தித்தார்கள்

பின்பு பொன்மலைபோல் பழவகைகளையும், கருப்பம்பாகுக் கட்டிகளையும், பலகாரவகைகளையும், பருப்பமுது முதலிய கறியமுது வகைகளையும் குவித்து, வெள்ளிமலைபோலச் செந்நெலரிசிப் பிரசாதமும் சித்ரான்னம் முதலியவைகளையும் வகுத்து, கூன்கூனாக நெழுகறியமுது, சாற்றமுது, புத்துருக்கு நெய்யமுது, தயிரமுது, பாலமுது, வெண்ணெய், இவை முதலியவைகளை வைத்து, அநேக தாம்பாளங்களில் பாகிலையோடு பரிமளத் திரவியாதிகளை நிறைத்து, இவைமுதலிய மற்றுமுள்ள நிவேதனத்திற்குரிய சமஸ்த பதார்த்தங்களையுஞ் சமர்ப்பித்து நிவேதனஞ் செய்தார்கள். அப்போது ஸ்ரீபகவத் ஸ்வரூபமாகிய அந்தமகா கிரிதேவதையானவர் பிரத்யக்ஷ ஸ்வரூபமாக எதிரிருந்து, இந்தக் கோபாலமகா ஜனங்களால் செய்யப்பட்ட பூசைகளை யங்கீகரித்து, ததியோதனங்களைப் புசித்து, இவர்கள்செய்த சர்வோபசாரங்களையும் மனோரதித்துச் சந்தோஷித்தார்.

அத்தருணத்தில் ஸ்ரீகிருஷ்ணபகவானுனவர் தாமும் பயபக்தி விசுவாசத்துடன் அத்தேவனைத் துதிசெய்து, பின்பு கோபாலர்களைப் பார்த்து, வாருங்கள்மகா தன்யோத்தமர்களான ஆயர்களே! திவ்ய காமஸ்வரூபியாய் சாக்ஷாத்கரித் திருக்கின்ற ஸ்ரீ அரிஸ்வரூபமான இந்த மகாதேவனுனவர் நம்மிடத்தில் கிருபாபிரஸன்ன ராகியும், தயாளுவாகியும், நாம்சமர்ப்பித்த சமஸ்தமான பதார்த்தங்களையும் புசித்து, நமது ஆராதனைகளைப் பிரசன்னமாக அங்கீகரித்தார் இவர் இவ்வுலகத்திலுள்ள ஸாது ஸஜ்ஜனங்களுக்குச் சுலபராகியும் லோகத்துரோகிகளான துஷ்டகஷ்ட ஜனங்களுக்குச் சிக்ஷகராகியும், அஜேய

ராகியும் விளங்குகின்றார் என்றுசொல்லிப் பின்னும் அந்தப்பர்வத அதி தேவதையை அனந்தவிதமாக ஸ்துதிசெய்து, சாஷ்டாங்கமாகத் தண்டன் சமர்ப்பித்து, எல்லாரையுஞ் சேவிக்கும்படி நியமித்தார் அவர்களெல்லாருஞ் சேவித்து ஸ்ரீகிருஷ்ண சமேதர்களாய்த் துதிசெய்தார்கள், உடனே அந்தப் பர்வதாதி தேவதாஸ்வரூபரானவர் அந்தர்த்தானமானார்.

அதன்பிறகு அவ்விடத்தில் விளங்கிக் கொண்டிருக்கிற பர்வதத்திற்கும் பூசைகளைச் செய்து, தூபதீபங்களையும் நானாவித ஸ்ரீகந்த புஷ்பஹாரங்களை யுஞ் சமர்ப்பித்து, சாஷ்டாங்கமாய்த் தண்டப்பிரணாமஞ்செய்தார்கள் பின்பு சமஸ்தமான பேருஞ் சர்வாலங்கார பூஷிதர்களாகி, கோவினங்களையும், கோவத்ஸங்களையும், விருஷபங்களையும், நன்றாயலங்கரித்து, கிரிப்பிரதக்ஷணஞ் செய்யும்படி யத்தனித்தார்கள், அப்போது மிகவும் வேகமாய்ச் சதுர்வித கதிபேதங்களாற் செல்லாநின்ற உத்தமாசுவங்கள் கட்டிய ரதங்களைப் பார்க்கிலும் அதிவேகமாய்ச் செல்லத்தக்க திவ்யபால்ய கிருதங்களோடு கூடிய கோரதங்களின் மீது நானாவித விசித்திரலங்காரங்களுடன் ஸ்ரீநந்தகோபர் முதலிய கோபால பிரபுக்கள் ஆரோகணஞ் செய்து கொண்டு, அனந்தமான சகடுக ளில் சில கோபிகாஜனங்களும் சில கோபாலச் சிறுவர்களும் அலங்கார பூஷர் களாயேறிக்கொண்டு நடந்துவர, அதியுசிதமாக அலங்கிருதஞ் செய்யப் பட்ட ஒரு விசித்திரமான ரதத்தின் மீது ஸ்ரீபகவத்தம ஜகன்மோகனாகார திவ்ய மூர்த்தியாகிய ஸ்ரீபலராம கிருஷ்ணர்கள் சர்வாபரண பூஷிதர்களாக அலங் காரஞ் செய்துகொண்டு, ஸ்ரீயசோதா ரோகிணி தேவியர்களாகிய தாய்மார்க ளுடன் ஆரோகணஞ் செய்துகொண்டிருந்தார்கள்.

அப்போது அனந்தமான மங்கலவாத்தியங்கள் சுஸ்வரமாய்ச் சப்திக்க வும், பிராமணஜனங்கள் புண்யகலசங்களைத் தூக்கிக்கொண்டு வரவும், பிராம ஹணசுமங்கலிகள் மங்கலதீபங்களை யேந்திச் செல்லவும், கோபிகாஜனங்களு டன்கூட ஸ்ரீபகவானுடைய திவ்யகுணங்களை வர்ணித்துப் பாடி மதுரஸ்வரங்க ளாகக் கீர்த்தனங்களைச்செய்து பாடிக்கொண்டு வரவும், கோவினங்களுங் கோ வத்ஸங்களுஞ் சந்தோஷித்துச் சப்தித்துக் கொண்டுவரவும், மத்தவிருஷபங் கள் மகாகெர்ச்சனைகளுடன் கம்பீரமாகச் சப்தித்துக்கொண்டு வேடிக்கையா கச் சூழ்ந்துவரவும், மிகவுஞ் சந்தோஷபரித மானசர்களாய்க் கிரிப்பிரதக்ஷ் ணஞ் செய்தார்கள் பின்பு அந்தக்கோபால பிரபுக்களியாவரும் ஸ்ரீவாசுதேவ ராகியும் ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய திவ்யாஜ்ஞையை வகித்து, கோகுலத்திற் குவந்து சேர்ந்து, கோபபிராமஹண சாது சஜ்ஜனங்களைச் சந்தோஷமாக ஆசரித்து, பசுக்கள் தொழுவங்களைச் சேரவும் பிராமஹணர்கள் தத்தம மாளிகைகளைச் சேரவும் அனுப்பிவிட்டு, தத்தமக்குரிய ஸ்திரீபாலர்களுடன் அவரவர்களுடைய கிரகங்களைச் சேர்ந்து சுகித்தார்கள்.

---

# இருபத்தைந்தாவது அத்தியாயம்.

கலி விருத்தம்.

காதலக்குலிசனானோன் கடுஞ்சினங்கொண்டுநந்த
வருக்கர்களெல்லாந்துன்பம் வகித்திடவருஷந்தனை
விரைவுடனனுப்பவந்து வருஷிக்கும்வேளைகண்டு
அரியவர்களுக்கோர்துன்ப மணுகாமல்காத்தாரன்றே.

தேவேந்திரனானவன் மிகவுங் கோபத்தீபிதமானஸனாய் ஸ்ரீநந்தகோகுல ஜனசமூகங்கள் மிகவும் ஸ்ரமங்களை யடைந்து வருத்தமுறும்படியாக மேகஸமூகங்களைக் கொண்டு மஹாவருஷங்களை வருஷிக்கச் செய்ததையும், ஸ்ரீவிஸ்வம்பரராகிய ஸ்ரீகிருஷ்ண பகவானானவர் அவ்விந்திரபகவான் நாணும்படியாக அந்த மஹாவருஷங்களில் நின்றும் ஸ்ரீநந்தவிரஜ மஹாஜனங்களுக்கு யாதொருகுறைவு நேரிடாமற்படிக்கு அவர்களை ரக்ஷித்ததையுஞ் சொல்லுகின்றனர்.

## ஸ்ரீசுகர் வாக்கியம்.

வாரீர் குருபாண்டவ வம்ஸ திலகனாகிய மகாராஜனே! ஆயர்கள் வழக்கமாய் நடத்திவந்த பூஜையை வேறுபடுத்திய காரியங்களை யெல்லாந் தெரிந்துகொண்ட அந்த மகேந்திரனானவன் மிகவும் தாமஸகுணங்களை வஹித்து, ஸ்ரீநந்தகோபர் முதலிய ஆயர்கள் வருஷந்தோறும் க்ரமமாய் நமக்குச் செய்துவந்த பூஜையைச் செய்யாமல் ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய வாக்கியங்களைக் கேட்டுப் பர்வதத்திற்குச் செய்தார்களல்லவா? நல்லது, ஆகட்டும், இந்தக்கோபால ஜனஸமூகங்களையும், பசுக்கூட்டங்களையும், ஸ்ரீகிருஷ்ண பகவான் காப்பாற்றுவதையும், பர்வதங் காப்பாற்றுவதையும், நான் அறிகிறேனென்று அதிக கோபதீபிதனாகி, ஊழிகாலத்தி லியாவுமொன்றாகச் சேர்ந்து வருஷித்து இவ்வுலகத்தை யழிக்கவும் மற்றைக்காலங்களில் வருஷந்தோறும் ஒவ்வொன்றாக வருஷித்து இவ்வுலகங்களைக் காப்பாற்றவும் ஸ்ரீபகவானாலே நியமிக்கப்படுகின்றனவாகியும், கூட்டத்திற்குப் பிரளயகால மேகமென்னும் பொது நாமதேயத்தையும் வகித்து தனித்தனி சம்வர்த்தம், ஆவர்த்தம், புஷ்கலாவர்த்தம், சங்காரீத்தம், துரோணம், காலமுகி, நீலவர்ணம், என்னுஞ் சிறப்புப் பெயரைப் படைத்தனவாகியும் விளங்குகின்ற மஹா ஊழிகால மேகங்களுக்குப் பூட்டியிருந்த விலங்குகளை விடுவித்து, அவைகளை யழைப்பித்து ஒரு வார்த்தை சொல்லுகின்றான்.

## இந்திரன் வாக்கியம்.

வாருங்கள் பிரளயகால சம்வர்த்தமாதி மேகங்களே! இப்பிரபஞ்சத்தினுள் விளங்குகின்ற ஸ்ரீபிருந்தாவன சமீபத்தில் வாசஞ்செய்துகொண்டிருக்கின்ற இந்த நந்தவிரஜ ஜனங்கள் கோஸம்ரக்ஷணப் பிரபலர்களாகையால்,

பால்முது தயிரமுது வெணணெய நெய இவைமுதலிய மகாருசி பக்குவங்களா கிய ருசிரானனஙகளைப புசிதது மததுக காவிததவாகளாகி, மகாபாவத சமூகஙகளினுடைய இறகுகளை வெட்டி யவறறின காவஙகளை நிஸ்ஸேஷ மாகபபோககிக காவாபகாரஞ செயதவனுகியும சகலாசுரப பிராணசசேதனு செயத வஜராயுததைத தரிதத மகேநதிரனுகியும இருககினற எனனை மதி யாமல், தாயதநதை யெனறும குருதெயவமெனறும தனககுச சமானுதிக மெனறுங கொளளததகக இவவிதஙகளாகிய குருஜன பாவஙகளை லேசமுங கொளளாமல, தனனினைவில தனனையே பெரியவனுக மதிததிருககினற ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய வாாததைகளை நமபி, வருஷநதோறும கிரமமாக எனககுச செயதுவநத பூஜையைச செயயாமல அநதபபாவததைப பூஜித துச செனறாாகள

பாாததீாகளா மேகஙகளே! இவவுலகததில ஆதமஜஞான தததவஙகளா கிய தஙகள விஜஞான மயஙகளால சாவகாமஙகளையுந தஹிதது, ஜனனமர ணஙகளெனனும மகாாணவததைக கடககக காமததியாஜயஙகளைச செயது கியானயோகததை யடைநதிருககினற ஸாவ காம தியாஜயாகளாகிய ஆதமஜ ஞானிகளைபபோல, இநத நநதகோபருடைய நநதனனுகிய ஸ்ரீகிருஷ்ணபகவா னுடைய வாககியஙகளைக கேடடுப புததிமநதப படடவாகளாய மதததுவெறி கொணடு, தஙகளை ஹறநது எனதுபயோகக கிரமமாகிய யாகததை விஸாஜ ஜிதது கேவல ஸாமானய பாவத பூஜைசெயது எனனை யவமானஞ் செயதாாகள. இநத ஸ்ரீகிருஷ்ண பகவசசஹித கோபாலாகளையும, கோககளையும், கோவதஸஙகளையும, அநத திருவாயாபாடி யெலலையிலிருககிற யாவததுமான பொருளகளையும பிரவாகததிலழிதது, இங்கிமிஷததிற சமுததிரததிற சோநது போகுமபடி ஜீமூதஙகளாய வருஷியுஙகளெனறு ஆஜஞாபிததான.

இநதபபிரகாரம ஆஜஞாபிதத இநதிரனெனவன தானும ஐராவத நாம தேய வெளளையானையினமீது ஆரோகணஞ்செயது, சமஸதமான தேவகண சமூகஙகளுந தனனைச சூழநது சேவிதது ஆயுதபாணிகளாயவர தனது வஜ ராயுததைத யொருககாற சுழறறி, அதனைச ஜாஜவலய மானமாயப பிரகாசிக கசசெயது, லேசமாததிர மாகிலும பொறுமையிலலாத கோபததை வஹிதது ஊழிபபெருங காறறிறகு அதிதேவதையான வாயுபகவானை மேகஙகளுககுச சகாயமாகக கூட்டி நியமிததான. இபபடி இநதிரபகவான நியமிததமாததி ரததில வாயுபகவானுடைய சகாயததைப பெறறுககொணட அநதச சண்டப் பிரசண்ட ஊழிகாலமேகஙகள ஆயாபாடியினமீது அமோகஙகளாகிய ஆர வாரஙகளுடன ஆகாயவீதியில வியாபிதது, திககு விதிககுகளியாவும பிர மிககுமபடி மினனி, புவனலோகாநதரஙகள நடுஙகுமபடிக குமுறி இடிகளை யும, பெருஙகாறறுகளோடு கூடிய சுழறகாறறுகளையும, மகாநதகாரமாகிய இருளகளையும உணடாககிககொணடு, பூாவததில ஸ்ரீமநநாராயணராகிய ஸ்ரீ திரிவிகரமஸ்வாமி சகல சேதனுசேதன சமூக பாபநிவாரண சாவதேவதா சம்ரக்ஷணப பிரபாவததை வெளியிடுமபொருட்டுத தமது இரண்டாவ தடி யளநதுகொள்ளப்பிரகாசிதத இரணடாவது பாதபத்மாககவேகததினுல் அண்

ட்டாகமானது பிளக்கப்பட்டு அதற்கு வெளிச்சமுத்திர ஜலப்பிரவாகத்தில் நின்றும் திக்கஜாகார அளவாகப் பிரவகித்த தாரைகளைப்போன்ற வருஷதாரைகளையும், கல்மழைகளையும், இடிமுழக்கத்தோடுங்கூடிய பேரிடிகளையுங் கலபித்து வருஷித்தன.

அதனால் மேடு பள்ளங்கள் சமமாயப் போகும்படி பயங்கராகாரமாகிய வெள்ளங்கள் பாய்ந்தோடின. அந்தச்சமயத்தில் ஸ்ரீநந்தவிரஜத்திலுள்ள சகலமான விருக்ஷங்களும் புதர்களும் வேர்களுடன் பறிந்து ஆகாயத்தி லெழும்பின. மகாபயங்களை யடைந்த கோவத்சங்கள் நடுங்கிக் கோவினங்களை யாசிரயித்தன. அந்தக் கோவினங்கள் தங்கள் தங்கள் கன்றுகளை நாலுகால்களுக்கு நடுவே சேர்த்துக்கொண்டு, அகராறினங்களுக்கு முகங்களை வளைத்து முகத்திலும் தேகத்திலும் மழைக்குங் காற்றிற்கு மறைவுசெய்தனவாகி, பிரளய பைரவபேரீ பாங்கார சப்தங்களைப்போல் உண்டாகின்ற மகா பயங்கரங்களான மேககர்ச்சிப்புகளால் செவிடுபட்டு, மின்னுபயங்கரங்களுடன் கால்கள் நடுங்கத் தத்தளித்து, ஓடவும் நடக்கவும் சக்தியற்று வருத்தப்படுகின்றன. அப்பசுவினங்களை விட்டுப் பிரியமனமில்லாமல் அப்பசுக்களுக்கு முன்னின்ற விருஷபக்கூட்டங்கள் சகிக்கக்கூடாதவைகளான யுகாந்தகால புருஷனுடைய அஸ்தத்திலகரித்த கதாயுதங்களைப்போன்ற கல்வருஷ தாரைகளால் அடிபட்டு, அந்த ஜீமூதமான வருஷதாரைகளுக்குச் சகிக்கமாட்டாமல், மகத்தரங்களாகிய பிராணபயங்களை யடைந்து, ஸ்ரீஹரிக்கு நமஸ்கரித்து, சரணாகதியாக, இரக்ஷி என்று முறையிடுஞ் சாதகங்களைப் போலத் தங்கள் சரீரங்களை வளைத்துக்கொண்டு, மண்ணும் விண்ணும் அதிரும்படி அம்மா! அம்மா! என்று ஆரவாரங்கள் செய்கின்றன.

அப்போது கோபால சமூகங்கள் அந்த விருஷபங்களையும், கோக்களையும் கன்றுகளையும், ஸம்ரக்ஷணங்கள் செய்துகொண்டு, மகா கல்மழைகளாகிய கோராகாரங்களில் அடிபட்டுச்சகிக்க ஒண்ணாது சரீரங்கள் நலிந்து, உலகமுடிவு நேரிட்டதோ? ஊழிகாலம் வந்துவிட்டதோ? பிரமஹாண்டங் கிழிந்து போயிற்றோ? என்னமோ இப்படி நேரிட்டதே, இனியிதற் சென்னசெய்வோம்? என்று மனங்கலங்கி, நிற்கமாட்டாமல், கால்கைகள் நடுங்க ஸ்ரீமாத வாப்பித சப்தங்களுடன் முறையிடுகின்றார்கள். அந்தக் கோபால புண்ணியவான்களை யாசிரயித்துக்கொண்ட புண்ணியாங்கனைகளாகிய கோபிகாஜன சமூகங்கள் மகாவருஷதாரைகளி லடிபட்டு, நடக்கச் சக்தியற்று, இடுப்புகளை வளைத்துக்கொண்டு, மிகவும் வருத்தமுற்றுச் சகிக்கமாட்டாமல், ஓ ஸ்ரீகிருஷ்ணா! ஓ ஸ்ரீகோவிந்தா! ஓ ஸ்ரீமாதவா! இரக்ஷி, இரக்ஷி, என்று தங்கள் கடின குசபாரமத்தியங்களில் தங்கள் குழந்தைகளை வைத்துக்கொண்டு முறையிடுகின்றார்கள். அடிக்கப்பட்ட பெருங்காற்றினாலும், பெய்கின்ற மழையினாலும் மாளிகைகளும் உருக்குலைந்தன.

இப்படி யடிக்கின்ற பெருங்காற்றினாலும், பெரும்பளிங்குத் தூண்களுக் கொப்பான தாரைகளாலும் பெருங்கனியான பூசினிப் பழங்களை யொத்த

துளிகளாலும், உடல்மெலிந்து கைகால்கள் நடுக்கமுற்று, பொறிகலங்கி, மனநிலைதளர்ந்து தத்தளிக்கின்ற நந்தகோபர் முதலிய கோபால பிரபுஜன சமூகங்களும் கோவத்சங்களும், கோக்களும், விருஷபங்களும், கோபாலர்களும், கோபிகாஸ்திரீகளும், பாலர்களும் படுகின்ற பிரயாசங்களைப் பார்த்தும், ஆரவாரங்களைக் கேட்டும், ஏதென்ன நம்முடைய பாடிக்கு இப்படிப்பட்ட விபத்து நேரிட்டது ? என்று பயமாகிற சமுத்திரத்தில் மூழ்கினவர்களாய்க் கரைகாணாமல் அவதியுற்று, தீனஜனசமூக சம்ரக்ஷக தெய்வசிகாமணியாகியும், ஸ்ரீ புண்டரீகாக்ஷராகியும், தாங்கள் ஜனனமரணபயங்கரப் பிரளயத்தில் நின்றும் கரையேறிச் சுகானந்த வின்பம்பெறக் கருணைசெய்யும்படி எழுந்தருளியிருக்கின்ற வராகியும் விளங்குகின்ற ஸ்வாமிக்குத் தண்டனசமர்ப்பித்து விண்ணப்பஞ் செய்துகொண்டார்கள்

ஓ தேவதேவனாகிய ஸ்ரீகிருஷ்ணா! ஓ ஆபத்பாந்தவா! ஓ பரமகாருண்ய உத்தமனே! ஓ தீனதயாளுவே! ஓ ஸ்ரீபுருஷோத்தமனே! உனது சரணாரவிந்தங்களையே அடுத்திருக்கின்ற கோபாலதீன ஜனங்களாகிய யாங்கள்யாவரும் இப்படிப்பட்ட ஆச்சரியகரமான ஊழிகாலவருஷங்கள் வருஷிக்க, அதனாலே மஹாபயங்களையடைந்த எங்களைப் பார்த்து சீக்கிரமாக ரக்ஷிக்கவேண்டுமென்று திருவுள்ளங்கொண்டு ரக்ஷிக்காமல் உபேக்ஷை செய்யலாமோ? ஓ எங்களையனே! உன்னையே சரணமென்று நம்பி முறையிட்டுக் கொள்ளுவோமேயல்லாமல் வேறொருவரைக் கண்டிலோம் வாராய் சகலகல்யாண குணரத்ந நிதியாகிய ஸ்ரீஜநார்த்தனஸ்வாமி! நாங்கள் மாதருகர்ப்பத்திலிருந்து ஜனித்துப் புத்தியுணர்ந்தது முதலியவரையிலும் இப்படிப்பட்ட குமுறல்களும், மின்னல்களும், இடிகளும், இடிமுழக்கங்களும், வருஷஜலத் துளிகளும், தாரைகளும் உன்மேற் பிரமாணப்படிக்கு அறிந்திலோம்

வாராய் ஐயனே! ஊழிப் பெருங்காற்றுகளோடுங்கூடிய இந்தக் கோராகார வருஷமானது வரவர உத்பாதங்களாய்ப் பயங்கரமாகத் தோற்றுகின்றது. அதனால் நாங்கள் வரவர அதிகபயத்தைக்கொண்டு தத்தளிக்கின்றோம். இந்த உபத்திரவத்தைச் சகிக்கமாட்டோம் சிலநாளைக்குமுன் யமுனாநதீதீரத்தில் கோபாலர், பாலர்கள், கோபிகைகள், கோக்கள், கோவத்சங்கள் இவைகளுடன் நாங்கள் காட்டுத்தீயின் மத்தியில் அகப்பட்டுக்கொண்டு தத்தளித்தபோது எங்களுக்கெல்லாம் யாதொருகுறைவுமில்லாமல் சந்தோஷமுண்டாக எங்களையும் பசுக்களையும் அந்த அக்னியில் நின்று ரக்ஷித்தாய் அவ்வண்ணமே இப்பொழுதுங் காப்பாற்றவேண்டும் இந்த ஸ்ரீநந்தவிரஜ ஜனசமூகங்களுக்கு இக்கொடிய வருஷ ஆபத்துகளை நீக்கி இரக்ஷிக்கத்தக்குந்த தெய்வம் நீயல்லது வேறில்லை ஸ்ரீ புண்டரீகாக்ஷனாகிய நீயே இம்மழையினின்றும் எங்களை இரக்ஷிக்கக் கடவாயென்று பிரார்த்தித்தார்கள்

வாரீர் சந்திரகுல திலகனாகிய அரசனே! அத்தருணத்தில் ஸ்ரீசர்வலோக சரண்யனாகி விளங்குகின்ற ஸ்ரீகிருஷ்ணபகவானானவர் சிறிது ஆலோசித்து, மகேந்திரனானவன் தன்னைக் குறித்து இவ்வாயர்கள் செய்யும் இந்திரயாகத

தைச் செய்யாமல் அன்யவிஷயமாய்ச் செய்தார்களென்று கோபித்துத் தன் னுஜ்ஞைக்குள்ளடங்கிய பிரளயகால மேகங்களை விட்டுப் பெருங்காற்றுகளைச் சகாயமாகக்கூட்டி இந்தவ்ருஷ்டிகளை வருஷிப்பிக்கின்றானென்றும், அம்மே கங்களுக்குச் சகாயமாய் வந்திருக்கின்றானென்றுந் தமது சர்வஜ்ஞாதிசயத்தி னால் அறிந்து, அவனைக் காப்பாங்களுஞ்செய்ய வேண்டுமென்று சங்கல்பித்துக் கொண்டவராய்ச் சொல்லுகின்றார் வாருங்கள் நந்தவிரஜ ஜனசமூகங்களே! இப்பொழுது பெய்கின்ற கோரதரமாகிய கல்மழைகளைக் குறித்து நீங்கள் ஒருவரும் அஞ்சவேண்டியதில்லை உங்களுடைய பிராணேசர்களையும், குழந் தைகள் முதலிய சகல ஜனங்களையும், கோக்களையும், கோவத்சங்களையும், பத்திரமாய்ப் பார்த்து அழைத்துக்கொண்டு என்னுடன் வாருங்கள் இதோ வொரு நிமிஷத்தில் ஸ்ரீபுண்டரீகாக்ஷரானவர் மிகவுங் கிருபையுடனிரட்சிக் கப்போகின்றாரென்று சொன்னார்

வாரீர் அகண்ட பூமண்டலாதிபதியாகிய மகாராஜனே! இவ்விதமாய் ஸ்ரீ பகவான் நியமித்தமாத்திரத்தில் கோபாலவிருந்தஜனங்கள் முதலியயாவரும் ஸ்ரீபகவத் கிருபையினால் தைரியங்கொண்டு, பசுக்களையும் கன்றுகளையும் தங் களுடன்கூட வரும்படி யழைத்துக்கொண்டு, சகல சாமக்கிரியைகளையு மெடுப்பித்துக்கொண்டு, ஸ்ரீகிருஷ்ணபிரானுடன் சென்று அவர் நியமித்த



ஸ்ரீகண்ணன் கோவாத்தனகிரியை குடையாகப் பிடித்தது

இடத்தில் நின்றார்கள் அப்பொழுது அந்த ஸ்ரீகிருஷ்ண பகவானானவர் ....... புவன சங்கர்ஷணாத்திக கோபபாகிய ஒரு பீமபராக்ரம ஸ்வரூபத்தை வகித் து, கோவாத்தன மகா பர்வதத்தை வேரோடும் பிடுங்கித் தமது ஒற்றைத்

திருக்கையிற் றூங்கிக் கொடையாகப் பிடித்தார். பூர்வகாலத்தில் ஸ்ரீவராகப் பிரானுகி இந்தப் பூமண்டலாகாரத்தை வெண்மையாகிய தமது தந்தக் கோட்டில் பரித்துவந்து ஸ்தாபனஞ்செய்து பிரமமாதி சகல தேவதைகளும் ஸ்துதிகள்செய்யச் சராசேதன சேதனங்களையும் ரக்ஷித்தவ ராகையால், அந்தப் பகவானுக்கு இந்தலீலையைப்பற்றிப் பத்து ஒருவருத்தமோ? இந்தக் கோவர்த்தன பர்வதமானது இவர் அஸ்தத்தில் ஒருமத்தயானையின் துதிக்கையால் ஒய்யாரமாயும் அவலீலையாயும் உயரவெடுத்த தேந்தப்பட்ட ஒருதாமரை மொக்கைப்போல விளங்கிறது.

வாரீர் பரதகுலோத்துங்கனே! சர்வலோக சரண்யராகிய ஸ்ரீஹரியானவர் அனந்தகோடிப் பிரமமாண்டங்களைப் பந்துகளைப்போலப் பற்றி விளையாடி விநோதங்களைச் செய்கின்றவ ராகையால், இந்தவொரு அண்டத்துளொரு உலகத்தில் ஒருதீபத்தில் ஒருபர்வதத்தைத் தாங்கியது ஆச்சரியமன்று. மேலும் அந்தப் பர்வதமானது அவருக்கு ஒரு சிறுபயலேந்திய ஒருசிறு குடைபோலும், அவன் ஹஸ்தத்திலேந்திய ஒரு சிறு புஷ்பக் கொத்தைப் போலும் விளங்கியது. கோபாலசேகரராகிய ஸ்ரீபகவானனவர் இந்தப் பயங்கரமாகிய பெருங்காற்றுகளோடுங்கூடிய கலமழைகளினுல், நந்தவிரஜத்திலுள்ள சமஸ்தமான கோபீஜன கோபாலர்களும், கோதனங்கள் முதலிய யாவற்றும், கிஞ்சித்தும் வருத்தமுறாமல் செளக்கியமாக விருக்கும்படி அந்தக்கோவர்த்தன பர்வதத்தைக் குடையாகப் பிடித்துப் பாதுகாத்தவராகி, ஸ்ரீநந்தர்முதலிய கோபாலஜன சமூகங்களைக் கடாக்ஷித்து ஒருவார்த்தை சொல்லுகின்றார்.

வாருங்கள் மாதுரு பிதுருக்களே! ஓ கோபால கோபீஜன சமூகங்களே! இந்த மகாபர்வதத்தினகீழ் கோதனங்கள் முதலிய சமஸ்தமான வஸ்து திரவியங்களுடன் யாதொரு குறைவுமின்றி மனசசந்தோஷத்துடன் அவரவர்கள் மனோபீஷ்டப்படிக்கு கிரபயர்களா யிருங்கள். மேலும் நீங்களென்னைக் குறித்து இவன் மிகவும் பாலகனுயிற்றே இந்த மகா பர்வதத்தை என்னமாய் வகிக்கப்போகின்றுன? என்று சந்தேகிக்க வேண்டுவதில்லை இப்படிப்பட்ட மகா பர்வதங்கள் அனந்தங்களைப்படைத்த சகல சேதனசேதன சமூகங்களோடு கூடிய அனந்தகோடி பிரமாண்டங்கள் ஏககாலத்தில் புரண்டுருண்டு இந்தப் பர்வதத்தின்மீது வீழ்ந்தபோதிலும், இம்மகா பர்வதத்திற்கு யாதொரு அபாயமில்லை. என்னுடைய ஜலியாது ஆகையால இதனடியில் சமஸ்தமானபோகனுஞ் சந்தோஷமாய்ச் சுகமாக வாசஞ்செய்துகொண் டிருங்களென்றார்.

வாரீர் பதரவதிமனாளனுகிய மகாராஜனே! இவ்விதங்களாகிய ஸ்ரீபகவானுடைய திவ்யவாக்கியங்களைக்கேட்ட அவ்வாயர்களியாவரும், சமஸ்தமான கோவின சமூகங்களுடன் ஸ்ரீஹரியைத் தியானஞ் செய்துகொண்டு, நிர்பயர்களாய் அந்த மகாபர்வதத்தி னடிவாரத்திற் பிரவேசித்து, ஸ்ரீஜனார்த்தனருடைய கருணுகடாக்ஷ வீக்ஷணயங்களாகிய குணங்களில், தங்கள் மனதைச் சமர்ப்பித்து, பசிதாக மோக சோக மற்றவர்களாகி, ஸ்ரீகிருஷ்ண பகவத் கதா விநோத கல்யாணங்களைக் குணுநுபவஞ்செய்து கொண்டிருந்தார்கள். அப்

போது சிகர பந்திகளோடுங்கூடிய கோவர்த்தன பர்வதமானது குடைக்குப் பியோடு கவி வுசிலையுமாகவும், ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய வலது ஹஸ்தம் ஒரு குடைக் காம்பாகவும், ஜீமூதங்களாய வருஷிப்பதினாலே புரண்டு சுற்றிலும் விழுகின்ற வருஷதாரைகள் முத்துமாலைகளாகிய சுற்றுத்தொங்கற் குஞ்சங்களாகவும் விளங்க, ஸ்ரீகோபீஜனசமூக முகாரவிந்தங்களினுடைய ஒளியும் திவ்யாபரணங்களினுடைய தேஜஸ்களும் பிரதிபலித்துப் பிரகாசிக்கின்றபடியால், அந்தமலையும் கோபால சக்ரவர்த்தியாகிய ஸ்ரீபகவானுக்கு நாநாவித திவ்ய ரத்நங்களிழைத்த ஒரு திவ்ய சத்ரம்போலச் சமஸ்தஜன மனோரஞ்சனமாக விளங்கிற்று.

வாரீர் ராஜேந்திர ரத்னமே! மேலும் ஸ்ரீபகவானுடைய அஸ்தத்தில் ஒருமலர்ந்த தாமரைப்புஷ்பத்தைப்போல விளங்குகிற பர்வதத்தின்மீது, வண்டின சிரேஷ்டங்களைப் போலப் பிரளயஜலத்தை வருஷிக்கின்ற ஸம்வர்த்தாதி மேகங்கள் விளங்கின. இவ்விதங்களாக இம்மகா மேகங்களானவை இந்திரபகவானுடைய ஆக்ஞையைச்சிரசாவகித்து, இரவும்பகலு மோயாமல் ஏழுகோராத்திரங்கள் வருஷித்தன, அந்த ஏழுநாளும் கோக்கள்முதலிய சகலகோபால சமூகங்கள் ஸ்ரீபகவானுடைய கிருபையில் சகலசௌக்கியத்துடனும் பிரமானந்த ஸம்பூர்ணத்துடனுஞ் சுகமாக வாசஞ்செய்துகொண்டிருந்தார்கள். அதன்பிறகு இந்த ஏழுநாளும் ஸ்ரீபகவானானவர் கோவர்த்தன பர்வதத்தைத் தாங்குவதிற்சலியாமல் மகாலேசிகச் சர்வஜனங்களையும் ரக்ஷித்துக்கொண்டிருக்க, இந்திரனானவன் தேவசாரணர்களால் அதிமானுஷங்களாகிய ஸ்ரீகிருஷ்ண பகவத்குண சரித்திரங்களைக் கேட்டு, மனதில் ஆச்சரியமும் பயமுந்தோன்றி, எண்ணங்கள் குன்றி பிரயோஜனமற்றவனாய் மேகஸமூகங்களை யழைத்துக்கொண்டு, தன்னுடைய ஸ்தானத்திற்சேர்ந்து, மேக ஸமூகங்களையும் யதாஸ்தானங்களை யடையும்படிச் செலவுகொடுத்தனுப்பினான்.

அதன்பின்பு ஆகாயவீதியானது பரிசுத்தமாய மகாபுருஷர்களுடைய மனதைப்போலக் களங்கமற்றதாய் விளங்கியது. அப்போது சூரியகிரண சமூகங்கள் ஆகாயவீதியில் வியாபிக்கவும், சமஸ்தமான ஜனங்களும் பயங்கரங்களாகிய ஊழிப்பெருங்காற்றுகளும், மேகங்களும் ஒழிந்தனவென்று ஸ்ரீமாதவப்பிரானை ஸ்துதித்தார்கள். கோவர்த்தன தாரராகிய ஸ்ரீகோபால சக்ரவர்த்தியானவர் சமஸ்தமான கோபாலஜன சமூகங்களைப்பார்த்து ஒருவார்த்தை சொல்லுகின்றார்: வாருங்கள் தனயர்களாகிய சமஸ்தமான கோபால ஜனங்களே! ஸ்ரீஹரியினுடைய கிருபையினால் காற்றும் மழையும் பரிஷ்காரமாய்விட்டு ஓய்ந்தன. சமஸ்தமான பிரவாகங்களும் நதிகளைச்சேர்ந்து சமுத்திரத்தை யடைந்தன. பூமியெங்கும் ஈரநீங்கிச்கிச்சுப்பிரமாயத் தோன்றுகின்றது. ஆகையால் நீங்களியாவரு முங்கள் புத்திர மித்திர களத்திராதி வாகனங்களுடன் சர்வதிரவியங்களையு மெடுப்பித்து, சகலகோவின சமூகங்களையு மோட்டிக்கொண்டு, ஸ்வஸ்த சித்தர்களாய் வெளிப்பட்டு யதாஸ்தானங்களைச் சேருங்களென்று நியமித்தார்.

'வாரீர் ராஜனே! ஸ்ரீபகவான் அப்படி நியமித்த மாத்திரத்தில் யாவரும் அவரவர்கள் ஸ்தானங்களில் சுகமாகவந்து சேர்ந்தார்கள். பிறகு ஸ்ரீகிருஷ்ண பகவானுனவர் எப்போதும்போல் அந்த மகாபர்வதத்தைச் சகலபிராணிகளும் பார்த்துக்கொண்டிருக்கையிலேயே எளிதாகத் தனனிருப்பிடத்தில் அசையாமல் ஸ்தாபனஞ்செய்தார். பிறகு ஸமஸ்தமான ஆயர்களும் மிகவும் பக்திசிரத்தையுடன் துதிசெய்து, ஸ்ரீபகவானை ஆலிங்கனஞ்செய்து புகழ்ந்தார்கள். புரோஹிதர்கள்முதலிய பிராமண சமூகங்கள் தம்பதி சமேதர்களாய் மங்கலாக்ஷதைகளைக்கொண்டு, அமோகமான வேதமந்திரங்களைச் சொல்லி ஆசீர்வதித்து, ததியன்ன கவளங்களை யுபசாரமாக ஸ்ரீபகவானுக்குச் சமர்ப்பித்து ஆனந்தங்களை யடைந்தார்கள்.

நந்தகோபாலரும், மகாபல பராக்ரம சாலியான ஸ்ரீபலராமரும், யசோதாபிராட்டியும், ரோஹிணிதேவியும், மிகவும் பிரீதியுடையவர்களாகி, ஆலிங்கனாதி உபசாரத்துடன் ஆசீர்வாதங்களைச்செய்து துதித்தார்கள். வாராய் மகானுபாவனுகிய ராஜசிகாமணியே! ஆகாயவீதியில் தேவதாசமூகங்கள் புஷ்பவருஷங்கள் வருஷித்து, மகத்தான ஆச்சரியங்களை யடைந்து தேவதுந்துமி முதலிய சர்வதேவவாத்யங்களையும் சப்திப்பித்தார்கள். தும்புரு நாரதாதி மகாபுருஷஜனங்கள் மதுரஸ்வரங்களால் ஸ்துதிசெய்து கானங்களைச் செய்தார்கள். சர்வகோபிகாஜனங்களும் ஸ்ரீபகவானுடைய குணகீர்த்தனங்களை மகாதிவ்ய ஸ்வரங்களாகப் பாடிக்கொண்டுவர, ஸ்ரீபலராம சஹிதராகிய கோபாலஜனங்கள் ஸ்ரீகிருஷ்ணபகவானைச் சூழ்ந்துகொண்டு பிரமமானந்த சந்தோஷர்களாய் கோகுலத்திற்கு வந்தார்கள்.

# இருபத்தாறுவது அத்தியாயம்.

கலிவிருத்தம்

அரியினதிவ்ய குணநிசயத்தினைத்
தெரியுங்கோப ஜனசமூகங்களுக்குத்
திரிகுணாந்த கோபர்தெரிந்திட
வகுணனர்பிர பாவமெவானித்ததே.

ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய அதிமானுஷ சேஷ்டித திவ்யகுணங்களுக்கு மிகவும் ஆச்சரியமான சந்தோஷமும் அன்பும் சங்கையுமடைந்து பலவாறுக வசனிக்கின்ற கோபாலஜன சமூகங்களைப் பார்த்து நந்தகோபரானவர், கார்க்கேய மஹாரிஷியினால் தாமறிந்திருக்கப்பட்ட ஸ்ரீபகவத் ரஹஸியார்த்தங்களை மனதிற்றியானித்து, ஸ்ரீகிருஷ்ணகுணப் பிரபாவங்களை வர்ணித்தாரென்று சொல்லுகின்றது.

## ஸ்ரீசுகர் வாக்கியம்.

வாரீர் மகாஜன வல்லபனே! ஸ்ரீநந்தகோபருடைய சபாப்பிரதேசத்தில் கூடியிருக்கின்ற கோபாலஜன சமூகங்களியாவரும் ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய அதிமானுஷ சேஷ்டித லீலாவினோதங்களைக் குறித்து ஆச்சரியானந்த பரவசர்களாகி, ஸ்ரீநந்த கோபரைப் பார்த்து ஒருவார்த்தை சொல்லுகின்றார்கள்.

## கோபாலர்கள் வாக்கியம்.

வாரீர் ஸ்ரீநந்தகோபரே! நாமெல்லாரும் ஜன்மாந்தரங்களில் என்ன சுகிர்தங்களைச் செய்தோமோ; உமது தபோபலமெப்படிப்பட்டதோ! அறியோம், எங்களுக்குப் பிரபுவாகிய இந்த ஸ்ரீகிருஷ்ணபகவானனவர் உமது கிருஹத்தில் திருவவதரித்தது, முப்பது திவஸத்தில் தமது திருக்கண்களை நன்றாய் விழித்துப் பார்க்கப் பருவமல்லாத சிறுகுழந்தைப் பருவத்திலேயே மஹா மாயமோகன காமரூப கொடியராக்ஷஸியினது விஷஜ்வாலையுடன் கூடின பாலமுலை அவளுடைய அனந்த ஜன்மங்களின் நோற்று சம்பாதித்த பாபமாகிற அரிஷ்டங்களுடன் பலசத்வாதி சமஸ்த பிராணேந்திரியங்களைச் சோஷிப்பித்து, அவளை ஜன்ம ஸாபல்யஞ் செய்தார் மூன்றாவது மாதத்தில் ஸர்வஜன மனோகர இளங்குழந்தைப் பருவத்தில் ஆணிப்பொன்னாற்செய்த வண்ணச் சிறுதொட்டிலுக்கு இரக்ஷகமாக வைத்த சகடவுருவிலே சகடாசுரனென்று ஓரசுரன் மாயாஸ்வரூபத்தாலாவேசித்து அபாயஞ்செய்ய நினைத்ததையறிந்து பொறுக்காமல் கோபித்தழுஞ் சாமான்யக் குழந்தையைப் போலச் செவ்வியதாகிய சிறுகால்களை யுதறியழுது, அச்சகடத்தை யுதைத்து அவ்வசுரனுடைய ஜன்மத்தைச் சுத்தஞ்செய்து முடித்தார்

ஒருவருடத்திய குழந்தைப் பருவத்தில் தம்மை அபாயஞ் செய்யவந்த திருணாவர்த்தனென்னும் ஓரசுரனை அவன் கண்டத்தை இறுகப்பிடித்து, ஆகாசவீதியில் நின்று கவிழ்ந்துவிழச் செய்து ஜன்மத்தைப் போக்கினார். தவழ்ந்துவிளையாடி வெண்ணெய் அபகாரஞ் செய்துகொண்டிருக்கின்ற பருவத்தில் மகாதபஸ் சுசீலசம்பந்தையான ஸ்ரீயசோதாப் பிராட்டியானவள் தனது புத்திர அன்பினால் உரலில் பந்தனஞ்செய்ய, அவ்வுரலை யிழுத்துக் கொண்டு போய் இரட்டையாயிருந்த மருதமரத்திற் சந்திக்கும்படி செய்து, தமது பாதாரவிந்த ஸ்பரிசத்தினால் ஸ்ரீமந்நாரத வாக்கியோத்தாரண நிமித்தம் ஸ்ரீசங்கர கிங்கரர்களாகிய நளகூபர மணிக்ரீவர்களுடைய அந்த மருத விருக்ஷ ஜன்மங்களைப் போக்கினார். கோவத்சங்களினுடைய பாலனப்பருவத்தில் மகா பலவந்தனாகியும் மாயாவியாகியு மிருந்த கொடியதுஷ்ட ராக்ஷஸனாகிய பகாசுரனை மூக்கலகைப்பற்றி இருபிளவாகப் பிளந்து, அவலீலையாக சம்ஹாரஞ் செய்து, அவனசுர ஜன்மத்தைப் பாவனஞ் செய்தார்

பின்னும் அப்பருவத்திலேயே மஹா மாயாவியாகிய கன்றைப்போலக் காமரூபங்கொண்டு தம்மையும் மற்றுமுள்ள கோபால சிறுவர்களையும் அபாயஞ்செய்யவந்த கொடியதுஷ்டராக்ஷசனாகிய வத்சாசுரனென்பவனைச் சமயம்

பார்த்து, அக்கன்றின் ஸ்வரூபக்காலங்களைச் சேர்த்துப்பிடித்துச் சுழற்றி, விளாமரத்திலறைந்து சம்ஹரித்து, அவனது ஜன்மதோஷத்தையுந் தீர்த்து, அச்சிறுவர்கள் வேண்டிய வரைக்கும் விளாங்கனிகளைப் புசிக்கும்படிச் செய்தார். பின்பு பனங்காட்டிற் பிரவேசித்து, அங்கு அனந்தமான ஜ்ஞாதிசமூகப் பந்துக்களுடன் வாசஞ்செய்துக் கொண்டிருந்த துஷ்ட ராக்ஷசர்களில் முந்தினவனான தேனுகாசுரனைச் சங்காரஞ்செய்யத் திருவுள்ளங்கொண்டு, அவ்வனத்தைப் புகுந்து, தம்மையும், ஸ்ரீ பலராமரையும், கோபாலர்களையும். நலியச்செய்யும்படி கழுதைகளாய் ஸ்வரூபித்துவந்த அந்தத் தேனுவினுடைய ஜ்ஞாதிபந்து சமூகங்களைப் பார்த்து, பலராமசகிதராய் தாம் அவ்வனவிருக்ஷங்களை வேரோடே பறித்து, அவைகளையே ஆயுதங்களாகக்கொண்டு, அவற்றால் சிலரைச் சம்ஹரித்து, முஷ்டிகளாற் சிலரைச் சம்ஹரித்து, சிலரை விருக்ஷங்களிலறைந்து சம்ஹரித்து, இப்படி நாநாவிதங்களாக யாவரையுஞ் சம்ஹரித்தபின்பு அந்தத் தேனுகாசுரனோடு பிரபலமான யுத்தஞ்செய்து அவனையுஞ் சம்ஹரித்து, அவ்வனத்தைப் பரிசுத்தஞ்செய்து, அதிலுள்ள பலங்களை யாவரும்புசிக்கச்செய்தது மன்றி யெப்போதும் நிர்ப்பயமாய் வனவாசிகளுக்கு வாசஞ்செய்ய மகோபகாரஞ் செய்தார்.

வாரீர் கோகுலாதிபதியே! இந்த ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய குண மகிமாதிசயங்களை யோசிக்குமளவில் கேவலம் மனுஷ்யனாகத் தோற்றவில்லையே. இன்னும் ஸ்ரீபகவான் ஸ்ரீபலராம சகிதராய்ச் சமஸ்தமான கோபால சிறுவர்களுடன் விளையாடிக்கொண்டிருக்கையில், அத்தனைபேரையும் அபாயஞ்செய்யநினைத்து மாயாகோபால சிறுவனைப்போலக் காமரூபத்தை வகித்துவந்திருந்த கபடனாகிய பிரலம்பாசுரனை விளையாட்டாகவே ஸ்ரீபலராம மூர்த்தியைக் கொண்டு ஜன்மசாபல்ய மாகச்செய்து யாவரையு மிரட்சித்தார். உடனே தெய்வீகமாய் அவ்வனத்தைச்சூழ்ந்து பற்றியெரிந்துகொண்டு வந்த காட்டுத் தீயானது சமஸ்தமான கோபால சிறுவர்களையும் கோவத்சங்களையுஞ் சூழ்ந்து ஜ்வலித்தபோது, என்ன சாதுரியத்தினாலேயோ அந்தத் தாவாக்கினியைக் குளிரச்செய்து யாவரையு மிரட்சித்து மீட்டுக்கொண்டார். மேலும் அகாசுரன் முதலினோருடைய வ்ருத்தசமாசாரங்களையுங் கேள்விப்பட்டோம்.

இவையன்றி இந்தக் காளிந்திமடுவாகிய புண்யநதியானது தன்னிடத்தில் சகுடும்ப சமேதனாகிவந்து வாசஞ்செய்து கொண்டிருந்த காளியனென்னும் நாமதேயத்தைப் படைத்த மகா சர்ப்பராஜனுடைய விஷஜ்வாலையினாலே ஒருவருக்கும் உபயோகப்படாமலும், சமீபிக்கிறதற்கு ஒருவருக்குக்கூட சவுகரியமில்லாமலும் சமஸ்தமான பேருக்குங் கண்டகமாயும் இருந்ததே. அப்படிப்பட்ட விஷஜ்வாலையோடுகூடிய மடுவிலிறங்கி, அக்காளிய சர்ப்பராஜனுடைய பணாமண்டலங்களை மிதித்து நர்த்தனஞ்செய்து, அவனுடைய விஷமாகிற அக்கினியினாலுண்டான காவங்களை யழித்துச் சாந்தமாகச்செய்து, அவனுக்கு ஸ்ரேயசும் பகவத்பக்தியு முண்டாகக் கல்பித்து, தகுந்த ஸ்தானத்தில் சகுடும்பத்தோடு வாசஞ்செய்ய நியமித்து, அந்த மடுவைப் பரிசுத்தஞ் செய்து சமஸ்தமான பேருக்கு முபயோகமாகும்படி யாசரித்தார்.

வாரீர் சாதுஜனசிரோரத்னமாகிய எங்கள் விபுவே! அன்றிரவில் அர்த்தராத்திரிவேளையில் நாமெல்லாம் பசிதாக ஶ்ராசசிதர்களாய்ச் சோஷித்திருக்குஞ் சமயத்தில் வந்து சுற்றிக்கொண்ட கொடியதாவானலங்களை இந்த ஆபத்பாந்தவராகிய நம்மையாளவந்த ஸ்ரீகோபாலகிருஷ்ண சிம்மமான புருஷோத்தமர் எப்படிப்பட்ட ஸ்வரூபத்தைக் வகித்தாரோ நாமறியோம். அக்கணத்தில் அக்கொடிய அக்கினிஜ்வாலைகளைப் பானஞ்செய்து நம்மை யாவரையும் ரக்ஷித்தார், ஒருக்காலும் நேரிடாத ஊழிப்பெருங்காற்றுகளும், குமுறல்களும், மின்னல்களும், பேரிடிகளும், கல்மழைகளும், இந்நாளில் ஏககாலத்திலுண்டாக, அவற்றினால் இந்தக் கோகுலத்திலுள்ள கோக்கள் முதலியவைகளோடு நாமெல்லாரும் அலைந்து மெலிந்து அவதிப்பட்டு, பிராணபீதிகளையடைந்து, தீனர்களாய்த் தத்தளித்து, ஆ ஸ்ரீகிருஷ்ணா! இரக்ஷி இரக்ஷி என்று சரணமடைந்தோம்.

அப்போது ஏழுவயதுள்ள பாலராயிருக்கின்ற இம்மகா புருஷனவர் பரமாபத்தையடைந்த நம்மைக் குவிரசசிப்பாடுமபாதது, மகாகெம்பீரமாக ஓ சனங்களே! பயப்படாமலிருங்கள் சர்வேசுவரராகிய ஸ்ரீஹரியானவர் சமஸ்தமானபேரையு மிரட்சிக்கப்போகின்றார். என்றுசொல்லி உடனே மகுத்திக்கஜமானது ஒருகுளத்திலமர்ந்திருக்கின்ற ஒருதாமரைப் புஷ்பத்தைக் கொடியோடும் பறித்தெடுத்துப் பிடித்தாற்போல, நாமெல்லாரும் பார்த்துக்கொண்டிருக்கும்போதே இந்த ஸ்ரீகோவர்த்தனபர்வத்தை வேரோடே பறித்து உயரவெடுத்து, நமக்குக்குடையாகப் பிடித்து, சகலகோக்களையும் சமஸ்தமான சனங்களையு மிரட்சித்தார் இன்னுமிவற்றின் மத்தியில் அனந்த ஆச்சரியகரமான அதிமானுஷ லீலாசேஷ்டித வைபவாதிசயங்களைச்செய்தார். அவைகளையெல்லா மெடுத்துச்சொல்ல எங்களாலாகாது.

ஆகையால் நாங்களெந்தவிதத்தில் யோசித்தபோதிலும் இவர் மனுஷ்யமாத்திரரென்று தோற்றவேயில்லை காமியதேவதைகளான பிரம்மருத்திராதி தேவதாமச புருஷரில் ஒருவரென்றுந் தோற்றவில்லை ஸ்ரீமந்நாராயணனாகிய பரப்பிரம்மமேயென்று நினைத்துச் சங்கையுற்று, டோலாயமானமானசர்களாய்ச் சிந்தித்துக் கொண்டிருக்கின்றோம் என்று யாவருமேகக்கண்டமாய்ச் சொல்லவும், இப்படிச் சொல்லிக்கொண்டிருக்கிற கோபாலர்களைப் பார்த்து நந்தகோபர் ஒருவார்த்தை சொல்லுகின்றார்.

## ஸ்ரீ நந்தகோபர் வாக்கியம்.

வாருங்கள் மகாத்ம யோக்யர்களாகிய இஷ்டபந்து சனங்களே! இந்த ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய திருவவதார காலத்தில் கார்க்கேயமகாமுனீந்திரர் எழுந்தருளி நாமகரண சமஸ்கார திருவிலச்சினை செய்தபிறகு ஒரு ஏகாந்தப்பிரதேசத்தில் என்னை யழைத்து அவர்சொன்ன பிரகாரமே யுங்களுக்கு நான் சொல்லுகின்றேன். நீங்களும் சிரத்தையுடன் கேளுங்கள்.

அஃதெப்படியென்றால் இவர் தமது கிருபாமாத்திரத்தினால் சாக்ஷாத்காரமாகிய ஸ்ரீபகவானே யெழுந்தருளி உமக்குப் புத்திரனாக விளங்குகின்று

ரல்லாமல், சாமானய புத்திரனல்லா இவரை அனாதி நிதனராகிய பரமாத்மாவாகத் தியானியுங்கள் இவர் இவ்வுலகத்திலுள்ள சாதுசஜ்ஜனங்களும் நலிந்து உலகத்தாமங்களும் க்ஷீதித்தபடி, தமது ஆசிரிதசனங்கள் மனது சங்கையுறறுத் தியானிக்கும் காலங்களதோறும், துஷ்டநிக்ரக சிஷ்டசம்ரக்ஷணங்கள் செய்து ஸாவதாமங்களையும ஸதாபிக்கும் பொருட்டுத் திருவவதரிக்கின்ற பரமாத்ம ஸ்வரூபரேயல்லது மற்றசசிறுதெய்வங்களோடு சமமல்லா தாம சாமானிய மானிடஜனமமுமல்லா இவருக்குண்டாகிய அவதாரங்களையும், அவ்வவதாரங்களின் அனந்த கல்யாண குணகண மகிமாதிசயங்களையும், வேதவேதாந்த புருஷ சூக்தங்களினாலும் அவ்வேதபுருஷனாலும் அளவிட்டுரைக்கக் கூடாது என்று சொல்லிப் பின்னுஞ் சொல்லுகின்றார்

வாருங்கள் எனது பிரியமானபந்துக்களே! இந்த ஸ்ரீகிருஷ்ணபகவானை வர பூர்வயுகங்களில் தேதீப்யசுவர்ண காரத்தையும், சுத்தஸ்படிகம்போன்ற வெளுப்பாகாரத்தையும், திவ்யரத்நமய மாணிக்ய செவ்விய புஷ்பாகாரத்தையும் வகித்து பிரஸ்துதத்தில் நீலமேகம்போன்ற ஸ்ரீகிருஷ்ணநாமதேயத்தையுடைய சாவஜ்கன மோகனாகார சுந்தரஸ்வரூபத்தை யுடையவராய் விளங்குகின்றார் இன்னும் இந்த ஸ்ரீமாதவர் பூர்வத்தில் தங்கள் தபோபலத்தினாலே தேவாசுரர்கள் மனிதசனுஷங்களையடைந்து அரசர்களாய அதிகாரங்களையச் செலுத்துமபோது, வேதத்தாம விதிகளமாறி ராஜ்யங்க ளராஜிகமாகி ராஜ சோரர்களால் உலகஜனங்களும் சாதுக்களு நலிவடையுங்காலத்தில், பிருதுருஷப, பரத, துரு, இவர்கள் முதலாகிய ராஜபுருஷ சிரேஷ்டாவதாரங்களையும் பக்தசன சம்ரக்ஷணமாகிய நாநாவித அவதாரங்களையுஞ் செய்து ராஜ சோர சிக்ஷைகளையும், பாஷண்டதாம நிவாரணங்களையும், ஆசிரிதவிரோத நிக்ரகங்களையுஞ் செய்த மகாமகிமைகளையுடைய திவ்யமூர்த்தி இவரா ரென்றுஞ் சொன்னார்

ஆகையால கேளுங்கள ஜனங்களே! இவருடைய சரித்திராதிசயங்களில் ஆச்சரியப்பட வேண்டுவதில்லை. இவைமாத்திரமல்ல இன்னுமனந்த மதிசயங்களுண்டாக விருக்கின்றன இவரால் நமக்கு நேரிடுஞ் சங்கடங்களெல்லா மொழியப்போகின்றன இந்த ஸ்ரீகிருஷ்ண பகவான ஸ்ரீமந்நாராயணுமச ஸம்பூதராய்த் திருவவதாரஞ் செய்தருளினரென்று எனக்குப் பிரமாண பூர்வகமாகச்சொல்லி, கார்க்கேயமாமுனி தமதாச்சிரமத்திற்கு எழுந்தருளினார். வாருங்கள் உத்தமர்களே! நீங்களும் என்னைப்போலவே இந்த ஸ்ரீபகவானுடைய அதிமானுஷ லீலா வைபவங்களை மனமுகந்து தியானித்து, ஸ்ரீபகவத் பக்தி ஸகிதர்களாய் ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய கிருபைக்குப் பாத்திரர்களாய் உஜ்ஜீவியுங்க ளென்றுசொன்னார்

வாரீர் உத்தரராவதஸல ரதநமே! அந்த கோகுலஜன ஸமூஹங்கள் நந்தகோபரால் இந்தப் பரமரஹஸ்யார்த்தங்க ளெல்லாம விசித்மாயறிந்து சங்கையற்று, பரமானந்த பரிதர்களாய ஸ்ரீபகவானையும் நந்தகோபரையும பூஜித்துக் கொண் டிருந்தார்கள். திரிலோக வந்திதனை இந்திரனவண தனதுயாகத

தைச் செய்யாமல் பாவதபூஜையைச்செய்த கோபாலர்கள் விஷயத்தில் கோபித்துத் தனது அதிகாரத்திலடங்கிய மேகத்தைவிட்டுச் சில வருஷங்களை வருஷிப்பித்தும் பெருங்காற்றாக வடிப்பித்தும் கோகுலத்தவர்களை அதஞ் செய்யநினைத்த நினைப்பையழித்து சாதுக்களாகிய கோபாலஜன ஸமூகங்களையும் கோபிகாஜனங்களையும், கோவின ஸமூகங்களையும், மற்றுமுண்டான சேதனுசேதன ஸமூகங்களையும்கோவர்த்தனகரரா யிரக்ஷித்த பரமகாருண்ய மகோத்தமராகிய ஸ்ரீகிருஷ்ணபகவான இந்திரனைக் காவாபஹாரஞ்செய்து க்ஷமித்து, அவ்விந்திரனையும் சமஸ்தமானபேரையும் அநுக்கிரஹித்தார் அதுபோல் நமது இந்திரிய தோஷங்களையும் போக்கி, நமக்கு ஸ்ரீபகவத் பக்தி விலக்ஷணஜ்ஞான யோகத்தை அநுக்கிரகஞ் செய்யக் கடவார்

# இருபத்தேழாவது அத்தியாயம்.

கலி விருத்தம்

நேருமிந்திர னேமிகத்தவன
சாருந்திவ்ய குணுதிசயமறந்
தேருங்கோகுலத் தோரையுமசிந்தத்தால
பாரபதத பதந்துதித்தானரோ

இந்திரனுனவன் திரிலோகாதிபதித்வ காவத்தால் ஸ்ரீபகவானுடைய கல்யாணகுணங்களை மறந்து கோகுல ஜனங்களை நலியச்செய்கதினுலே அபராதத்தை க்ஷமிக்கச் செய்வதற்காக காமதேனுவை முன்னிட்டு ஸ்ரீகிருஷ்ண பகவானிடத்திற்குவந்து கோவிந்தப் பட்டாபிஷேகஞ்செய்து துதித்தானென்று சொல்லுகின்றது.

வாரீர் கலிபுருஷ காவாபஹாரனுகிய மகோத்தம ராஜவல்லபனே! மகா பிரளயவாதத்க மென்னுமூழிகால மேகங்களைக்கொண்டு கோகுல ஜனங்கள் பிராணபீதியடைந்து நலிபும்படி கல்மழைகளை வருஷிப்பித்து யதாஸ்தானத்தை யடைந்த தேவேந்திரன் தேவசாரணர்களால் ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய அதிமானுஷ சேஷ்டித கல்யாணகுணங்களைக் கேள்விப்பட்டு, மஹத்தாகிய ஆச்சரியத்தையும் பீதியையும் அடைந்தான், அப்படியடைந்த இந்திரனுனவன் சாந்தசித்தனுகி, அஹோ! என்னகாரியஞ் செய்தேன்! ஸ்ரீபகவான் விஷயத்தில் அபராதங்களை நடத்தினேனே, ஐயோ! இதற்கினி யென்னசெய்யத்தக்கது? என்று சிந்தித்து, மூவுலகராஜ்ய ஐஸ்வரிய விபவத்தை நிந்தித்து நிகாவசிரோமணியாகி, ஓ! ஹோ துஷ்ட நிக்கிரஹ சிஷ்ட பரிபாலனுத்மக சர்வ லோகஜகத்பிரபுவே! யாங்கள் உமது கடாக்ஷவீக்ஷண்ய லேசாமஸங்களை யடைந்து லோகபாலர்களாகி, இந்தப்பிராகிர்தகர்ம விபவைசவரிய மதத்தினுல்

என்னை நாங்கள் மறந்துவிடுகிறோம் அப்படி மறந்து எங்கள் சிரேயசுகளுக்கு இடர் வரும்போதெல்லாம் எங்கள் துஷ்டத் தன்மையைப் பரமகிருபையால் திருவுள்ளத்தில் நினையாமல், எப்பொழுதும் இரக்ஷிக்கின்றீர். ஓ ஸ்ரீ ஹரி! எங்கள் அபராதங்களை க்ஷமிக்கக்கடவீர் என்று அனந்தவிதமாகத் துதித்தனன்.

இப்படி துதித்த இந்திரனானவன் தேவதா சுரபியான காமதேனுவை யழைத்துக்கொண்டு பூமியினிடத்தில்வந்து, பசுக்கூட்டங்கள் பலதிசையினும் பரவிப்பிரிந்துமேய கோபாலகுமாரர்கள் அந்தப்பசுக் கூட்டங்களைக் காத்துப் பலதிசையினும் போயிருக்கத் தனித்தவரா யெழுந்தருளி யிருக்கின்ற திருத்துழாயமாலை மார்பராகிய ஸ்ரீகண்ணபிரானைத் தன்னுடைய ஆயிரங் கண்களுங் களிகூரக்கண்டு ஆனந்தங்கொண்டு, நல்லசமயம் வாய்த்ததென்று உள்ளமுருகி, ஸ்வாமி சந்நிதியில்வந்து இரண்டுகரங்களையுங்கூப்பி, சூரியமண்டலத்தைப்போல பிரகாசிக்கின்ற அனந்த திவ்ய ரத்நங்களிழைத்த ஸ்வர்ண கிரீடமானது ஸ்ரீ நந்தவத்ஸலராகிய ஸ்ரீ பகவானுடைய இரண்டு திருவடித் தாமரைகளுக்குத் திருப்பாதுகையைப்போல அலங்காரமாகும்படி ஸாஷ்டாங்கமாகத் தண்டன் சமர்ப்பித்து, இரண்டு கரங்களையும் உயரவெடுத்து அஞ்சலிசெய்து துதிபூர்வகமாகச் சொல்லுகின்றான்.

## இந்திரனுடைய வாக்கியம்.

வாரீர் ஸ்ரீஜகதீசுவரராகிய ஸ்ரீபகவானே! தேவரீர் இவ்வுலகத்தில் திருவவதாரஞ் செய்தது பிரமஹா, சிவன், நான் முதலிய சர்வாதமகோடிகளினுடைய அபராதங்களை க்ஷமித்து இரட்சிக்கும்பொருட்டேயல்லது நிகிலஹேயகுண மில்லாதவரான உமது ஸ்வயப்பிரயோஜனங்களுக்கல்லவென்று வேத வேதாந்தங்களாலும், வேதபுருஷனாலும், வேதாந்த தத்வஜ்ஞானிகளினுடைய சம்பூர்ண ஹிருதயங்களினாலும், பிரதிபாதிக்கப் படுகின்றது. வாரீர் துஷ்டசனநிக்ரஹ சிஷ்டசனபரிபாலன வல்லவரே! பிரமன் முதலிய லோகேசர்களுக்கும், அடியேன் முதலிய தேவதாதி சமூகங்களுக்கும், சர்வப் பிரபஞ்சங்களுக்கும், தாயுந் தந்தையுங் குருவுமாயிருக்கின்ற உமது ஆஜ்ஞையினால், நாங்கள் ஒவ்வொரு லோகங்களுக்கு அதிகாரஞ் செலுத்துகின்றோம் இப்படி அதிகாரஞ் செலுத்துகின்ற நாங்கள் எங்களை முழுவதும் மறந்து கர்வித்து மூடமதி கொண்டவர்களாகி, ஸ்ரீசர்வேசுரராகிய உம்முடைய ஆதீனமாகிய பிரபஞ்சங்களையும் வேதோக்த நியமிதங்களான கர்மங்களையுஞ் சிந்தியாமல் ஸ்வதந்தரித்து, விவேகோதய ஜ்ஞானபுத்தி நஷ்டங்களை யடைகின்றோம்.

இத்தன்மைப்பட்ட எங்கள் பொருட்டாகவும், சகலவேததாம ஸ்தாபனத்தின் பொருட்டாகவும், பக்தர்களுடைய இஷ்டமுக விகாஸத்தின் பொருட்டாகவு மன்றோ நீர் திருவவதாரங்களைச் செய்தருளுகின்றீர்? வாரீர் ஸ்ரீவல்லபரே! நீர் சர்வஜ்ஞராகையால் அடியேனுடைய இருதயத்தைக் கிழிக்கும் நிமித்தமாகவன்றோ நீர் இவ்விந்திர யாகத்தைத் தடுத்தீர்? இது மூலமாய் எனக்கு நல்லுணர்வையுந்தந்தீர், இதனாலன்றோ எனது கர்வமழிந்து

உமது மகாமகிம கல்யாண குணங்களுக்குப் பாத்திரனாகும்படி அறிவு விளங்கியது. இப்படிப்பட்ட பரமகாருணிய கிருபாப்பிரவாதி சயங்களை அறியாமல், மகேந்திர போகைசுவரிய மதத்தை யுடையனாயப் பட்டாபிஷேகங் கொண்டிருக்கின்ற யான் செய்த என்னுடைய மகாபராதங்களை க்ஷமித்து இரக்ஷிக்கக்கடவீர். வாரீர் சர்வலோக விபுவே! இனியாவது ஸ்ரீபரவாசுதேவவிஷயத்திலும், ஸ்ரீபகவத் பக்தியுக்த சமானர்களாகிய ஸ்ரீபரம பாகவதோத்தமர்கள் விஷயத்திலும், அவித்தையினாலுண்டா யிருக்கின்ற அந்தகார மூடபுத்தியானது ஜனித்து அபராதங்களைச்செய்து சிரேயோ நஷ்டமாகாமல், ஞான முடையவனாகி யிருக்க அநுக்கிரகஞ் செய்யக்கடவீர்.

வாரீர் அதோக்ஷஜரே! இவ்வுலகத்தில் உமது திருவவதார மகிமையினால் பூமிக்குப் பாரமாகச் சனமித்துச் சகல சாதுஸஜ்ஜனங்களையும் நலியச்செய்து கண்டகர்களாக விளங்குகின்ற கம்சன்முதலாகிய துஷ்டர்களை நிக்கிரகம் பண்ணி, உமது சரணாரவிந்தங்களை ஆசிரயித்துக் கொண்டிருக்கின்ற ஸ்ரீபகவத் பக்தர்களுக்கு க்ஷேமங்களை யுண்டாக்கக்கடவீர். வாரீர் தேவ தேவோத்தமராகிய தேவதாசக்கரவர்த்தி! சர்வலோக சம்ரக்ஷண குணங்களினால் ஸ்ரீபகவானாகியும், சர்வாத்மாக்களுக்கு மங்களத்தின் பொருட்டுச் சர்வசாக்ஷியாகிய ஸ்ரீ அந்தரியாமியாகியும், சமஸ்தமான பேர்களுக்குங் குணானுபவஞ் செய்து உஜ்ஜீவிக்க மகாமகிம குணங்களையுடைய மகாத்மாவாகியும், சமஸ்த பிராணிகளும் தரிசனமாத்திரத்தில் பாவன மாகும்பொருட்டுச் சர்வலோக நிவாசராகியும், இந்த யயாதி மஹாராஜனுடைய வம்சமான யதுகுலம் பரிசுத்தமாவதற்கும், பூமிபாரநிவாரண மாவதற்கும், வேதபுருஷ தாமஸதாபனத்திற்கும், ஸ்ரீதேவகீ வசுதேவ நந்தகோப யசோதாப்பிராட்டி இந்நால்வர்களுடைய தபோபலம் பலித்து இவர்களிஷ்ட மீடேறவும் திருவுள்ளங் கொண்டு, அனந்த கல்யாணகுண சௌலப்யாதிசயங்களுடனே யதுகுலத்தில் திருவவதாரஞ் செய்தருளிய ஸ்ரீகிருஷ்ண பகவானாகியும் விளங்குகின்ற உமக்கு அனந்த தேவோபசார தண்டங்களைச் சமர்ப்பிக்கின்றேன்.

வாரீர் பரமகிருபா நிதியாகிய பக்தவத்ஸலரே! என்விஷயமாகிற இந்திர யாக பங்கத்தினால் நான் துரபிமானத்தை யடைந்து, மகா சாதுசஜ்ஜனர்களாகிய நந்தகோபர் முதலிய கோபாலஜனங்களை மகாவாயுவேகத்தோடுங் கூடிய சிலாவருஷங்களினால் நலியச்செய்த மகாபராதங்களை க்ஷமித்து இரக்ஷிக்கக்கடவீர். வாரீர் சர்வலோகசரண்யரே! உமது நித்தியயோகமாயாப் பிரபாவாதிசயங்களை எங்களாலறிந்து உஜ்ஜீவிக்கத் தரமோ? ஆகையால் புத்தி மாந்தியத்தினால் ஜனித்த சுதந்திர குணங்களைப்போக்கி யென்னைக்கும் க்ஷமிக்கும்படியாய் இப்பொழுதே நான் சரணமாக வடைகின்றேன் என்று சாஷ்டாங்கமாகத் தண்டன் சமர்ப்பித்து ஸ்தோத்திரஞ் செய்துகொண்டிருந்தான். இவ்விதங்களாகத் துதித்துக்கொண்டிருக்கின்ற தேவேந்திரனைப் பார்த்து அடுத்தவர்களிடத்தில் அன்புள்ளவராகிய ஸ்ரீகிருஷ்ணபகவானானவர் மலர்ந்த தாமரைக் கொப்பான முகமுடையவராய்ப் புன்னகைகொண்டு,

நீருண்டகாளமேகம் கர்ஜ்ஜிக்கின்றதுபோல் மகா கெம்பீரத்தோடு இந்திரனுடன் ஒருவார்த்தை சொல்லுகின்றார்.

## ஸ்ரீ பகவானுடைய வாக்கியம்

வாராய் அமராதீசுவரனே! சர்வ பிரபஞ்சங்களினுடைய விருத்தியின் பொருட்டு எனது கிருபையினால் இந்திரலோகைசுவரியங்களை யடைந்து, அவற்றினனுபவத்தினால் மதித்து, என்னையும், வேதசோதிதமான வைதிககர்மங்களையும், இவ்வுலகங்களையும், உலகத்தவர்களையும், க்ஷணத்திற்கு க்ஷணம் மறக்கின்றபடியினால் நான் ஏகந்தபுருஷனை இரட்சிக்க வேண்டுமென்று சங்கல்பிக்கின்றேனே! அந்தப் புருஷனுடைய ரசதமோகுணங்களினால் காரியங்களை விக்கினஞ்செய்து, சர்வதுணங்களை யழித்து, அவனைப் பரிசுத்தனாக்கி இரட்சித்துக்கொண்டிருக்கின்றேன். ஆனையினால் உனது விஷயமாக விதித்திருக்கின்ற இந்திரயாக பங்கஞ்செய்து, என்னிடத்தில் உனக்குச் சம்பூர்ணமான பக்தியுண்டாகும்படி பாவத்தாசனை செபவித்ததேயல்லது வேறில்லை. உனக்குச் சர்வமங்களமும் முண்டாகக் கடவது. நீ ஸ்ரீபகவதாஜ்ஞாக்கிரமமாகத் திரிலோகாதிகாரங்களைச் செலுத்தி, அகங்காரமுதலிய சுதந்திரகுணங்களை விட்டு, என்னிடத்தில் பக்தியுடையவனாய் நற்குணங்களை வகித்து, சிரேயோ சம்பன்னனாகிக் கெம்பீர சம்பத்துக்களை யநுபவித்துக் கொண்டிருக்கக்கடவாய் என்று சொல்லிக்கொண்டிருக்கின்ற சமயத்தில் காமதேனுவானது தனது சந்தானங்களான கோவின் சமூகங்களுடன் வந்து, பக்தஜன காமதேனுவாகிய ஸ்ரீகிருஷ்ண பகவானைப்பார்த்து ஸ்துதிபூர்வகமாக ஒருவார்த்தை சொல்லுகின்றது.

## ஸ்ரீ காமதேனுவினுடைய வாக்கியம்.

வாரீர் அரவிந்தலோசனராகிய ஸ்ரீகிருஷ்ணபகவானே! அந்தரேந்திரிய பகிரேந்திரிய நிக்கிரகவான்களாகிய பரமமுநீந்திரர்களால் சேவிக்கவுந் துதிக்கவுந்தகுந்த சர்வமங்கள கல்யாணகுணங்களை யுடையவராகியும், சர்வப்பிராணிகளுந் தங்களுழவினைப் பக்குவமான ஜன்மங்களிற் சம்பாதித்த பாவங்களையொழிந்து உய்வதற்கு முக்கியசாதனமாகிய கங்காப்பிரவாகத்திற்கு உற்பத்திகாரணமாயிருக்கிற சரணாரவிந்தங்களையுடைய ஸ்ரீவிஸ்வேசுவரராகியும், சர்வப்பிரபஞ்ச ஸ்வரூபராகியும் விளங்குகின்ற உம்மை நாங்கள் பரிசுத்த விலக்ஷணஞானங்களை வகித்துச் சாசுவதமாகிய பிரமஹானந்த சௌக்கியங்களை இப்படிப்பட்டதென்று உமது அவதார தரிசனப் பிரபாவத்தால் கண்டு கிருதார்த்தர்களாகின்றோம்.

வாரீர் தேவதேவ தேவதாசிரோரத்நமே! எங்களுக்கும் சமஸ்தமான தேவதைகளுக்கும் சமரக்ஷணார்த்தமாகத் திருவவதரித்திருக்கின்றவராய்ப் பிரகாசிக்கின்ற உமக்கு, இவ்வண்டாதிபதியாகிய சதுர்முகனுவர் என்னையும் இவ்விந்திரனையும் பார்த்து, இவருடைய அபராத க்ஷாபணத்தின்

பொருட்டும், தாமத்தை நிலைநிறுத்துவது முதலிய பூமிபார நிவாரணத்தின் பொருட்டும், தேவதா சக்ரவர்த்தி நாமமாகிய மகேந்திர விபவாதிசய சார்வேந்திராதி தேவபட்டத்தைச் சமர்ப்பித்து வரும்படி ஆஜ்ஞாபித்து, கோகண சமேதையாகிய என்னையும் இவ்விந்திரனையும் அனுப்பினார் ஸ்ரீயப்பதியாகிய தேவரீர் அங்கீகரித்தருள வேண்டும். என்று துதித்து, ஸ்வர்ண பாத்திரங்களில் தேவாமிர்தத்திற்கொப்பாகிய க்ஷீரங்களைச் சுரந்து, சுகந்தபரிமள திரவியங்களுடன் அமைத்தது.

அச்சமயத்தில் தேவேந்திரனானவன் ஐராவதமென்கிற வெள்ளையானையைச் சமஸ்த பூஷணாலங்காரத்துடன் அழைத்துவந்து, தேவ சாரணர்களையனுப்பிச் சகல புண்ய தீர்த்தங்களையும் அழைப்பித்து, அனந்தமாகிய ரிஷி சமூகங்களும் சகலதேவதாகணங்களும் இந்திராணியும் ரம்பைமுதலிய ஸ்திரி ஜனங்களுஞ்சூழ்க் காமதேனு சகிதனாயிருந்து, ஸ்ரீபுருஷசூக்த வசனங்களைச் சொல்லி, அந்த ஐராவதத்தின்மீது சுரபிக்ஷீரமுதலிய சர்வ புண்ய தீர்த்தங்களையும் தேவதுந்துபி முதலிய சர்வமங்கல வாத்தியங்களுடன் பவனியாகக் கொண்டுவந்து, அதன் துதிக்கையினால்லெடுத்துச் சமர்ப்பிக்க ஸ்ரீபகவானுக்குத் திருவபிஷேகஞ்செய்து, ஈரந்துவட்டி, வஸ்திரபூஷண கந்தபுஷ்பாலங்காரங்களைச்செய்து, கோடிசூரியப்பிரகாச தேவகிரீடத்தைத் திருமுடியிற்சாத்தி, சர்வயக்ஷகின்னரர் கருடகந்தர்வர் முதலியவர்கள் ஜயவிஜயீபவ வென்று துதிக்க ஸ்ரீகோவிந்த நாமத்தை ஸ்ரீகிருஷ்ணபகவானுக்குச்சாத்தி, அங்குள்ள சமஸ்தமான ஜனங்களோடு ஏககண்டனாய ஸ்ரீகோவிந்தா! ஸ்ரீகோவிந்தா! இரட்சியும் இரட்சியும் என்று துதித்தான்

அத்தருணத்தில் தும்புருநாரதாதிகள் ஸ்ரீபகவந்நாம ஸ்மரணாதி கானங்களைச் செய்தார்கள் அரம்பையர்கள் முதலிய அப்சரஸ்திரீகள் நர்த்தனஞ் செய்தார்கள். மற்றத்தேவதைகள் யாவரும் புஷ்பவருஷங்கள் வருஷித்தார்கள். நிகிலரிஷிகணங்களும் மௌனிகளும் வேதாந்த வாக்கியங்களால் ஸ்ரீபகவானுடைய ஆஸ்சரிய குணசேஷ்டிதங்களைப் புகழ்ந்து துதிக்கும்போது, இந்த மூன்றுலோகங்களும் சௌக்கியநரங்களாய் விளங்கின சமஸ்தமான கோவினங்களும் தேவாமிர்தத்திற்கொப்பாகிய க்ஷீரஸம்ருத்திகளோடு விருத்தியடைந்தன. நிகிலபுண்ய நதிகளும் ஜலஸம்ருத்தியாய அலைகளோடும் கூடித் தெளிந்து பிரவாஹித்தன. சகலமானவிருக்ஷங்களும் நானாவித ருசிபக்குவங்களான பலங்களோடும் பலித்து மதுக்களை வருஷித்தன. சர்வ சஸ்யங்களும் விருத்தியடைந்து பலித்தன சகலமான கொடிகளும் நானாவித சுகந்த பரிமள புஷ்பங்களுடன் விளங்கின பர்வதாதிகள்யாவும் நானாவித மணிகள் இரத்னப் பிரகாசங்களோடு ஜ்வலித்தன

அந்தப்பிருந்தாவன புண்யப்பிரதேசங்களில் வாசஞ்செய்கின்ற சமஸ்த சேதனாசேதனஸமூஹ சர்வப்பிராணிகளும் ஆசாபாசங்களைவிட்டு, மஹா குணங்களைவஹித்து, ஸ்ரீ கிருஷ்ணபகவானையே தஞ்சமாகநம்பி விருத்தி

யடைந்து பிரகாசித்துக்கொண்டிருந்தன. இப்படிப்பட்ட லோகங்களைக் கரங்களுக்குச் சந்தோஷத்தை யடைந்து இவ்விந்திர காமதேனு சகிதராய் அனந்தமாகிய தேவருஷி சமூஹங்கள் தம்மைச் சூழ்ந்திருக்கும் ஸ்ரீகோவிந்த பகவானிடத்தில் தேவேந்திரனானவன் அனுஜ்ஞையைப் பெற்று, ஸ்ரீ பகவானைத் துதித்துக்கொண்டே தனது ஸ்வர்க்கலோகத்திற்குப்போய்ச் சேர்ந்தான்.

# இருபத்தெட்டாவது அத்தியாயம்.

### கட்டளைக் கலிப்பா.

திருத்திறநந்தகோபர் திவ்யயேகாதசித்தி
னருந்தவமிழைத்துத்தீர்த்த மாடிடுஞ்சமயந்தன்னில்
கருதியநந்தகோபர். காணுமையாலேகண்ணன்
வருணலோகத்திற்சென்ற வாறினைச்செப்புவாமே

நந்தகோபர் ஸ்ரீஹரிதிவசமாகிய ஏகாதசிவிரதம் அனுஷ்டித்துத் துவாதசி பஞ்சவுஷக்கால ஸ்நானத்திற்கு ஸ்ரீயமுனாநதிக்கு எழுந்தருளித் தீர்த்த மாடுகின்ற சமயத்தில் தனுஜசமயமாகையால் வருணப் பிருத்தியனானவன் தனது மாயையினாலே ஸ்ரீநந்தகோபரை வருணலோகத்தில் கொண்டுபோ யொளித்ததும், கோகுலத்தவர்களுடைய முறைகளைக்கேட்டு ஸ்ரீகிருஷ்ண பகவானானவர் வருணலோகத்திற் கெழுந்தருளி ஸ்ரீநந்தகோபரை மீட்டுவந்ததும், கோகுலத்தவர்களுக்கு ஸ்ரீபரமபத முதலிய சர்வ புண்யலோகங்களையும் சமஸ்த பிரபஞ்சங்களையும் தமது திவ்யஸ்வரூபத்தில் ஸேவிக்கும்படிக் கிருபை செய்ததும் சொல்லுகின்றன

### ஸ்ரீசுகர் வாக்கியம்.

வாரீர் மஹாராஜனே! கோகுல சக்ரவர்த்தியாகிய நந்தகோபரானவர் ஸ்ரீஹரி திவச விரதங்களை மிகவும் பக்தி சிரத்தையோடு அனுஷ்டிக்கின்ற பரமவைதிக ராகையால், ஒரு ஏகாதசி திவசத்தில் ஸ்ரீஹரியைப் பூஜித்துக் கொண்டிருந்து, அன்று இராத்திரிகாலமெல்லாம் கண்விழித்து, தனுஜகால மென்றுணராமல் பஞ்சவுஷக்காலமென்று நினைத்து, சிலகோபால ஜனங்களுடன் கூட ஸ்நானத்திற்கு யமுனாநதிக் கெழுந்தருளி, ஸ்ரீஹரி! என்று சங்கல்பித்துக் கொண்டு, ஸ்ரீகிருஷ்ணா! ஸ்ரீமாதவா! ஸ்ரீகோவிந்தா! ஸ்ரீபுருஷோத்தமா! ஸ்ரீபக்தவத்ஸலா! சரணம் சரணம் என்று ஸ்ரீபகவந்நாமங்களை ஸ்துதி செய்துகொண்டு தீர்த்தமாடுகின்ற சமயத்தில் வருண தேவனுடைய பிருத்தியர்களில் ஒருவனாகிய ஓர் அசுரனானவன் இந்த ஸ்ரீநந்த கோபரைப் பார்த்துத் தனது பாபசாதுரியத்தினால் இவரைக்கிரஹித்துக்கொண்டு வருணபகவானு

டைய சமுகத்தில் சேர்த்தனன். அத்தருணத்தில் சமஸ்தமான கோபாலர்க ளும் நந்தகோபரைக் காணாமல் திடுக்கிட்டேங்கி, யெங்குந்தேடிக் கலங்கி, ஸ்ரீபலராம கிருஷ்ணர்களுக்குத் தெரிவித்து, ஆ ஆ காரங்களைச்செய்து முறை யிட்டார்கள்.

வாரீர் ராஜயோகியான பரிக்ஷின் மகாராஜனே! ஸ்ரீசர்வஜ்ஞராகிய ஸ்ரீ கிருஷ்ணபகவானானவர் பரமஸாது சிகாமணியாகியும் தமக்குப் பிதாவாகியும் விளங்குகின்ற நந்தகோபரைக் குறித்துக் க்ஷணகாலஞ் சிந்தித்து வருணப் பிருத்தியனால் வருண நகரத்தில் வருண பகவானுடைய சமீபத்தில் சேர்க்கப் பட்டிருக்கின்றாரென்றறிந்து, அந்தக் கோபாலர்களைப் பயப்படாதிருங் களென்று அபயப்பிரதானஞ்செய்து, ஸ்ரீபகவான் தனது யோகமாயாப் பிரபா வத்தினால் அஷ்டதிக் பதிகளில் ஒருவனாகிய வருண பகவானுடைய மகாநக ரத்திற்கு எழுந்தருளினார்.

## ஸ்ரீ வருணன் வாக்கியம்.

ஸ்வாமி யெழுந்தருளின சமாசாரத்தைச் சாரணர்களாலறிந்த வருணப கவானானவன் அர்க்கியபாத்திய வாசமனாதி அனந்த பூஜாதிரவியங்களுடன் ஸ்ரீபகவானுக்கெதிர்கொண்டழைத்துத் தரிசனஞ் செய்து பரமசந்தோஷனாகி, மிகுந்த பக்திசிரத்தையுடன் வேதோக்தக்கிரமமாக ஆராதித்து ஷோடசோபசாரங் களைச்செய்து, திவ்ய புஷ்பமாலிகைகளைச் சமர்ப்பித்து ஒருவார்த்தை சொல்லுகின்றான்.

வாரீர் கருணாபயோநிதியாகிய ஸ்ரீமாதவரே! யோகீசுவரர்களாகிய மகாநு பாவர்களாலும், லோகேஸ்வரர்களாகிய பிரமாதிகளாலும், சரணமடைந்துய் வதற்குரியனவாகியும் அவர்களுக்கெட்டுதற் கரியனவாகியும் விளங்குகின்ற உமது பாதாரவிந்தங்கள், பிரத்தியக்ஷமாக ஒருகோணாதிபதிகளுக்கூடாது என்னை வகித்திருக்கிறாயென்னையும் கடாக்ஷித்து மன்னித்து இரக்ஷிக்கும் பொருட் டு எழுந்தருளினதால், இந்நகரமானது மகாபாவனங்களை யடைந்தது எனது இருகையமும் கிருதார்த்தங்களை அடைந்து பிரமஹானந்த சந்தோ ஷங்களுண்டாகப் பெற்றது உமது ஸேவார்த்தங்களினால் நானசாவுசௌக் யங்களையுமடைந்து, சரீரேந்திரியங்களின் தாபங்களற்று, அவைகளைப் பெற் றுக் கொண்டதற்குரிய மகத்தான சௌக்ய சுகாதிசயங்களை யடைந்துய்ய வும் பெற்றேன் இந்த நந்தகோபர் தேவரீருக்குப் பிதாவென்கிறது தெரியா மல் கொண்டுவந்தார்கள். அந்த அபராதத்தைப் பொறுத்து அடியேனை இரட் சிக்கவேண்டும் என்று வினவுகிற வருணனைப் பார்த்து சந்தோஷித்த ஸ்ரீகிருஷ் ணபகவானானவர் அவனிடத்தில் சில்வுபெற்றுக்கொண்டு, நந்த கோபருடன் யமுனைக்கரைக்கு வந்து சேர்ந்தனர்.

பின்பு நந்தகோபர் கோபாலர்களுடன் தான் வருணலோகத்திற் கண்ட அதிசயங்களையும், அந்த வருணனால் ஸ்ரீகிருஷ்ணபகவான் பூஜிக்கப்பட்டு பிரதி உத்தரஞ் சொன்னது முதலியதுகளையுஞ் சொல்லி மிகவும் ஆச்சரியப்பட்டு

னர். அப்போது சகல கோபாலர்களும் ஸ்ரீகிருஷ்ணபகவானைப் பூஜித்து உத்தமமான கதியை அடைய விரும்பினார். ஸ்ரீகிருஷ்ண பகவான் அவர்களுடைய அன்பையறிந்து, நித்ய திவ்விய தேஜோமயமாகியும், சாசுவதமாகியும் ஒன்றினாலுந் தீண்டப்படாததாகியும், ஆதிமத்தியமுடிவில்லாததாகியுமிருக்கிறதம்மிட நிஜரூபத்திலே கோடிசூரிய சமானர்களாயிருக்கிற நித்தியசூரிகளால் சூழப்பட்டும், அதிசயமான ஐசுவரியங்கள், அனேககோடி நடபாவிகள், கிணர்கள், நாநாவிதமான தாமரைத் தடாகங்கள் நந்தவனங்கள், இவைமுதலாகிய நித்தியமான சம்பத்துக்களால் நிறைந்தும், மகான்களால் அர்ச்சிராதிமார்க்கத்தால் அடையத்தக்கதாயும், சத்புருஷர்கள் சரணாகதி மார்க்கப்படிக்கு ஸ்வாமியைச் சரணாகதிபண்ணி அடையத்தக்கதாயு மிருக்கிற ஸ்ரீ வைகுந்தமானது வாக்குக்கும் மனதிற்கும் எண்ணவொண்ணாத பிரபாவமுடையதா யிருந்தாலும்; தன்னைப்போலொத்த அன்பனிருக்கையி லொன்றுங் குறைவில்லை யென்பது தெரியப்படுத்தவேண்டி அந்த யமுனைக்கடுத்த பிரமகிருதமென்னும் பேருடைய மடுவினில் ஸ்ரீகிருஷ்ணஸ்வாமியினுடைய ஆக்கினையின்படி ஸ்நானஞ்செய்து கொண்டிருக்கிற அவர்கட்கு கியானக்கண்ணைக் கொடுத்து, ஸ்ரீவைகுண்டலோகத்தையுந் தம்மிட நிஜரூபத்தையுங் காக்ஷிகொடுத்தனர்.

அதைக்கண்டு சேர்ந்த கோபாலர்களனைவரும் அந்த ஆனந்தத்திலே ஒருமுகூர்த்தம் பரவசர்களாயிருந்தார்கள். பிறகு ஸ்ரீகிருஷ்ணபகவான் கோபாலர்களை மடுவிலிருந்து கரையேற்றி வீட்டிற்குக்கொண்டுவந்து சேர்ந்தனர். பின்பு யமுனையிற் கண்ட ஆச்சரியங்களை நினைத்துக்கொண்டு, ஸ்ரீகிருஷ்ண பகவானை ஸ்ரீமந்நாராயணரென் றெண்ணி, சகலகோபாலர்களும் அவரையே ஆராதனஞ் செய்துகொண்டிருந்தார்கள்.

# இருபத்தொன்பதாவது அத்தியாயம்.

கலி விருத்தம்

பாலகிருஷ்ணன் சுக்கிலபக்ஷவர்ணனையும்
சாலகோபியர் செய்யுஞ்சம்வாதமும்
ஏலுஞ்சர்வப்பிர பஞ்சத்தின்மன்றனையும்
மாலின்றன்னந்தாத தானமவழுத்துவாம்

இதனுள் சரற்கால சுக்கிலபக்ஷ சந்திரோதய வர்ணனைகளையும், ஸ்ரீபகவானுடைய வேணுகான ஸ்வரமகிமைகளையும், ஸ்ரீகிருஷ்ண கோபிகாஜன ஸம்வாதங்களையும், இரதிக்கிரீடாதி சயனங்களிலே கோபிகாஜன மனோரதானுபவங்களையும், சர்வப்பிரபஞ்ச மனோலய கோபிகாஜன சித்த சேத்னார்த்தமாக ஸ்ரீபகவ தந்தர்த்தானமுஞ் சொல்லுகின்றன.

## ஸ்ரீசுகர் வாக்கியம்.

வாரீர் ராஜேந்திரனே! பரமகிருபா பயோநிதியாகிய ஸ்ரீகிருஷ்ணபகவானவர் சமஸ்தகோபிகாஜனங்களின் இஷ்டங்களைப் பூர்த்திசெய்ய நிச்சயித்தவராய் எழுந்தருளி யிருந்தார், இப்படி யிருக்கின்ற காலத்தில் ஒரு திவஸத்தில் அஸ்தமனமாகி, சர்வப்பிராணிகளுக்கும் காமபோகங்களை அனுபவிப்பதற்குத் தகுந்த லட்சணயுக்த மன்மதன் புஷ்பசர வருஷங்களை வருஷிப்பதற்குச் சமயமாகிய இராத்திரிகாலம் வந்தது அப்போது மல்லிகைமுல்லை ஜாஜி சுகந்த புஷ்பங்கள் அலர்ந்து பரிமளித்தன வண்டினங்கள் புஷ்பங்களின்மேல் அணியணியாகப் பாய்ந்து தேனையுண்டு மகரந்தங்களைப் பூசிக்கொண்டு ரீங்காரவிசைகளைப் பாடின சந்திரகிரணங்களைப் புசித்துச் சார்வதா தம்பதிசமேதங்களாய்ப் போகங்களை யனுபவித்துக் கொண்டிருக்கத் தக்கசகோரஅன்றிலாதிபட்சிகள் கிழக்குத்திசையை விரும்பிப் பார்க்கின்றன.

மகாசௌந்தரிய வதிகளாகிய கோபிகாஜன சமூகங்கள் இஷ்டங்களை யடையத்தக்குந்த காலலக்ஷணத்திற் குரியவராகியும், சர்வப் பிராணிகளுடைய மோகாதிசய வாஞ்சைகளை விருத்தியடையச் செய்கின்ற ஸ்ரீமன்மத பகவானுக்கு வெண்கொடை உருவராகியும், இராத்திரிகாலமாகிய ஸ்திரீக்கு மணவாளராகியும் விளங்குகின்ற ஸ்ரீசந்திர பகவானானவர், கிழக்குத் திக்காகிய உத்தமஸ்திரீயைத் தமது கிரணங்களாகிய கைகளினால் ஆலிங்கனஞ் செய்து, இதுவரைக்கும் பிரிந்திருந்ததினால் அவளுக்கு உண்டாயிருந்த தாபங்களைத் தீர்த்து உதயமாயினார் அந்தச் சந்திரபகவானானவர் அவ்வுதய காலத்தில் கீழ்திசை மகளுடைய முகாரவிந்தத்திற்கு ஒரு குங்குமதிலகத்தைப் போலவும், விரஹிணீ ஜனங்களின்மீது யுத்தத்திற்குச் செல்லுகின்ற மன்மதனுக்குச் சுபத்தைக் காண்பிக்கிறதாக அமைத்திருக்கின்ற பூர்ணகும்பத்திற் கொப்பாகவும், மஹாகாமிகளாகிய ஜனங்களின் மோஹமாகிய கொடிகளை அறுக்கத் தாங்கின மாரனுடைய சக்ராயுதத்திற்கு நிகராகவும் தோன்றினார்

மேலும் இந்தச் சந்திரபகவான் காமகேளிரதிசளில் மூழ்கிப் பிரமித்துக் கொண்டிருக்கின்ற விரஹிணீ ஜன மிருகங்களைச் சயிப்பதற்கு மதனன் கொண்டுவந்த ஒரு மோகதீபமென்னவும் யவ்வனமுடைய ஸ்திரீபுருஷ ஜனஸமூஹங்களின் ஊடல்களாகிய கடினமனோர தாரணியங்களைக் கொளுத்த வஸந்தன் கொண்டுவந்த பெருந்தீயின் கொழுந்திற்குச் சமானமாகவும் விசித்ரமான ஸ்வரூபத்தை வஹித்து, விருத்தமாகியும் சிவந்த நிறத்தைக் கொண்டும் தோன்றினார் உடனே சகோராதிபக்ஷி ஸமூஹங்கள் மஹத்தான சந்தோஷங்களை யடையத் தக்கதாகத் தமது குளிர்ந்த கிரணங்களை வியாபிக்கச் செய்தார் வாரீர் இராஜோத்தமனே! ஸ்ரீபுருஷோத்தமராகிய ஸ்ரீபகவானானவர் பிருந்தாவன மகாலட்சுமீ முகாரவிந்தத்திற்கு அலங்காரமாகிய நவகுங்குமாங்கித திலகம்போல விளங்கிய இந்த மண்டலாகார சந்திரோதயத்தையும், இச்சந்திர கிரணங்கள் அவ்வனமெங்கும் வியாபித்துக் குளிர்ச்சியுண்டாக்குதலையும், அதனால் ஆம்பல்முதலிய நானாவித சுகந்தபரிமள

புஷ்ப வனங்கள் சோபிதமாக மலர்ந்து பிரகாசித்துக்கொண் டிருப்பதையும் இவைகளால் அவ்வன லட்சுமி யடைந்திருக்கின்ற சௌந்தரியங்களையும் கண்டார்.

இப்படி கண்ட பகவான் கோபிகாஜனத்தின் இஷ்டத்தை பூர்த்திசெய்யத் தக்கவராய ஸ்ரீயமுனாதீரத்தில் எழுந்தருளி, புன்னகையுடன் மஹாகம்பீர மதுர ஸ்வரங்களோடும் கூடிய வேணுவை தமது திருவதரத்தில் வைத்து கானங்களைச்செய்து விஹரித்துக் கொண்டிருந்தார், அத்தருணத்தில் அந்த வேணுஸ்வரத்தினால் அந்தப் பிருந்தாவனத்தில் விருத்தி யடைந்துக் கொண் டிருக்கின்ற சகல சேதனா சேதனங்களும் பிரமஹானந்த பரவசத்தைக் கொண்டு விளங்கின கோகுலத்தில் வாசஞ்செய்துக் கொண்டிருக்கின்ற சமஸ்தமான கோபாலர்களும் கோபிகாஜனங்களும் தங்கள் தங்கள் செவி யாகிய இந்திரியங்களினால் அந்த மதுரமான தேவகீதரஸங்களை வாரியுண்டு வேறேவிஷயங்களில் பிரவேசிக்கத் தக்க சித்தசூன்யர்களா யிருந்தார்கள் இந்த கோபிகாஜனங்கள் ஸ்ரீகிருஷ்ண விரஹவேதனா தாபங்களைச் சஹிக்க மாட்டாமல், பரம யோகிகளுக்கும் விடக்கூடாத சமஸ்த உலகவாழ்க்கைக் குரிய பிதா புத்திராதி சர்வசம்பந்தங்களையும், திவ்யாலங்காரங்களுக்குரிய தனகனகவஸ்த்ர ஆபரணாதிகளையும், போசன சயனாதி சகலானுபவங்களையும், க்ஷணமாத்திரத்தில் துறந்து விட்டவர்களாய்ப் புறப்பட்டார்கள்

வாரீர் அரசனே! அவர்கள் புறப்பட்டவகையை விவரமாகக்கேளும், சமஸ்தமான கோபிகா ஜனங்களும் தங்கள் தங்கள் கிரஹகிருத்தியங்களி னின்று முள்ளவர்களாய்ப் பசுக்களுடைய பாலைக் கறக்க நினைத்துக் கன்றுகளை யவிழ்த்து விட்டார்கள் அதில் சிலர் கன்றுகளை ஊட்டவிட்டுக் கறந்துகொண் டிருக்கின்றார்கள் சிலர் கன்றுகளை யணைத்துப் பால்கறக்க யத்தனமா யிருக்கின்றார்கள் சிலர் கன்றுகளை மறுகாலூட்ட விட்டுக் கட்டினார்கள் சிலர் கட்டிக்கொண்டிருக்கின்றார்கள் சிலர் கட்டயத்தனமா யிருக்கின்றார்கள் சிலர் பாலின்கலசத்தை யெடுத்துப்போய் அடுப்பில்வைத்துக் காய்ச்சுகின்றார்கள் சிலர் காய்ச்சிறக்கிக் கொண்டிருக்கின்றார்கள், சிலர் காய்ச்சுதற்கு யத்தனமா யிருக்கின்றார்கள், சிலர் பாலைக் காய்ச்சிறக்கினார்கள், சிலர் இறக்கப் போகின்றார்கள், சிலர் இறக்கயத்தனமா யிருக்கின்றார்கள், சிலர் காய்ந்தாறினபாலைத் தங்கள் குழந்தைகளுக்குவார்த்து ஊட்டினார்கள் சிலர் வார்த்துக்கொண்டிருக்கின்றார்கள், சிலர் வார்த்தூட்டயத்தனமா யிருக்கின்றார்கள், சிலர் காய்ந்தாறினபாலைத் தங்கள் குழந்தைகளுக்கு வார்த்தூட்டி மிகுதியிற் பிரை சேர்த்தார்கள், சிலர் பிரைசேர்த்துக் கொண்டிருக்கின்றார்கள், சிலர் பிரை சேர்க்க யத்தனமா யிருக்கின்றார்கள்.

சிலர் தங்கள் பர்த்தாக்களுக்கு உபசாரங்கள் செய்துக்கொண் டிருக்கின்றார்கள். சிலர் உபசாரஞ்செய்தானார்கள் சிலர் உபசாரஞ்செய்ய யத்தனமா யிருக்கின்றார்கள், சிலர் போஜனஞ் செய்துகொண் டிருக்கின்றார்கள், சிலர்

புசித்தாய்விட்டார்கள், சிலர் புசிக்க யத்தனமாயிருக்கின்றார்கள் சிலர் தங்கள் அளகபாரத்தில் சுகந்தபரிமள ஜாஜீ புஷ்பமாலைகளை அலங்கரித்துக்கொண்டிருக்கின்றார்கள். சிலர் அலங்கரித்துக்கொண்டார்கள். சிலர் அலங்கரித்துக்கொள்ள யத்தனமாயிருக்கின்றார்கள் சிலர் நவரத்னகசிதமான ஸுவர்ணாபரணங்களை யணிந்துகொண்டிருக்கின்றார்கள் சிலர் அணிந்துகொண்டார்கள். சிலர் அணிய யத்தனமாயிருக்கின்றார்கள். சிலர் கோதுமையன்ன பாயஸங்கள் முதலிய நாநாவிதருசி வாசுகங்களாகிய விசித்திர சிற்றுண்டிகளைப் பாகஞ்செய்து கொண்டிருக்கின்றார்கள் சிலர் பாகஞ்செய்து அவரவர்களுக்கு விநியோகித்துக் கொண்டிருக்கின்றார்கள், சிலர் விநியோகிக்க வேண்டுமென்று யத்தனமாயிருக்கின்றார்கள் சிலர், தங்கள் சுந்தரமாகிய நேத்திரங்களுக்கு அஞ்சனங்களிடுகின்றார்கள், சிலர் அஞ்சனங்கள் குழைக்கின்றார்கள், சிலர் குழைக்க நினைத்துக் கொண்டிருக்கின்றார்கள்.

சிலர் தங்கள் குசபாரங்களில் திவ்யபரிமள ஸ்ரீசந்தனாதி சுகந்தங்களை யணிந்தார்கள் சிலர் அணிந்துகொண்டிருக்கின்றார்கள். சிலர் அணிய யத்தனமாயிருக்கின்றார்கள் சிலர் வஸ்திரங்களை நன்றாயுடுத்தினார்கள் சிலர் உடுத்திக்கொண்டிருக்கின்றார்கள், சிலர் முன்றானையைச் சொருகினார்கள் சிலர் முன்றானையைச் சொருகுகின்றார்கள் சிலர் அங்கங்கள் கூடிச் சந்தோஷித்தமானஸர்களாயிருக்கின்றார்கள் சிலர் ஸ்ரீகிருஷ்ண லீலைகளைக் குறித்தும் கிரஹகிருத்தியங்களைக் குறித்தும் வசனித்துக் கொண்டிருக்கின்றார்கள் இவ்விதங்களாகக் கோபிகாஸ்திரீ ஜனங்களெல்லாம் தங்கள் தங்கள் யதாஸ்தானங்களில் விஹரித்துக்கொண்டிருக்கின்றார்கள் இப்படியிருக்குஞ் சமயத்தில் ஸ்ரீபகவானுடைய முரளீகான மதுரஸ்வரங்கள் செவிகளில் நுழையும்போது, அவற்றுடன் அதிகதூரிதமாயக் கருமபுஷிலலைவளைத்து மன்மதன் தொடுத்து விடுகின்ற புஷ்பபாணங்களும் அந்தஸ்திரீகளினுடைய மார்பில் நுழைந்தன

அதனால் அந்தஸ்வரங்களைக் கேட்டமாத்திரத்தில் தங்கள் சரீரஸ்மரணங்களை மறந்து, கிரஹகிருத்தியங்களை யெல்லாம் எவையெவை எப்படியெப்படி யிருந்தனவோ? அவைகளை யப்படியப்படியே விட்டுவிட்டவர்களாகி ஸ்ரீகிருஷ்ணபகவானிடத்தில் வைத்த மனதுடையவர்களாகி, ஒருவர்க்கொருவர் சகிஜனங்களுக்குஞ் சொல்லாமல், அவரவர்கள் யதேச்சாவிகாரிகளாய பிராதாக்கள், பாத்தாக்கள், மைத்துனர்கள், இவர் முதலிய பந்துஜனங்களால் தகையப்பட்டபோதிலும் லேசமாத்திரமும் அவர்கள் ஆக்ஞைக்கஞ்சாமல், வேலைக்குறைவையும் யோசியாமல், நிராதி தாரணாயச சாவசங்க பரிததியா கிகளைப்போல வெளிப்புறப்பட்டு, அந்தச் சுகீதத்துவனி மார்க்கமாக வேகமாயும், மந்தமாயும், பூரிதகஸ்தனங்கள் குலுங்கவும், கொடிபோன்ற இடைதுவளவும், கூந்தலசோரவும், மேகலைதாழவும் ஸ்ரீகோவிந்த சந்தரிசனார்த்த குதூஹலபரர்களாய் ஸ்ரீயமுனாநதீதீர சமீபத்தில் வந்து சேர்ந்து, சந்திரகிரணங்களைக் குவித்தகொத்த திருக்கின்ற வெண்மணற் குன்றுகளின்மேல் அன்னங்கள் கும்புகும்பாய்வந்து தங்கியதற கொப்பாகவும், அவ்விடத்திருக்

சமஸ்த பிராணிகளுடைய ஜனமாநதிரததிற செயத பாபஙகளைபபோக்கி இரக்ஷிக்கின்ற பிரபாவசிரேஷ்டரா யிருககினறுா ஆகையாலநதப பகவானுடைய மஹாமகிமாதிசய சுகுணஙகள, ஸ்ரீ அனநதராலும வேதபுருஷராலும அளவிட்டுத துதிபபதறகு அருமையா யிருககினறன ஸ்ரீ அபபிரமேயராகியும தமமுடைய திவயாவதாரஙகளில அதிமானுஷ லீலாசேஷடிதஙகளை யாசரிததும அவைகளின பிரயோஜனஙகளைத தான அடையாதவராகியு மிருககினறபடியால, ஸ்ரீசுகுணமூாததியாயவிளஙகாநினற இநத ஸ்ரீகோவிநதமூாததியினுடைய தியானதரிசனுனுபவஙகள அடுததவாகளாகிய சமஸத ஜனஙகளும தேஹசமபநத சாமானய தோஷஙகள நசிகக மோக்ஷததை யடைவதறகு ஹேதுவாயிருககினறன வென்று நினைககககடவீா

வாரீா பரதகுல சிரேஷ்டனே! இனனும இநத ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய அபேக்ஷைகளிலசுததசதவாதமக திவயகலயாணகுணஙகளை நானறிநத மாததிரஞ சொலலுகினறேன அதனைச சாவதான சிததமாயக கேடபீராக இநத ஸ்ரீபகவானை எநத ஜனமிகளான போதிலும பிதாபுததிர பாதத ஸகோதராதி உலகசாமானய பநது சமபநததநினுலாவது குலைததுருவென்று நினைததாவது, இவருடைய ஜகனமோகனுகார ஸவரூபததினிடததிலும, திவயகுண சகதியிலும, பிரமிதது மோஹிததாவது, இவர்சௌரியாதி குணஙகளுககுப பயநது பீதியை யடைநதாவது, இவருடைய ஹேயபுதிதராஹிதத்திய சுதத ஸதவாதமக பரமகிருபாதிசய நிதயகலயாண குணஙகளுக்கு ஈடுபடடவாகளாகிய பரமபாகவதாகளினுடைய பகதியினுலாவது, இனனும எநதவிததததினுலாவது ஸ்ரீஹரியாகிய பரமாதமாவுககுப பகதாகளாய விளஙகுகினற சமஸத பிராணிகளும மோக்ஷசாமபிராஜயததையே யடைவாாகளென்று நினைகககடவீா

வாரீா சுசிலகுண ராஜரதநமே! இநத ஸ்ரீகிருஷ்ணபகவானனவா சாவாதமாககளுககும அநதரியாமியாய இடசிததுக்கொண டிருககினறதினுல ஸ்ரீ பரமபுருஷராகியும, பிரமமாதி ஜீவசமூஹஙகளையும பிரகிருதியாதி பதாாததஙகளையு மடைநது இவவுலகஙகளை விஙகாரசெயபவ ராகையால ஸ்ரீ. அஜராகியும, சகலவேதசிாமித சாவசததகாமஙகளுககும, மகாயோக தபோதான மௌனவிரதமுதலிய சுசிலஙகளினுல அணிமாதி சிததிகளை யடைநத பரம யோகீநதிராகளுககும, பரபபிரமம சபதாதிஙணய வேதாாதத நிசசய ததவஜஞானிகளுககும, இததியாதி சாவததிராகளுககுஞ சாவ பலனகளையுங கொடுககிறவராகையால ஸ்ரீ யோகீஸவ ரேஸவரராகியும திருவவதரிததிருககினற ஸ்ரீஹரிஸவரூபராய் விளஙகுகினறுா. ஆகையால இவருடைய தரிசனஸ்பரிசனஙகளை லபிககபபெறற ஸதாவரஙகளும விமுகதாதமாககளாகி, பரிசுததாநதக் கரணஙகளை யடைநது, மோக்ஷானநத ஷைவபவஙகளைபபெறறு ஆனநதிககும் நீர் உமது சமசயநிவாரணஙகளை யடைநது, ஸ்ரீபகவானுடைய திவய சரிததிரஙகளைச செவிககானநதமாய்க் கிரஹிததுக கிருதாாததததை யடையககடவீர் .

'வாரீர் மகானுபாவனே! இவ்விதங்களாக ஸ்ரீபகவானுடைய மகாகம்பீர மாதுரிய முரளீகானகீதங்களைக் கேட்டுப் பரவசர்களாய்த் தங்கள் தங்கள் தாய்தந்தை முதலியவர்களால் தடுக்கப்பட்டும் நில்லாமல் இருக்கிறதியங்களை விட்டு வந்தவர்களாகிய இந்தக் கோபிகாஸ்திரீ ஜனங்களைப்பார்த்து, சர்வகுண சாதுரிய சுகுணநிசய ஸ்ரேஷ்டராகிய ஸ்ரீகிருஷ்ணபகவானானவர் தமது வாக் வைபவங்கள் விளங்க ஒருவார்த்தை சொல்லுகின்றார். வாருங்கள் மகா புண்ய வதிகளாகிய கோபிகாஜனங்களே! ஆயர்பாடியிலொன்றும் உபத்திரவமில்லையே! நீங்கள் இப்படிப்பட்ட இராக்காலத்தில் சிம்ஹ சார்த்தூலாதி நாநா வித பயங்கரமாகிய மிருகங்களும், சர்பாதி நாநாவித கரூரபட்சிகளும், சர்ப பாதி விஷஜந்துக்களும் சஞ்சரித்துக் கொண்டிருக்கின்ற இவ்வனத்தில் வரக் காரணமென்ன? அசுரர்கள் வெகுவாய் சஞ்சரிக்கின்றார்கள் நீங்களினிமே லிருக்கக்கூடாது.

வாருங்கள் சுகுணவதிகளே! இந்த யமுனைக்கரையில் கொடியின்ற செய்திருக்கின்ற வீடுகளிருக்கின்றன. அதில் நீங்கள் நடந்துவந்த இளப் பைத் தீர்த்துக்கொண்டு போங்கோள். நாணமச்சம் முதலியவைகளைக் கொள் ளாதவர்களாகி உங்கள் யதேச்சையாய் நுழைந்து வரத்தகுமோ? கும்புகும் பாய் வந்து சஞ்சரித்துக்கொண்டிருக்கின்றீர்களே இது கூடுமோ? யோசிக்கு மிடத்தில் உங்கள் நடக்கை நன்றாயிருக்கின்றது. சீக்கிரமாக உங்கள் கிரகங் களுக்குச் சந்தோஷமாய்ப்போய்ச் சேருங்கள். நீங்கள் இவ்வனத்திற்கு வந்து விட்டபின்பு உங்கள் தாய்தந்தைகளும் சகோதரர்களும் புத்திரர்களும் இஷ்ட ஜனங்களாகிய சகலபந்துக்களும் உங்களைக் காணாமல், அந்தத் தப்பி யெங்கே யோ போய்விட்டார்களேயென்று யெவ்விதங்களாகத் தேடுகின்றார்களோ? என்ன அவநிந்தைப் பேசுகின்றார்களோ? தெரியவில்லையே.

வாருங்கள் மகாபுண்ணிய சீலிகளே! நீங்கள் இப்படிப்பட்ட நடக்கைக் குரிய குணங்களைக் கொள்ளுதல் உங்களுக்குத்தகுமா? நீங்கள் கொண்ட செய்கையை நினைக்குந்தோறும் அதிசயத்தைத் தரத்தக்கதாய் மிகவும் நன்றா யிருக்கின்றது. இதென்ன வாச்சரியம்? உங்கள் கிரஹங்களுக்கு மங்கல தீபம்போன்ற நீங்கள் வெளிப்புறப்பட்டு, வீட்டைப்பாழாக்கி, உங்கள் பாத் தாக்களினுடைய ஆஜ்ஞாபிமானத்தைக் கடந்து, மாமியார் மாமனாருடைய மனதை நோகச்செய்து, சகோதரர்களினுடைய ரோஷாபிமானங்களைக் கெடுத்து, தாய்தந்தைகளினுடைய ஆசாபாசங்களை வெறுத்து, சமஸ்தமான பந்துக்களும் வெறுப்புற்றுப் பேசும்படிச் செய்து, ஜாரசோர காமினிகளாய் வந்தீர்களே. இந்த நடவடிக்கை யுங்களுக்குத் தக்கதா? நல்ல குலஸ்திரீகள் உங்களை உத்தமிகளென்று சொல்லுவார்களா?

வாருங்கள் கிஷகளங்க பூர்ணசந்திரோதய முகார விந்தங்களை யுடைய அபாங்கனைகளே! ஜாரஸ்திரீகளுக்குண்டாகிய அவதிலக்ஷணத் திறகுரிய சௌக்கியங்களை நீங்கள் கேள்விப்பட்டதில்லையா? பார்த்ததில்லையா? கேள்வி

பார்வையிலலாவிட்டால் நான் சொல்லுகிறேன் கேளுங்கள். இந்த ஜாரஸ்திரீகளினுடைய சோரநடத்தைகளைப் பிராணநாயகன் அறிந்தால் உடனே அந்தஸ்திரீகளுக்குப் பிராணஹானிவரும். நீதியுள்ள அரசனறிந்தால் கோரமாகிய தண்டனைகளை விதிப்பான். மாமியார் மாமனார் அறிந்தால் சனமானங்களெல்லாம் அழிந்துபோகும். ராஜபடர்கள் அறிந்தால் காவலில் வைத்து அவமானங்களைச் செய்வார்கள். தாய் தந்தைகள் அறிவார்களேயானால் தலையிறக்கங் கொள்ளுவார்கள். சஹோதரர்களுணர்வார்களானால் தங்கள் சௌரியங்குலைந்து ஆண்மையழிந்து நாணப்படுவார்கள்.

வாருங்கள் பரமோத்தமா மதிகத்தம பாக்கியவதிகளே! ஓரகஸ்திரீகளிருந்தால் தூற்றித் தெருவில்வைத்து ஏசுவார்கள். வயிற்றிற்பிறந்த பிள்ளைகளறிவார்களானால் ஆதரிக்கமாட்டார்கள். இஷ்டஜன பந்துக்கள் தெரிந்துகொள்ளுவார்களானால் தங்களினங்களில் சேர்க்கமாட்டார்கள். பிறர்களுணர்வார்களாகில் அலக்ஷியஞ்செய்து காரித்துப்புவார்கள். ஆகையால், இகத்தில் இந்த ஜன்மத்திலே சுகமென்பது லேசமுங் கிடைக்கமாட்டாது. பராநுபவத்திலும் ஜன்மாந்திரங்களிலும், நரகத்திற்குண்டாகிய சௌக்கியானுபவங்கள் சற்றும் நேரிடா. உத்தமகுண லக்ஷணங்களுக்குரிய கீர்த்திகளுங்கிடைக்கா. நிரபயானந்த சுகபோகங்கள் இவர்களுக்கு ஒருக்காலும் லபிக்கின்றதில்லை. ஆதலால், அருமையாகிய மனுஷ்ய ஜன்மங்களையெடுத்த உத்தமஸ்திரீகளுக்கு, இந்த ஜார சோர அல்பபுத்திகளையொருக்காலும் அடையத்தகாது.

வாருங்கள் புண்யவதிகளே! உத்தமகுலத்திற்பிறந்த பதிவிரதாபக்தியுள்ள உத்தமியானவள் தன்னுடைய அதிருஷ்டானுகூலமாகத் தனக்கு நேரிட்டவனானவன் உத்தமபுருஷர்களிற் சிரேஷ்டனாயிருந்தாலும், அல்லது தான்பூர்வஞ் செய்திருந்த தவக்குறைவினால் தனக்குநேரிட்ட கணவன் யாதொரு நன்மார்க்க நடவடிக்கைகளில்லாதவனாயினும், நரைமூப்புகளையுடைய வயதுசென்றவனாயினும், அங்கஹீனனானபோதிலும், கேவலம் பாமரனாகியும் புத்திஹீனனாகியு மிருந்தபோதிலும், சம்பாதிக்கத் திறமையற்றவனாயினும், அப்புருஷனைத் தெய்வமாக நினைத்துப் பயபக்தியைச் செலுத்திச் சந்தோஷத்தை யடைந்தவளாகியே இருப்பாளல்லாமல், உத்தமபுருஷனென்ற சந்தோஷத்தைக் கொண்டு பக்தி செலுத்துகின்றதேயொழிய, மத்திம அதம புருஷனென்ற துக்கங்கொண்டு அவமானஞ்செய்து விட்டுவிடுகின்றதென்பதைச் சொப்பனத்திலுங் கொள்கிலாள்.

வாருங்கள் சுபாங்கனைகளே! அந்த வேறுபாடு நினைத்தல் உத்தமஸ்திரீகளுக்குத் தாமமல்ல. இந்தச் செய்கையைக் குறித்துத் தெய்வம் க்ஷமிக்கமாட்டாது. தன்னுடைய புருஷனே தனக்குத் தெய்வமென்று நினைத்து அவனைப் பரிபாலனஞ் செய்யாதவளெவளோ? அவளே மகாபாபத்திற்குரிய துஷ்டஸ்திரீ. அந்தத் துஷ்டஸ்திரீயை ஸ்ரீஹரியானவர் இயமனகையிற் காட்டிக்கொடுப்பார், அந்த இயமனகட்டளைப்படி படர்கள் அவர்களைக்கொண்டு

போய், "செம்பினலியன்ற பாவையைப்பாவி தழுவென" நமன்றமர் பற்றி எனகிறபடி அககினியிலேவெநது ஜவலிததுககொணடிருககின்ற செம்பினல செய்யபபடட பாவையை விடாமல கழுவசசெயது உபததிரவபபடுததுகிறது மல்லாமல, மறுபடி மீளாதநரகஙகளில தளளி எபபோதும அவறறிலுண்டாகிய வேதனையை நீஙகாமல அநுபவிககவுஞ செயவாாகள

வாருஙகள புண்யவதிகளே! இநத ஸ்ரீயமுனநதியானது பூாணமாயப பிரவாஹிதது, இவவனததிலுளள விருக்ஷஙகொடி புதாமுதலியது களையும நாநாவித பரிமளஙகளைத தராநினற விசிதரபுஷபச செடிகளையும விருததியடையசசெயது, அலஙகாரமாகிய தளிாகளாலும விகஸிததிருககினற புஷ்பஙகளாலுஞ சோபிதது, இநதப பூாண சநதிரோதயததினலும குளிாநத காறறினலும சாவஜன இருதயானநதகரமாய விளஙகுகினறது ஆகையால நான மனேவிலாசமாக சஞசரிததுககொண டிருககினறேன. நீஙகளுஙகணடு சநதோஷிததீாகள இனிமேலாவது இவவிடததில நேரபபட லிலலாமல சீககிரமாக உஙகள கிரகததிறகுச செலலுஙகள

வாருஙகள சோபனைகளே! எனசொறபடி கிரகததிறகுச சென்றவுடன வேறேகியாபங கொளளாமல, அழுதுகொண டிருககுங குழநதைகளை யாதரிதது, கோவின கோவத்ஸஙகளுககுப புலலு முதலாகியதுங கொடுதது, பாலைககறநது காயசசிப பததிரஞசெயது, உஙகள பாததாககளுககுப பகதிபூாவகமாகப பணிவிடைகளைசசெயது, கிருதாாதத ததஙகளை வஹிதது நலலமஙகலததைப பெறககடவீாகள கோகுலததிறகுப போயசசேருஙகள் நீஙகள எனது ஜகனமோஹனகார லீலாகுணஙகளுக்கு இசசிதது வநதீாகள். அதனறகுறறமிலலை சமஸதப பிராணிகளும எனககு இஷடவினியோகமாகவே யிருககினறன ஆயினும சாசுவதமான காமஙகளைப போககினற பெரியோாகளின நீதிககு ஒருகுறைவும வராமல சீககிரமாகசசெனறு, உஙகள பதிகளைப பூஜிததுககொண டிருஙகள இனி காலவிளமபனமாகச சஞசரிகக வேணடாம

வாருஙகள நறகுண மடநதையாகளே! எனது திவய குணஙகளில இச்சை கொளளுகினறவாகள எநதப பிராணிகளா யிருநதபோதிலும, அவாகள் விஷயததில எனககுச சநதோஷமேயுணடாகும தியானததினலாவது, உததமபகதி சிரததையுடன ஆனநதததைககொணடு கேளவிசெயவதினலாவது, எனது திவய ரூபாதிசயஙகளைத தரிசிககினறதினலாவது, காலக்ஷேபமாகக் குணனுபவஞ செயகினறதினலாவது, எனனை மனதினுள வஹிததுப பகதி செயவாாகளோயானல, அதுவே அவாகளுககுச சகலாபீஷட மனேரதஙகளாக விருககும. அவாகளுஞ சகலபாப விமோசனாகளாய முகதிபெறுபவர்களாக விளஙகுவாாகள. ஆகையால நீஙகளும மஹாசுகிாதாகளாய சீககிரமா யுங்கள் கிரஹததிறகுச செலலுஙகளெனறு பகவான சொல்லியருளினர்

வாரீர் சத்தியசீலனாகிய மஹானுபாவனே! இவ்விதங்களாக ஸ்ரீபகவா னானவர் உத்தம தர்மநீதிவசனங்களால் சிக்ஷித்துச் சொல்லுகின்ற வார்த்தை களைக்கேட்ட அந்தக் கோபிகாஸ்திரீஜனங்கள் யாவரும் பயப்பிராந்த சித்தர் களாய்ப் பெருமூச்செறிந்து, முகங்கள்வாடி, ஸ்ரீகிருஷ்ண குணத்தத மானஸ மன்மத விரஹதாபாக்னி ஜ்வாலாபீடிதர்களாய மனமலைந்து, திடுக்கிட்டேங்கி கண்களினின்று தாரைதாரையாய ஜலம்பெருக்கி, ஸ்தனபாரங்களை நீராட் டிக்கொண்டு, பூமியிலும் வழிந்தோட வியசனாக்கிராந்தர்களாகி, கால்களது வள சரீரங்கள் நடுங்க இடைக் கூசலாட நாக்கள்வறள வார்த்தைகள் தவற கன்னத்திற் கைகளை வைத்துக்கொண்டு, துக்கசமுத்திரத்தில் மூழ்கினவர் களாகி, யாவரும் ஏககண்டமாய ஸ்ரீபகவானைப்பார்த்து ஒருவார்த்தை சொல லுகின்றார்கள்

வாரீர் பக்தவத்ஸலராகிய ஸ்ரீகிருஷ்ணபகவானே! உமது செளலப்யாதி சய கிருபாமாத்திர பிரசன்னதவாக் குணங்கள், அஹோ! எங்கள் விஷயத் தில் இவ்வளவு கோராகார க்ரூரமாய விளங்குமென்று நாங்கள் கனவிலும் நினைக்கவில்லையே நாங்கள் ஸத்தியமாக உம்மையே நம்பி ஆஸ்ரயித்து, உமதுபரம கிருபையாகிற அன்பினால் எங்கள் கிருஹகிருத்தியங்களையும் சர்வேந்திரிய அனன்யதா விஷயங்களையும் உமக்கே சமர்ப்பித்து, அந்தச் சாமான்ய தர்மகிருத்தியங்களினின்றும் எளிதில் விடுபட்டவர்களாகி, உமது திவ்ய ஸ்ரீசரணாரவிந்தங்களை யாசிக்க நாங்கள் தேடியுங்காணாமல் இம்முரளீ கான திவ்யஸ்வரங்களின் மார்க்கமாக அலைந்து தேடிக்கொண்டு வந்தடைந் தோம்.

வாரீர் அசோதா தநயனே! ஆகையால் சர்வசம்பந்த சர்வபாவன ஸ்வரூப சர்வாதிபத்ய சர்வாட்டியராகியும் ஸ்ரீசர்வேஸ்வரராகியும் விளங்காநின்ற நீர், தாரேஷண தனேஷண புத்திரேஷணங்களாகிய ஈஷணத்திரயங்களையும் தேவ பித்ரு ரிஷிமானவாதி கணங்களையும் தங்கள் சர்வேந்திரிய வியாபகங்களையும் அவற்றின் விஷயங்களாகிய இந்திரியங்களின் ருசிவாஸனா பிரயோசனங் களையும் அவைகளுக்குரிய ராகத்வேஷங்களையும் துறந்து, சகல சத்கர்மாதி வேதாத்தியயன யஜ்ஞயாக ஜபதபோயோக மௌனவிரதங்களை யாசிரயித்து, அவைகளின் பலப்பிரதங்களைத் தாங்கள் ஸ்வதந்தரித்து இச்சித்தவர்களாகி, இது முதலான சர்வ தர்மகர்மங்களையும் சர்வேஸ்வ ராரப்பணமாக ஸ்ரீஹரி ஸ்வரூபராகிய உமக்கே சமர்ப்பித்து, நிர்ப்பர நிர்ப்பயத்துவானு சந்தானங் களை வஹித்து, சர்வபார தந்திரானு குணங்களை லபிக்கப்பெற்று, சதத ஸாத்மீகர்களாகி யிருக்கின்ற பரமஸாதுஜன பரமேகாந்திகளான முமூக்ஷ ஜனங்களைக் கிருபைசெய்து ரக்ஷிக்கின்றீர்.

வாரீர் ஜகத்பதியே! அதுபோலவே ஸ்ரீகிருஷ்ண குணத்தில் வைத்த மனதையுடையவர்களான கோபிகாஜன ஸமூஹங்களாகிய எங்களை உமது திவ்யாஜ்ஞையாகிய வேதத்திற் சொல்லப்பட்டிருக்கிற காம பலங்களைக்

கொடுக்கத் தக்கதுகளாகிய வியவஹார நியதிகளைக்காட்டி அநுதாணை செய்யாமல, நாஙகள் செயத சாவாபராதஙகளையுமமன்னிதது, எங்களுடைய சாவதோஷஙகளையும போககி எங்களை அஙகீகரிதது, எஙகள மனோரதஙகளைத திருபதிசெயது இரக்ஷிககககடவீா தேவரீருடைய உததமகுணஙகளி லீடுபடட ஸதிரீஜனஙகளாகிய எஙகளுககுப பதிகளையும, புததிராகளையும, தாய் தநதைகள ஸஹோதராகள முதலிய சமஸத பநதுகளையும் பரிபாலனஞ செயது, சகலபுணயஙகளையும சமபாதிக்குமபடி ஆஜஞாபிததீா. அவைசததியமே யாகும ஆயினும எபபடிப பட்டவாகளுககும ஆஸரயிபபதறகரிய நீா இபபடிபபடட எஙகளுககுக கூடககிடைதது, சமஸதமான தேஹதாரிகளும ஸ்வரூபஙகளுங குணஙகளுமாக விளஙகுகினறீா

வாரீா தாமஸவரூபராகிய ஸ்ரீபகவானே ! இதுவுமனறியில, தேகசமபநததிறகே யுரிய பிதா பதி புததிராதி வாககஙகளைப பாாககிலும தேஹாநுகுணமாகவும, ஆதமாநு குணமாகவும, உபய தாமததிற கொபபாகிய பதி புதராதி சாவசமபநத திவய ஸவரூபாதி நாமஙகளை நீரே வஹிதது தீனாகளுடைய இஷடபலததைக கொடுககினறவராய விளஙகுகினறீரெனபது எஙகளுககுத தோனறுமபடி அறிவைதநது, இபபோது பூாவதாமஙகளை காடடி மறுபபது எனனதாமமோ ? பரமாதமாவாகிய உமமையே மஹாசாதுரிய புருஷாகளாகிய பரமஸாது ஸஜஜனஙகள சாாவதா சாவபபிரியஙகளுககுரிய சாவாநுபவங்களாகவும, களஙகமறற ஸவரூபமாகிய திவயசுகஙகளாகவும, அநுபவிததுக கொணடிருககினறாாகள நீா சாவஜஞமய சாதுரிய மாயாமூாததியாகையால, இவவுலகததிறகுச சாவகாம தாமஙகளையும ஸதாபிததீா.

வாரீா ஸ்ரீபரமபுருஷனே ! இபபடிககிருகக உமது பகதாகளான மகாஜனஙகளினுள கேவலம சாமானய பாரதநதிர குணஙகளுககுரிய பேதைகளாகிய எஙகள விஷயததில, காமாதி காாிகளினுடைய தாமஙகளையும தேஹசமபநதநாத புததிரா முதலியவாகளையுங காட்டி, ஸ்ரீபகவானாகிய உமமுடைய விஷயததில எஙகளுககு உமது நிஷகாரணமான கிருபையினால உணடான அனபுகளை நிரேயொழிகக நினைபபது எனனதாம சஙசலபமோ ? ஸ்ரீஹரி ! எஙகளைக கிருபைசெயது எஙகள தாபஙகளைத தீாதது இரக்ஷிககககடவீா. உமது ஸ்ரீபாதபதமஙகளைக கணடு சேவிபபதறகு நடையிசைகினற எஙகள பாதஙகள உமது திவயாஜஞைககஞசி, நாஙகள கிரஹததைககுறிததுச செலல நினைககுமபோது நடககச சகதியறறவாகி நடைகூடவிலலையே, உமது ஆகாரமாகிற தாமரைபுஷபஙகளை ஸபரிசிகக வேணடுமெனறு துணிகினற எஙகள கைகள, இதர கிருததியஙகளை யாசரிககச சோருகினறனவே

வாரீா ஸ்ரீகிருஷ்ணபகவானே ! உமது திவயவாககில நின்றும பிரவஹிககினற மஹாசுகுமார மதுரபாஷணஙகளைக கேட்டுத திருப்தியடைகினற எஙகள் செவிகள், அன்னியவசனஙகளைக கேடக விசையவிலலையே, உமது சாவஜகன் மோஹனாகார திவ்யசுநதர ஸ்வரூபததைச் சேவிதது பிரம்ஹானந்தம்

களை யடைகின்ற எங்கள் நேத்திரங்கள், இதரங்களாகிய அந்நிய ஸ்வரூபங்களைக்காணச் சம்மதிக்கவில்லையே, உமது சர்வபரிவாரண சர்வலோகாரிஷ்டநிரசனுதி திவ்யாத்தங்களைச் சொல்லப்பட்டபடியே இவைமுதலிய திவ்ய நாமங்களைத் தொடுக்கவிசைந்த எங்கள் வாயிலுள்ள நாவானது, அன்ய வசனங்களைப் பிதற்றச் சந்தோஷிக்க வில்லையே நாங்களினி என்னசெய்யப் போகின்றோம்? எங்கள் சர்வேந்திரியங்களையும், மனோகாமங்களையும், கிருபையாக அபகரித்த திவ்யசுந்தராகார நடனமூர்த்தியே! எங்களை அங்கீகரித்து இரக்ஷிக்கக்கடவீர்.

வாரீர் ஸ்ரீசர்வலோகைக நாதராகிய ஸ்ரீகிருஷ்ணபகவனே! ஸ்ரீபெரிய பிராட்டியாராகிய ஸ்ரீமகாலக்ஷ்மி தேவியினுடைய திவ்யமான ஆகாரமாகிற அரவிந்தங்களுக்கும், திவ்ய கமலபத்திர நேத்திரங்களுக்கும், மகாவாசகியாக ளாகிய சமஸ்தாத மாக்களுக்கும் உஜ்ஜீவன ஸ்தானமாகிய திவ்யஸ்தனங்களுக்கும், சமஸ்த அவயவ சமூஹ திருமேனிக்கும், திவ்யாபரணாலங்கார சோபிதமாய் விளங்குகின்ற உம்முடைய திவ்ய ஸ்ரீசரணாரவிந்தங்களை எங்கள் ஜன்மார்ஜித தபோபலத்தினாலேயோ? அல்லது உமது நிர்ஹேதுக கிருபாபலத்தினாலேயோ? இந்த ஜன்மத்தில் இவ்வளவு காலத்திற்குப்பின்பு நாங்கள் பாக்கியவசப்பட்டவர்களாகி ஆசிரயிக்கப் பெற்றோம். இப்படி யாசிரயிக்கப்பெற்ற எங்களுக்குத் தேகதாமங்களாகிய புருஷன் புத்திராள் முதலிய அன்யதாமங்களைக் காட்டி இன்னமுஞ் சோதிப்பது என்னதாமமோ; உமது பரமகிருபா சம்பந்தானுபவங்களைப் பெறாமல் நாங்கள் செல்லுகின்றதில்லை, சிரேஷ்டமாகிய திவ்யதடாகங்களில் நன்றாய் மலர்ந்து பரிமளித்துக் கொண்டிருக்கின்ற திவ்ய பத்மபுஷ்பங்களையுண்டு ஆனந்தித்துக் கொண்டிருக்கின்ற சிரேஷ்டமான வண்டினங்கள், அன்யபுஷ்பங்களை யடைந்து சுகிக்க நினைக்குமோ? அவை போல நாங்களும் உம்மையொழிய மனமில்லாதவர்களாகி, அன்யவிஷயங்களை விரும்பாதவர்களா யிருக்கின்றோம்.

வாரீர் ஸ்ரீகி(ருஷ்)ணபகவானே! ஸ்ரீமகாலட்சுமியாகிய ஸ்ரீரமாகாந்தாமணியானவள் வெகுகாலந் தபசுசெய்து, பக்திஸாரத்தையுடன் நாநாவிதங்களாகிய சுபவிரதங்களை யாசரித்து, ஸ்ரீஹரியாகிய தேவரீருக்கே சமர்ப்பணஞ்செய்து, உமது விசாலமாகிய வக்ஷஸ்தலத்தில் நித்தியமாய் வசித்து, மிகவும் பரிமளங்களைத் தூராகின்ற நிருத்துழாய் மாலையுடன் கூடி, ஆ அரவிந்தாக்ஷரே! என்று உமது நாமஸ்துதிபூர்வகமாகக் கைங்கரியங்களை யாசரித்துக்கொண்டு, உமது திவ்ய பாத(ாரவிந்த)ங்களினுடைய ஸ்ரீமகாபாகவத ஜனமுகோல்லாச ஸ்ரீபாத தூளிகளை லபிக்கப்பெறாமல் கொள்வதற்கு இச்சிப்பாளே யாகில்; நாங்களடையநினைப்பது குற்றமோ? ஓ சுவாமி! கிருபை செய்யக்கடவீர், உமது திவ்யசுந்தர மந்தகாஸ முகாரவிந்தத்தில் விளங்கிய ஜகன் மாயாமோஹன இளநகைக்கும், பரமகிருபையாகிய அனபிறுல திருவாயமலர்ந் தருளுகின்ற திவ்ய வசனாமிர்தங்களுக்கும், உமது கடாக்ஷ வீக்ஷண்யாதி சயங்களுக்கும் நாங்கள் தோற்று, எங்களுக்குத் தேஹசம்பந்தர்களாகிய தாய்தந்தைகள் முத

ஷிய பந்தங்களை நிராசைசெய்து, உம்மையே ஆஸ்ரயித்து, உம்தப்ரேமான ப்ரேமாதிசயத்தைக் கொண்டு மன்மதபாணங்களால் அடிபட்டு அலைந்து வந்த எங்களுக்கு உமது தாஸ்யருசியை யருளி இரட்சிக்கக்கடவீர்.

வாரீர் புண்யபுருஷரே! இவ்வுலகத்தில் மிகவுஞ் சாதுர்ய சுந்தர விடபுருஷஜனங்களினுடைய மோகபாசங்களி லகப்பட்டு அலைந்த விரஹிணி ஜனங்களாகிய பேதைச்சிறுபெண்கள், மறுபடியும் அந்தப் புருஷர்களால் ஸ்தரிக்கப்பட்டு அவர்களுடன் சுகித்து ஆனந்த சந்தோஷத்தைக் கொள்ளவில்லையா? இந்தப் பேதமைக் குணங்கள் எங்களுக்குமாத்திர முண்டானதல்லவே, வாரீர் சர்வஜன மனோரம்ய திவ்யசுந்தர வதனாரவிந்தரே! உம் நிதயயோக மாயா சாதுரியாதிசயங்களினால் பிரமஹாமுதலிய பிரஜாபதிகளும், தேவாசுர கந்தர்வாதிகளும், ஸ்திரீகளால் வசப்பட்டு மோஹிதாக ளாவார்களேயானால்; சாமான்ய பேதைகளாகிய நாங்கள் வசப்படலைவதும் அருமையோ? என்ன செய்யப் போகின்றோம் ஸ்ரீபுருஷோத்தமரே! மன்மதனுற்ற அக்கினியினால் வருத்தமுற்றுப் பீடிதர்களா யிருக்கின்ற எங்களை ஆதரித்து ஆலிங்கனஞ் செய்து இரட்சிக்கக் கடவீர்.

வாரீர் ஸ்ரீ அரவிந்த லோசனரே! இவ்வுலகத்தில் ஜனமங்களை அடைந்த எந்தப் பிராணிகளாயினும் உமது கிருபா வாத்ஸல்யங்களை யடைந்து அறிவு விளங்கப் பெறுவார்களேயானால், உமது திவ்யவிக்ரஹ சேவையைவிட்டுப் பிரியத்தனியார்களே, அப்படியிருக்க, எங்கள் மனதைப் பஞ்சபாணனும் மன்மதன் தனக்கியற்றுமிகிய செங்கரும்புவில்லினிறுந்துப் புஷ்பசர வருஷங்களை வருஷித்துப் பிளக்கின்றது மல்லாமல், எங்களுடைய சர்வேந்திரியங்களையும் அபகரிக்கின்றன அதனால் அதிகவருத்தத்தை யடைகின்றோம் சகிக்கமாட்டோம் உமக்குத் தாஸபூதர்களாய்ச் சரணமடைந்த எங்களை நீர் ஆதரியாமல், அன்னியனாகிய மன்மதனுக்குக் காட்டிக்கொடுத்து அவன் உபத்திரவஞ் செய்யும்படிப் பார்க்கின்றீரே! இதுபுருஷ தர்மமோ? குமாரா! உம்முடைய கிருபைக்கு சரிந்தாகுமா? ஆகையால் வேடனாலையில் அகப்பட்ட மானேபெடுகளைப்போலக் காமனாலையி லகப்பட்டுக் கலங்குகின்ற எங்களைப் பயப்படாதேயுங்களென்று ஆதரித்து ரக்ஷிக்கக் கடவீர்.

வாரீர் ஸ்ரீ ஆஸ்ரிதஜனரக்ஷாமணியாகிய ஸ்ரீபகவானே! உமது திவ்யாதராமிர்த வருஷங்களை எங்களுடன்கூடி எங்களசீர தாபந்திர வருஷிக்காவிட்டாலும், உமது லக்ஷ்மீவிலாச நிர்மலமான விசால வக்ஷஸ்தலத்தை எங்களுடைய குசங்களின்மீது ஸ்பரிசித்து எங்களைச் சோதனையாவிடினும், உமது சர்வ ஸ்திரீஜனமனோரம்ய திவ்யகரங்களினால் எங்கள் அளகபாரத்தில் சுகந்த புஷ்பமாலைகளை முடிக்காவிடினும், உமது பரமகிருபாகடாக்ஷ வீக்ஷணயத்தினால் எங்கள் முகங்களைக் கடாக்ஷிக்காவிடினும், உமது சர்வஜன மனோரஞ்சன ரகசிய வசனங்களினால் எங்கள் செவிகளின் களிதீர வசனிக்காமல் அனுதாவு செய்யினும், நாங்கள் எங்கள் சரீரம் நசித்து ஒடுங்கியழிந்து போவோமே

யல்லாமல் என்னமாய் ஜீவிக்கப் போகின்றோம்? இனியும் உம்மைத்தவிர வேறொருவரை அடிப்போமா? சாவஜங்களுக்கும் சாக்ஷிபூதத்தமனாகிய எங்கள் விபுவே! எங்கள் தீனவசனங்களாகிய எங்கள் முறைகள் கேட்கவில்லையோ? கேட்டும் உபேக்ஷை செய்கின்றீரோ

வாரீர் ஸ்ரீபகவானே! உமது முகாரவிந்த தரிசனத்தினாலும், கடாக்ஷ வீக்ஷணயத்தினாலும், உமது திருவதரங்களினால் ஸ்பரிசித்து ஊதப்பட்ட வேணுவினால் உண்டாகிய மகாமாதுரியமான தேவகான கீதஸ்வரங்கள் எங்கள் செவிவழியாக நுழைந்து இருதயங்களைப் பேதித்துக்கலக்க, பஞ்சபாணாக்னிகள் எங்கள் சரீரங்களைத்தகிக்க, மனமதாக்கினி தாபஜ்வரங்களில் நாங்களகப்பட்டுத் தகிக்கப்படலாமா? இறந்து போகாமல் இப்பொழுதே முன்னதாயத் திருவடித் தாமரைகளுக்குச் சரணமாகவந்தடைந்தோம் எங்களை யாதரிக்காவிடில் சத்தியமாய், உமதுசரணாரவிந்த சாட்சியாய், உமக்கே பிரீதியாய், எங்கள் சரீரங்களை விட்டுவிடுவோம் எங்கள் முறையைக் கேட்டுக் காப்பாற்றக்கடவீர்

வாரீர் அம்புஜாக்ஷராகிய ஸ்ரீகோபிகாஜன வல்லபரே! இந்தப் பிருந்தாவனத்திலுள்ள சமஸ்த ஸ்தாவர ஸ்வரூபங்களாகிய விருக்ஷ லதா குலமாதிகளும், சமஸ்தமான மிருகபட்சி கோகண சமூகங்களும், உம்மைத் தரிசனஞ்செய்த மாத்திரத்திலும், உமது கானஸ்வரங்களைக் கேட்டமாத்திரத்திலும், மனதுகரைந்து, உடலுருகி, சர்வேந்திரியங்களும் லயித்து, தங்கள் வியாபார சஞ்சாரங்களையுமொழிந்து, சித்திரத்திலெழுதிய பிரதிமைகளைப் போல உம்மையே இச்சித்து மனமுருகி நிற்குமானால் விதிபூர்வகமாக ஜன்மங்களையெடுத்து, உனது கிருபைக்குப் பாத்திரர்களாகி, எங்கள் சர்வேந்திரிய வியாபாரங்களையும் உமக்கே சமர்ப்பித்து, உம்மையே சர்வதா தரிசனஞ்செய்து கொண்டிருந்து, உமது மதுரகீத ஸ்வரங்களைக் கேட்டு ஆனந்தித்திருக்கின்ற நாங்கள் உம்மை வாஞ்சித்தடைவதும் ஓராச்சரியமோ? எங்களுக்கு ஆதரவாயொருவார்த்தையுஞ் சொல்லாமலிருக்கின்றீரே, இதென்னகாரணம்.

வாரீர் ஸ்ரீகோபிகாஜனஸமூக தைரியசித்தாபகாரரே! உமது மகாகம்பீர மாதுரியமாகிய திவ்யவசனாமிர்த வருஷதாரைகள் எங்களுக்கு லபிக்காவிடில், இந்தப் பஞ்சபாணனுடைய புஷ்பசர வருஷாக்னியை எவ்விதத்தில் ஆற்றிக்கொள்ளுவோம்? உமது கிருபா பார்வையாகிய ஓடமானது எங்களுக்கு லபிக்காவிடில், நாங்கள் இந்தமன்மதனாலுண்டான மோகமாகிய சமுத்திரத்தைத் தாண்டி எப்படிச் சுகானந்தக்கரை சேரப்போகின்றோம்? உமது சந்தோஷமான இளநகையினாலுண்டாகிய சந்திர கிரணங்களை நாங்கள் பெறாவிடில் இந்த அனங்கனுடைய மாயாமோகன இருளை எவ்விதத்தில் கடக்கப்போகின்றோம்? உமது திருவதரத்திலுண்டாகிய திவ்யாமிர்த ஔஷதம் எங்களுக்குக் கிடைக்காவிடில், நாங்கள் இந்தமன்மத ஜ்வரதாபங்களை யெப்படி நிவாரணஞ்செய்து கொண்டு சௌக்கியப்படுவோம்

'வாரீர் ஸ்ரீகிருபா சமுத்திரரே! இந்த மாரனானவன் நம்மையொத்த புருஷர்கள்மேல் நாம் ஆண்மை செலுத்த வேண்டுமே யல்லாமல் ஸ்திரீகள் மேல் புஜபலங்காட்டலாகா தென்கிற எண்ணம் எவ்வளவுங் கொள்ளாமல் நிர்த்தயனாகி, நீர் எதிரி லிருக்கிறதையும் யோசியாமல் அக்கிரமகாரியாய் எங்களைத் தகிக்கின்றானே, இதைப் பார்த்துக் கொண்டிருக்கல் உம்முடைய சௌரியத்திற்குத் தகுமா? மகாவீரர்கள் தங்களுக்கு யாதொருவிஷயத்திலும் சம்பந்தப்படாத அன்னியர்களை வேறொருவன் வருத்தப்படுத்தக் காண்பார்களாகில் இரக்கங்கொண்டு தங்கள் சொந்தக்காரியமாய்ப் பிரவேசித்து, அவனைச் சயித்து வருத்தப்பட்டவர்களைக் காப்பாற்றுவார்களே, அப்படியிருக்க பந்துவாகியும், சோகுல நாதனுக்குப் புத்திரராகியும், எங்களை யெல்லாந் தாஸர்களாகக் கொண்டவராகியும், எங்களை ரட்சிக்கத்தக்க சாமர்த்தியங்களையுமுடையவராகியும், புருஷோத்தமராகியும், அதிதீரராகியு மிருக்கின்ற நீர் இப்படிப் பார்த்திருக்கலாமா? சுவாமீ! தகாதே, சீக்கிரமாயக் கிருபைகொண்டு உபேக்ஷை செய்யாமல் ரட்சிக்கக்கடவீர். நீர் கிருபைசெய்யாவிட்டால் நாங்கள் என்னமாய் நிர்வகிப்போம்? ஆலசியஞ் செய்யாமல் ஆதரிக்கக் கடவீர்

வாரீர் ஸ்ரீகமலாக்ஷராகிய ஸ்ரீபகவானே! பூர்வம் சமஸ்தமான தேவதா சமூகங்களையும் சாதுசஜ்ஜனங்களையும் விரோத நிக்கிரகங்களைச் செய்து இரட்சித்தாற்போல், இப்போதும் இந்த அவதாரத்தில் எங்களுக்கபயஸ்தங் கொடுத்து, உமது அஸ்தங்களை எங்கள் முடியினும் மாரிலும் வைத்து ஸ்பரிசித்து, எங்கள் மோகன மூர்ச்சைகளைத் தவிர்த்து இரட்சிக்கக்கடவீர் நீர் காட்டுத்தீயானது ஜவாலாமாலைகளை வீசிக்கொண்டுவந்து கோபால கோபீஜன ஸமூகங்களையும் கோக்களையும் வளைத்துக் கொண்டபோது, யாவரையும் யாவையையும் அத்தீயிலின்று நீக்கிச் சமஸ்தப்பிராணிகளையுங் காப்பாற்றினீரே, அப்படிப்பட்ட உமக்கு இந்தச் சந்திரகிரணங்களாகிய வெண்ணெருப்பினால் நாங்கள் துன்பமடையாமல் காப்பாற்றுதலும் அருமையோ? வாரீர் சாமர்த்தியமுள்ள மாதவனே! பிரசண்டக் காற்றுகளோடுங்கூடிய கல்மழையானது சகலபிராணிகளையும் ஏககாலத்தி லழிக்கும்படி யுண்டானகாலத்தில், கோவர்த்தனத்தை யெடுத்துக் குடையாகப் பிடித்துப் பெருங் காற்றையும் சிலாவருஷத்தையுந் தடுத்து எல்லாப் பிராணிகளையும் கிஞ்சித் திடையூறடையாமல் சுகானந்த பரவசமுறும்படி காப்பாற்றிய உமக்கு, இந்தப் புலிபோற்சீறும் சிறுவாடைக் காற்றையும் மன்மதனால் விடப்பட்டு எங்கள் மேல் அழல்போல்வீசும் புஷ்பமாரியையு நீக்கி நாங்கள் உள்ளக் களிப்படைய ரட்சித்தலும் பிரயாசமோ?

வாரீர் சகலபுவனாதார நாதரே! உமக்கு மிகுமுமாக அசராவஸ்துவாகிய சிறுவேணுவின் குழலுக்கு மதுரஸ்வராமிர்தத்தைக் கொடுக்கக் கருணை கொண்ட நீர், உம்மை அடுத்துப் பிரார்த்திக்கின்ற வினயத்துடன் மதிப்பதக்க எங்களுக்குப் பரவசானந்தசுகபோக பலமும்போன்ற அதராமிர்த அமிர்தரசத்தைக்கொடாமலிருப்ப தென்னகாரணமோ! சௌந்தர்யசாளிப்பிஷ் உபத்ர

வங்களை நீக்கி யமுனாநதிஜலம் சகல சராசரங்களுக்கும் உபயோகமாகும்படிச் செய்த நீர் உமது முரளிகான ஸ்வரத்தைக்கேட்ட மாத்திரத்தில் எங்களுக்குள் உண்டான விரகவேதனா விஷதாபத்தை நீக்கி, எங்களுடைய ஆத்மாக்கள் குளிர்ச்சியைக் கொள்ளும்படித் தேவரீருடைய தாமரைபோன்ற கரத்தின் ஸ்பரிசமாகிய சீதளஜலத்தைக் கிருபைசெய்தலுங் கூடாதோ? எங்களுடைய பரிதாப வசனங்களாகிய முறைகளைச் செவிகொடுத்து அங்கீகரியாதவர் போல உபேக்ஷைசெய்வது உமக்கு என்னதர்மமோ? நாங்கள் உம்மை யாஸ்ரயித்த கேவலம் அனன்யருங் காமினிகளான ஸ்ரீஜனங்களாச்சுதே, அநியாயமாய் நாங்கள் அழிந்துபோகலாமா? இப்படி உபேக்ஷை செய்வீரானால் நாங்கள் இந்தவிரகாக்னியில் எங்கள் தேகங்களை யொழித்தாவது உம்மையே யாஸ்ரயித்து உடதனுபவங்களை நாங்களடையாமற் போகின்றதில்லை என்று சொல்லி இரந்தார்கள்.

வாரீர் பரீக்ஷின் மகாராஜனே! இப்படி கோபகன்னியர் ஸ்திரீகள் யாவரும் ஏககண்டர்களாய், சரீரத்தை ஒழிக்க யத்தனித்தவர்களாய், மன்மதனுடைய புஷ்பசரவருஷ பரவசர்களாய் வசனிக்கின்ற தீனவசனங்களைக் கேட்ட மாத்திரத்தில் ஸ்ரீகிருஷ்ணபகவான் முகமலர்ச்சியுடன் புன்னகையாக நகைத்து தம்மிற்றும் திருப்தியடைந்து நிர்மலராயிருந்துக் கொண்டு, இந்தக் கோபிகா சனங்களுக்கு அன்புள்ள ரூபத்துடன் அவர்களைக் கலந்துவிளங்கினார். இப்படிச்சர்வ ஜகதீஸ்வரராகிய ஸ்ரீ கிருஷ்ணபகவானுனவர் இந்தக் கோபிகாஜனங்களினுள் பிரசன்னரான மாத்திரத்தில் அவர்களும் அப்படியே அன்னிய விஷயங்களை மறந்து, தாங்கள் ஒருவர்க்கொருவர் விசாரணைகளையுமற்று, ஏககாலத்தில் அந்த ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய கடைக்கண் பார்வையிலுண்டாகிய கிருபாசமுத்திரத்தில் மூழ்கினவர்களாகி, தங்கள் ஸதனபந்தங்களும் அரைநூல்மாலைகளும் தனக்குத்தானே நழுவக் காட்டாலிங்கனங்களைச் செய்து கேளிவிலாசர்களாய் மானஸவியோக தாபங்கள்தீர வசனித்து, திருவதராமிர்த பானங்களைச்செய்து, திருப்தமனதுடையவர்களாய் விளங்கினார்கள்.

பிறகு ஸ்ரீகிருஷ்ணபகவானுனவர் மிகவும் மகா சுந்தரவதிகளாகிய கோபிகாஜனங்கள் பிரமஹானந்தங்களை யுடையவர்களாய்த் தம்மைச் சூழ்ந்துகொண்டு பணிசெய்ய, பூர்ணசந்திரோதய கிரணங்களை வீசாநின்ற இளநகையோடு கூடிய முகாரவிந்தத்தை யுடையவராய் நக்ஷத்திரங்களி னடுவில் பூரணசந்திரன் பிரகாசிப்பதுபோல அந்தக் கோபிகா ஸ்திரீஜன சமூக மத்தியிற் பிரகாசித்தார். ஒவ்வொரு சமயத்தில் ஸ்ரீ பகவானுனவர் இந்த ஸ்திரீசனங்கள் யாவரும் தம்மைக்குறித்து மாதுரிய குரலோசைகளோடு மதுர கீதங்களைப்பாட அந்தஸ்வரங்களுக்கிசைந்து சந்தோஷித்து, அவைகளுக்குத் தகுந்தபடி அபிநயாதிகளைக்காட்டி நர்த்தனங்களைச் செய்துகொண்டு, தமது மார்பிலணிந்த ஸ்ரீவைஜயந்தி மாலையுடன் சர்வா பரணங்களும் ஜ்வலிக்க அந்தப் பிருந்தாவனமாகிய மங்கையினுடைய மார்பிலணிந்த பதக்கத்தில் சுற்றுந்தோய்ந்த முத்துக்களைப் போலவும் சுற்றிழைத்த ரத்தினங்களைப்

போலவும் மிகவும் யவ்வனமுள்ள கோபிகா ஜனங்கள் தம்மைச்சூழ்ந்து உபசரித்துக் கொண்டிருக்க அவர்களிடையில் நடுநாயக ரத்தினத்தைப் போல விளங்குகின்றார்.

வாரீர் சந்திரகுலோத்துங்கனே! செங்குமுதம் வெண்குமுதமெனனும் அல்லிகள் மலர்ந்து பரிமளிக்கச் செய்கின்ற அமுதகிரண சந்திரனுக்கொப்பாகவும் செந்தாமரை வெண்டாமரைகளை மலர்த்திச் சுகந்தம் வீசச் செய்கின்ற ஆயிரங்கிரண சூரியனைப்போலும் யாதொரு பொருளிலுந் தோயாதவராயத் தோய்ந்தவரைப்போலு மிருந்து நடிக்கின்ற ஸ்ரீ கிருஷ்ண பகவானானவர், சந்திரகிரணத்தைப் போலும் விளங்குகின்ற மந்தகாச சுந்தர வதனாரவிந்தத்திலுண்டாகும் புன்சிரிப்பினாலும், புருகுடிகளுடைய நடிப்பினாலும், யாவருக்கு மகிழ்வைத்தருகின்ற மதுரமான வசனங்களை நயம் பொருந்த உரைத்தலினாலும், தாமரைநிகர்த்த கடைக்கண் பார்வையினாலும், பலவித ஸ்பரிச விநோதத்தினாலும், அந்தக் கோபகன்னிகா மணிகள் யாவருக்கும் தனித் தனிப்பேரானந்த சந்தோஷத்தையுண்டாக்கினார்.

மேலும் சூத்திரதாரியாய்ச் சகலாத்மாக்களையும் நடிப்பிக்கின்ற சர்வ வல்லவராகிய ஸ்ரீகிருஷ்ண பகவானனவர் ஒரு ஸ்திரீயின் கூந்தலைத் திருத்தி முல்லைமாலிகையைத் தரிப்பார். ஒருஸ்திரீயின் முகத்திலுண்டாகிய வேர்வையைத் துடைத்துத் திலகந்திருத்துவார். ஒரு ஸ்திரீயின் முன்னெற்றி மயிரைச் சரியாகத் தள்ளுவார். ஒரு ஸ்திரீக்குச் சிரோபூஷணந் திருத்துவார். ஒரு ஸ்திரீயின் மார்பிலணிந்த பவழமாலை, முத்துமாலை, கடலைமணித் தாழ்வடம், கோதுமைப்பைமணித் தாழ்வடம், சந்திரார முதலியவைகளின் சிக்குகளை வாங்குவார். ஒருஸ்திரீயின் அஸ்தபூஷணங்களைத் திருத்துவார். ஒருஸ்திரீக்கு இடைமணி யலங்கரிப்பார். ஒருஸ்திரீக்குச் சரணவணிகளை முறைப்படுத்துவார். ஒரு ஸ்திரீக்கு ஆடை திருத்துவார். ஒரு ஸ்திரீக்குக் குசபந்தனஞ் சீருறச்செய்வார். ஒரு ஸ்திரீயைப் பார்த்து உன்முகத்திற்கு ஒப்பப் படாமையால் சந்திரன் வெட்கி மேகத்தில் மறைகின்றான் பாரென்பார். ஒருஸ்திரீயைப் பார்த்து உன்னுடைய குசபாரங்களுக்குச் சமானப் படாமையால் தாமரை மொக்குகள் உள்ளுடைகின்றன பாரென்பார்.

ஒருஸ்திரீயைப் பார்த்து உன்னுடைய அளகபாரத்திற்கு நிகராகாமையால் மேகங்கள் வெட்கி வெளுத்துத் திசாமுகந்தோறும் அலைந்தோடுகின்றன பாரென்பார். ஒரு ஸ்திரீயைப் பார்த்து உன்னுடைய கரசரணங்களுக்கு ஒப்புப்படாமையால் இளந்தளிர்கள் வெட்கித் தொங்குதலையுள்ளனவாக விருக்கின்றன பாரென்பார். இவ்வண்ணமாக அந்தக் கோபிகா வனிதாரத்தினங்கள் யாவருடனும் விளையாடிக்கொண்டிருந்து, விசாலமாய பனி போன்ற வெளுப்பாகியுள்ள தாமரை நெய்தல் செண்பகமுதலிய மலர்களுடைய வாசனையுள்ள தென்றற் காற்றுடன் கூடிக்கொண்டிருக்கின்ற மணற்குன்றிலேறி, சிலஸ்திரீகளினது ஸ்தனங்கள் தம்மிடமார்பினில் படும்படி

ஆலிங்கனஞ் செய்துகொண்டும், சிலஸ்திரீகளுடைய ஸ்தனங்களைக் கையி
னாற்பிடித்துக் கொண்டும், சிலர் அரையினிற் கட்டியிருக்கிற வெண்பட்டா
டைகள் தானாயநழுவ அதைப்பார்த்துப் பரிகாசஞ்செய்தும், சிலஸ்திரீக
ளுடைய துடைகளைத் தம்மிடைகைகளினால் தொட்டும், சிலபேருடைய ஸ்தனங்
களைத் தம்மிட நகங்களினால் அலங்கரித்தும், இப்படியாக விளையாடிக்கொண்
டிருந்தார்.

வாரீர் விரக்தசீலனாகிய மகாராஜனே! இவ்விதங்களாக ஸ்ரீபகவதனுப
வங்களைப் பெற்றுக்கொண்டிருக்கின்ற மகாதன்னியர்களாகிய கோபிகாவனி
தாரத்தினங்கள் ஸ்ரீமாதவனிடத்தில் மனதுடைய மன்மத பரவசர்களாய்
மதித்து, ஸ்ரீபகவானானவர் நம்மிடத்தி லாசைகொள்ளும் பிராபகம் லபிக்கப்
பெற்றோம் இனியிவ்வனுபவங்களை யொழிவதில்லையென்று நினைத்தார்கள்.
இப்படி அவர்கள் நினைத்தமாத்திரத்தில் ஜிதேந்திரியரான ஸ்ரீபகவானானவர்
இந்தக் கோபிஸ்திரீ ஜனங்களினுடைய கர்வங்கள் பங்கமாகும்படிச்செய்
து, பின்பு பிரசன்னமாய் ரக்ஷிப்பதற்குத் திருவுள்ளத்தில் நிச்சயித்துக்
கொண்டு, கர்வப்படாதவளாகி யிருந்த ஒரு பூங்கொடிபோன்ற மங்கையுடன்
சற்றுநேரத்திற்குள் அந்தர்த்தானத்தை யடைந்து மறைந்தொழிந்தார்.

# முப்பதாவது அத்தியாயம்.

கலி விருத்தம்

வாசவனந்தர்த் தானமானவுடன்
ஏசிலாக்கோபி காஜனரெல்லோரும்
தேசுலாவும்பரந்தா வனத்திற்சென்று
மாசிலாவனத் தேடிமயங்கினர்

ஸ்ரீபகவானானவர் அந்தர்த்தானமானவுடனே ஸ்ரீகோபிஜன சமூகங்கள்
யாவரும் ஸ்ரீகிருஷ்ணானுபவ மானசர்களாய் ஸ்ரீபகவத்விபோக தாபங்களினால்
அந்தப் பிருந்தாரண்யங்கள் தோறுஞ் சஞ்சரித்து விருட்சங்கள் புதர்கள்
கொடிகள் வெண்மணற்குன்றுகள் இவைமுதலான விடங்களிலேதேடி ஸ்ரீகிருஷ்
ணகுணங்களை யநுபவித்தார்களென்று சொல்லுகின்றது

சுகர் வாக்கியம்.

வாரீர் மகாராஜனே! இவ்விதமாக ஸ்ரீகிருஷ்ணபகவானானவர் அந்தர்த்
தானமானவுடனே இந்தச் சுகுமாரவதிகளாகிய கோபிகாஜனங்கள் தங்க
ளுக்குப் பிரசன்னராய்த் தங்களைக் கடாட்சிக்கனுஞ் செய்து மதுரமாக

வசித்துக் கொண்டிருந்து மாயமாய் மறைந்துபோன ஸ்வாமியைக் காணாமல் கஜேந்திர ஸ்ரேஷ்டனைக்காணாத யானைப்பேடுகளைப்போல மிகவுந் தாபங்களை யடைந்து, மதனஜ்வர பீடிதைகளாகி, அந்த ஸ்ரீபகவானுடைய ஸஞ்சாரங்களாகிய மஹாகம்பீர நடையழகுகளிலும், அவருடைய விலாசபார்வை விளையாட்டுகளிலும் தங்கள் சித்தத்தை வைத்து, தன்மயர்களாய்ப் பித்துப்பிடித்து தங்களுக்குள் தாங்களே ஸ்ரீ கிருஷ்ணபகவானாகப் பாவித்துக் கொண்டு, ஸ்ரீபகவத்குண விசேஷவிளையாட்டுகளால் அந்தவன மெங்கும் நிர்ப்பயர்களாய்ச் சஞ்சரித்துக் கொண்டிருந்தார்கள். இன்னும் ஸர்வப்பிராணிகளுக்கும் அந்தராத்ம ஸ்வரூபராகிய ஸ்ரீபரமாத்மரைக்குறித்து இந்த கோபிகாஜனங்கள் காளிந்தீதீர வனாந்தரங்களில் விருக்ஷலதாகுல்மாதி ஸகல ஸ்தாவரங்களைப் பார்த்து, யாவற்றையுந் தங்களைப்போலவே நினைத்துக்கேட்டு, ஸ்ரீகிருஷ்ண கீர்த்தனங்களைப் பாடிக்கொண்டே தேடிவெகுதூரஞ் சஞ்சரித்தார்கள்.

வாரீர் அரசனே! அவர்கள் ஸ்தாவரங்களைப்பார்த்துச் சொல்லியவற்றை விவரமாகச் சொல்லுகிறேன் கேளும். ஒருமாது, வாராய் புன்னைவிருக்ஷசொரூபியே! ஸர்வ ஸர்ப்பங்களுக்கும் அரசனாகிய நீ ஆதிசேஷ பகவானாலே துதிக்கத்தக்க நமது பிரியராகிய ஸ்ரீகிருஷ்ணபரனைக் கண்டதில்லையோ வென்றாள் ஒருநங்கை, வாராய் திலகவிருக்ஷமே! ஸமஸ்தப்பிராணிகளினுடைய லலாடத்திற்கும் அழகான திலகமாகிய ஊர்த்வபுண்டரூபத்தை யுடையவராயும், தமது முன்னெற்றியில் திலகம்போன்ற ரத்தினச் சுட்டியைத்தரித்தவராயு முள்ள ஸ்ரீபகவானைப் பார்க்கவில்லையோ வென்றாள் ஒருவஞ்சி, வாராய் பந்தாகவிருக்ஷமே! ஸமஸ்த ப்ராணிகளுக்கும் ஆபத்பந்தவாய் விளங்குகின்ற நாதர் அந்நமைந்த கேவலைப ஸ்ரீமாதவப்பிரானை நீ கண்டு வார்த்தைசொன்னதில்லையோ வென்றாள் ஒருபொற்கொடி, வாராய் மந்தாரவிருக்ஷமே! ஸர்வஜகன்மோஹனராய் அனந்தகோடி மன்மதஸ்வரூப அனந்தாச்சரிய குணசேஷ்டித ஸ்ரீநரஸிம்ஹனை நீ கண்டதில்லையோ வென்றாள் ஒரு துடியிடை, வாராய் வம்சவிருக்ஷமே! ஸ்ரீயதுகுலவம்சோத்தாரகராகியும், ஸமஸ்த பிராணிகளினுடைய வம்சங்களை விருத்தியடையச் செய்கின்றவராகியும், மதுரஸ்வரங்களோதுகின்ற வேணுவின் குழலைத் திருவதரத்தில் வைத்துக் கானஞ்செய்கின்றவராகியு முள்ள நமது ஸ்ரீகண்ணபிரானைக் கண்களிக்கக் கண்டதில்லையோ வென்றாள் ஒருபிடிநடை, வாராய் ஸ்ரீசந்தன விருக்ஷமே! ஸமஸ்த பிராணிகளினுடைய இருதயத்தில் நின்று தாபங்களைத் தீர்த்து மனங்குளிரச் செய்து தமது கிருபாவாத்ஸல்யாதி குணங்களினால் கண்ணளியோடு இரக்ஷிக்கின்ற ஸ்ரீகோவிந்த பிரானைக்கண்டு மனமகிழ்வில்லையோ வென்றாள் ஒருவல்லி, வாராய் குருந்தவிருக்ஷமே! மாணிக்க ஒளிகொண்ட பரஞ்சோதி ஸ்வரூபனாகிய ஸ்ரீபரமபுருஷனைப் பார்த்துக் களிக்கவில்லையோ வென்றாள். ஒருபூங்கோதை, வாராய் இந்திரபுஜவிருக்ஷமே! அவனிந்திரனுக்கு வாழ்வளித்த நமது ஸ்ரீதிருவிக்கிரம தேவனைக் கண்டிருந்தால் எங்களுக்குச் சொல்லலாகாதோ வென்றாள். ஒருபூங்குழல் வாராய் குவளைவிருக்ஷமே! ஸர்வகுவலயத்திற்கும் ஸர்வேச்வரனாய் நமக்குப் பிரபுவாயிருக்கின்ற ஸ்ரீகுவலயேசவரனை நீ

கூடினதில்லையோ வென்றுள். ஒரு தோகை வாருங்கள் பிரியகபாத விருக்ஷங்களே! சகலபிராணிகளுக்கும் நமக்கும் இருதய ரூபமாகிய வாத்ஸல்யாதி பிரியஸ்வரூபராய் விளங்குகின்ற நமது ஸ்ரீகிருஷ்ணபகவானைக் கண்டால் எங்களுக்குச் சொல்லிக் காட்டிக்கொடுத்து இரக்ஷியுங்களென்றுள்.

இப்படி பிராத்தனை ரூபமாகத் தேடிக்கொண்டு திரிகின்றவாகளுள், சிலா வாருங்கள் மல்லிகைமுதலிய புஷ்பவனங்களே! எங்கள் மானமாகிற தனங்களை யபகரித்துக்கொண்டு மறைந்து வந்திருக்கின்ற ஸ்ரீகிருஷ்ண பகவானை எங்கள் விபுவை நீங்கள் கண்டிருப்பீர்களானால், எங்கள்மீது கிருபை வைத்துச் சொ ிக் காண்பிக்கக் கடவீர்களென்று பிராத்தித்தார்கள். சிலா வாருங்கள் மிகவும் மதுபிந்துக்களையும் மகரந்தங்களையும் வருஷித்துக் கொண்டிராநின்ற வத்ஸக ஜாதீபுஷ்பக் கொடிகளே! நீங்கள் மன்மதனுகிய ஸ்ரீமாதவப் பிரானைக் கண்டதுண்டோ வென்றார்கள். சிலா வாருங்கள் மிகவு மநோரம்யமாகப் பரிமளங்களைத் தராநின்ற அசோகபுஷ்பச் செடிகளே! ஸ்ரீ சுந்தரானந்த கடப்பதரு பஞ்சனைக் கண்ணிலையோ வென்றார்கள் சிலர் வாருங்கள் அருணமயமான இதழ்களோடுங்கூடிப் பரிமளங்களை வீசாநின்ற காஞ்சன நாமதேய புஷ்பச்செடிகளே! சமஸ்த பிராணிகளினுடைய சோக நிவாரண கிருபாவத்ஸலனைப் பாக்கவில்லையோ வென்றார்கள். சிலா வாருங்கள் ஆகாயமளாவிய விருக்ஷங்களை யாஸ்ரயித்துப் படர்ந்து புஷ்பிக்காநின்ற குருவகபுஷ்பஜாதிக் கொடிகளே! திவ்யகாஞ்சனமய கிரீடத்தையுடைய ஸ்ரீ கோவிந்த மூர்த்தியைத் தேடிப்பிடித்துக் காட்டுங்களென்று சொன்னார்கள்.

சிலா வாருங்கள் ஜாஜீபுஷ்பச் செடிகளாகிய எங்கள் சேடிகளே! சர்வ வியாபியாகிய ஸ்ரீஹரியை எங்கு கண்டபோதிலும் எங்கள் ஸகீஜனங்களை விட்டுப்பிரிவது உமக்குத் தாமமோவென்று கேட்கக் கடவீர்களென்றார்கள். சிலா அங்கங்கு உருவெளித்தோன்றுகின்றபடியால், இதோ! இதோ! ஸ்வாமியென்று ஓடி ஓடித் தேடித்தேடித் திரிந்தனர்கள் சிலா வாராய துளசீ பிருந்தாவன புண்யவதியே! நீ ஸ்ரீஹரியின் சரணாரவிந்தங்களுக்கு மிகவும் பிரியமானவளாகையி , ஸ்ரீயசோதா நந்தனரானவா உன்னிடத்திற்கு வந்து வஸித்துக்கொண்டிருப்பாரே அவருக்கு எங்கள் சமாசாரங்களைச் சொல்லி எங்கள் இஷ்டங்களைத் திருப்தியடையச்செய்வியா யென்றனர்கள் சிலா வாரீர் சுரபுன்னை விருக்ஷங்களே! சாவத்திராகளாலும் புகழத்தக்க நற்குணங்களையுடைய எங்கள் நாதனைக் கண்டதில்லையோ வென்றார்கள் சிலா வாருங்கள் மல்லிகைமுல்லைகளே!" நீங்கள் கீர்த்திக்கத்தக்குந்த எங்கள் நாயகனைக் காட்டலாகாதோ வென்றார்கள். சிலர் வாரீா கிளிகளே! ஸ்ரீசுகரால வாணித்து ஆனந்திக்கத்தக்குந்த எங்கள் சுகபோகியைக்கண்டு நாங்களிலவதைச் சொல்லுங்களே யென்றார்கள் சிலா வாரீா மான் பேடுகளே! நீங்கள் வெகு தூரசஞ்சாரிகளாய மருண்ட பார்வைகளோடுங்கூடி ஸ்ரீஹரிக்குப் பிரியர்களாய்ச் சந்தோஷத்தோடு வியாபிக்கின்ற வாகளாகையால், எங்கள் நாதராகிய ஸ்ரீஹரி

யிருக்கின்ற விடத்தைச்சொல்லி, அவரை யெங்களுக்குக் காட்டுவீர்களானால் உங்களுக்கு மஹத்தாகிய சுகிர்தங்க ளுண்டாகுமென்று பிரார்த்தித்தனர்கள்.

வாரீர் பரிட்சித்து மகாராஜனே! இவ்விதங்களாகத் தேடிச் சஞ்சரித்துக் கொண்டிருக்கின்ற சமயத்தில் இந்த யமுநாநதீதீரத்தில் ... மயமாகிய மார்க்கங்களில் ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய ஸ்ரீபாதாரவிந்த அடையாளங்களைக்கண்டு ஆனந்தித்து, வாராய பூமிதேவியே! நீ என்னநோன்பு நோற்றனையோ? உன்னைப் பூர்வஜன்மத்தில் இந்த ஸ்ரீபகவானவர் ஸ்ரீவராஹமூர்த்தியாகி உன்னை ஆலிங்கனஞ்செய்து உத்தரித்தனர். பின்பு பிரமசாரியாகிய ஸ்ரீ வாமனமூர்த்தியாகித் தமது ஸ்ரீபாதார விந்தங்களால் அளந்து, இப்பொழுது ஸ்ரீகிருஷ்ணராகி உமது திருமேனிக்குத் திருவாபரணங்களாகத் தமது ஸ்ரீசரணாரவிந்த சின்னங்களால் அலங்கரித்துக்கொண்டிருக்கின்றார். ஆகையால் எங்கள்மேல் தயைசெய்து நாங்களும் அந்தப்பெருமானைப்பிரியாதிருக்க நோற்கும்படி அந்தநோன்பை எங்களுக்குச் சொல்லிக் கொடுப்பாயாக. இல்லாவிட்டால் எங்களுக்குச் சாலோகப்பிரபு இருக்கின்ற விடத்தையாவது காண்பித்து, அவர் எங்கள் மேற் கிருபைசெய்யும்படி செய்து எங்களை ரட்சிப்பாய் என்று பிரார்த்தித்தனர்கள்.

வாரீர் ராஜேந்திரனே! இந்த ஸ்ரீகோபிஜனங்கள் இவ்விதங்களாகப் பித்தமனதுடையவர்களாகி, வனமெங்கும் தங்களிஷ்டப்படிக்கு திரப்பியாகளாய இதரமனோ விருத்திகளையு மறந்து, ஸ்ரீபகவானைத் தேடித்திரிந்து எங்குங் காணாமல் மறுபடியும் ஸ்ரீயமுனா தீரத்தில்வந்து, அங்குள்ள வெண்மணற் குன்றுகளிலும் ஸங்கேத வனங்களிலுஞ் சேர்ந்து, மகா விரகதாபங்களாயப்பரமேகாந்திகளான முமுட்சுக்களைப்போல ஸ்ரீகிருஷ்ண லீலாசரிதாசரித்துக் கொண்டு ஸ்ரீபகவச் சனுபவங்களை யடைந்தனர்கள். அவற்றைப் பகுத்துச் சொல்லுகின்றேன் கேளும் அந்தச் சுந்தரவல்லிகளில் ஒருத்தி பூதனையைப் போல ஸ்ரீபகவானைத் தேடிவந்தனள். ஒருமாது ஸ்ரீகிருஷ்ண பகவானாகிய இளங்குழந்தையைப்போல அவள் மடியிலே படுத்துக்கொண்டு அவளுடைய ஸ்தனங்களைப் பிடித்துப் பாலமுதுண்டனள். அப்போது பூதனையைப்போலிருந்தவள் ஐயனே போதும்போதுமென்றனள்.

வாரீர் நரேந்திரனே! ஒருவனிதை சகடத்தைப்போல ரூபிகரித்துநின்றனள், ஒருபுண்யவதி பாலமுதுண்ணப் பசித்தழுத ஸ்ரீபகவானைப்போல படுத்தழுது தனகாலினால் உதைத்தனள். ஒருவிருத்திலே யசோதைப் பிராட்டியைப்போல உட்கார்ந்து காலைநீட்டினள். ஒருநங்கை ஸ்ரீ கண்ணபிரானாகிய சிறுகுழந்தையைப்போல மடியிற்படுத்தனள். அப்போது அசோதையானவள் அந்தக் குழந்தையானவளை மடியில்வைத்து முதுகடித்து தரையில்விட்டனள். அப்போது ஒருகாந்தை திருணாவர்த்த அசுரனேயாகிச் சுழற்காற்றைப்போல சுழன்றோடிவந்து எடுத்துப்போய் உசரவிருந்து அவனை வீழ்ந்தாற்போல வீழ்ந்தனள். ஒருசுந்தரி பகாசுரனைப்போல ஸ்ரீபகவானை விழுங்கப் பார்த்துக்கொண்

டிருந்து வந்து அவன் மூக்கறுகொத்திய சைகையைக்காட்ட, ஒருபத்மமுகி ஸ்ரீபத்மாக்ஷனைப் போல ஒருதிரணத்தைப் பிடித்துக்கிழித்து அவளைத் தள்ளினள்.

வாரீர் பரதகுலோத்பவனே! இரண்டு புண்யவதிகள் ஸ்ரீபலராமரைப்போலும் ஸ்ரீராமானுஜராகிய ஸ்ரீகிருஷ்ணபகவானைப்போலும் ஏற்பட்டிருந்து, கோபாலர்களைப்போலும் கோவினங்களைப்போலும் கோவத்ஸங்களைப் போலும் ஏற்பட்டிருக்கிற கோபிகாஜனங்களுடன் நாநாவிதங்களாகிய வனசஞ்சார விளையாட்டுகளை அனுசரித்து, வத்ஸாசுர தேனுகாசுர பிரலம்பாசுராதிகளைக் கொன்றது முதலிய விளையாட்டுகளைச் செய்து, வேணுகான ஸ்வரங்களினால் பசுக்களாயிருக்கிறவர்களை யழைத்து ஆதரித்து, மேய்ப்பவர்களாயிருக்கிறவர்களுடன் சரசங்களைச் செய்து, அவர்கள் தங்களைப் புகழ அவர்கள் மனோபீஷ்டங்களை நிறைவேற்றினதுபோலாடி, மகாவிருக்ஷ நிழல்களிலும் நதிதீரங்களிலுஞ் சில நேரந் தங்கியிருந்தார்கள். இவ்விதமாக இந்தக் கோபிகா ஸ்திரீஜனங்கள் விளையாடிச் சஞ்சரித்தார்கள்.

வாரீர் மகாராஜனே! ஒருகமலாக்ஷி ஸ்ரீபகவானாகிய சிறுபிள்ளையைப் போலிருந்தனள். ஒரு நிதம்பகல்யாணி யசோதாப பிராட்டியைப்போல ஸ்ரீபகவானையழைக்க சிலசுந்தரிகள் ஸ்ரீபலராமா முதலிய கோபாலச் சிறுவர்களைப்போல வெண்ணெயுண்டான மண்ணை யுண்டானென்று சொன்னார்கள். அப்போது தாயான் நின்றவள் ஏன் மண்ணைத் தின்னாயென்று கேட்க, நான் மண்ணைத் தின்னவில்லையே யென்று அந்த மாதவன் உலகமுண்ட தன்வாயைத் திறந்து சகல சராசரங்களையுங் காட்டினதுபோல கிருஷ்ணன் நானென்று நின்ற அக்கோபிகை தன்வாயைத்திறந்து காட்டினாள். அதைப்பார்த்து ஆச்சரியத்தை அடைந்தார்கள் பலபேர்கள்.

வாரீர் பூமீசனே! ஒருராஜீவவதனை ஸ்ரீகண்ணபிரானைப் போல வெண்ணெய திருடப் புகுந்தனள். சிலசுந்தரீரத்னங்கள் வெண்ணெய் திருடன் வந்தானென்று சொன்னார்கள். இவ்வளவில் கண்ணன் களவாடியிருக்கின்ற வெண்ணெயை வழித்து அவர்கள் வாயிற் பூசினதுபோல அவள் செய்தாள். யாவருங்கூடி முறையிட்டதுபோல அங்குச் சிலர் முறையிட்டார்கள். ஒருபுண்யாங்கனை யசோதாப பிராட்டியைப்போல ஒருதாமரைக் கொடியைக்கையிற் பிடித்துக்கொண்டு அதட்டினாள். ஒருசுந்தரி கண்பிசைந் தழுதுகாட்டினாள். ஒருமோஹனாங்கி யவர்களுக்குச் சமாதானங்கள் சொல்லினாள். இவ்விதங்களாய உரலிற்கட்டினது முதலிய சமஸ்த கிரீடைகளையும் ஆசரித்தனர்கள்.

வாரீர் விவேகசாலியான நரேந்திரனே! ஒருமாது காளியசர்ப்பராஜனைப் போலவும் சிலகன்னியாரத்னங்கள் நாககன்னிகைகளைப் போலவும் ஒருராஜீவவதனை ஸ்ரீகோபாலகுமாரனாகிய ஸ்ரீகிருஷ்ணபகவானைப்போலவும் வஹித்துநர்த்தனங்களைச் செய்ய, அந்நாகபத்னீ வேஷதாரிகள் ஸ்துதிக்க ஸ்ரீகிருஷ்ண

வேஷதாரியானவள் அவர்களைக் கிருபைசெய்து ரட்சித்து, காளியனை அமமடு வில் நின்றும் வெளிப்படுத்தி விடைகொடுத்து அனுப்பி, தானுமமமடுவை விட்டு வந்தவரைப்போலவு மாடினள்

வாரீர் புத்தேந்திரனே! ஒருசதுரங்கனை யானவள் ஸ்ரீகிருஷ்ண மூர்த்தி யாகவும் மற்றவர்கள் கோபால கோவினங்களாகவும் பாவித்துக்கொண்டு, காட்டுத்தீயானது வந்து சூழ்ந்ததுபோலவும் அகசாலத்தில் கோபாலர்கள் முறையிட்டதுபோலவும் ஸ்ரீகிருஷ்ணா! இரக்ஷி இரக்ஷி என்று யாவரு முறை யிட்டார்கள் அந்த ஸ்ரீகிருஷ்ண ரூபாங்கனை ஆமென்று வாயைத்திறந்து, கண்ணன் காட்டுத்தீயைக் கவளீகரித்தது போல ஆகாயத்தைக் கவளிகரித்துக் காட்டினள் அம்மாத்திரத்தில் யாவருஞ் சந்தோஷித்தனர்கள்

வாரீர் மனுஜேந்திரனே? ஒருமகாகம்பீர சுகுணவதியானவள் ஸ்ரீகோ விந்தனாகவும் மற்றக் கோபிகள் யாவரும் கோபாலர்களும் கோவின கோவத் சங்களு மாகவிருந்து, அகோ! ஈதென்ன ஆச்சரியம்? எந்தக் காலத்திலும் இப்படிக்கு வருஷித்ததில்லை. ஸ்ரீகிருஷ்ணா! ஸ்ரீமாதவா! ஸ்ரீஜனார்த்தனா! அபயம், அபயம் என்று முறையிட்டார்கள், அந்த ஸ்ரீபகவத்ரூப புண்யவதி யானவள் ஒருவரும் பயப்படவேண்டியதில்லை வாருங்கள் இந்தப்பாவத்தி னடியில் நில்லுங்கள் என்று எம்பிரான் கோவர்த்தன மெடுத்துக் குடையாகப் பிடித்ததுபோல தன்முன்றானையை விரித்து உயரவெடுத்துப் பிடித்துக் காட் டினள். அவ்வளவில்யாவரும் சந்தோஷ மடைந்தனர்கள்.

வாரீர் ராஜராஜோத்தமனே! இவ்விதங்களாக இந்த சமஸ்தமான கோபி காஜன சமூகங்களும் ஸ்ரீகிருஷ்ண லீலாகுணங்களில் ஆழ்ந்து, தன்மயத்வங் களை யடைந்தவர்களாய் விளையாடினார்கள் மேலும் அந்தக் கோபகன்னிகை கள் அந்தப்பிருந்தாவன மார்க்கங்களிலுள்ள வனவிருக்ஷங்களையும் புஷ்பச் செடிகளையும் துளசியாகிய பிருந்தாவனங்களையும் புஷ்பக கொடிகளையும் பார்த்து, சின்மயங்களான தங்கள் சகிஜனங்களாக நினைத்து, ஸ்ரீகிருஷ்ணபக வானாகிய எங்கள் உத்தமநாயகரைப் பார்த்தீர்களா? சொல்லுங்கள், என்று வினவிக்கொண்டு, நிரப்பயானந்த பரிதர்களாயச் சஞ்சரித்து, அங்கங்குச் சிலநேரம் ஸ்ரீகிருஷ்ண லீலாவினோதங்களாக விளையாடித் தேடிக்கொண் டிருந்தார்கள்.

வாரீர் உத்தரரத்நமே! இப்படியிருக்கின்ற சமயங்களில் அவ்வன வீதி களிலும் புஷ்பவனப் பிரதேசங்களிலும் தோப்புகளினுடைய அடிவார நிலங் களிலும் எங்கும் வெண்மணற் பாங்குநள ரிருக்கின்ற படியினலே, அவ்விடங் களில் படிந்திருக்கிற சங்கரேகை சக்கிரரேகை முதலிய ரேகைகளோடுகூடிய மகாராஜ லக்ஷண ஸ்ரீசரணார விந்தங்களினுடைய அடையாளங்களை அங்கங்கு கண்டுகளித்து, ஒருவர்க்கொருவர் காட்டினவர்களாய் நெடுந்தூரந் திரிந்து தேடி, ஸ்ரீபகவானைக் காணாதவர்களா யலைகின்ற இந்த ஸ்ரீகோபிகா ஜனங்கள் ஸ்ரீகிருஷ்ணனுடைய குணனுபவஞ்சொல்லத் தொடங்கினார்கள்.

வாராய மெல்லிய இடையினையுடைய பூங்கொடியே! இதோ பார்த்தறை யா ஸ்ரீபகவானானவா ஒருநாயகிநிமித்தம அனபுடனே புஷபஙகளைக கொயது கொடுதது அவளுக ஙிதமுணடாகச செயதனா. ஆகையால அவா ஸ்ரீபாதார விநததைை நனருயூனறிநினற அடையாளந தோனறுகினறது

வாராய சுபாஙகி! இவவிடததில ஒரு ஸதிரீயைத் தமது பிரியததினால சுமநது சஞசரிதது லீலைசெயதனா. அதனால ஸ்திரீபுருஷாகளுடைய பாத வடிகள் சிலதூரம வரையில காணபபடடு, இவவிடஙகளில ஸ்திரீயினுடைய பாதவடையாளம மறைநதுபோக ஸ்ரீபகவானுடைய பாதசினனஙகள, மாததி ரம விளஙகபபடடன இதோ இஙகு இறஙகினறபோ லிருககினறது. அநதச சாடைகள இவவடையாளஙகளாலே தோனறுகினறன.

வாராய எனதனபுள்ள சகியே! ஸ்ரீ அசசுதராகிய கணணபிரானவர் இதோவுடகாரநது ஒரு மேனமையை அடைநத ஸதிரீககுக காபபூர தாமபூலப பிரசாதததைக தமது திருவதரததினால கிருபைசெயது காடாவிஙகனஞ செயதிருககினறார இதோபாாததையா இவவிடததில ஸ்ரீகோவிநதனும ஒரு கோபிகையுமாகிய இருவரும உடகாரநது சரசஙகளைச செயதாாகள அத னால ஸ்ரீபகவானுடைய பாதாமபுயஙகளினேரஙக ளழுநதியதா யூனறியிருப பதும, அநதச சுநதரி அஸ்தஙளுனறித தாவியிருபபதும, அவவிருவாகளும சரசமாகச சநதோஷிதத விவரஙகளுந தோனறுகினறன.

வாராய பதமாடசி! ஸ்ரீபதமனாபராகிய ஸ்ரீகிருஷணபகவானானவா ஒரு சுகுணவதியைவரிதது, அவளோடு லீலாவினோதக கிரீடைகளைச செயதாா. அவவிரணடுபேரும நடநதுவநது இநத யமுனாநதியில ஜலகக மாடினாகள. இதோ அவாக ளிரணடுபேரும நதியிலிறஙகின அடையாளமும, மறுபடியும இருவரும நதியைவிடடு வெளிபபடட அடையாளமும இவவிடஙகளில தோனறுகினறன வலலாமல, இறஙகிய துறையும ஏறியதுறையும நேரடியா லும மாறறடியாலும காணபபடுகினறன

வாராய சுநதரவதியாகிய தருணிமணியே! ஸ்ரீவேணுகான லோலராகிய ஸ்ரீகோபால மூாததியானவா ஒரு கலயாணியைவரிதது, அவளோட காமகேளீ விலாசங்களில சநதோஷிககச செயதணைநதனா இதோ பாாததையா அவர் கள பாதவடிகளும, உததரீயததின குசசுகளினடையாளமும, முனறானையி னடையாளமும காணபபடுகினறன அவறறுள சிலகுறிகள நனருயத தோற றுகினறன சிலவடையாளஙகள மறைநது மறையாமலுந தோனறுகினறன. அங்கக்கலபபுகளாகிய அடையாளஙகளுந தோனறுகினறன.

வாராய் கமலாக்ஷீ! மஹானுபாவனாகிய ஸ்ரீபாலகோபாலரானர் ஒரு சகி யுடன் கூடிக்கொணடு போனா. அவாகளிருவரும ஒருவாககொருவா தோள் களில கைகளைப் போட்டுககொண்டு உல்லாசமாக உலாவிக் கிரீடிததனாகள்.

நிறைந்த தோப்புகளையும், நாநாவித புஷ்பங்களைத் தருகின்ற பூம்புதருகளின் சாலைகளையுடைய சோலைகளையும் யமுநாநதீ பிரவாகங்களையும், அனேக தாமரைத் தடாகங்களையும், கிணறுகளையும், சித்ரவிசித்ர மிருகபக்ஷி சமூகங்களையும், இன்னும் அவ்விடத்தில் விளங்குகின்ற சேதனாசேதனாத்மக சமஸ்தஜந்துக்களும் மிராகத்வேஷங்களற்று அந்யோந்யங்களாய்ச் சஞ்சரிக்கின்ற திவ்ய லக்ஷணங்களையும் பார்த்துக் கொண்டு, அந்த வனங்களிலும் மனோரம்யமாகிய வெண்மணற் குன்றுகளின்மீதும் தரிசனந்தருகின்ற ஸ்ரீகோவிந்த சரணாரவிந்த திவ்யரேகாங்கிதங்களை நேத்திரங்களாற் சேவித்து ஆனந்தித்துக் கொண்டு, கோகுலத்திற்குச் சமீபமாக வந்தார்.

அங்கு வரும்போது சூரிய பகவானும் அஸ்தமன பர்வதத்திற்குச் செல்ல உத்தியோகித்தான். அந்தச் சாயங்கால சமயத்தில் பசுவின் கன்றுகள் யதேச்சையாக மேய்ச்சலின்மீது ஆவலாகி, பள்ளங்கள் மேடுகள் புதருகளாகிய இவைகளிற் பிரவேசித்து, வெகுதூரஞ் சஞ்சரித்து, நேத்திரங்களுக்கு அகப்படாமல் விருந்தன. அப்போது அவ்விடத்திலுள்ள கோபாலசிறுவர்கள் நான்கு திக்குகளிலும் ஓடித்தேடி, அவைகளின் நாமதேயங்களைச் சொல்லி சாதீக்க சப்தங்களால் அழைக்கின்றார்கள். இப்படி யிருக்குஞ் சமயத்தில் அந்த அக்ரூரரானவர் அந்தக் குரலோசைகளோடு, பசுக்கூட்டங்கள் மிகவும் மிருதுவாகிய புல்லுகள் முதலியதுகளை மேய்ந்து திருப்தியடைந்து திரும்பும்போது கன்றுகளின் வரவைக்காணாமல் மிகுந்த ஆதுராதிசயத்தினால் தேடிப்பார்ப்பது அம்மா வென்கிற அரவங்கள் செய்கின்ற அவ்வோசைகளையுங் கேட்டுக்கொண்டும், கோமயங்களை விட்டுக்கொண்டு கன்றுகளை நினைத்தோடுகின்ற பசுக்கூட்டங்களையும் அவைகளை பலுச்சரித்து அழைத்துக்கொண்டு தங்கள் கைகளிற் கோல்களையுங் கயிறுகளையும் எடுத்துக்கொண்டு திரிகின்ற கோபாலர்களையும் பார்த்துக்கொண்டும் வருகின்றார்.

இப்படி வருகின்றவர் சிலகோபாலர்கள் பசுமந்தைகளுக்கு இருபாரிசங்களிலும் ரக்ஷகர்களாய் வேல், வாள், குந்தம், தோமரம், குடாரம், பாணம், சராசனம் இவைமுதலாகிய ஆயுதங்களைத் தாங்கிக் காவலாகச் செல்லுகின்றதையும், அச்சாவல்லைக் கடந்து நாநாவிதங்களாகிய புற்களை அபேக்ஷித்துப் பாய்ந்தோடித் திரிகின்ற பசுக்கூட்டங்களையும், அப்பசுக்களை மோந்துகொண்டு பாலையுண்டுதுள்ளி விளையாடித் திரிகின்ற கன்றுகளையும், பொலிப்புள்ள பசுக்களின் மேல்தாவி ஒன்றுக்கொன்று சரசலீலாக கிரீடைகளினிமித்தம் எதிர்த்து முட்டிக்கொண்டு யுத்தங்களைச் செய்கின்ற மற்ற ரிஷபங்களையும், பசுக்கூட்டங்கள் பாடிக்குச் சமீபமாக வரும்போது உண்டாகின்ற ஆரவாரங்களைக் கேட்டுத் தாய்வருகின்றதென்கிற பேராசையினாலே கொட்டாரங்களில் கட்டியிருக்கின்ற கன்றுகள் சிறுதும்புகளை யறுத்துக்கொண்டு புதருகளையும் வேலிகளையுந்தாண்டிப் பசுக்கூட்டங்களை யடைந்து பாலையூட்டி முட்டியுண்கிற வேடிக்கைகளையும், அந்தக் கன்றுகளைப் பார்த்து மிகவுஞ் சீக்கிரமாகப் பிடிக்க ஓடுகின்ற கோபால சிறுவர்களையும், அவர்களுக்கு

அந்தக் கன்றுகள் அகப்படாமையினால் தங்கள் பெரியோர்களாகிய கோபாலோத்தமர்களை மிகவும் அவசரமாக வழைக்கின்ற அச்சிறுவர்களின் குரலோசைகளையும் பார்த்தார்.

மேலும் அந்த ஆயர்பாடிப் பிரதேசங்களில் பாலின் கலசங்களைக் கொண்டுபோய் வைத்துக்கொண்டு பசுக்கூட்டங்களை யழைத்துவந்து ஓரிடத்தில் நிறுத்திக் கன்றுகளை யவிழ்த்து விடுகின்றவர்களையும், கால்களோடு கன்றுகளை யணைத்துக் கீதங்களைப் பாடிக்கொண்டு கறக்கின்றவர்களையும், சிறுகன்றுகளை யணைத்துக் கறந்து பின்னவிழ்த்துப் பாலூட்டவிட்டு ஊட்டியான பின் அந்தக் கன்றுகளைப் பிடித்துக் கட்டுகின்றவர்களையும், பாற்கலசங்களைத் தங்கள் கிரகங்களுக்கு எடுப்பித்து அனுப்புகின்றவர்களையும், ஸ்ரீபகவத்குணகீர்த்தனங்களைப் பாடியும் ஆடியும் குழல்களை யூதியுங் கிரீடித்துச் சந்தோஷமானசர்களாய்ச் சஞ்சரித்துக்கொண் டிருக்கின்ற தேவதாம்சப் புண்யபுருஷர்களாகிய கோபாலர்களையும், தங்கள் தங்கள் அருந்தவப்பேற்றால் ஜனித்து விருத்தியடைகின்ற புத்திரர்களையும் மித்திரர்களையும் மைத்துனர்களையும் மகிழ்நர்களையும் அம்மான்களையும் சகோதரர்களையும் சகோதரிகளையும் தாய்தந்தைகளையும் மற்றுமுண்டான சர்வசுகிர்த பந்துஜனங்களையு மறந்து, கிரஹ கிருத்தியங்களில் கைசோர்ந்து, க்ஷணத்திற்கு க்ஷணம் ஸ்ரீமாதவனிடத்தில் வைத்த மனத்துடையவர்களாய்க் கூட்டங் கூட்டமாகச் சேர்ந்து அங்கங்கொரு சங்கேதஸ்தலங்களில் வந்து நின்று, பிருந்தாவன மார்க்கங்களை யெதிர்பார்த்து, ஸ்ரீகிருஷ்ண மஹிமாதிசயங்களைப் பேசிக்கொண்டிருக்கும் புண்யவதிகளாகியும் அளவிறந்தவர்களாகியும் தேவ அரம்பையர்களுக்குச் சமானமானவர்களாகியும் தேவாம்சர்களாகியும் விளங்குகின்ற கோபிகா ஜனசமூகங்களின் கூட்டங்களையும் கண்டார்

அன்றியும் பசுக்கூட்டங்கள் வனசஞ்சாரங்களை யொழித்துத் திரும்பி ஆயர்பாடியைக் குறித்து வரும்போது அந்த மார்க்கங்களில் அந்தந்தப் பசுக்கூட்டங்களின் குளம்படிகளினால் கிளப்பப்பட்ட தூளிகள் ஆகாயத்தி லெழும்பி மேகபடலங்களைப்போல எங்கும் வியாபித்து மறைகின்றதையும், அந்தப் பசுக்கூட்டங்கள் அங்கங்கு தடாகங்களில் ஜலபானங்களைச் செய்து சரீரங்களை நனைத்து உதறிக்கொண்டு வருகின்றதையும், அதனால் மார்க்கங்களதோறும் சேறுபடுகின்ற கோதூளிமயமாகிய அள்ளல்களையும், அங்கங்கே தங்குமிடந்தோறும் அந்தந்தப் புண்ய புருஷகோபால ஜனங்கள் கோவினங்களை நிறுத்திப் பாலகலசங்களை யிறக்கிப் பசுக்களின் முலைகளைப்பற்றிக் கறக்கின்றதையும், அச்சமயத்தில் அந்தப் பாலமுதத்தாரைகள் அந்தப் பாற்கலசங்களில் விழுந்தொலிக்கின்ற ஓசைகளையும், அந்தந்தகோஷ அனந்தக் கிரஹ மந்திரத்துவார உன்னதஸ்தம்பங்களில் ஆட்டினங்களுக்கும் மாட்டினங்களுக்கும் காவலாய் இருப்புச் சங்கிலிகளினால் கட்டப்பட் டிருக்கின்ற நாய்கள் பாஷைசாரிகளாகிய நூதன ஜனகிர்த்தியங்களைக்கண்டு சிலிர்த்துக்

கோபித்துக் குரைத்துக் கொண்டிருக்கின்ற சபதங்களேயும், பார்த்தும் கேட்டும ஆனந்தத்தை யடைந்தவராய வருகின்றூர்.

அப்படி வருகின்ற அகரூரரானவா ஸ்ரீ பலராமகிருஷ்ண புஜபலபராக்ரம பாருசமரக்ஷணத்தினு லலஙகிருதமாய் விளஙகுகின்ற ஸ்ரீகோகுலமாகிய திரு வாயாபாடியைச சற்றுதூரததிற கணடுசேவிதது, ஆனந்தபரவசராய வரவரச் சமீபமாக வநதார அபபடிவருமபொழுது ஸ்ரீபகவானுடைய ஸ்ரீபாதார விந்தஙகளினது அடையாளஙகள அஙகஙகு வெணமணல குனறுகளில பிரகாசங களாகப பூமஹாலக்ஷ்மி யினுடைய திருமேனிககு மிகவும நிததியசோபன மஙகலாலஙகிருதஙகளான பூஷணஙகளேப போலத தோறறுகின்ற விடமெங கும இரததைவிட்டிறஙகி, தமதிரணடு கணகளுங குளிரத தரிசனஞசெய்து மனஙகளிதது, ஆனந்தபாஷபஙக ளொழுக அபபடியே தியானிததுச் சேவிதது வீழநதுபுரணடு, அநத ஸ்ரீசரணாரவிநத தூளகளேயெடுதது மேலே தூவிககொணடு, பய்லசசை சோகமோகஙகளே விடடு, ஸ்ரீஹரியெனறு புள காஙகிதராயச சறறுநேரநதிததது; அஙகிருநது புறபபடடு ரததநினமீதேறி, ஸ்ரீபலராமகிருஷண மூாததிகளேத தரிசிககவேணடு மெனகிற மிகவுமகததான ஆதராதிசயததுடன ஸ்ரீகிருஷ்ணபததததில பகதியுடையவராய நநதவிரஜத திறகுச சமீபமாகவநது கொணடிருககின்றூர்.

அநதச சாயஙகால சமயததில அளவிறநத புண்ய புருஷாகளாகிய கோபால ஜனஙகளுடனும அனேகமாயிரங கோவின கனறுகளுடனும ஸ்ரீப லராமகிருஷணாக ளிருவரும விசால நேததிரஙகளே யுடைய வாகளாகியும், தஙகள திருமேனியெஙகும கோதூளிகளால மறைநத சுநதர அவயவஙகளே யுடையவாகளாகியும சாவாபரண பூஷிதாகளாகியும், பீதாமபரததையு நீலாமபரததையு முடுததிக கொணடிருககின்ற வாகளாகியும, அனநதவிதஙக ளான புஷபமாலேகளேத தரிததுப பருதது அகன்றுவிளஙகுகின்ற புஜங்களேயு மாாபுகளேயு முடையவாகளாகியும, சாவஜன மனேஹராகளாகியும, கோகுல கோபிகா ஜனஙகளினது இசசைகளேப பூாததிசெயகிற வாகளாகியும பிரகா சிததுககொணடு இவவுலகமாகிய ஸ்ரீமகாலக்ஷ்மி தேவிககு நேததிரோதஸவமாக எழுநதருளுகின்றூாகள அபபடி எழுநதருளுகின்ற இநதமூாததிக ளிருவரை யும அகரூரரானவாகணடு, தமதிரணடு கணகளுங குளிரசசேவிதது, இரதத தைவிட்டிறஙகி, அநதக கோபால கோவினசமூகஙகளில நுழைநது, இநத மூாததிகளின சமீபததிலவநது, விநயகாததிரராய மிகுநதபகதியுடன சாஷ் டாங்கமாகத தணடன் சமாபபிததாா

கேட்டீரோ பரிக்ஷின்மகாராஜனே! அநத அக்ரூரர்பக்தி விநயததை யென்னென்று சொலலுவேன்? பினபு ஸ்ரீ பகவன் மூாததிகளி னுடைய அனுஜ்ஞையைப பெறறு எழுந திருநது, தமது சரீரமெஙகும் புளகாங் கிதங் கொண்டவராய் நேததிரஙகளில நின்று ஆனந்த பாஷபங்க ளொழுக அவ்விருவர்களேயும் பார்த்து, வாருஙகள் திவ்யமங்கல மூாததிகளே! சர்வ

ஜகத்காரணர்களாகியும், சர்வஜகத் பதிகளாகியும், சர்வஜகத் பதிகளுக்கும் நியாமகர்களாகியும், சர்வவியாபகர்களாகியும், சர்வ பூதேஸ்வரர்களாகியும், சமஸ்த சாதுஜன கோபப்பிரமண்ய பிரியர்களாகியும், பிரமன் முதலிய சகல தேவதா பிரார்த்தன பூபார நிவாரணார்த்தமாக எங்கள் ஸ்ரீ வசுதேவ தேவகியின் திவ்யோதரப் பிரகாசாவதார ஸ்ரீ பகவத் பிம்பமூர்த்திக ளாகியும் விளங்குகின்ற உங்கள் ஸ்ரீ சரணாரவிந்தங்களுக்கு அனந்தமான நமஸ்காரங் கள் சமர்ப்பிக்கின்றேனென்று துதித்து நின்றார்.

வாரீர் மஹாராஜனே! ஸ்ரீ பக்தவத்ஸலராகிய ஸ்ரீ பகவானானவர் சகல சேதநாசேதனங்களோடுங் கூடிய சமஸ்தப் பிரபஞ்சங்களிடத்திலும் இராகத்வேஷங்களற்று மாயா விகிருதிகள் தொடராமல் இரக்ஷிக்கின்றது போல, ஸ்ரீ மஹாபாகவதோத்தமராகிய இந்த ஸ்ரீ அக்ரூரரைத் தமது சக்கராங்கித ஸ்ரீ ஹஸ்தத்தை நீட்டி ஆலிங்கனஞ்செய்து சத்கரித்தார். உடனே ஸ்ரீ பலராமரும் தங்களுக்குப் பிரணாமஞ்செய்து நிற்கின்ற இந்த மகானுபாவராகிய அக்ரூரரைக் கடாக்ஷிக்கனஞ்செய்து, மிகவும் பிரீதியுடன் ஸ்ரீகிருஷ்ண சகிதராய் அவரை யழைத்துக்கொண்டு கோகுலத்திற் பிரவேசித்துத் தங்கள் திருமாளிகையாகிய நந்தக்கிரகத்திற்குப்போய் நந்தகோபருக்குத் தெரியச் செய்தார்.

அம்மாத்திரத்தில் அவரும் சீக்கிரமாக எதிர்கொண்டு உபசரித்து, க்ஷேமங்களை விசாரித்து, கைகால்கள் சுத்திசெய்யச் சலங்கொடுத்து, உசிதாசனத்தி லிருக்கச்செய்து, ஆசக்கியாசமனந் தந்து, மதுவர்க்கங்களையுங் கோதானத்தையுஞ் சமர்ப்பித்து, பொற்றும்பாளத்தில் அவருடைய திருவடித் தாமரைகளுக்குத் திருமஞ்சனஞ்செய்து, ஸ்ரீ பாததீர்த்த முட்கொண்டு, சற்றுநேரம் லோகோபகார சிலதாமங்களைப் பேசிக்கொண் டிருந்து, உடனே ஸ்நானத்திற்கு விடைதந்து அவரைத் தீர்த்தமாடச்செய்து, அறுசுவை ரஸவர்க்கங்களோடு போஜனஞ் செய்வித்து, திவ்யபரிமள கர்ப்பூர தாம்பூல முதலிய வஸ்திர சந்தன புஷ்ப மால்யாதிகள் சமர்ப்பித்து, அவர் சந்தோஷ மனோரதங்களை யடைந்தபின்பு அவரைப்பார்த்து ஒரு வார்த்தை சொல்லுகின்றார்.

## நந்தகோபர் வாக்கியம்.

வாரீர் பரமபாகவதோத்தமராகிய அக்ரூரரே! நீங்களியாவரும் க்ஷேமமா? நமது ராஜாவாகிய கம்ஸ மஹாராஜனானவர் தமதன்புள்ள தங்கையாகிய தேவகி பிராட்டியினுடைய அருந்தவப் புத்திரர்களாகிய சிறுவர்களை யெல்லா மரணமடையும்படிப் பலிசெய்து குரூரகிர்த்தியராய க்ஷேமத்தை யடைந்திருக்கும்போது, அந்தத் தேவகி வசுதேவர்களுக்கும் தாசாரஹர்களாகிய உங்களுக்கும் மற்றுமுள்ள யது, விருஷ்ணி, போஜ, அந்தகாதி பந்துஜனங்களுக்கும் எப்படி க்ஷேமங்கிடைக்கும்? உங்கள் யாவருக்கும் அந்தக்கொடிய துஷ்டகுணத்தை யுடைய கம்ஸபீதியில நின்றும் விடுதலை யுண்டாக்கி, மிகவும்

சாதி சம்ரக்ஷணார்த்த உலக அரிஷ்ட நிவாரண பரமகிருபாநிதியாயிருக்கின்ற ஸ்ரீ ஹரியினுடைய கிருபையினால் சீக்கிரமாக க்ஷேமகரமாகிய மங்கலங்களுண்டாகக் கடவதென்று சொன்னார்.

வாரீர் மஹாராஜனே! இந்தப் பிரகாரஞ்சொல்லிய நந்தகோப ரானவர் பின்னர் ஸ்ரீ பகவானைப் பிரார்த்தித்து, அக்ரூரரைப் பார்த்து, மார்க்காயாசத்தினால் சிரமங்களை யுடைத்தாயிருக்கின்றீர். சயனித்துச் சுகநித்திரைச் செய்யும் என்று சொல்லி அவரிடத்தில் தாம் செலவு பெற்றுக்கொண்டு சயனக்கிரகத்திற்குச்சென்றார் இந்த அக்ரூரரும் நந்த கோபருடைய மாதுர்யமான வசனங்களால் திருப்தியடைந்து, மார்க்காயாஸங்க ளொழிந்து சந்தோஷமாக விருந்தார்.

# முப்பத்தொன்பதாவது அத்தியாயம்.

கலிவிருத்தம்

குற்றமற்றவக் குரூரகோதிலாதவனுடன்
சித்தமொத்துமெத்தவே குசலப்பிரஸனஞ்செய்துபின்
சுத்தகோபிகாஜனங்கள் குரூரநிந்தைசெய்ததும்
காத்தனமாமதுரைக்கேக்கக் கனிந்தத்துங்கழறுவாம்

ஸ்ரீபகவானனவர் அக்ரூரருடனே ஏகாந்தமாய்ச் சில குசலப்பிரசனங்கள் செய்து ஸ்ரீமதுராபுரியைக்குறித்துப் பிரயாணமானதும், அப்போது கோகுலத்திலுள்ள கோபிகாஜனங்கள் யாவரும் மனோவியாகூலத்தினால் அக்ரூரரை நிந்தாஸ்துதிகள் செய்ததும், ஸ்ரீயமுனாநதியில் அக்ரூரருக்கு வியூக வைகுண்ட பிரசங்க தரிசனார்த்தங்களை லபிக்கச்செய்ததும் சொல்லுகின்றன.

## ஸ்ரீசுகர் வாக்கியம்

வாரீர் அபத்திராபௌத்திரனே! அந்த அக்ரூரரானவர் ஒரு சுகுமார சயனத்தில் ஏகாந்தராய்ச் சயனித்துக் கொண்டிருக்கின்ற சமயத்தில் ஸ்ரீ கிருஷ்ணபகவானனவர் அவரிடத்திற்குவந்து, அவர்அருகில் உட்கார்ந்து மிகவும் உபசரித்து, வாரீர் ஸ்ரீஹரிபக்தி பாவனராகிய ஸ்ரீ அக்ரூரரே! உங்கள் யாவருக்கும் க்ஷேமமோ? நமது பந்துமித்திர ஜனங்களயாவரும் சௌக்கியமாக விருக்கின்றார்களோ? புரஜனங்களாகிய சர்வப்பிராணிகளுஞ் சுகித்திருக்கின்றார்களோ? நமது கோத்திரஜஞர்கள் யாவரும் மனக்கவலைகளில்லாமலிருக்கின்றார்களோ? எனது நலமமான முக்திபீதியுடனிருக்கின்றாளோ? என்று கேட்டார்.

## ஸ்ரீ பகவான் வாக்கியம்.

பின்பு சிலநேரஞ் சும்மாயிருந்து, வாரீர் எங்கள் வம்சசிரேஷ்டராகிய அக்ரூரரே! மிகவுஞ் சகிதுக்களாகவு தீனர்களாகவு மிருக்கின்ற என்னுடைய தாய் தந்தைகளாகிய வசுதேவ தேவகிதேவிகளும், உக்ரசேனமஹாராஜா தேவகர் முதலாகிய மாதாமகர்களும் க்ஷேமமா யிருக்கிறார்களோ? நான் ஜனிக்கப் போகிறேனென்கிற வியாஜத்தை மனதில் தீர்க்கவைரமாக நிறுத்தி என்னமமாமனாகிய கம்ஸமகாராஜன் தீனர்களாகிய என் தாய்தந்தைகளைக் காரா கிரஹத்திலடைத்து இன்னமும் நலியச்செய்கின்று னல்லவா? அவர்களென்பொருட்டு இப்படிப்பட்ட மனத்துயரங்களை யனுபவித்துக் கொண்டு என்னமாயப் பிழைத்திருக்கின்றார்களோ

வாரீர் எங்களுக்கு ஆப்தபந்துவாகியும் தாதாவாகியு மிருக்கின்ற அக்ரூரரே! மிகவுந் துஷ்டனுகியும் குதைத்துரோகியாகியும் குராதமாவாகியு மிருக்கின்ற அந்தக் கம்ஸனென்பவன் உம்மை யிவட்டத்திறகுப் பிரயாணப்படுத்தி யனுப்பும்போது, என் தாய்தந்தைகளறிந்து மிகவும் புத்திரவாத்ஸல்யத்துடன் எனனுடன் சொல்லும்படியான ஆப்தசமாசாரங்களேதாவது சொன்னார்களோ? மிகவுந் தீனர்களாய், இனியென்ன செய்கின்றதென்று வெறுத்தவர்களாய், ஸ்ரீஹரி நம்மை இரக்ஷிப்பாரோ உபேக்ஷை செய்வாரோ வென்று துக்கித்து, தங்கள் இருதயங்கலங்கி, எப்படிப்பட்ட துன்பமுற்றிருக்கின்றார்களோ? விசித்மாக எனக்குத் தயாபரி பூரணராய்த் தெரிவிக்கக் கடவீர். மிகவும் ஆப்தராகிய உமது தரிசனந் தெய்வாதீனமாக எங்களுக்கு ஸ்ரீஹரியினுடைய கிருபையினால் கிடைத்ததன்றே? ஆகிலும் அந்தக் கம்ஸமகாராஜன் என்னகாரியார்த்தமாக அனுப்புவித்தனன் அதைத் தெரியச் சொல்லக்கடவீரென்று சொன்னார்

## சுகர் வாக்கியம்.

வாரீர் பரிக்ஷின் மஹோத்தமனே! இவ்விதங்களாக ஸ்ரீ பகவானனவர் மிகவுங் கிருபா பரிபூரணராய் மகாவாதரவுடன் கேட்டமாத்திரத்தில் அக்ரூரரானவர் ஸ்ரீ பகவானுடைய சௌலப்யாதிசய மஹாமஹிம குணங்களுக்கு ஆச்சரியப்பட்டு, தமது இரண்டு நேத்திரங்களினின்றும் ஆனந்த பாஷ்பம் ஆறுகப்பெருக மிகவும் பயபக்திப் பிரீதி அதிசய மானஸராய் ஒருவார்த்தை சொல்லுகின்றார். வாரீர் சாவலோக சரண்யராகிய ஸ்ரீ பகவானே! இந்தத் துராத்மாவாகிய கம்ஸ ராஜனென்பவன் யது, விருஷ்ணி, போஜாந்தகாதி வம்சத்தலைவர்களைத் துன்பமுறச்செய்து வைரஞ் சேர்த்துவதை என்னறச் சொல்லி முடியாது. ஒருநாள் ஸ்ரீமந் நாரதபகவானனவர் கம்ஸமகாராஜனுடைய சபைக்குவந்து, வசுதேவருக்குப் புத்திரர்களாய் நீங்கள் திருவவதரித்த உத்தம சரித்திரங்களையும், திவ்ய லீலாமஹிமாதிசய கல்யாண குணங்களையும், யாதவர்களுடைய தேவதாம்ச ரஹஸ்யங்களையும், அக்கம்ஸன முதலிய அசுராம்ச விவரங்களையும் சொன்னார்

அதைக்கேட்ட மாத்திரத்தில் ஸ்ரீ வசுதேவர் முதலியவர்களைக் கொலை செய்ய நினைத்து, பின்பு கொல்லாமல்விட்டு, அவர்களைக் காராக்கிரஹத்தில் பந்தனஞ் செய்திருக்கின்றான். மேலும் தனக்கிஷ்டர்களாகிய துஷ்ட நரபதிகளை யழைத்து மந்திராலோசனை செய்து, தனுர்யாகத்திற்கு யத்தனஞ் செய்தான். தனது சத்துருக்களாகிய உங்களை நலியச் செய்வதற்கு மத்தகஜமாகிய குவலயாபீடத்தையும், சாணூர முஷ்டிகாதி துஷ்டமல்ல ஜெட்டிகளையும், இருத்தியாகளா யிருக்கும்படி நியமித்து வைத்திருக்கின்றான். என்னை யழைத்து உங்களிருவர்களையும், நந்தகோபர் முதலாகிய ஜனங்களையும், கப்பத்துடன் அழைத்து வரும்படியாய் ஆஜ்ஞாபித்தனுப்பினானென்று சொன்னார்.

ஸாரீர பரீக்ஷின் மஹாராஜனே! இவ்விதமாக அக்ரூரர் சொன்னமாத்திரத்தில் அப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணபகவானும் அவருகிலிருந்த ஸ்ரீ பலராமருமாகிய இவ்விரண்டு மூர்த்திகளுங் கேட்டு, மந்தஹாஸர்களாய் நகைத்து, அவரை யுபசரித்துச் சுசீத்திரை செய்யச் சொல்லிக்கொடுத்து, தாங்களும் அன்றிராத்திரி நித்திரைசெய்து, மறுநாளுதயத்தில் தங்களன்புள்ள பிதாவாகிய நந்தகோபருக்குக் கம்ஸ மஹாராஜனானவன் தனுர் யாகத்திற்கு வரச் சொன்ன சமாசாரங்களை யறிவித்தார்கள். அதைக்கேட்ட மாத்திரத்தில் நந்தகோபரானவர் கோகுலத்திலுள்ள கோபாலர்கள் யாவரையும் அழைப்பித்து ஒருவார்த்தை சொல்லுகின்றார்.

வாருங்கள் கோபால மகாஜனங்களே! நம்முடைய அரசனாகிய கம்ஸ மஹாராஜனானவர் தனுர்யாகஞ் செய்கின்றதாய் நம்மை யாவரையும் வந்து சேரும்படி ஆஜ்ஞாபித்திருக்கின்றார். ஆகையால் நாம் யாகதரிசனார்த்தமாகப் போகவேண்டும். அதனால் அவரவர்களுக்குத் தக்கபடி பாற் கலசங்களும் தயிர்முதற் குடங்களும் வெண்ணெய்ப் பாத்திரங்களும் நெய்ப்பாண்டங்களும் ஆகிய இவைமுதலாகிய வஸ்துக்களையும், அரசனுக்குச் செலுத்தவேண்டிய கப்பமாகிய காணிக்கைகளையுங் கொண்டு வாருங்கள். நாமெல்லாரும் நாளையுதயத்தில் மதுராநகரத்திற்குப் பிரயாணமாய்ப் போய் வரவேண்டுமென்று சொன்னார்.

இப்படி யாவருக்கும் ஆஜ்ஞாபித்த நந்தகோபர் பிரயாணோன்முகரா யிருந்தார். அன்றையதினமே அக்ரூரரானவர் நந்தகோபரால் பூஜிக்கப்பட்டு, ஸ்ரீபலராம கிருஷ்ணமூர்த்திக ளிருவரையும் தமது ரதத்தின்மீது ஆரோகணிப்பித்து அழைத்துக் கொண்டு போகும்படி அந்த நந்தகோபரிடத்தில் செலவு பெற்றுக்கொண்டு, பிரயாணோன்முகராய் இராத்தலங்காரஞ் செய்துகொண்டிருந்தார். இப்படியிருக்க அக்ரூரரானவர் ஸ்ரீகிருஷ்ணபகவானையும் ஸ்ரீபலராம மூர்த்தியையும் மதுராநகரத்திற்கு அழைத்துக்கொண்டு போகும்படி பிரயாணமா யிருக்கின்றாரென்கிற சமாசாரத்தையறிந்த கோகுலத்திலுள்ள ஸ்ரீஹரிப்பிரியர்களாகிய ஸமஸ்தமான கோபிகாஜனங்களும்

மனங்கலங்கினவர்களாகி, அவரவர்கள் தங்கள் தங்கள் ஸ்ரீபகவதனுபவங்களை நினைத்துக்கொண்டு, ஏகாந்தஸ்தலங்களில் இனவினமாய்ச்சேர்ந்து, குணானுபவமாகப் பிரலாபிக்கத்தொடங்கி, ஒருவரையொருவர் பார்த்து இப்படி பேசுவதானார்கள்

வாருங்கள் மஹா சுகுணரதிகளாகிய புண்யாங்கனைகளே! ஸ்ரீபகவானனவர் இந்த நந்தவிரஜத்தில் திருவவதரித்த நாள்முதல் இன்றையவரைக்கும் ஒருநாளாவது நம்மைவிட்டுப் பிரிந்தவரல்லவே இப்போது பிரிந்துபோகின்றாரே அவரைவிட்டு நாமென்னமாய் ஸஹிந்திருப்போம்? என்று சொல்லி ஸ்ரீபகவானுடைய சுந்தரமுகாரவிந்த ஸேவாதிசயங்களையும், சிறுநகைகளையும் மகாமாதுர்யமான சாதுர்பவாக்யாதிசயங்களையும், ஸர்வஸ்த பிராணிகளினுடைய மனதின் தாபங்களாறும்படியான கிருபாகடாக்ஷ வீக்ஷணயாதிசயங்களையும், லீலாகுண வைபவாதிசய அதிமானுஷ சேஷ்டிதங்களையும், பரமதயாகுண விசேஷங்களினுலுண்டாகின்ற சத்காரியங்களையும், அவருடைய கரமாகிற தாமரை பரிசங்களினுலுண்டாகின்ற தங்கள் ஜன்மஸாபல்யமான சுகானந்தங்களையும், அங்கங்கு அந்தந்த விடங்களிலேதோறும் ஒருவரோடொருவர் சொல்லிக்கொண்டு, சிந்தாக்கிராந்தர்களாகி, ஸ்ரீபகவானைப் போகவொட்டாமல் நிறுத்திக்கொள்ளுவதற்கு யாதோருபாயமுந் தோற்றவில்லையே யென்று முகமண்டலங்கள்வாடி, மனந்தளர்ந்து வியசனப்பட்டார்கள்.

வாரீர் பூமீசனே! ஸ்ரீகோபிகாஜனங்கள் வியசனப்பட்டுக் கொண்டு சொல்லியதை விவரமாகச் சொல்லுகின்றேன் கேளும் அந்த ஸ்திரீஜனங்களில் சிலர் சிலரைப்பார்த்து, வாருங்கள் ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் பற்றின மனமுடைய மங்கையர்களே! இந்த ஸ்ரீபுருஷோத்தமர் இவ்விடத்தில் திருவவதரித்தபின்பு இவ்வுலகத்திற்குச் சிருஷ்டிகர்த்தாவாகிய சதுர்முகப் பகவானை நாம் எல்லாரும் நமக்குப் பரமோபகாரியாக நினைத்துத் துதித்துக்கொண்டிருந்தோமல்லவா? அந்தப் பிரமமாவானவர் இப்போது நிர்த்தயராகி, நமக்குச் சாவவிதங்களினும் போஷக போக்கியராகியு மிருந்து நம்மை இரட்சித்துக் கொண்டிருக்கின்ற ஸ்ரீகிருஷ்ணபகவானை இவ்விடத்தில் வசித்துக் கொண்டிராமல் நம்மைவிட்டுப்பிரிந்து இதரமான ஸ்தலங்களில் சென்று இருக்கும்படியாக வுதித்த விஷயங்களைக்குறித்து யோசிக்குமளவில், இது பாலசேஷ்டிதமாக விருக்கின்றதே யல்லாமல் வேறில்லையே அகோ ஈதென்ன அகிரத்தியம்? பெண்களின்ருமையறிந்த ஸ்ரீ சரஸ்வதீதேவிக்கானுலுந் தெரிவித்து, அவளைக்கொண்டு அந்தப் பிரமதேவனுக்குச் சொல்வித்து, நமது ஸ்ரீவேணுகோபால ஸ்வாமியை இவ்விடத்தில் நிறுத்தும்படி யாராகிலும் முறையிட்டுக் கொள்ளப் போகாதோ வென்றார்கள்

சிலர் சிலரைப்பார்த்து, வாருங்கள் சுசீலைகளான் சுபாங்கனைகளே, நமதருந் தெய்வமாகியும் நமக்குப்பிரிய சகாவாகியும் இருக்கின்ற ஸ்ரீபகவானனவர் தம்மை நிகிலபுருஷார்த்தங்களாகவும் சாவவித பந்துவாகவும் நம்பியிருக்கின்ற பேதைகளாகிய இந்தக் கோபிகாஜனங்களை என்னமாய்ப்பிரிந்து நாம்

அன்னிய தேசத்திற்குச் செல்லுகின்றதென்று சற்றுகிலும் யோசிக்காமல், அவரழைத்த மாத்திரத்தில் ஸ்ரீமதுரா நகரத்திற்கு எழுந்தருள இசைந்தாரே ஈதென்ன வித்காரணமோ? இந்தக் கோபவிருத்தர்களாகிலும், ஸ்ரீஅம்புஜாக்ஷராகிய ஸ்ரீபகவானைமாத்திரம் அழைத்துக்கொண்டு போகவேண்டாம். நாங்களெல்லோரும் வருகின்றோம். என்று நமது ஸ்ரீவிபுவை நிறுத்திவிடலாகாதா என்று துக்கித்தார்கள்.

சிலர் சிலரைப்பார்த்து, வாருங்கள் மகாதனயாதிகளாகிய சகிதஜனங்களே! நமது அன்புள்ள மனோவல்லபராகிய ஸ்ரீகிருஷ்ணபகவானை அழைத்துப்போக விரும்பிவந்திருக்கின்ற இந்தமஹா புருஷஸ்ரேஷ்டருக்கு அக்ரூரரென்கிற நாமதேயஞ் சொல்லத்தகுமோ? ஏனெனில் ஸ்ரீசக்கரதரராகிய நமதாதார சுவாமியை நம்மைப் பிரித்து அழைத்துக்கொண்டுபோக நினைத்து வந்தவராகையால், இவரைக் குரூரரென்றே சொல்லவேண்டுமே யொழிய இவரை உண்மையாக அக்ரூரரென்று ஒருகாலுஞ் சொல்லத்தகாது அக்ரூரநாமதேயம் இவருக்குக் கிடைத்தது நிஜமேயானால், நமது ஸ்ரீகிருஷ்ண பகவானை நமக்காதாரமாக இவ்விடத்திலேயே நிறுத்தி யிருக்கச்செய்து, மற்றக்காரியங்களை நிறைவேற்றிக் கொண்டுபோக இவர் நினைக்க மாட்டாரோ? என்று தங்கள் தாறுமையைச் சொல்லிக்கொண்டார்கள்

சிலர் சிலரைப்பார்த்து, வாருங்கள் சுந்தரீஜனங்களே! ஸ்ரீஜகன்மோகனாகார ஸ்ரீபரமபுருஷரானவர் அந்தமதுராநகர ராஜமார்க்கங்களில் கம்பீரமாகிய நடைநடந்து செல்லும்போது, தாமரைப் புஷ்பத்தின் இதழ்களுக் கொப்பாகிய நேத்திர சுந்தரத்தையும் களங்கமற்ற பூர்ணசந்திர பிம்பங்களை யொத்த முகாரவிந்த சுந்தரத்தையும் படைத்த புரஸ்திரீஜனங்கள் தங்கள் மாளிகையின் மேடைகளில் நின்று, சாளரங்களை நன்றாகத் திறந்து, ஸ்ரீபகவானைத் தங்கள் கண்களகுளிரச் சேவித்து சுவர்ணமங்கலாக்ஷதைகளையும் புஷ்பங்களையும் வாரிவாரியிறைத்து, ஸ்ரீஹரியினுடைய குணங்களைத் துதிப்பார்களல்லவா? அவர்கள் அப்படித் துதிப்பார்களேயாகில், ஸ்ரீபகவானானவர் அந்த நகரவாசிகளாகிய நாகரீகஸ்திரீஜனங்களை விசுவாசிப்பரேயல்லது இந்த ரேபல்லேயி லிருக்கின்ற நம்மை நினைப்பாரோ? என்று வியாகுலத்துடன் பேசிக்கொண்டார்கள்

சிலர் சிலரைப்பார்த்து! வாருங்கள் ஸ்ரீகிருஷ்ணப்பிரிய சுந்தரவதிகளே! நமது ஸ்ரீ அரியாகிய ஸ்ரீகிருஷ்ண பகவானானவர் அந்த ஸ்ரீமதுராநகரத்திற் பிரவேசித்துச் சஞ்சரிக்குந் தருணங்களில், அந்தப் பட்டணத்து ஸ்திரீகளினுடைய திவ்யசுந்தர முகாரவிந்தங்களில் விளங்குகின்ற மிகுந்த சுந்தரமுள்ள அஞ்சன நேத்திரங்களினுடைய நயவிலாசப் பார்வைகளிலும் அவர்களுடைய மகாமாதுரிய ஸரஸஸல்லாபசாதுரிய வசனங்களிலும் விருப்புற்று, அவர்களுடைய சுகுமாரமாகியும் மிகவும் பிரியமாகியு மிருக்கின்ற அதிவினோத விசேஷ ஸரஸஸல்லாபங்களோடுகூடிய சிநேஹ சம்போகாதிசயங்களில்

மனோரதித திருபபாரேயானால இவர இநத வனாநதிரஙகளிலும பலலைகளிலும வாசஞசெயதுக கொணடிருககினற நாகரீகமிலலாத பேதைகளாகிய நமமை மறநதுவிடுவா ரெனபதறகுச சநதேகமுணடா? இவர எநத ஏதுவினால நமமை யஙகீகரிககப போகினறார? இதறகு நாம எனனசெயயலாம? அஹோ! இவவுலகததி லிருககினற ராஜபுததிரரகள நூதனஜனப பிரியரக ளேயனறி வேறிலலை ஆகையால இவரகளை யொருககாலும நமபககூடாதே எனறு வெறுபபுடனே துககிததாரகள

சிலர பிரமஹதேவனுடைய மனஸஸஙகலபமான தெயவகதியைக் குறிதது, வாராய தெயவகதியே! நாஙகள ஜனமிதத நாளமுதல ஸ்ரீஹரி யினுடைய லீலாகுணஙகளை அறியாதவரகளாகிய அநத நகரஙகளில வாசஞ செயதுகொணடிருககினற சுநதரஜனஙகளுககு ஜகதபிரபுவாகிய இநத ஸ்ரீப கவான பதியாகுமபடி விதிதது, சரவகாலசரவதேச சரவாவஸதைகளிலும எஙகள சரவேநதிரியஙகளையும சரவபோகஙகளையும சரவானுபவஙகளையும ஸ்ரீகிருஷணனுககே பாவிதது, அநத ஸ்ரீகிருஷணனையே யனுபவிததுக கொணடிருநத எஙகளை யேன வஞசிததனையே? ஓ தெயவமே! பினனையாரு மகப்படவிலலையோ? இநத ஆயரபாடியில ஸ்ரீபகவ தனுபவஞசெயது கொண் டிருககினற பேதைகளாகிய எஙகளை. வஞசிககத தேடிவநதனையோ? எனறு அநதத தெயவகதியை வெறுததுப புலமபினாரகள

வாரீர மணடலேசுவரனே! இவவிதஙகளாகப பேசிககொணட கோகுலத் திலுளள சகலமான கோபிகாஜனஙகளும ஒனறுகசசேரநது, ஸ்ரீகிருஷணனு டைய பிரிவினாலுணடான மநஸதாபஙகளால பீடிககபபடடு, ஒருவருக கொருவர யோசிததுக கொணடு சொலலுகினறாரகள அவைகளையுஞ சொலலுகினறேன கேளும சிலர சிலரையபாரதது, நாமெலலாரு மிகவும சௌமயராயிருககினற அகரூரரிடததிறசெனறு, எஙகளுநதவமுந தெய வமுமாகிய ஸ்ரீபகவானை எநதவிதததிலாவது இவவிடததிலேயே யெனறைககு மிருககுமபடி நிறுததிவிடடுப போகவேணடுமெனறு பிராரததிககலாமா வெனறு சொனனாரகள

சிலர சிலரைபபாரதது நமது சகலமான இஷட தெயவஙகளைப பூஜிப போமேயானால, அநதத தெயவஙகளாகிலும ஸ்ரீபகவானுடைய பிரயாணத தை விககினஞசெயது நிறுதத மாடடாரோ? எனறு தஙகள குல தேவதை களைப பிராரததிததாரகள பினனுஞ சிலர சிலரைபபாரதது, நாமெலலா ருமொனறாயச சேரநதுபோய ஸ்ரீகிருஷண பகவானுடைய ஸ்ரீசரணாரவிநதங களில சரணாகதியாகத தணடனசமரபபிதது, நமமைபபிரிநதுபோகாம லிருக் கும்படிப பிராரததிபபோம வாருஙகள எனறு சொலலித தஙகள தங்கள் மெய்மறநது, அளகபாரஙகள கலைநது சோர, புஷபஙகளசிநத, இடையி லுடுததிய ஆடைகள நழுவ, நாநாவிதஙகளாகப பேசிககொண்டு வியசனுக் கிராநதரகளா யிருந்தாரகள

வாரீர் ராஜேந்திரனே! இந்த நந்தவிரஜத்திலுள்ள கோபிகாஜனங்கள் யாவரும் துக்காக்கிராந்தர்களாகி, தங்கள் நாணமிழந்து, வெறிகொண்டவாகளைப்போல் தங்கள் ஹஸ்தங்களைக் கன்னங்களில் வைத்து ஊன்றிக்கொண்டு, கண்களில்ஜலம் தாரைதாரையாய் வருஷிக்கப் பரவசர்களாகி, கொழுகொம்பற்ற பூங்கொடிகளைப்போல் மனமலைந்து துக்கித்துக்கொண்டு, தங்களைமறந்து, வாய்களைத்திறந்து ஆ ஸ்ரீக்ருஷ்ணா! எங்களைக் கிருபையாக இரக்ஷிக்கக்கடவையல்லையோ? ஸ்ரீகோவிந்தா! ஸ்ரீமாதவா! ஸ்ரீதாமோதரா! எங்கள்மேல் கிருபையில்லையோ? என்று அரற்றிக்கூச்சலிட்டு, சுவாமி விஷயமான கீதங்களால் பரிந்துபாடித் துதித்தார்கள்.

மேலும் ஒன்றுக்கச்சேர்ந்திருக்கிற இந்தக் கோபிகாஜனங்கள் யாவரும் ஸ்ரீக்ருஷ்ணமூர்த்தியானவர் திருவவதரித்த நாள்முதல் அன்றையவரைக்கும் சாது சம்ரக்ஷணார்த்தமாகவும் பூபாரநிவாரணமாகவும் சர்வஜநமோகனார்த்தமாகவும் அவதரித்த கோமலமாகிய சுந்தராகாரத்தையும், மஹாமதுர பாஷணங்களையும், புன்முறுவலையும் மஹா மனோரஞ்சனமாகவும் நேத்ரோத்ஸவமாகவும் மார்க்கங்களில் சஞ்சரித்து உலாவுகின்ற கதிபேதங்களோடுங்கூடிய நடையினழகையும், இவைமுதலிய ஸ்ரீபகவானுடைய சேஷ்டிதங்களையெல்லாம் ஒருவருக்கொருவர் வியசனாக்கிராந்தர்களாய்ப் பேசிக்கொண்டு, ஸ்ரீக்ருஷ்ண விரஹத்தினால் பீடிதர்களாகி இதனைப் பேசுகின்றார்கள்.

வாரீர் சகிஜனங்களே! ஸ்ரீக்ருஷ்ணபகவானானவர் பலராமசகிதராய் அனந்தமான கோபாலர்களும் கோவின் கோவத்ஸங்களுங்கூடித் தங்களிருவரையுஞ் சூழ்ந்துவர, அந்தப் பசுவினங்களுடைய குளம்படிகளின் தூளிகள் தங்கள் திருமேனியெங்கும் பதிந்து பூஷிக்கப்பட்டு முன்னெற்றிமயிர்கள் காற்றுகளால் அலைக்கப்பட்டுச் சுந்தரலலாடத்தில் மனோஹரமாகப் பிரகாசிக்க, மகாவினோதவுல்லாசமாய் வேணுகானஞ் செய்துகொண்டு, சாயங்காலசமயங்களில் இந்தக் கோகுலத்தில் புன்முறுவலோடுங் கடைக்கண் பார்வைகளோடும் சர்வகோபிகாஜன மனோஹரமாகப் பிரவேசிப்பாரே அந்த நேத்ரோத்ஸவங்கள் இனிநமக்கு லபிக்கப் போகின்றனவா? என்று அந்த நந்தவிரஜமெங்குங் கூடிக்கூடி, ஸ்ரீக்ருஷ்ண குணமிர்த கீதங்களைப் பாடிக்கொண்டு பிரலாபித்தார்கள்.

வாரீர் பாண்டவ வம்சோத்தமனே! இவ்விதங்களாக அந்தக்கோபிகாஜனங்கள் யாவருந் தங்களனித்யதா சித்த விருத்திகளையும் கிரஹகிருத்தியங்களையும் விட்டு லஜ்ஜையொழிந்து, ஸ்ரீமாதவாவென் றழைத்து, மதுரமான ஸ்வரத்துடன் கீதங்களைப்பாடி வியசனப்பட்டு, ஸ்ரீக்ருஷ்ணபகவானுடன் கூடத் தாங்களும் மதுரா யாத்திராபிமுகர்களாய்ச் செல்வதற்குச் சித்தமாய்க் காத்திருந்தார்கள். மறுநாள் சூரியோதயகாலத்தில் அக்ரூரரானவர் தமது நித்திய கர்மானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு, இரதாலங்காரஞ் செய்து புறப்படுகின்றார். அச்சமயத்தில் ஸ்ரீபகவானானவர் தம்மைவிட்டுப்

பிரிய மனமில்லாமல் தம்முடன் கூடவர யத்தனமாய்ப் பிரலாபித்துக் கொண்டிருக்கின்ற இந்தக் கோபிகா சுந்தரீஜனங்கள் யாவரையும் ஒருக்கால் தமது கிருபாகடாக்ஷ வீக்ஷணனியத்தால் கிருபையாகப் பார்த்து, இதனைச் சொல்லுகின்றார்

வாரீர் கோபிகாமணிகளே! நமக்கிஷ்டமான அன்புள்ள தூதுவர் முன்னிலையில் இதோ சமீபத்திலிருக்கின்ற மதுராநகரத்திற்குப்போய்த் தனுயாக சந்தர்சனஞ்செய்து, அந்நகரத்தையும் அந்நகரத்திலுள்ள பந்துஜனங்களையும் பார்த்து, அவர்களைச் சந்தோஷிக்கச்செய்து, மறுபடியும் சீக்கிரமாக வந்து சேருகின்றேன் இதற்கு நீங்களேன் வியாகுலப்படுகின்றீர்கள் நீங்கள் தைரியத்துடனின்று மனஸ் ஸமாதான பராகளாய்ச் செலவுகொடுத்தனுப்புங்கள் என்று அவர்களுடைய இருதயங்களைத் திருத்தி, வியாகுலங்களையாற்றி, அவர்கள் ஒருவித சமாதானமாக விடைகொடுக்க ஸ்ரீபலராம ஸஹிதராய ஸ்ரீகிருஷ்ணபகவான் ரதாரோஹணஞ் செய்தார்

அத்தருணத்தில் நந்தகோபர் முதலிய கோபாலர்கள் யாவரும் தனுயாகத்திற்கு வேண்டிய பால் தயிர் நெய் இவைமுதலிய பாயசங்களைச் சகடங்களிலேற்றிக்கொண்டு, அரசனுக்குக் கட்டவேண்டிய காணிக்கைகளையும் எடுத்துக்கொண்டு, அவர்களும் பிரயாணமாய்ப் புறப்பட்டு வந்தார்கள். அப்பொழுது ஸ்ரீ பலராம கிருஷ்ணமூர்த்திக ளிருவரும் அக்ரூர சோதிதமான இரதத்தின்மீது சுகாசீனர்களாய மதுராநகராபி முகர்களாக இரதத்தை நடத்திக்கொண்டு சென்றார்கள் அச்சமயத்தில் இந்த நந்த விரஜத்திலுள்ள கோபிகாஜனங்கள் யாவரும் இனவினமாகச் சேர்ந்து, இந்த ரதஞ் செல்லுகின்ற அலங்காரத்தையும் ஸ்ரீ பகவான் மூர்த்திகளினுடைய பின்னடி ஸேவையையும் சேவித்துக்கொண்டு, ஒருவருக்கொருவர் அந்தத் திவ்ய ஸேவார்த்தங்களைக் குறித்து ஸ்துதிபூர்வகமாகச் சொல்லித் திருப்தி யடைந்தார்கள்

வாரீர் அரசனே! அந்தக் கோபஸ்திரீகள் செய்த ஸ்துதியை விவரமாகச் சொல்லுகின்றேன் கேளும் சிலர் சிலரைப்பார்த்து, வாருங்கள் கோபிகாஜனங்களே! அதோ பார்த்தீர்களா நமது கண்மணிகளாகிய திவ்ய மூர்த்திகளிருவரும் இரதத்தின்மீது பிரகாசிக்கின்றார்கள் அதோ வைசயந்தி மாலை முதலிய திவ்யாபரணக் கடைப்பூட்டுகள் விளங்கி ஜ்வலிக்கின்றன அதோ இரதாசுவ வேகங்களினால் தூளியெழும்பி ஆகாயத்தை மறைக்கின்றது என்று இப்படியே அவரவர்களும் பலவாறுகச் சொல்லிக் கொண்டு, கண்ணுக்கெட்டுந் தூரம் எட்டியெட்டிப் பார்த்துச் சேவித்து, இரதமறைந்த பின்பு இருதயங்களைத் தைரியப் படுத்திக்கொண்டு, ஸ்ரீபகவானுடைய திவ்யலீலா சாரித்ரங்களைப் பாடிக்கொண்டு, தங்கள் தங்கள் கிரகங்களில் வந்துசேர்ந்து, ஸ்ரீ பகவத் குணங்களை மறவாமல் நாளகளைக் கழித்துக்கொண்டிருந்தார்கள்.

வாரீர் அரசனே! ஸ்ரீ பகவானனவர் ஸ்ரீ பலபத்திர மூர்த்தி ஸஹிதராய் இரதத்தின்மீது விற்றிருக்க, அக்ரூரரானவர் வாயுவேக மனோவேகமா யிரதஞ்

அக்ரூரரோடு ஸ்ரீ பலராமகிருஷ்ணமூர்த்திகள் மதுரைக்கேகுதல்.



[illegible] நிமிர்த்தியது. 42-வது அத்தியாயத்தில் காண்க.

செல்லும்படி மிகவும் பிரமஹானந்தத்துடன் சாரத்தியஞ் செய்து, வெகு தூரமாகிய பிருந்தாரணய மார்க்கத்தி லிருக்கின்ற மஹாபாப விநாசனியாகிய யமுனாநதீ தீரத்திற்குவந்து சேர்ந்தார். அவ்விடத்தில் வந்த மாத்திரத்தில் ஸ்ரீ பகவானானவர் அக்ரூரரை யழைத்து, இரதத்தை நிறுத்தச் சொல்லி, ஸ்ரீ பலராமஸஹிதராய் இரதத்தைவிட் டிறங்கி அங்கிருக்கின்ற மஹா விருக்ஷங்களின்நிழல்களில் நடந்துவந்து, மிகவுந்தெளிந்து பிரவஹிக்கின்ற காளிந்தி நதியி லிறங்கி, இந்த இரண்டு மூர்த்திகளும் ஸ்ரீ சரண கராரவிந்தங்களைச் சுத்திகள்செய்து, தீர்த்தங்களைப் புசித்து வெளியில் வந்து, அந்த மஹா விருக்ஷ நிழல்களில் சற்றுநேர மிருந்து, சந்தோஷத்துடன் இரதத்தினருகில் வந்து ரதாரோஹணஞ் செய்தார்கள்

உடனே அக்ரூரரானவர் இந்த மூர்த்திகளுக்குத் தண்டன் சமர்ப்பித்து இரதத்தை யவர்களிடத்தில் ஒப்பித்து விடைபெற்றுக்கொண்டு, அந்தமஹா புண்யநதியிற் பிரவேசித்து, சுத்தாசமனங்கள் செய்து, விதி பூர்வக மாகிய வேதமந்திரங்களை ஜபித்து, ஸ்ரீ கிருஷ்ண கிருஷ்ணவென்று சங்கல்ப மந்திரத்தைச்சொல்லி, அந்தக் குளிர்ந்த தீர்த்தத்தில் ஸ்ரீ பகவத் பக்தி பரவசரா யிறங்கி, ஸ்ரீ கேசவாய நம என்று ஸ்நானஞ் செய்தார் இப்படி ஸ்நானஞ் செய்தான நிமிஷமாத்திரத்தில் அந்த அக்ரூரர் அச்சலத்தினுள் இந்த ஸ்ரீபலராம கிருஷ்ணர்களாகிய திவ்விய மூர்த்திகளிருவரும் பிரத்யக்ஷமாக விளங்கியிருக்கக் கண்டு திடுக்கிட்டு, ஆச்சரியத்தை யடைந்து, இவர்களிங்கே எப்படி வந்தார்களென்று நினைத்து, சீக்கிரமாக வெழுந்து கரையில்வந்து, இரதத்தின்மீதி லிருக்கின்றார்களோ, இல்லையோ வென்று பார்த்தார் பார்க்கும் போது அந்த ரதமத்தியத்தில் இவர்கள் மகாகம்பீரமாக எழுந்தருளி யிருக்கிறதைக் கண்டார்

இப்படி கண்டு சந்தேகித்த அக்ரூரரானவர் நாம இந்தத் தீர்த்தத்தில் கண்டது மனப்பிராந்தியோ? அப்பத்தமோ? என்று மறுபடியும் ஸ்ரீ பகவத் ஸங்கல்ப மந்திரங்களைத் துதித்துக் கொண்டு, அந்தத் திவ்ய தீர்த்தத்தில் மூழ்கினார். அத்தத் தீர்த்தத்தில் முன்போலவே அந்தத் திவ்விய மூர்த்திகளைச் சேவித்தது, சந்தேஹ மனதுடன் கூடினவராயப் பலதரம் அங்கு மிங்குமாகத் தரிசனஞ் செய்து, மனந்திகைத்து, மிகவும் ஆச்சரியானந்த பரிதராகி, இந்தக் கல்யாண சரிதராதிசய மஹாதிவ்யகுணங்களை யுடைய புருஷசிரேஷ்டர்களை இப்படிக்குச் சேவிப்பது இவர்களுடைய கிருபாதிசய மஹிமைதானென்று நன்றாயூகித்துக்கொண்டு, பிரமஹானந்த பரவசத்திலழுந்தி, அடிக்கடிவந்த பாபப்பதை யொழித்து, சர்வேந்திரிய நிக்ரகராய் அந்நதியில்மூழ்கி, அத் திவ்ய புருஷர்களை மானசீகமென்கிற நேத்திரங்களால்சேவித்தார் இப்படி சேவிக்கும்போது அந்த ஜலப்பிரவாகத்தின் மத்தியில் ஸ்ரீ பலராம ரானவர் அனந்த பணாமண்டல மாணிக்கங்களோடுங் கூடிய சிரோபாகங்களை யுடைய ஸ்ரீ ஆதிசேஷபகவத் ஸ்வரூபத்துடன் நீலாம்பரதரராகி, சித்த சாரணாதிகளும் சாப்பசிரேஷ்டர்களும ஸ்துதிக்கும்படி யாயப்பிரகாசித்துக் கொண்டிருந்தார்.

• இவ்விதமாக யிருக்கின்ற ஸ்ரீ ஆதிசேஷ பகவானுடைய மடியாகிய சிறிய ஆசனத்தின்மீது ஒரு நீலரத்ந பர்வதத்தைப்போல நீலமேகசியாமல சுந்தர ஸ்வரூப ஸ்ரீ பகவானானவர் பொற்பீதாம்பர தரராகியும், மரகத வர்ணம் போன்ற விசித்ர ஸ்வர்ண ரேகைகளோடுங்கூடிய பச்சைப் பட்டிழைகளால் விளங்கிய உத்தரீயங்களை யுடையவராகியும், திவ்ய மணிகளாலமைந்த கிரீடப் பிரகாச சுந்தரப் பிரசன்ன முகாரவிந்தத்தை யுடையவராகியும், ஆஜானுபாகு வாய நான்கு புஜங்களை யுடையவராகியும், முத்துமாணிக்ய வனமாலிகையும் ஜாஜ்வல்யமான ஸ்வர்ண ஸ்வரூபாகார ஸ்ரீதேவியும் ஸ்ரீவத்ஸமும் ஸ்ரீ கௌஸ்துப மணியும் மிகவும் பிரகாசிக்கின்ற விசாலமார்பை யுடையவராகியும், சதுர்முகப் பகவானுக்கும் சேதனாசேதன சர்வப்பிரபஞ்சங்களுக்கும் ஜன்மஸ்தானமாகிய நாபீ கமலத்தை யுடையவராகியும், மகாராஜலக்ஷண சோபிதராகியும், திவ்ய ரேகாலங்க்ருதங்களை யுடைய ஸ்ரீபாதாரவிந்தங்களை யுடையவராகியும், உபயபார்சுவ ஸ்ரீஹஸ்தங்களில் சங்கு சக்ர சார்ங்காதி பஞ்சாயுததரராகியும், சர்வ பிரபஞ்சசக்கிர்தம இன்பமாகிய கடாக்ஷ வீக்ஷணங்களை யுடையவராகியும் எழுந்தருளி விளங்கினார்.

இப்படி எழுந்தருளிய பகவானைவர் பிரமஹருத்ர ஸனக ஸனந்தன, சனத்குமார ஸனத்சுஜாதாதி முனீந்திர சமூகங்களும், தேவேந்திராதி தேவ தாசமூகங்களும், அஷ்டவசுக்களும், அக்கினிதேவதைகளும், மருத்கணங்களும், ஏகாதசாதித்ய ருத்ரகணங்களும், பிதுர்தேவதைகளும், தேவரிஷிகளும் பிரமரிஷிகளும், ராஜரிஷிகளும், மனுவாதிகளும், தேவ வைகானிசாதி சித்த சாத்கிய சாரணர் கந்தர்வ உரகாதி தேவகணங்களும், தேவதைத்திய தானவ யக்ஷ ராக்ஷசாதி அசுர கம்போகணங்களும், ஸ்ரீபரம கிருபாநிதியே! என்று சூழ்ந்து துதித்துக்கொண்டிருக்கவும், பிரமருத்ர வாசவாதி லோகேசர்களைப் பாலனமிக்கவும் விநய விதேயர்களாய் ஸ்ரீபுருஷசூக்த வாக்கியங்களினாலே நமோ நமோ பரப்ரம்ம ஸ்வரூபாய வென்றும், பிரகலாத நாரத சனகாதி திவ்ய முனீந்திரர்கள் நமோ நமோ விலக்ஷணவிசிஷ்ட ஞானஸ்வரூப ஸ்ரீபரமபுருஷாய வென்றும், ஸ்ரீவசிஷ்டாதி பிரமரிஷிகள் நமோ நமோ ஸ்ரீயோகீஸ்வரேஸ்வராய வென்றும், மனுமாந்தாதா அம்பரீஷாதி ராஜரிஷிகள் ஸ்ரீபகவதே ஜ்வாலப்பிரகாசாய நமோவென்றும், பஞ்சபூதங்களும் பூதாதிதேவதைகளும், சர்வ பிரபஞ்சஸ்வரூப ஜன்மமூலப்பிரகிருதி தத்வாத்மகாய நமவென்றும், இப்படி நாநாவித விசித்ர ஸ்தவஸ்துதிகளோடு ஆச்சித்துச் சேவித்துக்கொண்டிருக்கவும் எழுந்தருளியிருந்தார்.

இப்படி யெழுந்தருளியிருக்கின்ற இந்த ஸ்ரீபரமேஸ்வரராகிய ஸ்ரீகிருஷ்ணபகவானை அக்ரூரரானவர் பிரமானந்த பக்திசம்பிரமத்துடன் சாஷ்டாங்கமாகத் தண்டன் சமர்ப்பித்தெழுந்திருந்து, தமதிரண்டு கைகளையுங் கூப்பிக்கொண்டு, சரீரம்புளகித்து, ரோமாஞ்சிதராகி, தமதிரண்டு நேத்திரங்களில் நின்றும் ஆனந்த பாஷ்பங்கள் தாரைதாரையாய்ப்பெருக மிகவுந் தழைதழைத்த வசனங்களினாலே ஸ்ரீபுருஷசூக்தாதி சுருதிவாக்கியங்களைக் கொண்டு

அந்தத் திவ்யதாசன மஹிமாதிசயங்களைக் குறித்து அனந்தமான ஆற்றுமைகளோடும் ஸ்துதிகளைச் செய்யத் தொடங்கினார்

# நாற்பதாவது அத்தியாயம்.

கலி விருத்தம்.

பரமபாகவதரான பரிவுள்ளவக்ரூரர்
தீரைசெறியமுனைதனனிற றேவனசாக்ஷாத்கரித்து
விரைவுடனபிரசன்னமான வேணுகானனைவேதாந்த
வரையினறறுதிசெயதாரென றுனனியதனைசசொலவாம.

ஸ்ரீபரம பாகவதோத்தமராகிய அக்ரூரர் அந்த ஸ்ரீயமுனாநதியில் தமக்குச் சாக்ஷாத்கரித்துப் பிரசன்னமான 'சர்வேஸ்வரனாகிய ஸ்ரீ கிருஷ்ணபகவானை, சகுணநிர்க்குணாத்மக பரப்பிரமஹ ஸ்வரூபார்த்தமாய வேதாந்தங்களைக்கொண்டு ஸ்துதிசெய்தாரென்று சொல்லுகின்றன.

அக்ரூரர் துதி.

வாரீர் ஸ்ரீபெரிய பிராட்டியாகிய ஸ்ரீமகா லக்ஷ்மிதேவியினுடைய மானசாபகாரமாகிய நிதய மங்கலசோபித திவ்யமங்கல விக்ரக சுபாகர சுஸ்லோகஸ்வரூப விபுவே! ஸமஸ்த ஜனங்களுக்கும் ஜகத்பதிகளுக்கும் காரணராகி சர்வசேதன சேதனப பிரபஞ்சங்களையும் ஹஸ்தாந்தரகத்தமான பொருள்களைப்போலத் திவ்ய திருமேனித்தவங்களுள ளொடுங்கிக்கொண்டு, சமஸ்த லோக பயங்கராகாரமாய மகா ஆரவாரங்களுடன மோதியடித்து வீசாநின்ற அலைகளோடுங் கூடிய மஹாதீர்த்தில கேளீவிலாசமாய வடசமுத்திரத்தின் மீது யோகநித்திரை செய்கின்ற ஸ்ரீ மந்நாராயணரான உமக்குப் பிரணாமங்களைச்சமாப்பிக்கின்றேன

வாரா க்ஷீராபதிநாதராகிய ஸ்ரீபுண்டரீகாக்ஷரே! உமது நாபிகமலத்தில் இந்தப் பிரபஞ்சங்களினுடைய சிருஷ்டிகாரய நிர்வாகராகிய சதுர்முகப்பகவானும், மஹத்ஹங்கார மாயாஸ்வரூப சக்தித்தவங்களும, பஞ்சபூதமயங்களாகிய ஆகாசவாயுவாக்னி ஜலபூமித்தவங்களும, பஞ்சபூதாதி தேவதைகளும், மனமுதலிய அந்தக்கரண சதுஷ்டயங்களும, அவ்வவற்றின அதிதேவதைகளும, மானசாதி ஜ்ஞானேந்திரிய கர்மேந்திரியங்களும, இந்திரியாபிமான தேவதைகளும, அவ்விந்திரியங்களின விஷயத்தவங்களும, விஷயாபிமான தேவதைகளும, ஆகிய இவை முதலிய உலககாரணங்களாகிய தத்வபீஜங்கள்யாவும ஏகதேசமாகிய உமது திருமேனியினுடைய அவயவஸ்தான மூலப்பிரகிருதி அம்சத்திலஜனித்த அஹங்காரத்தவத்தின் களாம்சலேசாம்ச சித்தசித்துகளுக்குக் காரணமாகிய சத்வரஜஸ்தமோகுண தத்வங்

களும், அவற்றின் காரியங்களாகிய சிருஷ்டிஸ்திதி ஸம்ஹாராதிப பிரபாவங்களும், இந்திரியகுணங்களுக்கு சாதுருத்வாதி குணாபூதேஸ்வரராகிய உம்முடைய குணாதிஷ்டான தேவதைகளாகிய ஹரிஹரப பிரமஹேந்திர சூர்யசோம அக்கினிமுதலிய சுராசுராநீகங்களும், இவர்களுடைய காமஜனித லோகாலோக அனந்தகோடி பிரமஹாண்டங்களும் ஜனித்தன

வாரீர் ஸ்ரீ பரமாத்மாவாகிய பகவானே! இப்படிப்பட்ட பிரமமாண்ட கடாகங்களில் தோன்றிய ஆத்மாக்கள் கிரமக்கிரமமாய்த் தங்கள் சுபாசுப காமவசத்தினால் பந்திக்கப்பட்டுத் தேவாசுரமனித பசுபக்ஷி ஸ்தாவராதி ஜன்மங்களை யடைந்தும், மகாரிஷி சிரேஷ்ட தபோயோகமோன விரத யஜ்ஞ யாக ஜபதானசத்ய சௌச சீலாதிகளை யுடையவர்களாகியும், மனுவாதி லோகநீதி தண்டநீதி விதி அதிகார புருஷ சிரேஷ்டர்களாகியும், பிரமஹ, க்ஷத்திரிய, வைசிய, சூத்திராதி, நாநாவித விசித்திர ஜாதிபேதங்களுள்ளவர்களாகியும், உமது யோகமாயாப பிரபாவங்களால் ஜனித்து விருத்தியடைந்து தங்கள் தங்கள் காமவசத்தில் மோஹிதர்களாகியும், பிரகிருதி பாசபந்த வசத்தர்களாகியும், சுபாசுபகாமங்களால் இகபரலோகஸ்வர்க்க நரகமுதலிய ஸ்தானங்களை யடைந்து மூடஸ்வரூபர்களாகியும், பிரமாதி ஜீவஜாதர்களுக்கும் லோகபாலர்களுக்கும் மற்றுமுள்ள மகாஜனங்களுக்கும் சர்வாத்மக பீஜத்தைக்கொடுக்கிற சர்வகாரண சர்வசக்தி ஸ்வதந்திர சர்வ வியாபகாதிஷ்டித சர்வமய சர்வாதார் சர்வரக்ஷண கர்த்ருத்வமாய விசிஷ்டைகாத்ம பரமாத்ம ஸ்வரூபராய் விளங்குகின்ற உம்மையறிந்து உய்யும்படியான ஞான சக்தியாதிகளில்லாதவர்களாகியும், இவ்வண்டகோசங்களில் நித்யப்பிரவாக ரூபர்களாய்த் தோன்றியும் விருத்தியடைந்தும் ஸ்திதித்துக்கொண்டும் நித்யமாக விளங்கிக்கொண்டிருக்கின்றார்கள்

வாரீர் கமலதளாக்ஷராகிய பகவானே! இவர்களுள் சிலர் உம்மை அம்போஜஜாப்பாதி லோகேசுவரர்களிடத்திலும், ஸமஸ்தமான பூதசமூகங்களிலும், இவ்வுலகங்களுக்குப் பலத்தைக் கொடுக்கிறவர்களாகிய அனந்தமான தேவதா சுவரூபங்களிலும், சதாசர்வ சாக்ஷியாக விளங்கிக்கொண்டிருக்கின்ற சர்வாந்தர்யாமித்வ சர்வாந்தர்கத ஜோதி சுவரூபராகிய ஸ்ரீசர்வேஸ்வர ஸ்வரூபாயநமா என்று தியானித்துப் பிரணமங்களைச் சமர்ப்பிக்கின்றார்கள்

வாரீர் அரவிந்த லோசனரே! மூன்றுவித ஸ்வரூப வேதவேதாந்த விதிப்படி உம்மைத் தேவேந்திராதி தேவதா ஸ்வரூபிகளிடத்திலும் சர்வயஜ்ஞயாக தவத்தின் பயன்களைக் கொடுக்கிறவரென்று துதித்து, ஸ்ரீ சர்வபலப் பிரதாய நம என்று பிரணமங்களைச் சமர்ப்பிக்கின்றார்கள்

வாரீர் பத்மநாபரே! சிலர் லோகோபகார விருத்தி லயாதிபல ஸ்வரூபங்களைக் குறித்து, ஸ்ரீ சர்வவியாபகத்வ ஸ்ரீ வாசுதேவாதி பேதகுண பின்னஸ்வரூபராகியும் உமது விசித்திர மாயாமோஹன சைவபாசுபத ஆர்ஹத சார்வாக சாக்தேய பௌத்தாதி மதானுதேவதா ஸ்வரூபராகியும் விளங்குகின்ற

உம்மைத் தங்கள் விதிவசத்தர்களாய் அபிமானித்து ஏத்தித்துதித்து, பிரணாமங்களைச் செய்து, சைவாகம நாரு நீலபடாதிக சோதிடவாடாதி மந்திர யந்திர தந்திர ஜாலாதி சித்திகளை யடைந்து, பெருமைகளை வஹித்து காம்ய யஜ்ஞங்களால் பூஜிக்கப்பட்டு, விதிப்படி அந்தந்த சாயுஜ்யங்களை யடைகின்றார்கள்

வாரீர் சர்வலோக ரக்ஷகரே! சிலர் ஸ்ரீஹரியாகிய உம்முடைய நிர்ஹேதுக ஜாயமான பரமகிருபா கடாக்ஷ லப்தர்களாய்த் தங்கள் தங்கள் ஜன்மாந்தரங்களினுடைய ஆரூடகர்மங்களை நசிக்கச்செய்து; ஜன்ம பரணாதி சம்ஸார பீஜ பலப்பிரதத்வாருசர் மனோமலினங்களைப் பொறாக்கி, நிரபேக்ஷ நிர்விகார பரிசுத்தமான சுவிலக்ஷணாத்ம பரமாத்மத்வப் பிரதிபாதகிய மானசர்களாகி, நிஷ்காமர்களையும் சம்யசித்தவர்களையும் சதாசார சம்பன்ன பிரதிபாத்தியமான விசிஷ்ட ஜ்ஞானோபதேசங்களையும் சதாசார சமாசிரயணங்களையுமடைந்து, ஸ்ரீபாஞ்சராத்ரானுசாரமாக ஸ்ரீவாசுதேவாதி திவ்யஸ்வரூப பேதங்களாகிய ஸ்ரீவாசுதேவ சங்கர்ஷண பிரத்யும்ன அநிருத்தாதி அனந்த திவ்யசுபாசிரய ஸ்ரீபகவத் பிம்பாகார திவ்யமங்கல விக்ரகஸ்வரூபராகிய உம்மைப் பரமவைதீக விதிப்படித் திருவாராதனத்துடன் குணானுபவங்களைச்செய்து, ஸ்ரீ பாகவதாபிமானங்களை யடைந்து, ஸ்ரீமந்நாராயண னென்று பெயரையுடைய மகாமந்திர தத்பரர்களாய், ஸ்ரீமதே நாராயணாயநம என்று சர்வகாலத்திலும் அனுசந்தித்துப் பிரணாமங்களைச் செய்து, சுத்த சத்வாத்மக அப்ராக்ருத திவ்யாவயவ ஸ்வரூபத்துடன் ஸ்ரீபரமாம லோகவாசிகளாய் உம்மையடைந்து, பிரமமானந்த பரர்களாய்ச் சாசுவிதானந்த நித்தியசுகத்தை யடைகின்றார்கள்

வாரீர் ஸ்ரீபரமாத்மாவாகிய ஸ்ரீ பகவானே! உம்மை இவ்வுலகத்திலுள்ள பத்தகேவல ஸ்வரூபங்களாகிய மற்றஜனங்கள் நாநாவித சாஸ்திரமார்க்கங்களைக்கொண்டு, தங்கள் ஜன்மசௌக்கிய பயன்கொடுக்கிறதுகளைக் குறித்து உம்மை அனந்த தேவதாந்தர ஸ்வரூபங்களாகப் பூஜித்து, சர்வதேவதா ஸ்வரூபாயநம என்று தியானித்துப் பிரணாமங்களைச் சமர்ப்பிக்கின்றார்கள்

வாரீர் புண்ணியசொரூபரே! சிலர் சாஸ்திரங்களிலுண்டான சப்த அர்த்தபேதங்களால் சந்திரபிம்பமானது ஜலகடாகாசங்களில் பிரதிபிம்பித்து சலனத்தை யடைந்து தோன்றுகின்ற சந்திரனைப்போலவே, இவ்வாத்மாவுக்கு அந்தர்யாமியான பரமாத்மப் பிரதிபாத்தியம் பிராமிகமென்றும் பிராமிகந்தெளிந்த கேவலாத்ம ஸ்வரூபமே முக்கியமென்றும் நிர்குணப்பிரதிபாத்ய ஸ்ரீபகவதனுபவசூன்யமே புருஷார்த்தமென்றும் உமது பாவசூன்யமாகிய சத்வசூன்ய நிராசிரய பாவத்தைக்கொண்டு, ஆகாசாந்தர்க்கத அக்கினிமாத்திரத்தைப்போலப் பாவசூன்யப் பெரும்பாழை யடைகின்றார்கள்.

வாரீர் சர்வப்பிரபஞ்ச ஸ்வரூபராகிய ஸ்ரீ விஸ்வாதாரரே! இவ்வுலகத்தில் பரிசுத்தங்களாய்ப் பிரவஹிக்கின்ற நதிநதங்களானவை வெள்ளத்துடன்

கூடிச் சமுத்திரத்தை யடைகின்றதுபோல, சர்வப்பிரபஞ்ச காமதாமங்களும் உமது திருமேனி தத்வஸ்வரூபங்களிலடைந்து, உமது சங்கல்ப காலாந்தரங்களில் தோற்றுகின்றன.

வாரீர் ஸ்ரீவாசுதேவரே! உமக்குச் சர்வதாமகாம யஜ்ஞாதி ஸ்வரூபராகிய அக்கினிபகவான் முகாரவிந்த ஸ்வரூபியாகியும், ஸோமஸூர்யர்கள் நேத்திரங்களாகியும், திக்கு விதிக்குகள் கர்ணேந்திரியர்களாகியும், பூமியானது திருவடித் தாமரைகளாகியும், ஸப்தசமுத்திரங்களும் காப்ப ஜலமாகியும், பர்வதாதிகள் சல்ய ஸ்வரூபங்களாகியும், விருக்ஷலதாதிகள் உரோமங்களாகியும், இவ்வுலகவியாபகமான வாயுவானது உஸ்வாஸ நிஸ்வாஸங்களோடு கூடிய பிராணேந்திரியங்களாகியும், இந்திராதிதேவதா ஸ்வரூபிகள் புஜங்களாகியும் மேகசமூஹங்கள் கஜங்களாகியும், வருஷதாரைகள் வீர்யங்களாயும், ஆகாச வீதிகள் நாபீ பிரதேசமாகியும், இரவும்பகலும் கண்ணிமையின் ஸ்வரூபமாகியும், பிரமமாவானவர் குஹ்யேந்திரியமாகியும், ஸ்ரீருத்திரபகவான் உமது சௌர்யஸ் தைர்யமாகியும், அண்டமுகடு சிரசாகியும் விளங்குகின்றன

வாரீர் ஸ்ரீவேதமூர்த்தியே! இவைமுதலிய விசுவதத்வங்களும், லோகபாலகர்களாகிய விசுவபுருஷர்களும், உமது திருமேனிதத்வாங்க ஸ்வரூபாகளாக விளங்கிக் கொண்டிருக்கின்றீர் இவ்விதங்களாகிய சேதனாசேதன ஜந்துசமூகங்களினால் சம்பூர்ணமான அனந்தகோடி அண்டகடாஹங்களும், மஹாபிரவாஹ பிரளய சமுத்திரத்தில் நிரை நிரையாகச் சஞ்சரித்துக் கொண்டிருக்கின்ற ஜலராசிகளைப்போலவும் அத்திமரத்திற்றொத்திய கனிசமூகங்களைப் போலவும் எண்ணிக்கையில்லாத உமது திருமேனியினது ரோமகூபத்தவ ஸ்வரூபங்களாகவும், சிருஷ்டிஸ்திதி லயாத்மகமாகவும், பிரவாகரூபத்தினாலே நித்தியமாகவும் விளங்கிக் கொண்டிருக்கின்றன இப்படிப்பட்ட மஹா மஹிமாதி விசித்திரதத்வஸ்வரூபராகிய உமக்குப் பிரணாமங்களைச் செய்கின்றேன்.

வாரீர் ஸ்ரீ அம்புஜாக்ஷரே! உமது விசுவாகார ஸ்வரூப தமோதத்வாம்ஸங்களில் ஜனித்த தமோகுணப் பிரசுரர்களாகிய அசுரஜன பீடைகளால் நலிந்துகொண் டிருக்கின்ற ஸ்ரீ பகவத் சத்வரஜாதி குணமஸ் சம்பூதர்களாகிய பிரமஹ ருத்திரேந்திராதி ஸமூகங்களுக்கும் திருமேனி ஸ்வ ரூபங்களாகிய சகல விசுவதாமங்களுக்கும் ஹிதவாக மச்சாவதார ஸ்வரூபத்தை யங்கீகரித்து, தினந்தின மகாப்பிரளய ஜலதியில் சஞ்சரித்து, வேதாபகாரியான சோமுகாசுரனை ஸம்ஹரித்து, வேதங்களை மீட்டுக்கொண்டு, ஆதிமனுவாகிய சுவாயம் புவினுடைய விஸ்வஜன ரக்ஷண மகாகம்பீர மரக்கலமாகிய ஓடத்தை இரக்ஷித்த வேதோத்தாரண திவ்யமூர்த்தி ஸ்வரூபராகிய உமக்குப் பிரணாமங்களைச் செய்கின்றேன்

வாரீர் ஸ்ரீ பகவானே! அப்பிரபஞ்சாரிஷ்ட சம்பூதர்களாகிய மதுகைடவர்களைச் சம்மரித்து, அந்த ஸ்ரீ சதுர்முகப் பகவானுக்கு வேதங்களை யுபதே

சித்த ஸ்ரீ அயக்ரீவ மூர்த்தியாகிய உமக்குச் சாஷ்டாங்கமாகத் தண்டன் சமர்ப்பிக்கின்றேன்.

வாரீர் ஸ்ரீ உபேந்திரரே! மிகவும் தபசிரேஷ்டராகிய தூர்வாச மகாரிஷியினுடைய சாபவசத்தினால் தங்கள் பாக்கியாதி சம்பத்துக்களையிழந்த தேவேந்திராதி தேவர்களுக்குச் சம்பத்தைக் கிருபைசெய்யும் பொருட்டு க்ஷீராப்தியில் அமிர்த மதனஞ்செய்த சமயத்தில் மந்தரபர்வதத்தைத் தாங்கி, தேவாமிர்தத்தைக்கல்பித்து, தெய்வசம்பத்துக்களை அந்தத் தேவதைகளுக்குக் கிருபை செய்த ஸ்ரீ கூர்மாவதார மூர்த்தியாகிய உமக்கு அனந்தம் பிரணாமங்களைச் செய்து துதிக்கின்றேன்.

வாரீர் ஸ்ரீ அதோக்ஷஜரே! இந்தப்பூமியை ரசாதலத்தில் மூழ்கிப்போகும்படிசெய்த ஹிரண்யாக்ஷனைக் குறித்துப் பிரமஹாவானவர் பயந்து உம்மைத்தியானித்த மாத்திரத்தில், அவருடைய ஒவாஸ நிஸ்வாஸங்களில் நின்று ஸ்ரீ வராஹப் பிராதுர்பவித்துத் திருவவதரித்து, அவ்வசுரனைச் சம்ஹரித்துப் பூமியை உத்தாரணஞ்செய்த உமக்கு நித்தியமங்கலமாகிய ஸ்துதிகளைச் சமர்ப்பிக்கின்றேன்.

வாரீர் ஸ்ரீ பக்த வத்ஸலரே! இந்திராதி சாதுஜன சம்ரக்ஷணத்தின் பொருட்டும் மிகவும் பரிசுத்தமானஸ ஸ்ரீ பாகவ தோத்தமராகிய ஸ்ரீ பிரஹலாதாழ்வானுடைய ஸ்ரீ ஹரிபக்தியின் பிரபாவாதி சயத்தின் பொருட்டும் தமருகந்த விடத்தில் ஸ்ரீ நரசிம்ஹ மூர்த்தியாக ஆவிர்ப்பவித்து, ஹிரண்யகசிபனைச் சம்ஹரித்து, பக்தபராதீனராய் இரக்ஷித்த ஸ்ரீ தீனஜன ரக்ஷாமணியாகிய உமக்குச் சரணாகதியாக்த் தண்டன் சமர்ப்பிக்கின்றேன்

வாரீர் ஸ்ரீ யஜ்ஞமூர்த்தியே! தேவேந்திராதி தேவதா ஸமூஹ பிரார்த்தனையினால் ஸ்ரீ அதிதி தேவியினுடைய சாபத்தில் ஸ்ரீ வாமனாகார மூர்த்தியாய்த் திருவவதாரஞ்செய்து, மிகவும்சத்தியசீல மஹோதார புருஷசிரேஷ்ட அசுரேஸ்வரராகிய மஹா பலிச்சக்கரவர்த்தியை மூன்றடி ஸ்தலத்தை யாசித்து, இம்மூவுலகத்தையும் மூன்றடியாக அளந்துகொண்டு அவற்றை இந்திரனுக்குக் கொடுத்து, ஸ்ரீ பக்தவத்ஸலராய் அந்தப் பலிச்சக்கர வர்த்தியை இரட்சித்துக் கொண்டிருக்கின்ற ஸ்ரீ திரிவிக்ரம ஸ்வாமியாகிய உமக்கு யுகாயுகங்கள் தோறும் தண்டன் சமர்ப்பிக்கின்றேன்

வாரீர் பிரமஹண்யாபிமான திவ்ய மூர்த்தியே! நீர்மிகவும் மஹாதபஸ்சீலராகிய ஸ்ரீ சங்கராம்ஸ ஸம்பூத ஜமதக்னி மஹாரிஷி சிரேஷ்டருடைய தவ புத்திரராய்த் திருவவதரித்து, பரசாயுதமேந்தி, இவ்வுலகத்தில் காவிஷ்டர்களாகியும், ராஜ சோரர்களாகியும் விருத்தி யடைந்துகொண் டிருந்த ராஜாக்களைச் சம்ஹரித்து, அந்த ராஜை சுவரியங்களைப் பிராம்மணர் களுக்குத் தானஞ்செய்த ஸ்ரீ பரசுராம மூர்த்தியாகிய உமக்கு அடிக்கடி பிரணாமங்களைச் சமர்ப்பிக்கின்றேன்.

வாரீர் ஸ்ரீ அம்புஜாக்ஷரே! ஸ்ரீ சதுர்முகாதி சகல தேவதா பிரார்த்தனையினாலும் ஸ்ரீ உமாமஹேஸ்வரர்களுடைய சம்வாத சாக்ஷிபூத சேவார்த்த நிரூபணத்தினாலும் மிகவும் சத்திய சீலராகிய ஸ்ரீ தசரத சக்ரவர்த்தி யினுடைய யாகபயனாய்த் திருவவதரித்து, இராவணாதி இராக்ஷஸ சங்காரங் களைச் செய்து, இந்திராதிதேவதா ஜனங்களை இரக்ஷித்து, ஸ்ரீ உமா மஹேஸ்வரர் களுக்கு ஸ்ரீ ராமவிராட் ஸ்வரூப சான்னியத்தராய் விளங்குகின்ற உமக்குக் கல்பபரியந்தம் பிரணாமங்களைச் செய்கின்றேன்.

வாரீர் ஸ்ரீ விஸ்வமயராகிய ஸ்ரீ கமலலோசனரே! திரிபுரதானவர்கள் அழிய ஸ்ரீ ருத்திர பகவானுடைய யாகபலப் பிரதராய்ப் புத்தமூர்த்தியாகி, திரிபுர தானவ ஸ்திரீகளினுடைய கற்பைப் போக்கியமாக அங்கீகரித்து, அந்தத் தானவர்களையு மழியச்செய்தும்; ஸ்ரீ சதுர்முகாதி தேவதைகளும் பூமிகோ ரூபதேவதையும் பிரார்த்திக்கப் பூமிபார நிவாரணத்தின் பொருட்டும் சர்வா ச்ரிதஜன சௌலப்யாதி சயத்தின் பொருட்டும் ஸ்ரீ வசுதேவ தேவகீதேவி ரோஹிணீதேவி இவர்கள் தபோபலபுண்ய சுஜாதர்களாகிய ஸ்ரீபலராமகிருஷ் ணமூர்த்திகளாய்த் திருவவதரித்து, ஸ்ரீநந்தகோபால யசோதா தேவிகளினது தபோபலப் பிரதராய் விருத்தியடைந்தும், பூமிபார நிவாரணங்களைச் செய் து, சாதுஜனங்களாகிய மகோதயஜ்ஞான ஸ்ரீ பரமபாகவத ஜனங்களுக்குப் பரமஸாதனமாகிய திவ்யார்த்தங்களைப் பிரசாதித்தும்; பிரலம்பாசுராதி சகலா சுர நிரசனங்களைச் செய்தும் இரக்ஷித்துக்கொண் டிருக்கின்ற ஸ்ரீசர்வ ஸ் வாமியாகிய உமக்கு ஊழியூழிதோறும் சரணவரணஞ் செய்து பிரணாமங் களைச் சமர்ப்பித்துக்கொண் டிருக்கின்றேன்.

வாரீர் ஸ்ரீ கலிதோஷாந்தகார நிவாரணரே! பூர்வ யுகங்களில் நஷ்டமான அசுரஜனங்கள் பவிஷ்யாதி கலியுகங்களில் மிலேச்ச ஊணாதிகிராத வம்சங்களில் ஜனித்துப் பூர்வதர்மகர்ம ஆசுரசம்பத்துச் சித்திகளால் இராஜைசுவரிய ராஜா திகாரங்களை அடைந்து அல்பாயுசும் அல்பதேஜசும் அல்பமதிகளு முள்ள வர்களாய் ஜனிக்கின்ற ஜனங்களினுடைய வர்ணாசிரமாசார தர்மங்களை யழித் து, வேதத்தை வேறுபடுத்துகிற பாஷண்ட தர்மங்களையே பரம உத்தமமென் று போதித்து லோகசங்கர தர்மங்களால் வர்த்திக்குங் காலபகவத்திலும் பூபலித்தர்மங்கள் நசித்துச் சர்வபிராணிகளும் நலியுஞ் சமயத்திலும் சர்வ தேவதாகணப் பிரார்த்தனையினால் ஸ்ரீ விஷ்ணுசனனுமதேயப் பிராமஹனோத் தமருக்குக் கற்கிஸ்வரூப மூர்த்தியாய்த் திருவவதாரஞ் செய்து, அசுராம்ச மிலேச்சாதி ஜனங்களைச் சம்மரித்து, கிருதயுகாதி தர்ம ஸ்தாபனங்களைச் செய்து இரக்ஷிக்கக் கடவீரென்று சுருதிபுருஷவாக்கிய நிர்மித தர்மமூர்த்தி யாகிய உமக்கு அனந்தகோடி பிரணாமங்களைச் செய்கின்றேன்.

நமோநமோ ஸ்ரீ பன்னகேஸ்வரராகிய ஆதிசேஷ விமான, சுகபோக ஸ்வ ரூபரே! ஓ பரம கிருபாநிதியாகிய கல்பவிருக்ஷமே! என்னை மன்னித்து என்னு மதிகளை யங்கீகரித்து இரட்சிக்கவேண்டும் என்று திவ்யஸ்துதிகளைச் சமர்ப்

பிககின்ற அகரூரரானவா ஜலததினில சேவைசாதிதத சுவாமியைத துதிசெய்து தணடன சமறபிததனா

# நாற்பத்தோராவது அத்தியாயம்.

கலிவிருத்தம்

செகமகிழநதிடும சீரமதுராபுரிக
ககமகிழநது செலுமநதவேளையிற
றுகிலவெளுககுமவண ணனைததமசனுசெய்த
வகையுஞசுதாமமா வரமுமவழஙகுவாம

ஸ்ரீ கணணபிரானனவா மதுராபுரததிற செழுந தருளினதும, நடுவழியினில வண்ணனைச சமஹரிததுதும, சுதாமாவெனகிறவனுககுச சுவாமியானவா வரஙகொடுததது செசாலலுகினறன

கேளீர பூபதியே! இபபடி அகரூரரால துதிககபபடட ஸ்ரீகிருஷணபகவான் வேஷதாரியைபபோல மறைநதுவிடடாா அபபால அகரூரா ஜலததைவிட்டுக கரையிலவநது, சநதியாவநதன முதலிய காமஙகளை நிறைவேறறி, ஆசசரியததுடன ரததகிலவநது உடகாாநதனா உடனே அவரை ஸ்ரீகிருஷணமூாததிபாாதது, ஓ அகரூரரே! உமமைபபாாககையில எனனமோ ஆசசரியததைக கணடவனபோல இருககினறதெனறு கூறினா இபபடி கூறின சுவாமியை அகரூரா நோககி, பூமியிலும ஆகாயததிலும சகலலோகஙகளிலுமயெனன ஆசசரியமுணடோ! அதுகளையெலலாந தேவரீரிடததிலே தானே கணடேனெனறு விககியாபனஞ செயது, ரததகில குதிரைகளைககடடி, அதிவேகமாய தேரூாநது மதுரையினுடைய சமீபததில வருகையில ஸ்ரீராமகிருஷணாளிருவரையும வழியிலிருககிற கிராமவாசிகள கணடுபணிநது திருபதி அடையாமல கூடவே ஓடிவநதாாகள அபபோ நநதகோபா முதலியவாகள மதுரைககுச சமீபததிலிருககிற நநதவனததில முனனதாகச செனறு சுவாமியை வழிபாாககையில, அபபோ சுவாமியானவா அவிடமவநது, தேரைவிடடுக கீழே இறஙகி, அகரூரருடைய கையைபபிடிதது அவரைநோககி, இனறைக கிவவிடததிலிருநது நாளைககி மதுரைககி வருகிறேன நீாமாததிரமபோ மெனறனா.

அபபோது அகரூரா சொலலுகிறாா வாரீா பகவானே! தேவரீரை விட்டு நானபோகமாடடேன். பகதவதசலனான தேவரீா பக்தனான அடியேனை ஒழிககவேணடாம. யாதொருவருடைய திருவடி தீாததததைச ருததிரன் சாவகாலமும சிரசிலதரிதது பரிசுததரானாரோ? அப்படிபபட்ட திருவடிகளையுடைய தேவரீா பலராமருடன அடியேன குடிசைககுப பொனனடி

சாத்தி, அடியேன் கிருதார்த்தனாகச் செய்யவேண்டும் என்று வினவுகின்ற அக்ரூரரை அனந்தசயனனோக்கி, நீர் சுகமாகக் கிரகத்திற்குச் செல்லும். கம்சனைச் சம்கரித்துப் பந்துக்களுக்கு மனதுசந்தோஷமான உடன் பலராமருடன் கோபாலர்களை அழைத்துக்கொண்டு வருகிறோம் என்று அருளிச்செய்கின்ற சுவாமிவார்த்தையைக்கேட்ட அக்ரூரர் தன் யோசமியென்று சுவாமியைப் பிரதக்ஷண நமஸ்காரஞ்செய்து, சுவாமியைவிட்டுப் பிரிகிறோமே என்கிற விசனத்துடன் மதுரைக்குச் சென்று, கம்சனுடன் சுவாமிவருகிற சங்கதியைத் தெரிவித்துத் தம்மிட கிரகத்திற்குப் போயினார்.

பின்பு ஸ்ரீகிருஷ்ணரானவர் அன்றையதினம் அந்தவனத்தி லிருந்து, மறுநாள் சாயங்காலத்தில் பலராமர்முதலிய கோபாலர்களுடன் ஆகாயத்தை அளாவினபடி கம்பமான கோபுரங்களும் மிகவும் விசாலமாகிய கதவுகளும் பயங்கரமான அகழிகளும் சொர்ணமயமான மதிற்சுவர்களும் நானாவிதங்களான நந்தவனங்களும் அமராபதி பட்டணத்திற் கொப்பான வீதிகள் தோறும் தோரணங்கள் கொடிகள் கட்டித் தூபதீபங்களால் அலங்கரித்து வாசற்படிக்கி இரண்டு பக்கத்திலும் புண்ணியாங்கனைகள் கும்பங்களினாலும் நானாவித புஷ்பங்களினாலும் அலங்கரித்து மிகவும்வேடிக்கையாயிருக்கிற மதுராபுரியை நாலுபக்கத்திலுஞ் சுற்றிப் பார்த்துக்கொண்டு, அப்பலராம சமேதராய கோபாலர்களுடன் பிரவேசித்தார்.

இந்தச் சமாசாரத்தைப் பட்டணத்து ஜனங்கள் கேட்டு, மிகவும் பரபரப்புடன் கைகளில் அணிந்து கொள்ளுகிற பூஷணங்களைக் கால்களில் அணிந்துகொண்டும், கால்களில் அணிகிறதுகொள்வதைக் கைகளிலணிந்து கொண்டும், ஒருகண்ணிலைமையிட்டு ஒருகாதில் குண்டலமணிந்தும், சிலர் போஜனம் பண்ணும்போது பாதிவிட்டுவிட்டும், அப்பியங்கனம் பண்ணின போஸ்நானஞ் செய்யாமலும், தூக்கத்தைவிட்டுப் பாதிதூக்கத்தி லெழுந்திருந்தும், இப்படி மெய்மறந்தவர்களாய் ஸ்ரீகிருஷ்ணபகவானைப் பிரத்தியக்ஷமாய் அன்புடன் சேவிக்கவேண்டுமென்று விரும்பி உப்பரிகளிலிருக்கின்றார்கள் இவ்வாறிருக்கிற ஸ்திரீகளை ஸ்ரீகிருஷ்ணபகவானபார்த்து, தம்மிடதிரேக சவுந்தரியத்தினுடைய ஒளியினால் அவர்களுடைய மனதை அபகரித்து, தம்மிட கடாக்ஷத்துக்குப் பாத்திரர்களான அவர்களைக் குளிரக்கடாக்ஷித்து, பரிபூரணஇச்சை உடையவர்களாகப் பண்ணினார் இப்படி ராஜவீதியில் வருகிற ஸ்ரீராமகிருஷ்ணுள்பேரில் சகலமான ஸ்திரீபுருஷ ஜனங்களெல்லாம் உப்பரிகையிலிருந்து பரிமளமிகுந்த புஷ்பமாரி சொரிந்தார்கள்.

அப்போ பிராமமணோத்தமர்கள் தயிர், பால், புஷ்பம், சந்தனம், பூர்ண கும்பம், இவை முதலியவைகளால் பூஜித்துக் கூட்டங்கூடி, இப்படி நரகலோகத்தில் மகோத்சவம்போ லெழுந்தருளுகிற ராமகிருஷ்ணுளைச் சேவித்து திருப்பதியடையாமல், இந்த ஸ்ரீராமகிருஷ்ணுளுடன் சதாவாசஞ் செய்யும்படி, இந்த கோபாலர்களும் கோபிகைகளும் யென்னதவஞ் செய்தார்களோ

அறியோமென்று மிகவுங் கொண்டாடினார்கள். இப்படி சகலமானவர்களுக்கும் ஆனந்தத்தை உண்டு பண்ணிக்கொண்டு இராஜ மார்க்கத்தில் வருகிற போது, வஸ்திரங்களை நன்றாய் வெளுக்கப் பண்ணுகிறதிலும் சாயம் போடுவதிலும் கெட்டிக்காரனாயும் கம்சனிட வேலைக்காரனாயு மிருக்கிற வண்ணானைக் கண்டு, சுவாமியானவர் அவனை நோக்கி, நீமகா நல்லவன், வஸ்திரங்களை வெளுக்கப் பண்ணுகிறதில் வெகுபிரதி யுள்ளவனாகையால் எனக்கும் என் தமயனான பலராமருக்கும் யோக்கியமான வஸ்திரங்களைக் கொடுத்தால் நீ வெகுசிறப்பை அடைவாய் என்று மெதுவாகக் கேட்டனர்.

இப்படி கேழ்க்கிற சுவாமியை வண்ணானோக்கி, வனங்களிலும் பர்வதங்களிலும் சஞ்சரிக்கிற கோபாலர்களுக்கு இந்த ராஜயோக்கியமான வஸ்திரங்கள் யோக்கியமா? நீங்கள் கர்வத்தினால் பதட்டமாய்ப் பிணந்தி னீர்கள். என்னை வஸ்திரங்கேட்ட சங்கதியைக் கம்சன்கேட்டால் உங்களைக் காவற் படுத்துவன் ஆகையால் இங்கிராமல் ஓடிப்போங்கள் என்று சொல்லுகிற வண்ணான் வார்த்தையைக்கேட்ட தக்ஷண்ம ஸ்ரீகிருஷ்ணபகவான் தம் திரண்டு திருக்கைகளினாலு மவனைப் பிடித்துக்கிழித் தெறிந்து போட்டார். அப்போ தவனுடன் கூடவந்தவர்கள் வஸ்திர மூட்டைகளைப் போட்டு விட்டோடிப் போனார்கள் அப்பால் தம்மிட மனதுக் கிஷ்டமான வஸ்திரங்களைத் தோழன்மார்களுக்குக் கொடுத்து, மற்றதை அங்கேயே போட்டுவிட்டுப் போயினர் இப்படிபோகையில் ஸ்ரீ கிருஷ்ணபகவானிடத்தில் மிகவும் பக்தியுள்ள சேணியன் ஸ்ரீ ராமகிருஷ்ணாளிருவர்க்கும் நல்ல வஸ்திரங்களால் அலங்கரித்தான

அப்போ ஸ்ரீ ராமகிருஷ்ணர்கள் கறுப்பும் வெளுப்புமான ஆனைகளைப் போல பிரகாசித்து, அந்தச் சேணியனைநோக்கி, நீ இவ்வுலகத்தில் சகல சம்பத்துக்களும் அடைந்து, பரத்தில் சாசுவதமான பதத்தை அடைவாயென்று அநுக்கிரகித்து, சுதாமாவென்கிற புஷ்ப மாலைக்காரன் வீட்டிற்குப் போனார். அப்போதந்த சுதாமா வென்கிறவன் தன்னிடக்கிரகத்திற் கெழுந்தருளிய ஸ்ரீ ராம கிருஷ்ண ளிருவரையுங்கண்டு, அதிவேகமாக ஓடிவந்து, சாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டு, அர்க்கியபாத்திய முதலிய வைகளால் பூஜித்து, ஆசனம் சமர்ப்பித்து, அதில்வாக ளெழுந்தருளின பின்பு சர்வோத்தம மான வாசனையுள்ள புஷ்பமாலைகளை யணிந்து, திரும்பவுந் தெண்டனிட்டு, சுவாமியை நோக்கி விக்கியாபனம் பண்ணுகின்றான.

வாரீர் பகவானே! தேவரீ ரெழுந்தருளியதால் அடியேனுடைய வம்சஸ்தர்களும் யானும் பரிசுத்தர்களாயினோம் சகல லோகங்களுக்கும் மூலகாரணராகியும் சகல பூதங்களிடத்திலும் அந்தரியாமியாகியு மிருக்கின்ற தேவரீரை ஒருதிரம ஸ்மரித்த மாத்திரத்தில், சகல பாபவிமோசனனாய் மோக்ஷ மடைவான் அப்படிப்பட்ட மகிமையை யுடைய கருணைக்கடலான தேவரீர், அப்பிரயோசகனான வடியேனுக்குத் தேவரீருடைய அனபர்களான பாகவதர்களினது சகவாசமும், தேவரீரிடத்தில் பக்தியும், நிரந்தரமா யிருக்கும்படி

கிருபைசெய்யவேண்டும், என்றுதெண்டனிட்டுத்திருமபவும திவ்வியபரிமளத்துடன கூடின புஷ்பமாலைகளைச சமறபித்தனன அதை அங்கீகரித்த பலராமருந் தாமும அலங்கரித்து, தோழனமாரகளுககுங கொடுத்து, வெகு சந்தோஷத்துடன அந்தச சுதாமனைநோககி, சந்திர சூரியாகளுள்ள வரையில உனனிட சந்ததியானது பூமியிறபிரபலமாகி, உனனிட கோரிககைகளு மீடேறும்படி அனுககிரகித்தேன என்று கிருபைவழங்கி சகல கோபாலாகளுடன் அவனது வீட்டைவிட்டு ராஜமாாககத்திற கெழுந்தருளினா

---

# நாற்பத்திரண்டாவது அத்தியாயம்

கலிவிருத்தம்

பரிமளமிகுந்த சந்தனத்தைப பாாவேந் தனுககு
உரிமையாயக கொண்டுபோகு முளங்கூந் தனனைககண்ட
அரியாஞே ரதனைவாங்கி யங்கத்திற பூசிககொண்டு
அரிவைகோணலை நிமிாதத தலலால விலலையுமுறித்தாா.

ஸ்ரீ பகவானனவா கமசனுககுச சந்தனங கொண்டுபோகிற கூனியைக் கண்டு அவளிடத்தில சந்தனம வாங்கிப பூசிககொண்டதும, அவளிட சரீரத்திலிருந்த கோணலை நிமிர்த்தினதும, தனுசாலையிறபோய விலலை முறித்ததுஞ் சொலலப படுகினறன

கேளீா அரசனே! இபபடிப்பட்ட ராஜமாாககத்தில ஸ்ரீராமகிருஷ்ணர் வருகிறபோது மிகவும சவுந்தரியமுள்ள முகத்தோடு திவ்வியபரிமளத்துடன கூடின சந்தனங்கொண்டு போகிற ஸதிரீயை ஸ்ரீ கிருஷ்ணமூாததிகண்டு, வாராய சுந்தரவதியாகிய மாதே! நீ யாருககிப்படிப்பட்ட திவ்வியமான சந்தனங் கொண்டுபோகிறாய? அதை எங்களுககுக கொடுத்தால உனககு க்ஷேமமுணடாகும என்று கணஜாடை காட்டிககேழ்கக, அவள ஸ்ரீ பகவானைச சந்தோஷத்துடன பாாதது, சாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டு, கேளீா சுவாமி! அடியேன கமசனுடை ஊழியப்பெண எனபோ திருவககிறையென்று சொலலுவாாகள கமசனுககுச சந்தனம நான கொடுத்தாலன்றி மறற எவாகள கொடுத்தாலும இஷ்டமாகா தாகையால, அப்படிப்பட்ட சந்தனந் தேவரீருக்கே பூசிககொள்ள யோககியமானது. திருவுள்ளம பற்றவேணடும என்று அந்தச சந்தனத்தைச சுவாமிககுச சமாபபித்தனள.

அவரதை வாங்கிப பலராமருந் தாமும பூசிககொணடு, சந்தோஷத்துடன அந்த ஸ்திரீயினுடைய சரீரத்தின கூனை நிமிாதது கிறதற்குத் தம முடைய இரண்டு பாதங்களினாலே அவளுடைய காலவிரலை அழுத்திககொணடு,

தமது கைவிரலால உதடடைப பிடிதது உயரததூககினா. அபபோதவளே மூனறு கோணலகளும நிமிாநது, சாவலக்ஷண சமபனனையாய அபசரஸதிரீயைபபோலானள. அதைச சமஸத ஜனஙகளுஙகணடு ஸ்ரீ கிருஷணனைத தோததிரஞசெயது பூஜிததாாகள அபபோதநதக கூனியானவள ஸ்ரீ கிருஷண ஸவாமியினிடததில கொஞசம புததிசபலிதது, அவருடைய அஙகவஸதிரததைப பறறிககொணடு ஒரு வாாததை சொலலுகினறனள கேளீா சுவாமீ! ஆயிரமனமதனுக கொபபான தேவரீரை விடடு இனி ஒரு நிமிஷமேனும பிரிநதிருகக மாடடேன ஆகையால அடியேனிட சிறுகுடிசைக கெழுநதருளிப பினபு போகலாம எனறு வினவுகினற ஸதிரீயை நோககிப புனனகையுடன பகவான சொலலுகிறாா.

ஓ மாதுசிரோமணி! நான எனது பநது ஜனஙகளுககு உபகாரஞசெயய ஒருவிடததிறகுப போகினறேன. அநதக காரிய மானவுடன அசுததியம உனது வீடடிறகு வருகிறேன நீயெனககு மகததான உபகாரஞசெயதாய நீ மனைவியிலலாமல வழிநடநது இளைபபுடன வருகிறவாகடகுப பணிவிடை செயயெனறு பரிகாசமாயசசொலலி, சுவாமியானவா தமமிட தோழனமாாகளுடன இராஜமாாககததில சமஸதமான வாகளாலும துதிககப படடுக கொணடு, இநதிரதனுசுக கொபபாயும கநத புஷப முதலியவறறால பூஜிககப படடும வெகு ஜனஙகளால இரடசிககபபடடிருககிற தனுசாலைககுள வநதாா இபபடி ஸ்ரீராமகிருஷணு ளிருவரும தனுசாலைககுள வருமபோது, அவாகளை உளளே போகவொடடாமல அவிடததிய காவறகாராகள தகைநதாாகள அபபோ சுவாமியானவா அவாகளை நிராகரிதது, அவவிடததிலிருநத விலலை எடுதது, கருமபஙகழியை ஆனை முறிபபதுபோல விளையாடடாக முறிததுப போடடாா அநததொனி எடடுதிசைகளும நிறைநதன.

அபபோ தவவிடததி லிருககிறவாகளும மூறசிதது, ஒருமுகூாத தததிற்குபபின தெளிநதெழுநதிருநது, சிலா ஸ்ரீகிருஷணனை அடிககவேணடுமெனறும சிலா கொலலவேணடுமெனறும சிலா காவறபடுதத வேணடுமெனறும் சொலலிச சூழநதுகொணடாாகள அபபோ ஸ்ரீ ராமகிருஷணு ளிருவருங கடுஞசினமடைநது, தாஙகள ஒடிததிருநத விலலை இரணடு பேருங கைககொணடு, அவாகளைச சினனாபினனமாக அடிதததுத துரததி, சகல கோபாலாகளுடன நநதகோபரிருககிற உததியான வனஞசெனறு, கால போஜனஞ செயது, அநதக கமசனுடைய செயகையைத தெரிநது கொளள வேண்டுமெனகிற யோசனையாகததானே அநதவனததில வீறறிருநதாாகள இபபால மதுராபுரிஜனஙகள ஸ்ரீ ராமகிருஷணுளுடைய பராககிரமததையும சவுநதரியத்தையும பாாததுத திருபதி அடையாமல வியபபுட னிருநதாாகள

அபபோ கமசனுககுக் கனவிலும கண்ணாடியிலும் சலததிலும் தன்சரீரததில சிரசிலலாததாயும, சநதிரன நாலைநது துணுககைகளாகவும, விருட்சஙகள இலையிலலாமல சூனனியமாகவும், உடக்காாநத விடத்தில் பூமிபள்ள

ஸ்ரீ கண்ணன் தனுசை யொடித்தல்.



கண்ணன் குவலயாபீடமென்னும் யானைவதை 43வது அத்தியாயத்தில் காண்க.

மாகவுமிருககக கணடதனறி, நிததிரையிலபிணததை ஆலிஙகணஞசெய்து கொளவது போலுமகழுதைமேலேறிச சஞசரிககிறபபோலுமதாமரைத்தணடு களைப படசிககிறபபோலும சபபாததிப பூமாலையைக கழுததில அணிநதுக கொணடாற போலும தைலாபயியஙகளஞ செயதுகொணடாற போலும அனேக துறசொபபனஙகளையும கணடு, ஸ்ரீராமகிருஷ்ணாகள விலலையொ டிததுக காவலாளிகளைத துரததினதைக கேடடு மனஙநடுஙகி, இராததி ரியெலலாந தூங்காமல விசனபபடடுக கொணடிருககையில சூரியோ தயமாசசுது

பினபு கமசனனவன மலலயுததஞ செலவதறகு இடமசிஙகாரிதது, படடணததிலுளள நானகுவருணததாரையும வரவழைததான அவாகளில பிராமமணாகள ஆசீாவதிகக, மறறவாகள துதிகக, சகலமநதிரி வாககஙக ளுடன பநதுககள புடைசூழ அவரவாகளுககுத தகுநத ஆசனஙகொடுதது உடகாரவைதது, தூதாகளை அனுபபி நநதகோபரை வரவழைததான அவ ரும சகலகோபாலாகளுடன இராஜாவுககுககாணிககை கொடுதது, ஜயா விஜயீபவாவெனறு சொலலி ஒரு ஆசனததிலிருநதாா அபபோ பேரிமுத லிய சகலவாததியஙகளுந தொனிகக அநதசசபைநடுவி லிருககையிலும கம சனனவன மிகவும பயததுடன நடுககமுறறிருநதான மலலஜெடடிகளிற சிறநதவாகளான சாணூரன முஷடிகள முதலியவாகள யுததமணடபததிறகு வநது வீரகோஷஙகளைக கோஷிததாாகள.

## நாற்பத்திமூன்றாவது அத்தியாயம்.

கலிவிருத்தம்

பயிலும ராமகிருஷண னெனனும பணபாகள
துயினறெழுநது மலயுததஞ செயவதறகாய
மயலாய வநதிடு மாாககந தனிலயானை
ஒயிலுடனசமா செயதுருணட தனறே.

ஸ்ரீராமகிருஷணனிருவரும தூஙகி எழுநதிருநது அதிககாலையில மலல யுததஞ செயவதறகாகப பிரயாணமாய வருகிறதும, வழியில குவலயாபீட மெனகிற ஆனையுடன போாசெயது சஙகரிததததுஞ சொலலபபடுகினறன

கேளீா மகாராஜனே! ஸ்ரீராமகிருஷ்ண னிருவரும ஸ்ரீகோபாலாகளை அழைததுககொணடு மலலயுததஞ செய்வதறகு ஆயுததமாயப பேரி அடிக் கிற விடததிறகுச செல்லும்போது, ஆயிரஙகஜததிறகுச் சமானமான பல முடையதாயும பர்வதமபோல ஆகாரமுடையதாயு மிருககிற குவலயாபீட

மென்கிற யானை குறுக்காக யிருக்கக்கண்டு, மாவட்டிக்காரனை நோக்கி, இந்த யானையை வழியைவிட்டப்புறம் ஓட்டுகை இல்லாவிடில் உன்னையும் உன்னிட யானையையும் யமபட்டணத்திற்கு அனுப்புவேன் என்றுசொல்லுகிற சுவாமியின் வார்த்தையைக்கேட்ட அந்தமாவெட்டியான மிகவுங்கோபங்கொண்டு அந்தயானையை ஸ்ரீகிருஷ்ணன்பேரில் லேவினன். அப்போதந்த மதயானை ஓடிவந்து, ஸ்ரீகிருஷ்ணனைத் தனது துதிக்கையினாலே பிடித்திழுத்தது அக்கால ஸ்ரீகிருஷ்ணன் அதைமெள்ளத் விடுவித்துக்கொண்டு, அந்தக்கஜத்தைக் காலாலுதைத்து, அதின்காலிலதானே மறைந்து கொண்டார்

அப்போதுயானை வெகுகோபங்கொண்டு காலின்கீழே மறைந்திருக்கிற சுவாமியை திரும்பவும் பற்ற, அதையும் லகுவாய்த் தப்பித்துக்கொண்டு பின்பக்கத்திற் சென்று வாலைப்பிடித்து இருபத்தைந்து விறகிடைதூர மிழுக்க, திரும்பவும் அதுசுவாமியைப் பிடிக்க வலப்பக்கமாயவர, அப்போ அவர் வாலோடே கூடவே ஓட்டிக்கொண்டு இடப்பக்கமாயிழுத்தார். அப்போதந்தயானை இடத்தில் திரும்பினால் வலத்திலும் வலத்தில் திரும்பினால் இடத்திலுமாகச் சற்றுநேரம் அந்தக்கஜத்துடன் விளையாடி, பின்பு அந்தக் கஜத்திற்கெதிராக ஓடிவந்து அதின்தலைமீதில் குத்தி, அதின்கையி லகப்படாமல் ஓடிப்போனவர்போல க்ஷணப்போது கீழே படுத்துக்கொண்டனர் அதைப்பார்த்த யானையானது மீட்டும் ஓடிவந்து இரண்டுகொம்பினாலு முட்ட அதையும் ஸ்ரீகிருஷ்ணன் உபாயமாயத் தப்பித்துக்கொண்டு பின்னங்காலப்க் கமமறைந்து கொள்ளுகிறதும், அதுகண்டு பிடித்தால் முன்னே ஓடிவந்து தலையின்மீதுகுத்திக் காதின்சந்தில் மறைந்துகொள்ளுகிறதும், இவ்விதமாக அந்தயானையின் பிரயத்தினம் ஒன்றுஞ் சாயவொட்டாமற் செய்தார்

மறுபடி அந்தக்கஜமானது மாவட்டிக்காரனாலேவப்பட்டு, மிகவுங்கோபத்துடன் சுவாமியைத் துரத்துமபடியாயது அப்படி துரத்துகிறபோது சுவாமி எதிரேவந்து, இரண்டுகைகளாலும் அதின் துதிக்கையைப் பிடித்துக் கீழேதள்ளி, இரண்டு கொம்புகளையும் முறித்துக் கொன்றுபோட்டார் பின்னும் அததுடன்வந்த யானைசனையும் மாவட்டிக் காரர்களையுங் கொன்று போட்டு, உதிரத்தாலும் மதஜலத்தாலும் சரீரமெல்லாம் நனைக்கப்பட்டு, அந்தயானையின் கொம்பைத் தோளினில் சாத்திக்கொண்டு, ஸ்ரீராமகிருஷ்ணுளிருவரும் சகலகோபாலர்களுடன் நக்ஷத்திரங்களாற் சூழப்பட்ட சந்திரன் போலும் கம்சனுடைய சபையில் மல்லயுத்தஞ் செய்யவந்தவர்களுக்கு வச்சிராயுதம்போலும் வெளிப்பட்டார்கள் இப்படி பார்க்கவந்தவர்களுக்கு மனோக்கியமாயும், அந்தப்புர ஸ்திரீகளுக்கு மன்மதன்போலும், தேவகீ வசுதேவர்களுக்குப் பாலனாகியும், கோபாலர்களுக்குத் தோழனாகியும், கம்சனுக்கும் அவனைச் சார்ந்தவர்களுக்கும் யமன்போலும், ஞியானமில்லாதவர்களுக்கு மனிதனாகவும், யோகிகளுக்குப் பரதேவதை பாகவும், யாதவர்களுக்கு ஈஸ்வரனாகியு மிருக்கின்ற சுவாமியானவர் குவலயாபீடமென்கிற யானையைச் சங்கரித்து தடங்கலில்லாமல் தனது சபையில்வருவதைத் தூதர்கள் மூலமாய்க் கம்சன் கேழ்வியுற்று மிகவும்பயத்தை அடைந்தனன்.

அப்பால் சபையிலிருக்கின்ற ஜனங்கள் சுவாமியினுடைய திவ்வியசவுந்தரியத்தைப் பார்த்து, சிலர் சுவாமியைத் தியானஞ் செய்துகொண்டும், சிலர் அந்தசுவாமியின் சரித்திரங்களை நாவினால் சொல்லிக்கொண்டும், சிலர் கண்ணுறப்பார்த்தபடி ஆலிங்கனஞ் செய்துகொண்டும், சிலர் கோகுலத்திற் செய்த திவ்ய சரித்திரங்களெல்லாங் கேட்டிருப்பீர்களே அதுவும் போதாமல் இவிடத்திற்குவந்து ஒருவராலும் அசைக்க ஒண்ணாத வில்லையொடித்ததும், மலைக்கொப்பான குவலையாபீடமென்கிற யானையைச் சங்கரித்ததும், பிரத்தியக்ஷமாய்ப் பார்த்திருக்கின்றோம் ஆதலால் இந்த ஸ்ரீகிருஷ்ணன் ஸ்ரீமந்நாராயணராகவும் ஸ்ரீபலராமன் ஆதிசேடனாகவுமிருக்கவேண்டுமென்று மதுராபட்டணத்து ஜனங்கள் சொல்லிக் கொண்டார்கள் இப்படிச் சொல்லிக் கொண்டிருக்கையில் அந்தச் சபையில் நானாவித வாத்தியங்களுடன் வந்திருக்கிற முஷ்டிகனும் சாணூரனும் ஸ்ரீகிருஷ்ணனைநோக்கி, நீங்களிருவருங் கைச்சண்டையில் மெத்தக் கெட்டிக்காரர்களென்று இராஜா கேழ்வியுற்று உங்களை வரவழைத்தார் நீங்களும் நாமுங் கைச்சண்டை போடுவோம் அதைப்பார்த்துக் கம்சன் சந்தோஷிக்கட்டும் என்று சொல்லுகின்ற சாணூரனை ஸ்ரீகிருஷ்ணன் நோக்கி, நாங்களிருவரும் பாலர்களாகியும் யுத்தசிக்ஷையில்லாதவர்களாயுமிருப்பதால், எங்களுக்குச் சமானமான வர்களுடன் நாங்கள் யுத்தஞ் செய்கிறோமென்று கூறினார் இப்படி கூறுகின்ற சுவாமியைச் சாணூரனோக்கி, மகாப்பிரபலமான வில்லைவளைத்து இருதுண்டாக ஒடித்ததுமல்லாமல் மலைபோன்ற குவலையாபீடத்தையும் பரிகாசமாய்ச் சங்கரித்ததினாலே உங்கள் பலத்தைத் தெரிந்துகொண்டேன் பலராமனுடன் முஷ்டிகனும் என்னோடே நீயும் யுத்தஞ்செய்யவேண்டுமென்று ஸ்ரீகிருஷ்ணனைப் பார்த்துச் சாணூரன்சொல்லினன்

# நாற்பத்திநான்காவது அத்தியாயம்.

### அறுசீரடியாசிரிய விருத்தம்

தம்பி சாணூரனோடு தமையன் முஷ்டிகன் தன்னோடும்
வெம்பிடப் போர் புரிந்து விரைந்தவர்களைச் சேதித்து
தம்பியர் கம்சன் தன்னைச் சங்கரித்த வாக்குச் செய்யும்
சம்பிரமக் கருமந் தன்னைச் சாங்கமாய்ச் செய்தல் சாற்றும்.

ஸ்ரீகிருஷ்ணன் சாணூரனுடனும் பலராமர் முஷ்டிகனுடனும் போர் செய்து அவர்களைக் கொன்றதும், பின்பு கம்சனையும் அவன்சகோதரர்களையும் சங்கரித்து அவர்களுக்குச் செய்யவேண்டிய உத்தரக்கிரியைகளை நிறைவேற்றினதும், வசுதேவர் தேவகிமுதலியவர்களைக் காராக்கிரகத்திலிருந்து வெளிப்படுத்தியதுஞ் சொல்லப்படுகின்றன.

"கேளீர் பரதவம்சோற்பவனான பரீக்ஷித்து மகாராஜனே! இப்படிசாணூரனாலழைக்கப்பட்ட ஸ்ரீகிருஷ்ணரும், முஷ்டிகனாலழைக்கப்பட்ட ஸ்ரீபலராமரும், யுத்தத்திற்கு யத்தனப்பட்டார்கள் அவர்களை யெந்தச் சாணூரமுஷ்டிகர்கள் பார்த்து, கைகளைத்தட்டி, தொடைகளை அறைந்து, தோள்களைத் தட்டிக்கொண்டோடிவந்து, ஸ்ரீராமகிருஷ்ணரிருவரையும் இரண்டு கைகளினாலே கட்டிப்பிடித்து இறுக்கி இழுத்துக்கொண்டு விட்டும், ஒருவருக்கொருவர் இடசாரி வலசாரியாய்ச்சுற்றி வெருவாய்க்கட்டி இழுத்துக் கொண்டு கால்களால் கால்களையுங் கைகளால் கைகளையும் பின்னி அதுகளை ஒருவருக்கொருவர் லாகவமாய் விடுவித்துக் கொண்டும், ஒருவரை ஒருவர் கொல்ல வேண்டுமென்று சந்தியாராய் ஒருவருடைய கருத்தை ஒருவருக்குத் தெரியவொட்டாமல் தலைகளால் தலைகளை முட்டியும், முழங்கால்களால் முழங்கால்களை இடித்தும், மார்போடே மார்பைப்பொருத்தி முஷ்டியினால் குத்தியும், ஒருவருக்கொருவர் ஆகாசத்தில் தூக்கிக் கீழேபோட்டும், ஒருவரையொருவர் கைகள்சலியாமல் பிண்டாகாரமாய்க் கட்டிக்கொண்டு பலத்தினால் திமிரியும் மல்லயுத்தஞ் செய்தார்கள்

இப்படி சரீரமெல்லாம் வேதனையுண்டாகும்படியாகத் திவ்ய சவுந்தரியமுள்ள ஸ்ரீராமகிருஷ்ணரிருவரும் மல்லயுத்தஞ் செய்கிறதைப் பட்டணத்து ஸ்திரீகள்கண்டு ஒருவரையொருவர் பார்த்து, இந்த ராஜசபையில் வந்திருக்கிறவர்கள் மிகவும் அன்னியாயம் பண்ணுகிறார்கள் வஜ்ராயுதம்போல கடினமாயும் மலைபோன்று பருத்துமிருக்கிற சரீரத்தையுடைய மல்லர்களுக்கும், மெதுவாய திவ்யசவுந்தரியத்தோடே கூடிய முகத்தையுடைய ஸ்ரீராமகிருஷ்ணருக்கும் யுத்தஞ் சரிப்படுமோ? இப்படிப்பட்ட அன்னியாயத்தை இராஜாவானவன் பண்ணச்சொன்னால் அந்த இந்தச் சபையிலிருக்கின்றவர்கள் வேண்டாமென்று சொல்லாமல் உபேக்ஷை செய்கிறார்களே இவர்களுக்கு மகத்தாகிய பாபமுண்டு சபையிலிருப்பவர்கள் ஞானவைராக்கியத்துடனும், பக்ஷபாதமில்லாமலும், வித்தியாவான்களாயும், சத்தியசந்தர்களாயும், அகங்கார முதலியதுக ளில்லாதவர்களாயும், தர்மாதர்மங்களை உபதேசிக்கத் தக்கவர்களாயுமிருக்கவேண்டும் அப்படிப்பட்ட சபையில் நாமுமிருக்கவேண்டுமேயன்றி, இந்தச்சபையிலிருக்கக் கூடாது என்று விசனப்படுகிற ஸ்திரீகளின் வார்த்தையை வசுதேவதேவகிகள் கேட்டு, பசங்களுக்கெங்கே அபாயம் நேரிடுகிறதோவென்று மிகவும் விசனப்பட்டுக் கொண்டிருந்தார்கள்

அந்தச்சமயத்தில் சாணூரனை சுவாமி ஒருகுத்துக்குத்தினார். அப்போதவன் மிகவும் இளைப்படைந்து பெருமூச்சுவிட்டு, கண்தெரியாமல் கோபித்து, அப்பால் சப்பிராணித்துக் கைகளை உறுட்டிப்பிடித்து, மிகவும் வேகத்தோடே பறந்தானது மார்பைத் தாக்குவதுபோல ஓடிவந்து, சுவாமியினுடைய மார்பினில் குத்தினான் அதைப் புஷ்பமாலையா லடிக்கப்பட்ட யானையைப்போல் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி சட்டைபண்ணாமல், அவனை யிரண்டுகைகளையும் பிடித்துத் தூக்கிக் கிறுகிறுவென்று சுழற்றிப் பூமியிலமோதினார் அந்தச்

சாணூரன வாயினில ரததஙகளைககககிக கணவிழிபிதுஙகி, நாக்கைக்கடித்துப பிராணனையிழநது விழுநதனன முஷடிகனும் பலராமனால மார்பினில குததபபடடு, இரததஙகளைக ககககி கீழேவிழுநது ஹதமானான அவர்களோடிருநத கூடனெனகிற மலலனைப பலராமரும, சலபனையுந தோசலனையும ஸ்ரீகிருஷணமூாததியும பிடிதது, அவாகள் காலகளைபபிடிததுக கிழிததுப போடடாாகள பினனா அவாகளோடேகூட வநதவாகள் பயததையடைநது, பிராணனிருநதால போதுமெனறு திககுகளதோறும ஓடிப்போனாகள்

பினபு ராமகிருஷணு ளிருவருங கோபாலாகளோடே விளையாடிக்கொண்டிருக்கிறதைச சகலரும பாாததுச சநதோஷிததாாகள அபபோ ராஜாவான கமசனெனபவன மிகவும பயததை அடைநது, படாளோாோககி, துஷடர்களான வசுதேவ குமாராாகளை அவாகளிட தோழன மாாகளுடன இநதப் பட்டணததை விடடுத துரததி, அவாகளுடைய சொததுகளை யாவையும் பிடுஙகிக கொளளுஙகள. புததியிலலாத நநதகோபனைக் காவறபடுததி, சாதுவைபபோ லிருககிற வசுதேவரையும உககிரசேனரையுங கொலலுங்கள எனறு ஆககியாபிககிற கமசன வாாததையைக கேடட சுவாமியானவா மிகவுங கோபததுடன யுததரஙகததை விடடு ஆகாயததில கிளமபி, கமசன உட்காாநதுக கொணடிருககிற ஆசனததில குதிததாா அதைக கமசன கண்டு பயநது, தனககு மிருததியு சமீபிததெதனறு தெரிநது, அநத ஆசனததை விடடு எழுநதிருநது, கததிகேடயததைக கையிலெடுததுக கொணடு, பறநதானது ஆகாயததில இடபுககமாயும வலபபககமாயுஞ் சுததுவதுபோல பூமியில சுததிககொணடிருநதான

இபபடி சுததிககொண்டிருககிற கமசனை ஒருவராலும் சகிககவொணணாத வேகததுடன கூடின சுவாமியானவா பலவநதமாயப பிடிதது, கிரீடததை கீழேதளளி, தலையிலிரைக கையிலசுறறிககொணடு, புறறிலிருநது வெளிபபடட மகாநாகததைக கருடன அபகரிபபது போல அநதத துஷடனை கமசனைபபிடிதது யுததபூமியில இழுததுததளளினா அபபோது கமசன் அநதவேகம பொறுகக மாடடாமல பிராணனை இழநதான அவனுக்குப பிராணனபோயும சுவாமிககுச கோபம அடஙகாமல யுததபூமி யெலலாம் இழுததுவிடடாா. அநதக கமசன சுவாமியைப பகைவ னெனறுவது சாவகாலமும நினைததுக கொணடிருநதபடியால, ஸ்ரீபகவானுடைய சாரூபபியத்தை அடைநதான அபபோது சபையிலிருககிற வாகளெலலாருங கம்சன் இறநது போனதறகு ஆசசரியபபடடுக கொண்டிருநதாாகள்

இபபடி கமசன இறநது போனசஙகதி அவன் சகோதரர்கள் எட்டுபேருங் கேழ்வியுற்றுச் சகிககமாட்டாமல, ஸ்ரீராமகிருஷ்ணனுடன் யுத்ததிற்கு வநது சூழ்நதுகொண்டாாகள். அபபோது பலராமர் பரிகமென்கிற ஆயுதத்தினால க்ஷணபபோதில் அவர்களைச சங்கரிததுப் போட்டார். அக்காலையில்



ஸ்ரீ கண்ணன் கம்சனை சங்கரித்தது

பிரமன் உருததிரன முதலிய தேவாகள புஷபமாரிசொரிநது துநதுபிவாததி யமடிததுக கோலாகலாாபச சநதோஷிததாாகள அககால் இராமகிருஷண ளிருவரும யுதத பூமியில களையாறிககொண டிருநதாாகள பிறகு கமசன முதலியவாகளுடைய மனைவியாக ளிநதசஙகதியைக கேழவியுறறு, எலலாருந துககபபடடுக கொணடு யுததபூமிககு வநதாாகள அவாகளில கமசனுடைய மனைவியாகள அவனைநோககி, எஙகளுக கிஷடனுயச சகலதாமஙகளையும அறிநத நீா ஒரு அபராதமுஞ செயயாதிருநத சிசுககளைச சஙகரிதத தோ ஷததால இநத வாபததை யடைநதீா உமமைப பரிகொடுதது இராச்சி யததையுமிழநது வைதவியததை யடைநத நாஙகளும மறிததவாகளேயனறி வேறிலலை

எனறிபபடி நாநாவிதமாகச சொலலிககொணடு விசனபபடுகிறவாகளை ஸ்ரீபலராம கிருஷணாகள சமாதானஞசெயது, மரணததை யடைநதவாக ளுககுச சமஸகார முதலியதுகள செயயசசொலலி ஆககியாபிதது, தமமிட தாயதநதை முதலியவாகளைக காவலில நினறும விடுவிதது, அவாகளைச சாஷடாஙகமாகத தெணடனிடடு, பயபக்தியோடே கைகடடி எதிரேநினறாா கள. அவாகளை யததாயதநதை முதலியோா சாவலோகேஸ வராகளெனறு தெரிநதுகொணடு, அருகிலழைதது• ஆலிஙகனஞசெயது, மிகவும ஆனநதத தை யடைநதாாகள அபபோ ஸ்ரீராமகிருஷண ளிருவரும மாதாபிதாகக ளைப பினனுந தெணடனிடடுக கைகூபபிககொணடு பககததில நினறாாகள.

# நாற்பத்தைந்தாவது அத்தியாயம்.

—— ➤ ➤———

அறுசீரடியாசிரிய விருத்தம்

அகமதி லனபு கூாநது அரி கிருஷணனிருவ ராணோ
சகமபுகழ தநதை தாயைச சமாதானஞ செயத பினபு
பகைவரை யொருமை யாககிப பணபுட னேசஞ செயது
வகையிலா திறநத புததிரன வநததும வழுததுவாமே.

ஸ்ரீராமகிருஷண ளிருவரும வசுதேவ தேவகிகளைச சமாதானஞ செய்த தும, தாஙகள ஜகதீஸவராளெனபதை ஒருவருககுந தெரிவிககாமல மாயை யால மறைநதிருபபதும, உககிரசேன் மகாராஜாவை அரசாடசி செய்யச் சொனனதும, வாயவுபகவான தேவலோகததிலிருககிற சுதாமமெனகிற சபை யை மதுராபுரிககுக கொணடுவநததும, கமசனால துரததபபட்டிருநதபநதுக களை வரவழைததுக கொணடதும, கோபாலாகளுககுத தாம வசுதேவபுத்திர ரென்று தெரிவிததும, சாநதீபினியினிடததில விதயாபபியாசஞ் செய்து அவருடைய இறந்துபோன புததிரனைக கொண்டுவநது கொடுத்ததுஞ் சொல் லப் படுகினறன.

கேளீர் உத்தரகுமாரனே! இப்படி பயபக்தியுடன் நிற்கிற ஸ்ரீராமகிருஷ்ணுளை வசுதேவதேவகிகள் ஜகதீஸ்வராகளென றெண்ணியிருந்தார்கள். அதைச் சாவகக்கியரான சுவாமி தெரிந்துகொண்டு, இவர்களுக்கிப்பவே நம்மிடத்தில ஈஸ்வரபக்தி உண்டாயிற்றுனால இல்லறவாழுக்கையை விட்டு யோகமார்க்கத்தை அனுசரிப்பார்கள் இவர்களுடைய கியானத்தை மாயையால் மறைக்கச்செய்யவேண்டும் என்று கருதி அவர்களைநோக்கி, மதுரமாய ஒரு வார்த்தை அருளிச்செய்கின்றார் கேளீர் மாதா பிதாக்களே! உங்களுடைய கர்ப்பத்தில நாங்க ளிருவரும் புத்திரர்களாக ஜனித்தும், எங்களாலுங்களுக்கொருவித்ததிலும் சவுக்கியமில்லாமல போசசுது அதுதா னில்லாவிட்டாலும், நாங்கள் சிசுக்களா யிருக்கிறகாலேயில் என்னென்ன விளையாடல்களைச் செய்தோமோ! அதுகளையும் நீங்கள் கண்ணிறை பார்க்கவுமில்லையே உலகத்தில சிசுக்கள் தாயதந்தையர்களுக்குச் சந்தோஷத்தை யுண்டுபண்ணி, அவர்கள் சீராட்டுகிறதற்குப் பாத்திரர்களாயிருந்து சுகத்தை அடைவார்கள்.

அப்படியிருக்க நாங்கள் உங்களைவிட்டுப் பிரிந்து காட்டினில இத்தனை நாள் வெகுகஷ்டங்களை யனுபவித்தும், எங்களுக்கு மகத்தான தாமலோபம் வந்தது. அதாவது சகலபுருஷார்த்தங்களையும் சம்பாதிக்கிறதற்கு முக்கிய சாதனமான தேகத்தை யுண்டுபண்ணி, அந்தத்தேகிக்குப் புத்தி வருகிறவரையில போஷித்தல முதலாகியதும் செய்த மகோபகாரிகளான தாயதந்தையர்களுக்கு அவனுடைய புருஷாயுநூறும் யிடை விடாமல பணிவிடை செய்தாலும் அந்த உபகாரத்திற்கு இணையாகமாட்டாது. அப்படிப்பட்ட தாய் தந்தையர்களுக்கு உபசாரஞ்செய்யாமல உபேக்ஷைசெய்கிறவனை, யமனுதாள அவனுடைய மாமசத்தையே பட்சிக்கச்செய்து நரகங்களை யனுபவிக்கும்படி தொந்திரை செய்வார்கள் அதனறியும் விருத்தாளான தாயதந்தையர்களையும், கற்புள்ள மனைவியர்களையும், புத்திரர்களையும், ஆசாரியர்களையும், தன்னைச் சரணமடைந்தவர்களையும், பிராமணர்களையும், ஆகிய இவர்களை இரக்ஷிக்கச் சக்தியிருந்தும் உபேக்ஷை செய்கிறவன் செத்தவனுக்குச் சமானன்

இவ்விஷயங்க ளெல்லாந் தெரிந்திருந்தாலும், நாங்கள் கம்சனுடைய பயங்கரத்தினால உங்களுக்குப் பணிவிடை செய்யாம லிருந்தோம் இதைப் பொறுத்துக்கொள்ள வேண்டும் என்று பிரதக்ஷிணஞ்செய்து நமஸ்கரித்த பிள்ளைகளை வசுதேவதேவகிகள் வாரியெடுத்து மடியினில வைத்துக்கொண்டு ஆனந்தபரவசத்தை அடைந்தார்கள் இப்படி அவர்களுக்குத் தங்களுடைய சொரூபக்கியாபகம் வராமலிருக்கும்படியான வார்த்தைகளைச் சொல்லிச் சமாதானஞ்செய்து, பலராமசகித கிருஷ்ணரானவர் மாதாமகனான உக்கிரசேனமகாராஜாவின அருகிற்சென்று, அவரை நமஸ்கரித்து, அவரைநோக்கி உம்முடைய புத்திரன அசுரனுகையால், அநேகம் பசுக்களையும் பிராமணர்களையும் சிசுக்களையும் சங்கரித்த தோஷத்தால அல்பாயுளை யடைந்தான். அவனுக்காகத் துக்கிக்க வேண்டாம் நீரினிமேல் இராசசியபரிபாலனஞ

செய்யவேண்டுமெ என்று மிகுந்த வணக்கத்துடன் சொல்லி அவரைச் சிங்கா தனத்தி லிருக்கச்செய்து, பட்டாபிஷேகமுஞ் செய்வித்தார்.

பின்பு அந்த உக்கிரசேன மஹாராஜனை ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி நோக்கி வாரீர் எங்கள் மாதாமகரே! யாதவர்களுக்குச் சிங்காதன மில்லாமல் போகக் கடவதென்று யயாதிமகாராஜா சபித்திருந்தாலும், என்னைப் போலொத்த சேவகன் உமக்கிருக்கும்போது அந்தச்சாபமும் உம்மை இனி யணுகாது இந்திரன்கூட கப்பங்கட்டுவான் என்று சொல்லி உக்கிரசேனருக்கு எதிராகவே வாயுபகவானை வரவழைத்து, நீ தேவேந்திர னிடத்திற்குச் சென்று நான் சொன்னதாக உக்கிரசேன மகாராஜாவுக்குச் சுதர்மம் என்கின்ற சபை வேண்டியிருக்கிற தென்றுசொல்லிக் கொண்டுவாவென் றுரைக்கியருளினார். அவனு மப்படியே இந்திர னிடத்திற்சென்று, ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி ஆக்கியாபித்த சங்கதியைச் சொல்லினன். அதைக்கேட்ட தேவேந்திரன் ஸ்ரீகிருஷ்ண ஸ்வாமியினுடைய பிரபாவத்தை அறிந்தவனாகையால், அப்படியே வாயுபகவானிடத்தில் அநேகயோசனை தூரம் விசாலமாகிய, நவரத்தின ஸ்தம்பங்களோடுங் கூடி, எவ்விடத்தில் வைத்தாலும் அந்த இடத்திற்குத் தகுந்தபடி பொருந்துமபடியான தன்மையுள்ள, தேவதா நிர்மாணமான, அந்தச் சுதர்மமென்கிற சபையைக் கொடுத்தனுப்பினன். வாயுபகவானும் அந்தச்சபையை உக்கிரசேன மகாராஜாவினது அரண்மனையிற் கொண்டுவந்து வைத்தான்.

பிறகு உக்கிரசேன மகாராஜாவும் அந்தச் சுதர்மமென்கிற சபையிலிருந்து, ஸ்ரீ கிருஷ்ண ஸ்வாமியினது உதவியின்பேரில் அரசாக்ஷி செய்துகொண்டு வந்தார். ஸ்ரீ ஜநார்த்தனரான சுவாமியானவர் கம்சனுடைய பயத்தினால் தேசாந்திரம் ஓடிப்போன பந்துக்களை வரவழைத்து, கம்சனால் பக்ஷிக்கப்பட்ட சொத்துக்கள் யாவையும் அவர்களுக்குக் கொடுத்துச் சந்தோஷிக்கச் செய்து, ஸ்ரீ பலராமர் சகிதராய் நந்தகோபரிருக்கிற உபவனத்திற்குச் சென்று, அவரை ஆலிங்கனஞ்செய்து, பின்பு ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியானவர் ஒரு வார்த்தை அருளிச்செய்கிறார் கேளீர் பிதாவான நந்தகோபரே! கம்சனுடைய பயத்தால் வசுதேவரானவர் என்னை உங்கள் கிரகத்தில் கொண்டுவந்து விட்டார் அது முதல் உம்மாலும் மாதாவான யசோதாதேவியாலும் உங்களாத்மாவைக் காட்டிலும் விசேஷ அன்புவைத்து என்னை போஷித்தபடியால், நீங்களே தாய்தந்தையர்கள் ஆகையால் உங்களை நான் ஒருக்காலும் மறக்கமாட்டேன். நீங்களிப்போ கோகுலஞ் செல்லுங்கள் நான் சிலநாள்சென்று வருகிறேன். என்றுசொல்லி அவர்களுக்கும் அவர்களோடேகூட வந்த கோபாலர்களுக்கும் திவ்யமான ஆடையாபரணங்களைக் கொடுத்து ஆலிங்கனஞ்செய்தார்.

அப்போது நந்தகோபர் ஸ்ரீ கிருஷ்ணனைப் பிரிய மாட்டாமல், விசனத்துடன் ஸ்ரீ ராமகிருஷ்ண விருவரையும் மடியில் வைத்து உச்சி முகந்து ஆலிங்கனஞ் செய்து, அவர்களனுமதி பெற்றுக்கொண்டு, சகல கோபாலர்களுடன் கோகுலஞ் சென்றனர் பிறகு வசுதேவரானவர் யாதவர்களுக்கும்

புரோகிதரான காாகயோரை வரவழைததது, ஸ்ரீ ராமகிருஷ்ணு ளிருவருக்கும உபநயனஞசெயது, பிராமணாகளுககு அனேகம பசுக்களும் சொர்ணங்களும வஸதிரஙகளும பூரி முதலியவைகளேயும அபரிமிதமாகக கொடுத்து, போஜனஞசெயவிதது, காாகயோருககும அனேக ஆடையா பரணங்களேக் கொடுததுப போஜனஞ செயவிததுத திருபதிசெயதனா இபபடி உபநயனமான பிறபாடு ஸ்ரீ ராமகிருஷ்ணு ளிருவரும பிரமமசரிய விரததகதை அனுசரிதது காாகயோருககுப பணிவிடை செயதுகொணடிருக்குமபோது, குருகுலவாசஞசெயது விததியாப்?.ாசஞசெயய நிசசயிதது, அவநதி தேசத்தில வாசஞ செயகிறவராயும், வேதஙகளேயும சாஸதிரஙகளேயும உபநிஷததுக்களேயும, தனுாவேதமுதலிய சகலகலேகளேயு முணாநத சாநதீபினி யென்னும் நாமததை யுடையவராயு மிருககினற பிராமமண ரிடததிற சென்று சாஷ்டாஙகமாகத தெணடனிடடு, கைகூபபிககொணடு ஒருவாாததை சொலலுகினறாாகள

கேளீா சுவாமி! மகானுபாவரே! நாஙக ளிருவரும வசுதேவ புததிராகள். எஙகளுககு இராம கிருஷ்ணாகளெனறு பெயா. நாஙகளிருவருந தேவரீரிடத்தில விததியாபயாசஞ செயயவநதோம என்று விணணபபஞ செய்யவும் அநதச சாநதீபினியெனனு மையரானவா இவாகள வாாததைகளேக கேளவியுறறு, இவாகளபபாாககிறபோது சகலவிததைகளும இவாகளுககுச சொல்லவேணடுமெனறு கருதி, இவாகளுககு நானகு வேதஙகளேயும ஆறு சாஸ்திரஙகளேயும சகல உபநிடதஙகளேயும பிரையோக சாஸதிரம ஐஞஞூறும உபசஙகார சாஸதிரம ஐஞஞூறும அதினுடைய மநதிரஙகளேயும மனு ஸமிருதி முதலிய தாமசாஸதிரஙகளேயும ஆறுவிதஙகள்ான இராஜ நீதிகளேயும ஒருதறஞசொலல, அதிக கூாமை பொருநதிய புததியுளள வாகளாகையால ஒரு நாளேககி ஒரு விததையாக அறுபதது நானகு நாளில அறுபதது நான்கு கலேகளேயும உணாநது, ஸ்ரீ ராமகிருஷணாக ளிருவரும அநதச சாநதீபினியை நோககி ஒருவாாததை அருளிச செயகிறாாகள.

கேளீா சுவாமீ! தேவரீருடைய அனுககிரகப பிரபாவததினுல் சகல கலேகளேயுங கறறுணாநதோம. இனிமேலெஙகளிடததில கிருபைகூாநது தேவரீருககு வேணடியதைக கேட்கவேணடும எனறு வினவுகினற ஸ்ரீ ராமகிருஷ்ணாகளுடைய முகததைச சாநதீபினி யானவா உறறுப பாாதது, இவர்களுடைய வாாததைகளேயும அதிமானிட கிருததியஙகளேயும யோசிததுணார்ந்து, இவாகள ஜகதீஸவராகளெனறு நிசசயிதது, இவாகளே நோககி ஒரு வார்ததை அருளிச செயகினறனா. வாரீா மாணுககாகளே! எனது புததிரன் பிரபாச தீாததததில மரணததை அடைநதான. அவனேக கொணடு வநது கொடுப்பதே குருதக்ஷிணையெனறு சொலலினா அதறகிசைநது உததரவு பெற்றுக் கொண்ட ஸ்ரீ ராமகிருஷ்ணாக ளிருவரும இரததத்தின் மீது யேறிக் கொண்டு, பிரபாச தீாததத்திறகு வநதுகினறாாகள். இதைப்பிநத வருணனுன் அதிக வேகத்தோடு ஓடிவநது, அறகியபாததிய முதலியவறறுல் பூசித்து,

கைகளைக் கூப்பிக்கொண்டு நின்றான் இப்படி நிற்கிற வருணனைப் பார்த்து ஸ்ரீ கிருஷ்ணபகவான் ஒருவார்த்தை அருளிச் செய்கின்றனர்.

கேளாய வருணா! முன்பு பிரபாச தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்யவந்த சாந்தீபினியின் குமாரன் இறந்து போனானே, அவன் எனது குரு புத்திரனாகையால், அவனைக் குருதக்ஷிணையாகக் கொடுக்கவேண்டும் ஆதலால் அவனைச் சீக்கிரத்திற் கொண்டுவந்து விடவேண்டு மென்று சொல்ல, அந்த வார்த்தையைக்கேட்ட வருணனானவன் ஸ்ரீ புண்டரீகாக்ஷனான கண்ணபிரானை நோக்கி, தேவரீருடைய குருபுத்திரனை நான் காணவில்லை. சமுத்திரத்தில் சங்கு வுருவமாயிருக்கிற பஞ்சஜனனென்கிற அசுரன் உமது குருபுத்திரனைச் சங்கரித்தான். அவ்வசுரனைச் சம்மரிக்க என்னாலாகாது தேவரீரே அவனைச் சம்ஹரிக்க வேண்டும் என்று சொன்ன வருணனுடைய வார்த்தையைக் கிருஷ்ணமூர்த்தி கேட்டு, பலதேவரை இரதத்திலேயே நிறுத்திப்போட்டு, சர்வலோகேஸ்வரனான அந்த ஸ்ரீ கிருஷ்ண ஸ்வாமியானவர் கீழே இறங்கி, சமுத்திரத்திற் பிரவேசித்து, அந்தப் பஞ்சஜனனைச் சங்கரித்துக் கிழித்துப் பார்த்தார். அப்படி பார்க்கையில் தம்மிட குருபுத்திரன் அவனிடத்தில் தோற்றவில்லை பின்பு அவனுடைய சரீரமாகிய சங்கை எடுத்துக் கொண்டு, திரும்பவும் இரதத்தின் மீதேறி, பலபத்திரருடன் சையமனீ யென்கிற யமபட்டணத்திற்குச் சென்று பாஞ்சசன்னிய மென்கிற சங்கத்தைப் பூரித்தார்.

அந்தத் தொனியைக்கேட்ட யமதர்மராஜன் ஓடிவந்து, அர்க்கியபாத்தியாதி பூசையால் உபசரித்து, தெண்டனிட்டுத் துதிசெய்து, சுவாமியைப் பார்த்து, தேவரீரெழுந்தருளின காரியத்தை இன்னதென்று அடியேனுக்கு ஆக்கியாபிக்க வேண்டுமென்று பிரார்த்தித்தான் அந்த யமதர்மனைச் சுவாமி நோக்கி, வாராய தர்மராஜனே! எனது குருவாகிய சாந்தீபினியின் குமாரன் பூர்வத்தில் தன் கர்மவசத்தால் மரணத்தை யடைந்திருந்தாலும், என்னுடைய அருளால் பிழைத்திருப்பான் அவனைச் சீக்கிரத்திற் கொண்டு வரவேண்டுமென்று ஆக்கியாபித்தனர் அந்தக்ஷணம் யமதருமனும் அந்தப் புத்திரனை அழைத்துவந்து சுவாமியினுடைய சமீபத்தில் விட்டனன் அவனையும் இரதத்தி லேற்றிக்கொண்டுவந்து, சாந்தீபினியின் அருகிற்சென்று, பிரதக்ஷணஞ்செய்து நமஸ்கரித்துக் கைகூப்பி, உமது கிருபையால் பிரபாசதீர்த்தத்தில் இறந்துபோன குமாரனைக் கொண்டுவந்தோம் அங்கீகரிக்கவேண்டும். என்று குருதக்ஷிணையாகக் கொடுத்து இன்னமும் வேண்டியதைக் கேளுமென்று சொல்ல, ஸ்ரீகிருஷ்ணபகவானைப்பார்த்துச் சாந்தீபினி சொல்லுகின்றனர்.

கேளீர் பாலகுமாரர்களே! இறந்துபோன எனது புத்திரனைக் கொண்டுவந்து கொடுத்ததே போதுமானது இனியெனக்கு மகாசந்தோஷம். உங்களுக்குக் கீர்த்தியும் நன்மையும் ஆரோக்கியமும் மென்மேலுமுண்டாகக்கடவன என்று அநுக்கிரகித்து, இனி உங்கள் கிரகத்திற்குப் போகலா மென்று விடைகொடுத்தான் உடனே குருவினுடைய உத்திரவின்படி இரத

ரூடர்களாய் வருகின்ற ஸ்ரீராமகிருஷ்ணர்களை மதுரையிலிருக்கிற ஜனங்கள் பார்த்துச் சந்தோஷத்தை யடைந்தார்கள்.

# நாற்பத்தாறுவது அத்தியாயம்.

அறுசீரடியாசிரிய விருத்தம்

புத்தியான மிருந்த கிருஷ்ண பூபதி யாமேனா நல்ல
உத்தவரை யழைத்து விட்டனே கோகுலத்திற் சென்று
முத்தணி யசோதை நந்த கோபாலர் முதலி யோரை
சித்த மொத்திருக்கச் செய்த செய்திக ளனைத்துஞ் சொல்வாம்

ஸ்ரீகிருஷ்ண சுவாமியானவர் தமக்கு அந்தரங்க பக்தனான உத்தவரை வரவழைத்து கோகுலத்திற்கு அனுப்பி நந்தகோபர் முதலிய கோபாலர்களையும் யசோதைமுதலிய கோபிகைகளையும் சமாதானஞ்செய்ததைச் சொல்லுகின்றது.

சேளீர் வசுந்தராதிபனான பரிக்ஷித்து மகாராஜனே! இல்லறவாழ்க்கையை விட்டுத் தம்மிடத்தில் அன்பு செலுத்துகிற வர்களுடைய யோகக்ஷேமத்தை வகிப்பதே சுவபாவமாக உடைய ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியானவர் கோகுலத்திலிருக்கிற நந்தகோபரிடத்திலும், யசோதாப பிராட்டியா ரிடத்திலும், இல்லற வாழ்க்கையை விட்டுத் தம்மிடத்தில் பரதேவதா பக்தி பண்ணுவிட்டாலும் பறந்தாவெனகிற புத்தியால் சர்வகாலமுந் தியானித்துக் கொண்டிருக்கின்ற கோபிகைக ளிடத்திலும் அன்புகூர்ந்து அவர்களுக்குச் சந்தோஷம் வருமபடியாயச் சமாதானஞ் சொல்லி அனுப்பவேண்டு மென்று கருதி, யாதவர்களுக்கெல்லாம் சிறந்தவராயும், பிருகஸ்பதிக்குச் சிஷ்யராயும், புத்திமான்களுக்குள் சிரேஷ்டராயும், தமக்கு மந்திரியாயும், அந்தரங்கத் தோழராயு மிருக்கின்ற உத்தவரை ஏகாந்தத்தில் கையைப்பிடித்து அழைத்துக் கொண்டு சென்று, புன்னகையுடனும் கொஞ்சம் சங்கோசத்துடனும் அவரைப்பார்த்து ஒருவார்த்தை அருளிச் செய்கின்றனர்.

கேளீர் உத்தவரே! நீர் கோகுலஞ்சென்று, என்தாய் தந்தையர்களையும் நம்மைவிட்டுப்பிரிந்து கிலேசப்படுகின்ற கோபஸ்திரீகளையும் நான் இன்னங் கொஞ்சநாளில் வருகிறேனென்று சொன்னதாயத் தேறுதல்செய்து வர வேண்டுமென்று ஆக்கியாபித்தனர். அப்போதந்த ஸ்ரீபகவானுடைய கருத்தையுணர்ந்த உத்தவரானவர் பிரயாணசித்தராகி, தேரின்மீதேறிக்கொண்டு, வெள்ளிமலைபோல்வெளுத்து விளங்குகிற விருஷபங்களாலும் பசுக்களினாலும் நிறைந்தும், கைலாசபர்வதத்தினுடைய கொடிமுடிகள் போன்ற கன்றுகள்

எழும்பித் துள்ளிச்சண்டைபோடுகிற சத்தங்கள் பரிபூரணமாய் நிறைந்தும்,
சிலபசுக்கள் கட்டப்பட்டும், சிலபசுக்கள் தங்கள்வீட்டை உத்தேசித்து
வந்து கொண்டும், சிலகோபாலர்களுங் கோபிகைகளுங் கூட்டங்கூடி ஸ்ரீராம
கிருஷ்ணர்களுடைய மனோஹரமான சரித்திரங்களைக் கானம்பண்ணியும், சிலர்
பாலகறந்து கொண்டும், சிலர் மங்களஸ்நானஞ்செய்து சர்வாலங்காரபூஷி
தர்களாய் சூரியன், அக்கினி பிராம்மணர்கள், பிதுருதேவதைகள் முதலிய
வர்களைப் பிராம்மணர்களைக் கொண்டு பூசித்துக் கந்தபுஷ்ப தீபங்களினலே
உபசரிக்கப்பட்டும், உபவனங்களினலே சூழ்ந்த அலங்காரமாயிருக்கிற கோகு
லத்தின் வீதியில் சூரியாஸ்தமனகாலத்தில் வந்தார்.

இப்படி வருகின்ற உத்தவருடைய வேகத்தைப்பார்த்த நந்தகோபர் மிக
வும் சந்தோஷத்தோடே எதிர்கொண்டுவந்து, ஸ்ரீகிருஷ்ண தூதனென்று
தெரிந்து ஆலிங்கனஞ்செய்து, கிரகத்திற் கழைத்துக்கொண்டுபோய் அவரை
ஸ்ரீகிருஷ்ணனைப் பாவனைபண்ணி, சகலவித பூசைகளுஞ்செய்து மிகவும்
பரிசுத்தமான போஜனங்களினலே திருப்திசெய்வித்து, கந்தபுஷ்பங்களினல்
அலங்கரித்து, அந்த உத்தவரைப் பார்த்து நந்தகோபர் ஒருவார்த்தை
சொல்லுகிறார் வாரீர் கோஷ்டிகளாயும் பாகவதோத்தமராகியு மிருக்கிற
உத்தவரே! எனக்குத் தோழராகியும் சூரியகுலோத்துங்கராகியு மிருக்கிற வசு
தேவரானவர் பந்தனத்தில் நின்றும் விடுபட்டுப் புத்திரர்களோடே சுகமாக
வசிக்கின்றாரா? மகாபாபியான கம்சன் தான்செய்த பாபவசத்தினலே மரண
மடைந்தானு? ஸ்ரீகிருஷ்ணரானவர் மாதாவான யசோதையையும், பிதா
வான என்னையும், சகாயிகளான கோபாலர்களையும், இந்தக் கோகுலத்தை
யும், பசுக்களையும், பிருந்தாவனத்தையும், கோவர்த்தன பர்வதத்தையும்,
எப்போதாகிலும் நினைத்தாரா? எங்களைப் பார்க்கிறதற்காக இன்னமொரு
தரம் இவ்விடத்திற் குவருவாரா? அப்போதாகிலும் நாங்களந்த சுவாமியைக்
கண்ணுறப் பார்ப்போமா?

ஐயா உத்தவரே! தாவாக்கினியினலவந்த இடரினுலும், பெருங்காற்றினு
லுண்டான உபத்திரவங்களினலும், இந்திரனலநேர்ந்த ஆபத்தினலும்,
இப்படி ஒவ்வொரு உபத்திரவங்களாலேயே நாங்கள் மரணத்தை யடைகு
வோம் அப்படிப்பட்ட சமயங்களில் இடையூறுவராமல் எங்களை இரக்ஷித்த
ஸ்ரீகிருஷ்ணருடைய சரித்திரங்களையும், புன்னகையுடன் கூடிய முகாம்புஜத்
தையும், சர்வகாலமும் நினைத்துக்கொண்டிருக்கின்ற எங்களுக்கு அந்தசுவா
மியினயாடின பூமியில் சிறுவடிக ளழுந்திருப்பதைப் பார்க்கிறபோது எங்கள்
மெய்மறந்து, அந்தசுவாமியினிடத்திலேயே மனது லயித்துப்போகின்றன.
ஒப்பில்லாத சரித்திரங்களை உடையவர்களான ஸ்ரீ ராமகிருஷ்ணர்க ளிரண்டு
பேர்களும் அந்தமதுராபுரிக்குச் சென்று, அவ்விடத்தில் பதினுயிரம் ஆனை
பலமுள்ள கம்சனையும் மகா பலசாலிகளான மல்லர்களையும் குவலயாபீட
மென்கிற கஜத்தையும் பின்னும் அநேக இராக்ஷதரையும் சங்கரித்து கம்ச
னுல் பூஜிக்கப்பட்டிருந்த வில்லையு முறித்துப் போட்டார்.

இப்படிப்பட்ட ஆச்சரியகரமான சரித்திரங்களைச் செய்திருக்கிறபடியால், கார்க்கேயர் சொன்னவண்ணம் அவர்கள் சர்வேஸ்வரர்களென்பதற்குச் சந்தேகமில்லை என்று நந்தகோபர் உத்தவரைப்பார்த்துச் சொல்லி, அந்தக் கிருஷ்ணசுவாமியினிடத்தில் மிகவும் அனுபுசெனுங்தி ப்ராகையால் அவரைவிட்டுப் பிரிந்திருக்கிறோமேயென்று வியசனமுற்று, சோகமேலிட்டு வாய்விட்டரற்றினார் இப்படியரற்றுகின்ற நந்தகோபருடன் யசோதாப்பிராட்டியாரு மிகவுந் துக்காக்கிராந்தையாகி, ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய சரித்திரங்களை நினைத்துக்கொண்டு, கண்ணீர் தாரைதாரையாய்ப் பெருகவிட்டு அழுதனள் இதுகளைப்பார்த்த உத்தவர் மனமசக்கிக்க மாட்டாமல் தாமுங்கொஞ்சம் விசனமுற்று, ஸ்ரீகிருஷ்ணசுவாமி அருளிச்செய்த சமாதான வார்த்தைகளை அவர்கள் சோகந் தீரும்படி உரைக்கலுற்றார்

வாருங்கள் மகா புண்ணியசாலிகளான நந்தகோப யசோதைகளே! எண்ணிக்கையில்லாத நற்குணங்களையும், பிறர்துர்க்கிருத்தால் தேற்றுதற்சொல்லவல்லவர்களுமான நீங்களே இப்படித் துயரப்படலாமா? மேலும் பூமிக்குப் பாரமாயிருக்கின்ற அசுரர்களில் சிலர் தேவர்களால் சாதலில்லாமல் வரம்பெற்றிருப்பதால் அவர்களைச் சம்ஹரிக்கவேண்டி, மகா பாபியாயிருக்கின்றவன் மரணகாலத்தில் தன்னை க்ஷணகாலந் தியானித்த மாத்திரத்தில் அவனுடைய பாபத்தைப்போக்கிச் சூரியனுக்கொப்பான ஒளியுள்ள விமானத்தோடுள்ள அக்ஷயமான பரமபதத்தை அடையும்படி தந்தருளுகின்ற ஸ்ரீகிஷ்ண ஸ்வாமியானவர் வசுதேவதேவகிகளிடத்தில் புத்திரராக அவதரித்தது, நீங்கள் தாழ்ந்த ஜாதியாயிருந்தாலும் பூர்வஞ்செய்த அருந்தவப்பேறால் உங்களிடத்தில் வாசஞ்செய்தனர்

அதுவும்போதாமல் இப்பவும் சுருதிகளாலும் உபநிஷத்துக்களாலுந் தேடிக் கண்டுபிடிக்கக் கூடாத அந்த ஜகதீசனிடத்தில் விடைவிடாமல் பக்தி செலுத்துகிறபடியால், உங்களுக்கினிமேல் சம்பாதிக்கவேண்டிய புருஷார்த்தம் ஒன்றுமில்லை சமஸ்த பிராணிகளுடைய இருதயங்களில் வாசஞ்செய்கின்ற சர்வாந்தரியாமியாகையால், உங்களுடைய கிலேசங்களையுமுணர்ந்து சீக்கிரமத்திலேயே வருவார் வாரீர் நந்தகோபரே! சமஸ்த பிராணிகளுடைய இருதயத்தில் வாசஞ்செய்கிறது நிஜமானால் எவ்வொருக்கும் சமமாகப் பிரத்தியக்ஷமாகலாமே யென்றால்! தீக்கடைக்கோலில் எப்பொழுதும் அக்கினி யிருந்தும் கடைந்தாலன்றி உதவமாட்டாது அதுபோல ஸ்ரீபகவானும் தியானஞ்செய்தாலன்றி பிரத்தியக்ஷமாகமாட்டார்

அப்படிப்பட்ட சுவாமியானவர் வேதங்களாலும் பிரமன்முதலிய தேவர்களாலும் அறியவொண்ணாத மகிமையை யுடையவராகையால், நம்முடைய பக்தர்களான ஜனங்கள் எப்படி அறிந்து கடைத்தேறப் போகின்றார்களென்று திருவுள்ளங்கொண்டு, மச்சாவதார முதல் இந்த ஸ்ரீகிருஷ்ணவதாரம் வரையில் எடுத்த அவதாரமும் காமமும், நாமமும், ரூபமும் இதுக

ளெல்லாம் லீலார்த்தமாகக் கிரகித்து, துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனுஞ் செய்தனர். அப்படிப்பட்ட ஈஸ்வரன் உம்முடைய கிரகத்தில் புத்திரராக வந்திருந்ததினாலே, மகிமையுள்ள பரமமித்திரரான ஸ்ரீகிருஷ்ணபகவானானவர் உம்மைப் பார்க்கிறதற்காகச் சீக்கிரமாக இந்தக் கோகுலத்திற்கெழுந்தருளப் போகிறார் என்று உத்தவரானவர் நந்தகோபருக்கும் யசோதாப்பிராட்டியாருக்கும் உள்ளக்கிளர்ச்சியுண்டாகும்படியாகச் சமாதானஞ் சொல்லித் தேற்றினர்.

இப்படித் தேற்றிய உத்தவரானவர் அன்றிரவைப்போக்கி, மறுநாளுதயமாவதற்குமுன்னம் பரமபாகவதோத்தமைகளான கோபகன்னிகைகளெழுந்திருந்து கைத்தீபங்கொண்டு தங்கள் கிரகங்கடோறுங் கோமயஜலங்களினாலே சுத்திசெய்து மொக்குமுதலியதுகளால் அலங்கரித்துத் தீபங்களைச் சமீபத்தில் வைத்துக்கொண்டு தயிர்கடைய, அப்போது தீபவொளியினும் பிரகாசமுள்ள நவரத்தினங்களாற் செய்த குண்டலங்களும் கைகளிலணிந்திருக்கிற கடகங்களுமசைய, தலையிற்சூடிய புஷ்பங்கள் விழ, மிகவும் பருத்திருக்கிற கொங்கைகள் குலுங்க, மார்பிலணிந்திருக்கிற முத்துச்சரங்கள் சிக்குப்பட, உத்தரீயங்கள் ஊசலாட, இரண்டு கன்னங்களிலும் சிறுமுகத்துப்போல வேர்வையுண்டாக, அரவிந்தலோசனரான ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய பரம பவித்திரமான கீர்த்தியைக் கானஞ்செய்கிற ஸ்வரமுந் தயிர்கடைகிற தொனியும் அவ்வுத்தவரானவர் கேழ்வியுற்று மனமகிழ்ச்சி கொண்டனர். அப்படிப்பட்ட சமயத்தில் சகலலோக பூச்சியர்களாகிய பிராமணர்களாலே மூன்று காலமும் ஆராதிக்கப்படுகின்ற சூரியபகவானுதயமாயினர்.

உடனே உத்தவரானவர் காலையிற்செய்யவேண்டிய நித்திய கர்மானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு, மிகவும் உயர்ந்ததாகியும் சூரியனைநிகர்த்த காந்தியுடனு மிருக்கின்ற இரதத்தின்மீது வருகின்றார். இப்படி வருகிறபோது அதைக்கண்ட சில கோபகன்னிகாமணிகள் இந்த ரதம் எவருடையதோவென்று சங்கையுற்று, அருகில் வந்தபின்பு மிகவுங் கோபத்தோடொருவரையொருவர் பார்த்து, கேளுங்கள் தோழிகளே! அக்குரூரரென்று பெயருடன்கூடின மகத்தான குரூரன் முன்னாளிவ்விடத்திற்குவந்து, நமக்குப் பிராணனாயிருந்த ஸ்ரீகிருஷ்ணபகவானை அழைத்துக்கொண்டு போனானே அவனிப்போது நமக்குப்பிராணன்போ விருக்குமல்லவாவென்று கருதி, மதுரையில் ஸ்ரீகிருஷ்ணபகவானால் சங்கரிக்கப்பட்ட கம்சனுக்கு உத்தரக்கிரியைசெய்யவும் நமது சரீர மாமிசங்களைச் சேகரித்துப் பிண்டப்பிரதானஞ் செய்யவும் வந்தவனாகத்தோற்றுகின்றது. இதைத்தவிர இவ்விடத்தில் வேறுவிதமான காரியமொன்றுமில்லை என்று சொல்லுகின்ற வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டே உத்தவரானவர் கோகுலத்திற்கு வந்தார்.

# நாற்பத்தேழாவது அத்தியாயம்.

கலி விருத்தம்.

சகல மான கோபிகா சனங்களும்
பகையவன் வந்தா னென்ப பகர்கின்றதும்
தகைமை யாகிய வுத்தவ ரென்றுதாம்
மிகு கிருஷ்ணன் மதுராபுரி மேவினன்

**சமஸ்தமான கோபிகாஜனங்களும் அக்ரூரரென்கிற மகத்தான குரூரன் வந்தானென்று கிலேசப்படுகின்றதும், பிறகு உத்தவரென்று தெரிந்து பிரளயகோபத்தினை ஸ்ரீகிருஷ்ணனை அன்னியாபதேசமாய் நிந்திக்கின்றதும், அவர்களை ஸ்ரீகிருஷ்ணஸ்வாமி அருளிச்செய்த மொழிகளால் சமாதானஞ்செய்து அவர்களிடத்தில் விடைபெற்று மதுராபுரிக்குவந்ததுஞ் சொல்லுகின்றன.**

## ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாரீர் சுபத்திரா பௌத்திரனே! இந்தப் பிரகாரம் காலையிலெழுந்திருந்து காலைக்கடனை முடித்துக்கொண்டு நீண்ட கைகளை யுடையவராய் முகத்தினில் நவரத்தின குண்டலங்கள் பிரகாசிக்கத் திவ்விய சவுந்தரியத்தோடிருக்கின்ற உத்தவரைக் கோபிகைகள் கண்டு, இவரைப் பார்த்தால் ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய சுந்தரத்தை ஒத்தவராய் விளங்குகின்றார் இந்த மகாபுருஷன் ஆரோ! எங்கு வந்தாரோ? என்று சங்கையுற்று, பின்னும் இவருடைய வேஷத்தைப்பார்த்தால் உலகமுண்ட பெருவாயரான கண்ணபிரானுடைய பாதபங்கஜ பரிசாரனாகவும் அந்தப் பகவானாலனுப்பு விக்கப்பட்ட தூதனாகவுந் தோன்றுகின்றனனென்று சகல கோபிகா சிகாமணிகள் தெரிந்துகொண்டு, யாவரும் உத்தவருடைய சமீபத்திற்குவந்து சேவித்து, அவரைச் சூழ்ந்து புன்னகை யுடன் க்ஷேமங்களை விசாரித்து, அவரை யேகாந்தத்திலழைத்துக் கொண்டுபோய் சில்வார்த்தை சொல்லுகின்றார்கள்

வாரீர் மகானுபாவரே! தேவரீர் யதுகுலோத்பவரான ஸ்ரீ கிருஷ்ண பகவானிடத்தில் அன்புகூர்ந்த பக்தரென்றும், அந்த ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய தாய் தந்தையர்களிடத்தில் மிகவும் அன்புள்ளவ ராகையால் பிதாவான நந்தகோபரையும் மாதாவான யசோதா பிராட்டியாரையும் தேற்றிச் சந்தோஷப்படுத்தவேண்டி அவராலனுப்புவிக்கப்பட்ட தூதரென்றும், நாங்கள் நன்றாய் அறிவோம் அவர்களுக்குமாத்திரம் சமாதானஞ் செய்யச்சொல்லி அனுப்பினாரேயன்றி, மற்ற எங்களை மறந்தனரல்லவா? எங்களிடத்திலந்த ஸ்வாமிக்கெவ்வளவு இன்ப மனுபவிக்க வேண்டுமோ? அவ்வளவு மனுபவித்தார். இப்போ தெங்களாலவருக்குப் பிரயோஜன மொன்று மில்லாத படியால், அவருடைய சமாசாரம் எங்களுக்கொன்றுந் தெரியப்படுத்தவில்லை. வண்டி

THE KUPPUSWAMI SASTRI

ணங்களானது புஷ்பத்தினிடத்தில் தேனுள்ளவரையிலிருந்து பானஞ்செய்து அதைவிட்டு வேறொரு புஷ்பத்தினிடத்தில் பிரவேசிக்குந் தன்மைபோல, புருஷனுந் தன் காரியமானவுடனே வேறொரு ஸ்திரீயினிடத்தில் போய் விடு வான்.

இப்படி உலகவழக்கமாதலால், இந்த ஸ்ரீ கிருஷ்ண பகவான் மாத்திரம் நூதனமான வழக்கத்தை யனுசரித்ததாயில்லை மற்ற புருஷர்களாவனார்கள் ஸ்திரீகளை வஞ்சனையாய் அநேகம் பொய்களைச் சொல்லி மோசஞ் செய்து, காரியமானவுடன் அவர்களைகளை யல்ல விட்டுவிடுவார்கள் என்று சில புண்ணியவதிகள் அந்தச் சுவாமியினுடைய சரித்திரங்களை நினைத்துக்கொண்டு, ஆனந்த பரவசர்களாய்ப் பாடியாடினார்கள் பின்னும் சிலமாதர் அந்த ஸ்ரீ கிருஷ்ணன் கோகுலத்திலசெய்த கிருத்தியங்கள் யாவையும் நினைத்துக் கொண்டு மோகத்தை யடைந்தார்கள் பின்னுஞ் சிலகாமினிகள் ஸ்ரீ கிருஷ்ணனுடைய லீலாவினோதங்களை உத்தேசித்து, உத்தவரிருக்கிறாரென்று நினைப்புக்கொள்ளாமல் நாணமும் அச்சமுமற்று அந்தரங்க வார்த்தைகளைச் சொன்னார்கள் இப்படியிருக்கையில் ஒரு கோபிகை பானவள் ஒரு வண்டைப் பார்த்து, தன்னைச் சமாதானஞ் செய்யச்சொல்லி சுவாமியினாலனுப்புவிக்கப் பட்ட தூதனைக் வெண்ணிச் சொல்லுவதுபோல "சங்கோசத்தையும் பயத்தை யும் விட்டுச் சொல்லுகின்றனள்.

வாராய் ஸ்ரீ கிருஷ்ண பகவானிடமாக விருந்து வந்த வண்டே! நீ யந்த ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்குத் தோழனென்றும், அவரா லனுப்பப்பட்டாயென் றும் எனக்கு நன்றாகத்தெரியும் நீ வஞ்சகனான ஸ்ரீகிருஷ்ண ஸ்வாமியினுடைய மார்பினில தரித்துக் கொண்டிருக்கின்ற புஷ்பமாலைகள் எனது சபத்தினிகளா கிய அந்த மதுராபுரியிலுள்ள ஸ்திரீஜனங்களின் மார்பினிலுள்ள வாசனை மிகுந்த குங்குமக்குழம்பில் அழுந்தும்படி காடாலிங்கனஞ் செய்த அந்தப் புஷ்பங்களிலிருக்கின்றதேனையே நீபோய் பானஞ்செய்து, அந்தக் குங்குமங் கள் பொருந்தி சிவந்திருக்கிற மீசைகளுடன் ரீங்காரஞ் செய்துகொண்டு வரு கிறபடியால் நீ யென்சமீபத்திற்கு வரவேண்டாம் அந்த ஸ்திரீகளிடந்தானே போய் நல்லவார்த்தை சொல்லுக அந்த ஜகத்வஞ்சகனான ஸ்ரீ கிருஷ்ணனும் அந்த ஸ்திரீகளிடத்திலே தானே இன்பமனுபவஞ் செய்யலாம்

வாராய் சிலீமுகமே! மேலும் நீங்கள் அவருக்குச் சரியான தொந்த முள்ளவர்கள். அந்தக் கபட மனதை யுடையவரது வார்த்தைகளை யென் செவியி லுரைக்கவேண்டாம் என்று சொல்லிப் பின்னும் உத்தவருக்கு நன் றாய் உறைக்கவேண்டி அந்தவண்டைப் பார்த்து, இப்படிப்பட்ட சபலசித்த ரான ஸ்ரீ கிருஷ்ணபகவானைப் பெரியபிராட்டியா ரானவள் எப்படி தவஞ் செய்து சுவாதீனப்படுத்திக் கொண்டாளோ அறிகிலேன் அந்தப் பிராட்டி யாரும் இவருடைய நயவார்த்தைகளையும் லீலைகளையும் கேள்வியுற்று அதிக மோசத்தையடைந்தவளாகவேண்டுமே. அவருடைய கபடநாடகங்க ளெங்களுக்கே

நன்றியத தெரிநதிருககிற படியால, அநதப பெரிய பிராட்டியாரைபபோல நாஙகள மோசமபோக மாட்டோம

வாராய வணடினஙகளுககரசே! சொறக முதலிய மூவுலகததிலும் வாசஞ்செயகினற ஸதிரீகளெலலாரும அநத ஸ்ரீ கிருஷணபகவானையே அடைய வேணடுமெனறு தவஞசெயகிறாாகள. பெரிய பிராட்டியாரும அநத சுவாமியி னுடைய திருவடியையே எபபொழுதும இடைவிடாமல ஸமரிககினறமை யால, நாஙகளுமவரையே அடைநதோம. அபபடியிருகக அநத ஸ்ரீ கிருஷண பகவானுககுத தீனரகூஷகனெனறும உததம சுலோகனெனறும திருநாம மிருக் கினறமையால, எமமபோலியாகளைக காபபாறறுவதும அவருககுக கடமையா யிருநதாலு நீயுமபோய எஙகளையாவரையும இரகூஷிககுமபடியாகச சொல்லுக அவரைபபோல நீயும உபேகைஷ செயதால நாஙகள செயயவேணடியதொன றுமில்லை

வாராய மதுககளையுண்ணுந தேனகளுககரசே! தாய் தநதையாகளோடு அணணனதமபி முதலியவாகளையு மறநது பரலோகததையுந துறநது தமமை கதியாக நமபிககிரீடிகக வேணடுமெனறு வநது அடைநத எஙகளை, எவனுகிலுந தயையிலலாமல விட்டு ஒழிவானோ? அபபடிபபட்ட உபகார நினைபபிலலாத ஸ்ரீ கிருஷணபகவானுககு நீ தூதனானபடியால, நீயும வெனனணடையில வர வேணடாம மேலும இநத ஸ்ரீகிருஷணஸவாமியே இராமாவதாரஞசெயதிருக் கினறகாலையில, நிரபராதியான வாலியை நிஷகாரணமாயச சஙகரிததார். அநத இராமரிடததி லாசைகொணடு அணையவநத சூறபநகியையத தயை யில் லாமல, அவளது மூககையுங கொஙகைகளையுங் கொயதுவிட்டனா வாமன ரூபியாய் மகாபலியினுடைய யாகசாலையிற சென்று, அவனிடததில மூன்றடி மண்ணிரநது, இநத அணட கடாகஙகள பிளககினறுபபோல விசுவ ரூபங கொண்டு, பூமியை ஓரடியாகவும ஆகாயததை ஓரடியாகவும அளநது, மற் றொரு அடிககு அநதபபலிச சககிரவாததியைப பாதாளததி லழிநதிருககச செயதனா.

வாராய மதுகரமே! ஆகலால அவரைப பாாககினும கொடியவரொருவ ருணடோ? அநதப பகவானே இநத ஸ்ரீகிருஷண ஸவாமியாக அவதரிததுச் சொனன வாாததைகளில இனி நமமைவிட்டினை பிரியாரெனறு தோனறும் படிசெயது, இபபோழுது எஙகளை வஞசிததது மதுரைககுபபோய அவவிடத தில பிறநது வளாநதவரைபபோல சுகமா யிருநதுவிட்டனா அபபடிபபட்ட வஞசகரான ஸ்ரீ கிருஷண பகவானுடைய சிநேகம எஙகளுககுப போதும, போதும வேடனுனவன் வனததில வேணுகானம பணணுமபோது அநதச சப் தங்களைக கேழவியுறறு அரணயததி லுளள மானக ளெலலா மோகததை அடைநது கொலலபபடுவதுபோல, இநத ஸ்ரீகிருஷண பகவானுடைய வேணு கானததிறகும் அவருடைய கரஸபரிசததிறகும விருமபி மோகததை அடைந் து, கபடமாய்ச சொலலிய வாாததைகளை நிஜமாகவெண்ணின யெஙகளை வஞ் சித்துப போய்விட்டார்.

வாராய் கருமபுள்ளே! அந்தச் சுவாமி எங்களை விரும்பாவிடினும், சகல பாபங்களையுந் தாபங்களையும் போக்கிப் பரமானந்த சுகத்தைக் கொடுக்கும் மகாபரிசுத்தமான அவருடைய திவ்விய சரித்திரங்களைக் கானஞ் செய்துக் கொண்டிருந்து காலங் கழிக்கின்றோம் அதை ஒருக்காலும் நாங்கள் விட்டொழியமாட்டோம் அவருடைய வார்த்தை நமக்கென்னத்துக்கு? வேறு வார்த்தை சொல்லுங் என்று கூறுஞ் சமயத்தில் அந்த வண்டானது அதை விட்டப்புறம்போய்ச் சுற்றிக் கொண்டு மறுபடியும் வந்து உட்கார்ந்தது அதைப்பார்த்த அவ்வனிதையானவள் தன்னுடைய விருத்தாந்தத்தை இந்த வண்டரசானது ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்கு அறிக்கை செய்யப் போனதாகப் பாவனை செய்து, ஆனந்த களிப்புடன் பின்னும் ஒரு வார்த்தை சொல்லுகின்றனள்

வாராய் எனதன்புள்ள வண்டுகளுக்கு நாயகமே! நீ எனக்குப் பிரியநாயகரான ஸ்ரீ கிருஷ்ண பகவானிடத்திற் சென்று, எங்களை அவருடன் கூட்டுறவு செய்யவிரும்பி, வெகு தூரம்போன பிரயாசையையும் பாராமல் திரும்பவும் வேகமாய் ஓடிவந்தமையால்; உனக்கு மங்கள முண்டாகக்கடவது. அந்தக் கபடசித்தரான ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய சொரூபத்தில் பெரிய பிராட்டியானவள் நன்றா யுணர்ந்தவளாகையால் ஒரு நிமிஷமேனும் அவரைப் பிரியாமல், தேவதையா யிருந்தால் தானுந் தேவதையாயும், மனிதனாக அவதரித்தால் தானுஞ் சீதை முதலிய மானிட ஸ்திரீயாகவும் மற்றகாலம் சுவாமியினுடைய திருமார்பிற்றானே வசிக்கின்றாள் அப்படிப்பட்ட மகிமைகளையுடைய ஸ்ரீ கண்ணபிரானைப் பிரிந்து எப்படி க்ஷேமத்தை யடையலாம்?

அந்தப் பரப்பிரமமான ஸ்ரீகிருஷ்ண ஸ்வாமியானவர் சாந்தீபினியிடத்தில் சகலகலைகளையு முணர்ந்து, அவருக்குக் குருதக்ஷிணையாக யுகாந்தகாலத்தில் மரணத்தை அடைந்திருந்த புத்திரனை மறுபடியும் அவருக்குக் கொண்டு வந்து கொடுத்து, இரதத்தின் மீதேறிக்கொண்டு, மதுராபுரத்திற்குவந்து, அவ்விடத்திலுள்ள பந்துஜனங்களுடன் எங்களையும் மாதாவான யசோதாப் பிராட்டியாரையும் பிதாவான நந்தகோபரையும் பிரஸ்தாபம் வந்தபோது நினைப்பாரா? இன்னமொருதரம் அந்த தாமோதரனுடைய சேவை எங்களுக்குக் கிடைக்குமா? மிகவும் வாசனை பொருந்தியும் மனோக்கியமாயிருக்கின்ற அந்தச் சுவாமியினுடைய திருமேனியை எப்போது நாங்கள் ஆலிங்கனஞ் செய்துகொள்ளுவோம்? என்று இப்படி பலவாறாகச் சொல்லி விசனப்படுகிற கோபிகைகளுடைய துக்கத்தைக்கண்டு சகிக்கமாட்டாத உத்தவரானவர், அவர்கட்குச் சந்தோஷம் வரும்படியாக அந்தக் கோபிகைகளைப் பார்த்துச் சொல்லுகின்றார்

கேளுங்கள் மகாபரிசுத்தர்களாயும் உலகபூச்சியர்களாயு மிருக்கிற மாதுசிரோமணிகளே! உங்களுடைய பாக்கியத்தை நானென்னவென்று சொல்லப் போகின்றேன்? உத்தமசுலோகனாகியும் சர்வேஸ்வரனாகியு மிருக்கின்ற

ஸ்ரீமந்நாராயணனிடத்தில் உங்களுக்கெப்போதும் பக்தியுண்டாயிருப்பதால், அந்தத் தன்மையினாலே சமஸ்த வைதிக கர்மங்களினாலும் தவப்பேற்றினாலும் அடையவொண்ணாத சதுர்வித புருஷார்த்தங்களையும் சுலபமாகக் கைக்கொண்டீர்கள். தெய்வாதீனமாய பர்த்தாவினிடத்திலும் புத்திரன் முதலியவர்களிடத்திலும் அன்பு செலுத்தாமல் அந்த ஸ்ரீ கிருஷ்ணபகவானிடத்திலேயே பக்திசெலுத்துகிற படியால், சகலமானவர்களுக்கு மிந்தப் படிக்குப் பக்தி செலுத்தவேண்டுமென்று உபதேசிப்பதுபோலிருக்கின்றன என்று சொல்லி அந்த ஸ்ரீ கிருஷ்ண பகவான் அவர்கட்குச் சொல்லச் சொல்லியதாக இதனைச் சொல்லுகின்றார்.

கேளுங்கள் கோபகன்னிகா ரத்தினங்களே! எனக்கு உங்களைவிட்டுப் பிரிந்துபோனதாகவில்லை. பஞ்ச பூதங்களும் சரீரத்தைவிட்டுப் பிரிதலில்லாமைபோல், யான் சர்வபூதங்களுக்கும் அந்தரியாமியாயிருக்கின்றவன். உங்களுடைய மனதும் என்னிடத்திலேயே லயித்திருக்கின்றமையால், உங்களுக்கு யான் தூரத்திலிருக்கவில்லை. இதனறியும் முன்னே நான் வனத்தில் வேணுகானஞ் செய்வதைக் கேட்டு நீங்களெல்லாரும் கிரகத்தை விட்டு வெளியில் வரும்போது, சில ஸ்திரீகளைப் புருஷர்கள் தாய்தந்தையர்கள் முதலாயினோர் தகைய, அதனால் வருகிறதற்குக் கூடாமல் அவர்களென்னிடத்தில் அன்பைச்செலுத்தி மரணத்தை அடைந்து, தூரத்திலிருக்கிற எனது திருவடிகளை அடைந்தார்கள். உங்கள் சமீபத்தில் யானெக்காலமிருந்தபடியால், அவர்களைப்போலுங்களுக்குப் பக்தியுண்டாகாமற் போச்சுது. இப்போ நான் தூரத்தில் வந்துவிட்டபடியால், உங்களுக்குப் பக்தி உண்டாயிற்று. இந்தப் பக்தியோடே அகத்தியம் என்னை யடைவீர்கள். கிலேசப்படாமலிருங்கோள் என்று ஸ்ரீகிருஷ்ணபகவான் அருளிச் செய்தாரென்று சொல்ல, அந்த வார்த்தைகளைக் கேள்வியுற்ற மாத்திரத்தில் மகாபரிசுத்தக் கியானமுடையவர்களாகி, களிப்புடன் உத்தவரைப் பூசித்துச் சொல்லுகின்றார்கள்.

கேளீர் எங்களன்புக்குரிய தோழனே! சுவாமியானவர் கம்சனைச் சங்கரித்துப் பந்துக்களுடைய உபத்திரவங்களை நிவர்த்தித்து, தம்முடைய சிநேகிதர்களுடன் சுகமாகவசித்து, மதுராபுரியிலுள்ள ஸ்திரீகளைத் தமது கடைக்கண் பார்வைகளினாலே கடாக்ஷித்து அவர்கள் நடுவிலிருந்தும் அந்த யமுனாதீரத்தையும் அவரிடத்தில் பக்திசெய்த மனதுடையவர்களாய் எப்பொழுதுங் கிலேசப்பட்டுக்கொண்டிருக்கின்ற எங்களையும் எங்கள் துயரத்தையும் தீர்க்கிறதற்கு இன்னமொருதரமிவ்விடத்திற்கெழுந்தருளிச்சேவைசாதிப்பாரோ? அந்த ஸ்ரீகிருஷ்ண பகவானுக்கு இந்தக் கோகுலத்தைவிட்டு வேறு இடமும், எங்களைத்தவிர வேறு ஸ்திரீகளு மில்லாதிருந்தமையால் இவ்விடத்திலேயேயிருந்தார். இப்போ உக்கிரசேனருக்குப் பட்டாபிஷேகஞ் செய்துப்போட்டு மகாராஜ கன்னிகைகளுடன் சுகித்திருக்கிறபோது, இப்போ எம்மாலவருக்கென்ன காரியமாகவேண்டும்? அவருடைய மார்பினில் பெரியபிராட்டியார்

ராகிய ஸ்ரீமகாலக்ஷ்மி வசிக்கின்றமையால், அந்த இராஜ ஸ்திரீகளாலும் அவருக்கொரு பிரயோசனமு மில்லை.

நாமும் அந்தப்பகவானை மனதில் நினையாமலிருப்போமென்றால் ? பூர்வம் அவர் யேகாந்தத்தில் திருவாய் மலர்ந்தருளியதாக ளெல்லாம் இருதயத்தை விட்டு நீங்காமலிருக்கின்றமையால், அவனை இன்னமும் பிரத்தியக்ஷமாய்ச் சேவி [illegible] விருப்ப முண்டாகின்றது வைராக்கியம் பிறக்க வில்லை [illegible] வி அந்த ஸ்ரீகிருஷ்ணபகவானைத் தம்முடைய இருதயத்தில் வாசஞ்செய்கின்ற ஸ்ரீமந்நாராயணரென்றுணர்ந்து கொண்டு, உத்தவரைச் சாஸ்திக உபசாரங்களுடன் பூசிக்கசார்கள் உத்தவரானவர் சிலநாள் பிருந்தாவனத்திலே வாசஞ்செய்து, அந்தக் கோபிகைகள் யாவருக்கும் ஸ்ரீகிருஷ்ண பகவானிடத்திலிருக்கிற பதிவிரதத்தைகளைப் பார்த்து, இந்தக் கோபிகைகள் பெரிய பிராட்டியாருடைய அம்சமாயிருக்க வேண்டுமென்று நிச்சயித்து, அவர்களை மூன்றுகாலமும் பூஜைசெய்து தண்டன் சமர்ப்பித்துக்கொண்டு வந்தனர்.

கேளீர் பரீக்ஷித்து மகாராஜனே! அந்த உத்தவரானவர் உத்தமமான க்ஷத்திரஜாதியிற் பிறந்த பகவத்பக்தி உள்ளவராயிருந்தாலும், இழிகுலத்தோர்களான அந்தக் கோபிகைகளுக்கு ஸ்ரீகிருஷ்ண பகவானிடத்தில் நிரந்தரமான பக்தியிருப்பதாக தவிர அந்தப் பகவத் சம்பந்தமுமிருந்து பிரகாசிப்பதினால் அவர்களே ஜாதியிற் சிறந்தவர்களென்று கருதி, பக்திமிகுந்துள்ள இந்த ஸ்திரீகளாலே மோக்ஷசாம்ராஜ்ய மடையக்கூடுமென்று அவர்களைப் பணிந்து பூசித்து, பெரியபிராட்டியாருக்கும் அரிதான விசித்திரமா யிருக்கின்ற இராசக்கிரீடையால் இந்தக் கோபஸ்திரீகளோடே ஸ்ரீகிருஷ்ணன் அனேகவருஷங்களை ஒரு இராத்திரியாக அநுபவிக்கும்படி ஆருக்குக்கிடைத்ததென்று நன்குயுணர்ந்து, அந்த உத்தவர் அவர்களைப் பிரார்த்திக்கத் தொடங்கினார்.

வாரீர் பரீக்ஷித்துமகாராஜனே! இப்படி உத்தவரானவர் கோபிகாஸ்திரீ ஜனங்கள் தங்கள் தாய்தந்தையர்கள் மாமன் மைத்துனன் இவர்கள் முதலியவர்களையும் விட்டு, வியபசாரிகளென்று யாவருஞ் சொல்லுவார்களென்கிற கூச்சமுமற்று, ஒரே நினைவாய் ஸ்ரீகிருஷ்ண பகவானிடத்தில் முக்கியமாய் செலுத்துகின்ற அன்பைக் கண்டார் பின்பு அவர்களுடைய சமீபத்தில் நேராகச்சென்று தண்டனிட்டுத் தன்னை ஆட்கொண்டருளும்படி பிரார்த்தித்தால், அவர்கள் நேராக ஒப்புக் கொள்ளவார்களோ அவர்கள் சஞ்சரிக்கின்ற வனத்தில் செடிகொடிகளா யாகிலும் எனக்கு ஜன்மமவந்து, அவர்களுடைய பாதஸ்பரிசங் கிடைத்தால் சாசுவதமான பரமபதத்தை யடையலாமே என்று அடிக்கடிசேவித்து, பெரிய பிராட்டியாராலும் சனகாதி யோகிகளாலும் சர்வகாலமும் பூசிக்கின்ற அந்த ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய திருவடிகளை இராஜகோஷ்டியில் யாதொருகோபிகைகள் மார்பினில் வைத்துக்

கொண்டு மனதிலிருந்த விரகதாபத்தை யொழியச்செய்து கொண்டார்களோ? அப்படிப்பட்ட கோபிகாஜனங்களுடைய பாதங்களைச் சதாகாலமுந் திரிகரணசுத்தியாய்ச் சேவிக்கிறேன்.

மேலும் அந்தக் கோபிகைகள் பகவானுடைய சரித்திரத்தை நிரந்தரமாய்க் கானஞ்செய்வதை இந்த ஜனங்கள் கேள்வியுற்றால், அவர்களுடைய பாபத்தையும் போக்கி மோக்ஷத்தையு மடையும்படியாய்ச் செய்யவல்லதன்றோ? என்று ஸ்துதிசெய்தவராய் அந்தக் கோபிகைகளை அடிக்கடி சேவித்து, அவர்களனுமதி பெற்று, நந்தகோபர் யசோதாப் பிராட்டியாரையும் பணிந்து, அவர்களிடத்திலும் இதரகோபாலர்களிடத்திலும் அனுமதி பெற்றுக்கொண்டு சகலாலங்காரத்துடனிருக்கின்ற தமது இரதத்தின்மீது ஆரோகணித்து, நந்தகோபர் முதலியவர்களால் கொடுக்கப்பட்ட வெகுமானங்களைப் பெற்றுக்கொண்டு, அவர்களைக் கோகுலத்திற்குத் திருப்பிவிட்டு, தாம் மதுரைக்கு வந்து, ஸ்ரீகண்ணபிரானுடைய கிரகத்தின் சமீபத்தை யடைந்து, இரதத்தைவிட்டுக் கீழேயிறங்கி, சுவாமியைச் சாஷ்டாங்கமாகச் சேவித்து, கோபாலர்களுக்குங் கோபிகைகளுக்குந் தாம் சமாதானஞ் சொன்னதும் அவர்கள் ஸ்ரீகிருஷ்ணபகவானிடத்தில் செலுத்துகின்ற பக்தியின் சிறப்பையுஞ் சொல்லி, அப்பால் வசுதேவர் பலராமர் உக்கிரசேனர் இவர்கட்குத் தண்டனிட்டு அவர்களுடனுஞ் சொல்லி, அந்தக்கோபாலர்கள் கொடுத்த வெகுமதிகளை இராஜாவான உக்கிரசேனருக்குக் கொடுத்துவிட்டு, பின்பவர்களிடத்தில் விடைபெற்றுக்கொண்டு தமது கிரகத்திற்கேகினர்.

# நாற்பத்தெட்டாவது அத்தியாயம்.

கலிவிருத்தம்

ஆண்டவனந்த கூனிகிருகஞ்செல
வேண்டியவுப சாரமியற்றினள்
பாண்டவர்கள் தன் க்ஷேமம் பகர்ந்திட
மீண்டு மக்ரூரரை மேவிவிடுத்தனர்

ஸ்ரீகிருஷ்ண பகவானானவர் தமக்கு முன்னுறை சந்தனங்கொடுத்த கூனியின் வீட்டிற்கு உத்தவருடன்சென்று அவளால் பூஜிக்கப்பட்டதும், பலராமருடன் அக்ரூரருடைய கிரகத்திற்குப்போய் அவராலும் பூஜிக்கப்பட்டு அந்த அக்ரூரரைப் பாண்டவர்களுடைய க்ஷேமமறிந்துவர அஸ்தினாபுரத்திற்கு அனுப்பினதுஞ் சொல்லுகின்றன.

கேளீர் பூபதியே! சர்வஜ்ஞியரான ஸ்ரீ கிருஷ்ண பகவானானவர் தம்மைப் பிரார்த்திக்கின்ற அவர்களுடைய இஷ்டத்தைப் பூர்த்திசெய்கின்ற தயாளுவாகையால் தமக்கு முன்னுற சந்தனங்கொடுத்த கூனியினுடைய மனோபீஷ்டத்தை நிறைவேற்றுவதற்காக உத்தவரையுங்கூட அழைத்துக்கொண்டு, மகா பரிசுத்தமாயும், இந்திர புவனம்போல மிகவும் அலங்காரமாயும், சுவர்களெல்லாம் நாநாவித சித்திரங்களெழுதிச் சந்தனுதி தைலங்களால் தீபங்களமைத்து நான்குபக்கமும் புஷ்பங்களினால் அலங்கரித்து மிகவும் ஆச்சரிய கரமான விசித்திர மாகவுமுள்ள அந்த கூனியினுடைய கிரகத்திற் கெழுந்தருளினார். அக்கால் அந்த மாதரையென்று பெயரையுடைய கூனிகண்டு மிகவுங் களிப்படைந்து, ஆனந்த பரவசமாய் தன் தோழிகளோடேகூட ஓடிவந்து, அந்த ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய திருவடிகளை அர்க்கிய பாத்திய முதலிய வைகளால் பூசித்து, ஆசனத்தி லெழுந்தருளப் பண்ணி, சாஷ்டாங்கமாகச் சேவித்து, பிறகு உத்தவரையும் பூசித்து ஆசனம் சமர்ப்பிக்க, அவரும் அந்த ஆசனத்தைக் கையினுற்றொட்டுக்கொண்டு பூமியில் உட்கார்ந்தனர்.

பிறகு ஸ்ரீ கிருஷ்ண பகவானானவர் மிகவுங் களிப்புடனிருக்கிற கூனியினால் அந்தப்புரத்திற் கெழுந்தருள வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்யப் பெற்று, உடனே அருளிக்கொண்டு கிரகத்திற்குள்ளே போயினர். அங்கே பவழங்களினால் கால்களமைத்து நவரத்தினங்களை விழைக்கப்பட்ட கட்டிலுக்கு நான்கு பக்கங்களிலும் முத்து சரங்களினால் ஜாலர்கள் தொங்கவிட்டு நாநாவிதமான பட்டுகளால் மேல்கட்டுகள் கட்டி உத்தமமான மகமல் மெத்தைத் திண்டு தலைகாணிகளை யிட்டிருக்கின்ற அக்கட்டிலின்மீது அந்தக் கூனியானவள் ஸ்ரீ கிருஷ்ண சுவாமியை எழுந்தருளப் பண்ணி, மங்கள ஸ்நானஞ் செய்து, நறுமலர் முதலியவற்றால் கூந்தலைத்திரித்தி, நெற்றியிற் றிலகமிட்டு, திவ்ய வஸ்திரங்களையும் நவரத்தின வாபரணங்களையும் அணிந்து கொண்டு, காதிற் குண்டலங்களசைய அன்னம்போன்ற நடையினையுடையவளாகி, புன்னகையோடு நாண முடையவளாய் அங்கவஸ்திரத்தால் சரீரத்தை மறைத்துக்கொண்டு, மிகவும் வணக்கத்துடன் வருகின்றாள்.

இப்படி வருகின்றவளை சுவாமி கடாக்ஷித்து, இவளுக்கு நாம் நூதனமானபடியால் வெட்கப்படுகிறாளென்று தெரிந்துகொண்டு, கங்கண முதலிய சகல ஹஸ்தாபரணங்களைக் கைகளி லணிந்துகொண் டிருக்கின்ற அவளுடைய கையைப்பற்றித் தம்முடைய பக்கத்தில் உட்காரவைத்துக்கொண்டு, அவளுக்குத் தம்மிடத்திலுள்ள கூச்சந் தீரும்படியாய் சிலவார்த்தை களைச்சொன்னார். அதன்பின்பு அவள் கூச்சம் நீங்கி, அந்த கண்ணபிரானைத் தன திரண்டு கைகளினால் ஆலிங்கனஞ் செய்துகொண்டு, வெகுநாளா யபேக்ஷித்திருந்த இஷ்டத்தை இராத்திரிமுழுதும் அந்தப் பகவானுடன் கிரீடித்துத் திருப்தியடைந்து, மறுநாள் ஸ்ரீ கிருஷ்ண பகவானைப்பார்த்து ஒருவார்த்தை சொல்லுகின்றனள். வாரீர் சுவாமி! தேவரீர் அடியேனுடைய குடிசையிற் சிறிது நாளிருந்து அடியேனுடைய இஷ்டத்தை இன்னமும் பூர்த்தி செய்யவேண்டு

பிரமம நிஷடாகளிறசிறநத நாரத மகாமுனியானவா துவாரகைககு எழுநத ருளினா.

அவரை ஸ்ரீ பகவான் சததியபாமை சமேதராயக கிரமபபடி பூஜிதது ஆசனததி லெழுநதருளப்பணணி, தாம சததியபாமைககுப பாரிஜாத விருக்ஷததைத தருவிககிறேமெனறு சொலலியிருநத பிரதிககினையை நாரதருககுச சொலலி, நீா தேவராஜாவி னிடததிற சென்று பாரிஜாத விருக்ஷததைச சிலநாளைககுப பூமியிலிருககுமபடி அனுபபிவைகக வேணடு மெனறு யான் சொனனதாகச சொலலி அனுபப வேணடு மெனறு கூறினா. இபபடி ஸ்ரீ கிருஷண பகவானுடைய வாாததைகளைக கேழவியுறற ஸ்ரீ நாரதா ஒரு வாாததை அருளிச செயகினறனா கேளீா சுவாமி பரநதாமா! தேவேநதிரன அநதப பாரிஜாத விருக்ஷததி னிடததில அனபுளளவனாய உருததிரனை வெகு வாயப பிராாததிதது, அவருடைய உததியானவன ததில நின்று தேவலோகத திற கொணடுபோய வைததிருககினறனன அதனிடததில இநதிரனும இநதிராணியும மெதத அனபுளளவாகளாக யிருபபதினால, அவாகளொருககாலும அதைபபூலோகததிறகு அனுபப மாடடாாகளெனறு தோனறுகினறது

எனறு கூறின நாரதருடைய வாாததையைக கேளவியுறற பகவானனவா, நீாபோய யானசொனனதாயச சொலலும, அவன அனுபபா விடடால யெனது கௌமோதகி யெனகிறகதையால அவனுடைய மாாபைப பிளநது அநத விருக்ஷததை அபகரிபபேன எனறு சொனன ஸ்ரீ கிருஷண சுவாமியினுடைய வாாததையைககேடட நாரதரானவா அபபடியே தேவ லோகத திறகுச சென்று, இநதிரனைககணடு அவனால பூஜிககபபடடு, ஆசனம சமறபிகக அதினிடமா யிருநது இநதிரனைப பாாதது, ஸ்ரீ கிருஷணபகவான உனனைபபாரிஜாத விருக்ஷததைத துவாரகாபுரததிற கனுபபச சொனனாரெனறா. அதுகேடட தேவேநதிரன பரிகாசமாய மானிடன பாரிஜாத தருவை விரும்பினால கிடைககுமா? அதைப பூலோகததிறகுததான அனுபபககககூமா? அவா தான சொனனாலும நீரும கினைவுமறநது சொலலலாமா? எனறு கூறின தேவேநதிரனைபபாாதது நாரதா திருமபவுஞ சொலலுகினறாா

ஸ்ரீ கிருஷண பகவானுடைய ஆககினையினபடி பாரிஜாத தருவை அனுபபினலாசசுது இலலாவிடடால தமது கதையால உனது மாாபைபபிளநது பாரிஜாததருவைக கொணடு போகிறதாக உனனுடன சொலலச சொனனாா. எனறு சொலலவும அதைகேடட தேவேநதிரன கடுஞசின மடைநது நாரதரை நோககி, அநத ஸ்ரீகிருஷண பகவான யெனது மாாபைப பிளநதாலனறி பாரிஜாத தரு அவருககுக கிடட மாடடாதெனறு கூறினன அதுகேடட நாரதா துவாரகைககுச சென்று, ஸ்ரீ கிருஷண பகவானுடன தேவேநதிரன கூறினவணண முரைததனா அபபோது ஸ்ரீ கிருஷண பகவானனவா தமது வாகனமான கருடாழவானை நினைததருளினா கருடனும அதிகவேகமாக ஓடி வநது ஸ்ரீ கிருஷண சுவாமியைப பிரதக்ஷணஞ செயது, சாஷடாஙகமாகச சேவிதது, கைகட்டி வாயபொததிககொண டெதிரே நினறா.

அப்போ சுவாமியானவர் ஸ்ரீ ருக்குமணி குமாரனுன பிரத்தியுமனனையும் சாத்தகியையும் கருடன மீதேற்றிக்கொண்டு, கருடாரூடராய் துவாரகையில நினறும பிரயாணபபட்டு சொாக்கத்திற்குச சென்று பாரிஜாததருவை வேரு டன பிடுங்கிக்கொண்டு துவாரகைக்கெழுநதருளினா அப்போது அதைக் காவலாளிகள கணடு தேவேநதிரனுக்கு குறைகக, அதுகேட்ட இநதிரன வச்சி ராயுதபாணியாய ஐராவதத்தின மீதேறிக்கொண்டு, தனது புத்திரனுன ஜயந்தனையும, சினேகிதனுன பிரவரனென்கிற பிராமமணனையு மழைத்துக்கொண்டு, ஸ்ரீ கிருஷணசுவாமியுட னெதிாததது யுததஞ்செயது, அவராலடிக்கப்பட்டு பூமியிலொரு மலையினமீது விழுநதனன. அப்பால பிரத்தியுமனன ஜயநதனை யும, சாத்தகி பிரவரனென்கிற பிராமமணனையும ஜயித்தாாகள

பினபு மறுநாளுதயத்தில யதாபபிரகாரம இநதிரனும ஸ்ரீகிருஷணபகவா னும அகோரமான யுததஞ்செயய ஆரமபித்தாாகள அநதச சமயத்தில அவ விருவாகளுக்கும தாய தநதையாகளான காசியபபிரமமாவும அதிதி தேவியும் வநதாாகள அவாகளைககணட இநதிரனும உபேநதிரனுன ஸ்ரீகிருஷணபகவா னும யுததத்தை நிறுததி, வாகனத்தில நினறுங கீழேகுதிதது, ஆயுதங்களைக் கீழவைதது, அவாகளிருவரையும சாஷடாங்கமாகத தணடன சமாபபிதது, அஞசலி கூபபிக்கொணடு, அவாகளைபபாாதது நீஙகள யாது காரணத்திற காக இவவிடத்திற கெழுநதருளினீாகள? அதைச சொலலவேணடுமென்று வினவினாாகள. இபபடி வினவுகின்ற ஸ்ரீ கிருஷண பகவானையும இநதிரனை யும அககாசியபப பிரமமாவும அதிதி தேவியும பாாதது, நீஙகள யுததஞ் செயவதை வேணடாமென்று நிறுததுவதறகாக இவவிடத்திறகு வநதோ மென்றாாகள அதறகு ஸ்ரீ கிருஷணசுவாமி அருளிச செயகின்றனா

கேளீா பிதாவான காசியபரே! முனபு யான சததியபாமை சமேதனாய் இநதத தேவேநதிரனுடைய சபைக்குப போயிருநதேன அப்போ இநதிரா ணியானவள பாரிஜாத புஷபத்தைக் கொடாமல அவமதிததனள அதுகிமித் தங்கிலேசததை அடைநத சததியபாமைக்குப பாரிஜாததருவைக் கொணடு வநது தருகிறேமென்று பிரதிக்கினை செயதிருநதேன, அதை நாரதாமூலமா யிநதத தேவேநதிரனுக்குப பாரிஜாததருவைக் கொஞசனுளைக்குப பூமியிலி ருக்குமபடி அனுபப வேணடுமென்று தெரிவிததேன அதறகு யிவன பரிகா சஞ்செய தனுபபினுன அதுகேட்ட நான அநதப பாரிஜாததருவைக் கொணடுபோக வேணடி வநதேனேயன்றி, இநதிரனுடன யுததஞ்செயய வநதவனலல என்று கூறுகின்ற ஸ்ரீகணணபிரானுடைய வாாததைகளைக் கேள வியுறற காசியபரானவா தேவேநதிரனைப பாாததுச சொலலுகின்றாா.

வாராய மகேநதிரா! உனது தமபியான ஸ்ரீகிருஷணபகவானுடைய கருத் தினபடி பாரிஜாத தருவை அவரிடமாயக கொடுததுவிடு அவரெதுவரையில பூமியில நிறுததிக்கொளளுகிறாரோ? அதுவரையில நீ அதைவிருமபாமல் இருக்கவேணடியது அவா சாக்ஷாத ஸ்ரீமநநாராயண னெனபதைச சாப

மித்தத்தால் உனக்குத்தெரியாமற்போய்ச்செய்தாய். அவர் சகல உலகங்களையும் இரக்ஷிக்கவேண்டி மானிடரூபியாய் அவதரித்திருக்கின்றார். அவரோடுனக்கொருநாளும் விரோதஞ் செய்துகொள்ளக் கூடாது. இப்போ அவரோடு நீ விரோதஞ் செய்துகொண்டபடியால், அவரைப்பணிந்து அபராதக்ஷாபணஞ் செய்துகொள்ளுக என்றுகூறி ஸ்ரீகிருஷ்ணபகவானைப் பார்த்து, ஓ ஸ்ரீ கிருஷ்ணா! இது சொர்க்கலோகந்தவிர இதரலோகங்களுக்கரிதான பாரிஜாதமாதலால், கொடுக்கக்கூடாதென்று தெரியாமற் சொன்னாலும் அவனைச் சமாதானப்படுத்தி வாங்கிக்கொள்ள வேண்டியதாயிருக்க இப்படி யுத்தஞ் செய்வது உன்னைப்போலொத்தவர்களுக்கு தர்மமல்லவென்று கூறினர்.

அந்தச்சமயத்தில் இந்திரனானவன் நவரத்தினமிழைத்த தனது கிரீடத்தினால் ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய திருவடிகளை ஆலஞ் சுற்றுவதுபோல அனேகதண்டம் சமர்ப்பித்து, சாபத்தினால் கியானமில்லாமலென்ன அபராதஞ் செய்தபோதிலும் க்ஷமித்து இரக்ஷிக்கவேண்டுமென்று அனேகவிதமாகப் பிரார்த்தித்து பாரிஜாதவிருக்ஷத்தை சுவாமிக்குக்கொடுத்து விட்டு, அவரிடத்தில் அனுமதிபெற்று, காசியபப்பிரஜாபதியையும் அதிதிதேவியையுங் கூட்டவழைத்துக்கொண்டு சொர்க்கத்திற்குச் சென்றனன். இந்தப் பாரிஜாதாபகரணத்தை அரிவம்சத்தில் விசதமாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றது. பிறகு ஸ்ரீகிருஷ்ணபகவான் துவாரகாபுரத்திற் கெழுந்தருளி, வசுதேவர் தேவகி பலராமர் முதலிய பெரியோர்களைப் பணிந்து, சத்தியபாமையினுடைய கிரகத்திற்குச் சென்று, அவளது தோட்டத்தி லந்தப்பாரிஜாத தருவை நாட்டி, மிகவுஞ் சந்தோஷத்துடன் வாசஞ்செய்துகொண் டிருந்தனர். அப்பாலந்த பாரிஜாத தருவுஞ் சிலநாளில் காற்றினால் அலைந்து, ஸ்ரீருக்குமணியினது கிரகத்தின் பக்கமாகச் சாய்ந்து புஷ்பம் ஸ்ரீருக்குமணி தேவியதும் விருக்ஷம் சத்தியபாமையதுமாகி இருந்தன.

இப்படி யிருக்கையில் ஸ்ரீகிருஷ்ணபகவானானவர் நரகாசுரனுடைய நகரத்திலிருந்து கொண்டுவந்த பதினாறாயிரத்து அறுநூறு இராஜ கன்னிகைகளைத் தனித்தனி வீடுகளில்வைத்து வைத்து, நல்ல முகூர்த்தத்தில் ஒவ்வொரு மடந்தைக்கு ஒவ்வொரு உருவமாகத் தாமிருந்து, அவ்வண்ணமே தாய்தந்தைகள் பந்துக்கள் முதலிய யாவரும் அந்தந்தக் கிரகங்கடோறு மிருக்கும்படியாயும் அந்தமாதர்கள் தம்மிடம் கல்லியாணத்திற் கெல்லோரும் வந்திருக்கின்றார்களே யன்றி மற்றவிடங்களுக்குப் போகவில்லையென்று நினைக்கும்படியாயும் அமைத்து, அவர்களைச் சாஸ்திரவிதியின்படி மணஞ் செய்து சந்துஷ்டியாயிருந்தனர். பிரமன் முதலியவர்களா லறியக்கூடாத பிரபாவமுடைய ஸ்ரீமந்நாராயணனை அந்த மடந்தையர்கள் யாவரும் புருஷனாகவடைந்து, அவருடைய திருமுகமண்டல சேவையையும் புன்னகையோடு தம்மைக் கருதுகிறாயப் பார்க்கின்ற பார்வையையும் பார்த்து அவரோடு பேசுவதிலும் ஆலிங்கனஞ் செய்வதிலும் கொஞ்சம் நாணமுடையவர்களாகி, அந்தச் சுவாமியின் பணிவிடைகளில் ஜாக்கிரதையா யவருக்கு ஆசனமும

திருவடிவிளக்கத் தீர்த்தமும் அறுசுவைமுதலிய உணவும் தாம்பூலமும் சமர்ப்பித்துத் திருவடிகளை வருடுகிறதும் திருவாலவட்டம் சேவிக்கிறதும் சந்தனம் சமர்ப்பிக்கிறதும் புஷ்பம்சாத்துகிறதும் தலைப்பயிர்களை நன்றாய்க்கோதித் திருமஞ்சனஞ் செய்விக்கின்றது முதலிய பணிவிடைகளைச் செய்துகொண்டு, அவரோடு சதாகாலமும் சுகித்திருந்தனர்கள்.

# அறுபதாவது அத்தியாயம்.

கலி விருத்தம்

திங்கள் போன்ற உருக்குமணி தேவியை
பங்கமான பரிகாச வார்த்தையால்
எங்கள் நாதன் னியம்பிடக் கோபித்த
மங்கை தன்னைச் சமாதான மாக்கினார்.

ஸ்ரீகண்ணபிரானவர் ஸ்ரீருக்குமணி தேவியைப் பரிகாசவார்த்தையால் கோபமுறும்படி செய்ததும், அதினால் கிலேசத்தை அடைந்த உருக்குமணி தேவியை யேகாந்தத்தில் சுவாமியானவர் சமாதானஞ் செய்ததும், அப்பால் ஸ்ரீருக்குமணி தேவியானவள் ஸ்ரீகிருஷ்ணபிரானுடைய இரகசியமாயிருக்கின்ற பிரபாவங்களை வருணிப்பதுஞ் சொல்லப்படுகின்றன.

கேளீர் புவனேசனான பரிக்ஷித்துமகாராஜனே! அந்தத் துவாரகாபுரத்தில் மிகவுமுயர்ந்து, சொர்க்கலோகம்போல மகா அழகுபொருந்திய ஸ்ரீருக்குமணி தேவியினுடைய கிரகத்தில் சொர்ணத்தால் சுவர்வைத்து மகா அற்புதமாய் நிருமித்ததும், பணிநீர்தெளித்து அகில சாம்பிராணித்தூபம்போட்டு நந்தவனத்திலுள்ள பாரிஜாதமுதலிய நறுமலர் வாசனையுடன் தென்றற்காற்று வீச, சந்திரகாந்திகள் சாளரத்தினாலவர, கிளிகள் சுவாமியினுடைய பிரதாபவரிசைகளை மனோகரமாய்ச் சப்திக்க, இப்படி அதிகவினோதமா யிருக்கின்ற சபாமண்டபத்தில் சொர்ணமயமாயும் நவரத்தினமயமாயு மிருக்கின்ற கட்டிலுக்குச் சந்திரமண்டலம்போன்ற மேற்கட்டுகள் கட்டி நான்குபக்கத்திலும் முத்துச்சரங்களைத் தொங்கவிட்டு முகமலின்றச் செய்திருக்கின்ற பஞ்சணையின் மீது வீற்றிருக்கின்ற சகலலோகேசுவரரான ஸ்ரீகிருஷ்ணபகவானுக்கு மின்னற்கொடிபோன்ற இடையினையுடைய அந்த சாக்ஷாத்மகாலக்ஷ்மியான ஸ்ரீருக்குமணி தேவியானவள் பணிவிடைசெய்து வருகின்றாள்.

இப்படிச் செய்து வருகிறநாளிலொருநாள் அந்த ஸ்ரீருக்குமணி தேவியானவள் தனது காதினில் சூரியன் போன்ற ஒளியினையுடைய இரத்தின குண்டலங்களசைய, நவரத்தினத் தோள்வளைகள் விளங்க, மார்பினில் நக்ஷத்திரமண்

டமைபோல முத்துச்சரங்கள் பிரகாசிக்க, கால்களில் சிலம்பு, தண்டை முதலிய பாதாசரங்கள் ஒலிக்க, மெய்யினில் சந்தியாகால செவ்வானத்திற்கு நிகாத்த வஸ்திரந்துலங்க, அதன்மீது நவரத்தின ஒட்டியாணமின்ன, பிராணிகளுடைய தாபத்தைப் போக்கடிக்கின்ற சந்திரமண்டலம் போன்ற முகத்தினிற கஸ்தூரிதிலகம் விளங்க, கரங்களில் பூண்டிருக்கும் நவரத்தின கங்கணங்கள் கலகலவென்று ஒலிக்க, இவ்வளவு வைபவத்துடன் அனேக ஊழியப்பெண்கள் சூழ்ந்திருக்கத் தானே சுவாமிக்குக் கைங்கரியஞ்செய்ய வேண்டுமென்று விரும்பி, நவரத்தினமிழைத்த சாமரத்தைப் பரபரப்புடன் சேவிக்கின்றாள் இப்படி சேவிக்கிறபோது கொண்டை தளர்ந்து புஷ்பங்கள் விழ, முகத்தினிற சிறு முத்துபோலவேர்க்க, முன்னுச்சிமயிர்கள் நெற்றியில்விழ, அதைத் தன்னுடைய இடதுகையினு லொதுக்கிக்கொண்டு தாமே கதியென்று ஒரே மனதாய் நம்பியிருக்கிற ஸ்ரீருக்குமணிதேவியைப்பார்த்து ஸ்ரீபகவானுனவர் புன்னகையுடன் ஒருவார்த்தை அருளிச்செய்கின்றார்

கேளாய் மகாராஜாவினுடைய புத்திரியான உருக்குமணியே! நீயிப்படிப்பட்ட அயோக்கியமான காரியஞ்செய்வதேன? உன்னைப்போல வைத்தியக்காரிகளெனக்கு காணகிலேன குபேரசம்பத்துக்கு கொப்பான ஐஸ்வரியமுடையவர்களாயும் மகாகுலத்திற பிறந்தவர்களாயும் சூரர்களாயும் ரூபவான்களாயும் உதாரிகளாயு மிருக்கின்ற சிசுபாலன்முதலிய அரசர்கள் உன்னை விவாகஞ்செய்ய வனுவிலவர, அவ்வண்ணமே உனது தாய்தந்தை அண்ணன் முதலிய பந்துக்கள் சிசுபாலனுக்கே நிச்சயித்திருக்க, அதற்கு விரோதமாய் அவ்வரசர்களுக்குச் சமானனுகாதவனுயும், சகல வரசர்களுக்கும் பயந்து சமுத்திரத்தை அடைந்திருக்கின்றவனுயும், ஒருவரிடத்திலும் சம்பந்தமில்லாதவனுயும், பலவான்களுக்கு விரோதியாயும், ஒருவாநடத்தையும் அனுசரியாதவனுயும், சிம்மாசன மில்லாதவனுயும், குணஹீனனுயும், தரித்திரனுயும், தரித்திரர்களால் பூஜிக்கப்பட்டவனுயும், தனவான்களால் பூஜிக்கப்படாதவனுயும், தரித்திரர்களைப் பூஜிக்கிறவனுயும், உனக்குச் சமானனுகாதவனுயும், பிச்சைக்காறர்களால் துதிக்கப்படுகிறவனுயு மிருக்கின்ற வென்னையேன் விவாகஞ் செய்துகொண்டாய்?

யான் சிசுபாலன் முதலியவர்களுடைய காவத்தைப் பங்கஞ்செய்வதற்காக உன்னைக் கொண்டுவந்தேனேயன்றி, விருப்பத்தினலல்ல மடந்தையாகளுக்கு விருப்பமில்லாத கணவனிடத்தில் வாசஞ்செய்வதிலு மரணமேயோக்கியம். ஆதலாலிப்போது உனதிஷ்டத்தின்படி யெங்கேயாவதுசென்று சவுக்கியமடைவதைப்பார் என்று ஸ்ரீகிருஷ்ணபகவானுனவர் நாராசங் காதிற சொரிகின்றபோ லருளிச்செய்த வார்த்தைகளைக்கேட்ட உருக்குமணி தேவியானவள் மகத்தான துயரத்துடன் செந்தாமரை இதழ்போன்ற தனதுகால் விரலால் பூமியைக்கீறிக்கொண்டு, பரத்துவாஜபட்சிக்கு நிகாத்த கண்களிலிருக்கின்ற மைகரைந்து சொறனகலசம் போன்ற கொங்கைகளை நனைத்து நம்மையிப்படி சொல்லலாமாவென்கிற சோகமாகிற சமுத்திரத்தில் மூழ்கினவளாகி

மூறசித்து, கையிலிருந்த சாமரமும விசிரியும நழுவத துயரபபடுகிருள இபபடி துயரபபடுகிற ஸ்ரீ ருககுமணி தேவியினுடைய சோகததை ஸ்ரீ கிருஷ்ணமூாததி பாாதது, யாம பரிகாசமாயச சொனனதை நிஜமாக வெணணிக கொணடாளெனறு அவளுடைய கோரமைககுச சகிகக மாடடாதவராகி, பரபரபபுடன சபபிர மஞசததிலிருநது கிழே குதிதது, சீககிரமததில தேறறவேணடு மெனறு நாலுதிருககைகளை வாயநதவராகி, ஒரு திருககையினுற றாககியும, ஒரு திருககையினுல ஆலிஙகனஞ செயது கொணடு, ஒரு திருககையினுல கூநதலைச சீாதிருததியும, ஒரு திருககையி னுல உடமபில படிநத தூளைததுடைததும, இபபடி பலவகைபபடட உப சாரததை அதி சீககிரமததிறசெயது மூறசை தெளிவிதது, மடியினில வைதது கொணடு மிகுநத ஆதரவுடன ஒரு வாாததை அருளிசசெயகினருா

கேளாய யெனதனபுளள விதறபராஜ கனனிகையே! நீ யெனனிடததில சமபூாணமான பததியுளளவளெனறு யான நனரு யுணாநதிருநதும, உன னைப பரிகாசஞசெயதால அதறகென்ன உதாரணஞ சொலலுகிறையோ கேளுபபோமெனறு சமசாரிகளுககுரிய வழககததினபடி சொனனதே அனறி யதாாததமாகச சொலலவிலலை அதறகாக யெனமேறில கோபிகக வேண டாம எனறு சொலலுகிற கணணபிரானுடைய வாாததையைககேளவியுறற உருககுமணிதேவியானவள இனி நாமமை நிவாததி செயயமாடடா ரெனகிற தைரியததினுலே, முனபு ஸ்ரீ கிருஷ்ணபிரானனவா தமமை இழிவாயசசொல லிககொணட வாாததைகளைப பகவுதகுணமாகச சொலலலுறருள.

சேளீா தீனதயாளுவான சுவாமி! தேவரீா அடியேனை நோககிச சிசுபா லன முதலிய அரசாகளுககுச சமானஞகாத யெனனையேன விவாகஞசெயது கொணடா யெனறு அருளிசசெயதீரே அதறகு உதாரணஞ சொலலு கிறேன கிருபையாயக கேடடருளவேணடும எனறு கூறிசசொலல ஆரம பிததனள

வாரீா பகவானே! பிரமனமுதலிய தேவாகள யேவறபணிசெயயக கோ டானுகோடி அணடஙகளைச சிருஷ்டிக்கிற படைததிருககினற தேவரீா, முதற காரணததிறகாக இலலற வாழககையாகிற சமசாரததைப பரம சுக மெனறு நினைதது மோசம போகிறவாகளையும, கழுதைபோல சுமையெடுததும, செக கிறபூண டிருககினற யெருதுபோலச சுழனறும, நாயபோல அவமானபபட டும, சேவகனபோல யேவலசெயதும, தோலகளாலும, மயிாகளாலும, நகஙக ளாலும, எலுமபுகளாலும, புழுககளாலும, மல மூததிரஙகளாலும, வாத பிதத சேததுமஙகளாலும நிறைநது, ஜீவனேடு கூடின சவமபோல திரிகிற ரெணடுகால மாடுகளான அவவரசருககுச சரியாவீரோ? அபபடிபபடட அரசாகளைத தேவரீருடைய கடாக்ஷததிறகுப புறமபானவாகள அடைவாா களே அனறி, தேவரீருடைய திருவடிகளில இடைவிடாமல பகதிசெலுதது கிற அடியேன அடைவேன்?

இராஜாக்களுக்குப் பயந்து சமுத்திரத்தை அடைந்தவனென்றீர். சாத்துவிகமுதலிய முக்குணங்களுக்கும் மனது முதலிய பஞ்சேந்திரியங்களுக்கும் மாத்ராஸ்தானமான்ற இராஜாக்களுக்கு எட்டாத அகாதமாய், ஒருவராலும் அளவிடக்கூடாத ஆழமுடைய பிராணிகளின் இருதயமாகிற சமுத்திரத்தை அடைந்திருக்கின்றீர்.

ஒருவரிடத்திலும் சம்பந்தமில்லாதவனென்றீர். பிராணிகளுடைய தேகத்திலும் ஆன்மாவினிடத்திலும் சம்பந்தமில்லாமற்படிக்கு, கிரகத்திற்குள்ளே வைத்த தீபத்தைப்போல் ஞானவான்களுக்குத் தேஜோமயமாயப் பிரகாசிக்கின்றீர்.

பலவான்களுக்கு விரோதியென்றீர். இந்திரிய நிக்கிரகஞ் செய்யாதவர்களாகிற பலவான்களுக்குப் பிரத்தியக்ஷமாகாத விரோதியென்றி வேறல்ல.

சிம்மாசன மில்லாதவனென்றீர். இராஜ ஆசனத்திலிருந்தால் பகவானுடைய திருவடிக்குப் புறம்பாவோமென்று உமது முன்னோர்களால் நிக்கிரகிக்கப்பட்டிருக்கின்றமையால், அச்சிம்மாசன மில்லாமையால் தேவரீருக்கென்ன இழிவு?

குணஹீனனென்றீர். தேவரீருடைய திருவடித்தாமரைகளில் பெருகிய அமுதத்தைப் பானஞ்செய்கிற பாகவதர்களுடைய மார்க்கத்தையே இந்திரிய நிக்கிரகஞ் செய்யாதவர்கள் லறியக்கூடாமலிருக்க, தேவரீருடைய குணத்தை ஆரறியப்போகின்றார்கள்?

தரித்திரர்களால் பூசிக்கப்படுகிறவனென்றீர். இகலோகத்திற்குரிய ஐஸ்வரியத்தை நிலையில்லாததென்று விரும்பாத ஞானிகளாகிற தரித்திரர்கள், பரலோகத்திற்குரிய மோக்ஷமாகிற ஐஸ்வரியத்தை விரும்பித் தேவரீரைப் பூஜிக்கின்றார்கள்.

தனவான்களால் பூஜிக்கப்படாதவனென்றீர். நரகத்திற்குரித்தாயிருக்கின்ற ஐஸ்வரியத்தை விரும்பிப் பிரமன்முதலிய தேவர்களைப் பூஜித்து அந்த ஐஸ்வரியத்தையடைந்து, தனவான்களென்று பெயர்பெற்றவர்களால் தேவரீரேன் பூஜிக்கப்படுவீர்.

தரித்திரனென்றீர். தேவரீருடைய திருவடிகளைத் தொழுகிற பாகவதர்கள் பிரமன்முதலிய தேவர்களுடைய பட்டணத்தையும் நிக்கிரகித்து, அதற்குமேலான மோக்ஷைஸ்வரியத்தை விரும்பித் தேவரீரைப் பூஜிக்கின்றார்கள். அப்படியிருக்கத் தேவரீரெப்படி தரித்திரராவீர்?

தரித்திரர்களைப் பூஜிக்கிறவனென்றீர். இல்லறவாழ்க்கையும் சொர்க்காதிபோகமுதலிய ஐசுவரியமும் நிலையில்லாததென்று நிக்கிரகித்து இயம நியம

முதலிய அஷ்டாங்கயோக நிஷ்டாகளான தரித்திராகளாகிற பரமயோகிகளை வெகு ஆதரவுடன பூஜித்து, தேவரீருடைய திருவடிகளிற சோபித்துக கொளளுகிறீா

ஒருவா நடததையும அனுசரியாதவ னெனறீா தேவரீருடைய நடத்தையை வேதமுதலிய சாஸதிரஙகளனுஷ்டிததிருகக, உபயோகமறற மானிட நடததையை யாதுகாரணததிறகாக தேவரீா அனுசரிககபபோகினறீா

உனககுச சமானமாகாதவ னெனறீா. பிரமனமுதலிய தேவாகளால் சாவோததமமாயிருககிற மோக்ஷைசுவரியததை விருமபிப பூஜிககபபடுகிற தேவரீருககு, எளிதான ஐசுவரியமும சொறகாதிபோகமும அபேக்ஷிததுப பூஜிககபபடுகிற யான சரியாவேனோ

பிசசைககாரனால துதிககபபடுகிறவ னெனறீா இலலறவாழககையையும நரகததிறகுறிய ஐசுவரியததையுந துறநது பிசசைககாராகளாயிருககிற சனனியாசிகளால சாவகாலமுங கீாததனஞ செயயபபடுகினறீா

பதடடததினு லெனனை விவாகஞசெயதாயெனறீா பாபஙகளைபபோக்கததககதான தேவரீருடைய திருவடிகளில மனததைவைதது, உலகஙகளை நிதானிததுபபாாதது, அதில சாரமானபொருள தேவரீரெனறு நனறுயுணாநது அடைநதவளே அனறி பதடடததினாலலல

எனனிடததிலிருநதால கஷடபபடுவாயெனறீா தேவரீரை அடைநது கஷடபபடுவதா யிருநதால, அகணடமணடலாதிபதியாக யிருநது சுகததை அனுபவிதத பிருதுசககிரவாததி, பரதசககிரவாததி, நளசசககிரவாததி, யயாதி முதலியவாகள தஙகள சுகததிறகுரிததான நாடுநகரததைத துறநது காடடிறகுச சென்று, அனேககாலந தவஞசெயது யாதுகாரணததிறகாகத் தேவரீருடைய திருவடிகளை அடைநதாாகள ?

யான் உனனை விருமபாதவ ளெனறீா தேவரீருககு அடியாளா லாக வேண்டிய தொனறுமிலலா விடினுா, கருணைககடலான தேவரீா யெனனையே பறறாவாகக கோரினவளெனறு கிருபைகூாநது அஙகீகரிததலே போதுமானது

நீ யெவனையாவது தேடிககொளளெனறீா. அடியாள தேவரீரையே பற்றாவாக முககியமாயக கோரியிருகக, இதரமானவாகளை வரிததே னெனறு சொனனால காசிராஜபுததிரியான அமபைபடட பாடுக கிணையாகுமலலவா ? அமுததைவிடடு விஷததை அபேடசிபபது போல அபபடிபபடட அபாககியததை யான செய்யவிலலை எனறு ஸ்ரீ ருககுமணி தேவியானவள ஸ்ரீ கண்ணபிரான அருளிசசெயத வாாததைகளை யெலலாம பகவததுணமாகச சொனனதைககேடட சுவாமியானவா சநதோஷ சிததராகி,. ஸ்ரீ ருககுமணி தேவியைப பாாதது ஒருவாாததை அருளிசசெயகினறாா

கேளாய் மாதுசிரோமணியே! இப்படிப்பட்ட உனது மதுர வார்த்தை யைக் கேழ்க்கக்கருதி, உன்னையான பரிகாசஞ் செய்தேன் நீ அகாரணமாயப் பிராணிகளிடத்தி லன்புகூர்ந்து உனது கடைக்கண் பார்வையாற் பார்த்து சகல சம்பத்துக்களையும் அடையும்படி செய்கின்றாய் உனது சுயம்வரத்தில் சகல அரசர்களும் வந்திருக்க, அவர்கள் யாவரையும் விரும்பாமல், இரகசிய மாய் உனது கருத்தைப் பிராமமண ரிடத்தில் பத்திரிகை மூலமாய் இரவும் பகலும் நித்திரையில்லாமல் உன்மீது மயலாகியிருக்கின்ற னெனக்குத் தெரி யப்படுத்தினையே அதற் கிணையாய யான் என்ன உபகாரஞ் செய்யப்போ கின்றேன்?

மேலும் உன்னை இரதத்தில் தூக்கி வைத்துக்கொண்டு துவாரகா புரத் திற்கு வருகிற சமயத்தில் உனது சகோதரனை உருக்குமியானவன் யுத்தஞ் செய்யவந்து, என்னால் பரிகாசமாய ஐங்குடிமி வைத்து க்ஷவரஞ்செய்து அவ மானப் படுத்தினபோது கொஞ்சமேனும் யென்னிடத்திற் கோப மில்லாம லிருந்ததையே அந்தப் பொறுமையினாலுன்னால் நான் ஜயிக்கப்பட்டேன் உன் னைப்போல மாதுசிரோமணி உலகத்தில் நானொருத்தி காணகிலேன் நீ என்னது பதவியையடைந்து சுகமாக யிருக்கக்கடவாய் என்று அனுக்கிரகித்தருளி னா

# அறுபத்தோராவது அத்தியாயம்.

**கலி விருத்தம்**

பெற்ற பிள்ளையும் பேரன் றன்மார்களும்
வெற்றி பெற்ற பிரத்தியும்ன விவாகமும்
பற்றி லாப்பல ராமரு ருக்மியை
வெற்றி செய்த விதமும் விளம்புவாம்

ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்குப் பதினாறாயிரத் தறுனூற்றெட்டு மனைவியர் களிடத்தில் பிறந்த பிள்ளைகளும், பேரன்மார்களும், பிரத்தியும்ன னுடைய விவாகமும் அப்பால் அனிருத்தனுடைய கலியாணஞ் செய்யும்போது பல ராமரானவர் ஸ்ரீ கிருஷ்ண சுவாமியினுடைய மைத்துனனை உருக்குமியைச் சங்கரித்ததுஞ் சொல்லப் படுகின்றன.

கேளீர் மகாராஜனே! இப்பால் ஸ்ரீகிருஷ்ண மூர்த்தியானவர் பதினாயிரத் து அறுநூற்றெட்டு மனைவியர்களுக்கும் தனித்தனி வீடுகள் அமைத்து வைத்து, தாம் அத்தனை உருவமாய் தங்களிடத்தில் இடைவிடாம லிருக்கிற தாக நினைக்கும்படி ரதிக்கிரீடையில் சிறந்தவர்களாயும் இந்த அண்டத்துக்

குள்ளிருக்கின்ற சகலப் பிராணிகளுடைய மனதைக் கலக்கும்படி செய்ய வல்லமை யுடையவர்களாயு மிருக்கின்ற அந்த மாதர்களுடைய இஷ்டத்தை நிறைவேற்றிக் கொண்டுவந்தார் அப்போது ஒவ்வொரு மனைவிக்கும் பத்து பிள்ளைகள் வீழுக்காடு தமக்குச் சமானமான உருவமு மேனியும பூஷணமு முடையவர்களாயப் பிறந்தார்கள்

அவர்களில் ஸ்ரீ ருக்குமணிதேவிக்குப் பிரத்தியுமனன் முதலியபத்துப் பிள்ளைகளும், சத்தியபாமைக்குப் பானு முதலிய பத்துப்பிள்ளைகளும், ஜாம்பவதிக்குச் சாம்பன் முதலிய பத்துப் பிள்ளைகளும், நக்னஜித்தைக்கு அசுவ சேனன் முதலிய பத்துப்பிள்ளைகளும், காளிந்தி யென்பவளுக்குச் சோமகன் முதலிய பத்துப் பிள்ளைகளும், லக்ஷ்மணைக்குக் கோத்திரவான் முதலிய பத்துப்பிள்ளைகளும், மித்திரவிந்தைக்கு அரன் முதலிய பத்துப் பிள்ளைகளும், பத்திரை யென்பவளுக்கு அனலன் முதலிய பத்துப் பிள்ளைகளும், இப்படியாக அந்தப் பதினாயிரத் தறுநூற்றெட்டு மடந்தையர்களுக்கும் உற்பத்தியானார்கள்

அவர்களில் சவுந்தரிய சிகாமணியான மன்மதனாகிய பிரத்தியுமனனானவன் தனது மனைவியாகிய இரதி தேவியானவள் தன்னுடைய அம்மானாகிய உருக்குமிக்கு மகளாகப் பிறந்திருந்தனள் அவளுக்கு விவாகஞ் செய்யச் சகல அரசர்களும் வரவேண்டிச் சுயம்வரஞ் சாட்டியிருந்தான். அது கேட்ட ஸ்ரீ ருக்குமணி தேவியானவள் தனது குமாரனான பிரத்தியுமனனுக்கு அந்த உருக்குமவதியைக் கொடுக்கவேண்டு மென்று, தனது தமையனான உருக்குமிக்கு இரகசியமாய்ச் சொல்லி யனுப்பியிருந்தனள் அதுகேட்டு தனக்குத் தங்கையாகிய ஸ்ரீ ருக்குமணி தேவியிடத்தி லன்புகூர்ந்து, அவ்வண்ணமே கொடுக்க நிச்சயித்து, ஸ்ரீ கிருஷ்ணபகவான் தனக்கு எவ்வளவு சத்துருவா யிருந்தாலும் அதை லட்சியஞ் செய்யாமல் தன் கருத்தைத் தெரிவித்தனன்

அந்தச் சுயம்வரத்திற்குப் பிரத்தியுமனன் போஜகூடமென்கிற பட்டணத்திற்குச் சென்று, அந்தச் சுயம்வரத்தில் வந்திருக்கின்ற அரசர்களை யெல்லாம் ஸ்ரீகிருஷ்ணபகவானது அனுக்கிரகபலத்தால் மதிக்காமல் கோபமடைந்து, மகாதைரியத்துடன் அவ்வரசர்களைக் கொசுவாக நினைத்து, பருந்தானது மாமிசத்தைக் கிரகிப்பதுபோல அவ்வரசர்கள் சபையினடுவி லிருக்கின்ற உருக்குமவதியை எடுத்தனன் அப்போ உருக்குமியானவன் விரோதத்தைப் பாராட்டாமல் ஸ்ரீகிருஷ்ணபகவான் முதலிய யாதவர்கட்குத் தெரியப்படுத்தி வரவழைத்து, அந்தப் பிரத்தியுமனனுக்குத் தனதுகுமாரத்தி உருக்குமவதியை மணஞ்செய்து கொடுத்தனன் அப்படியே ஸ்ரீகிருஷ்ணபகவானும் தமது கன்னிகைகளைத் தகுந்தவிடத்தில் விவாகஞ்செய்து கொடுத்துச் சுகமாக விருந்தனர்.

இப்படியிருக்கையில் பிரத்தியுமனனுக்கு உருக்குமவதியிடத்தில் அநிருத்தன் உற்பவித்தனன் அவனுக்கு உருக்குமியானவன் தனதுடைய பவுத்

யான ரோசனே யெனபவனே அநத ஸ்ரீருககுமணி தேவியிடததிலுளள அனபினுல விவாகஞ செயதுகொடுகக நிசசயிதது, அபபொழுதும விரோ தததைப பாராடடாமலஸ்ரீ கிருஷணபகவான முதலியவாகளுககுத தெரியப படுததி, பததினிசமேதாகளா யெலலாரையும வரவழைதது, அவாகளே விதிப பிரகாரம பூஜிதது, சாஸதிர விதியினபடி விவாகம நிறைவேறறி, பினபு சகலமான சமபநதிகளுககும விருநதுசெயவிததுச சநதோஷமா யிருநதனன இபபடி யிருககையில அநத உருககுமியெனபவனுககுத தோழனுன கலிஙக ஞனவன அவனேடே கூடவநத அரசாகளோடு உருககுமியைப பாாத தொருவாாததை சொலலுகினருன.

கேளீா யெனதனபுளள தோழனே ! இநதப பலராமருககுச சொககட டாடடத தெரியாது நமமோடு சொககடடாடட வேணடுமென று கருதது மாததிர மெததயிருககினறது இவரை நாம பநதயம வைககச சொலலி, அந தச சொககடடாடடததி லிவரைத தோறகடிதது, 'பநதயததைப பறித துக கொளள வேணடும என று பலராம்ரை ஆடடததிற கழைதது, அவரு டன ஆடுமபோது முதலபநதயம விராகன நூறும இரணடாமபநதயம விரா கன ஆயிரமும மூனறும பநதயம விராகன பதினுயிரமுமாகப பநதயம வைததாடினுாகள அதுகளே உருககுமியானவன ஜயிததான. அபபோது சாலவன முதலியவாகள கைகொடடிச சிரிததாாகள அதைப பலராமரான வா பொறுததுககொணடு, லகூமவராகன பநதயம வைதது அநத ஆடடத தைத தாம ஜயிததாா

அபபோது உருககுமியான்வன தானே பலராமரை ஜயிததாகச சபை நடுவிறசொனனுன அதறகும பலராமா பொறுததுகொணடு, கோடிவிராகன பநதயம வைததாடிப பலராமரே ஜயிததாா அபபொழுதும உருககுமியா னவன தானே ஜயிததாகச சொனனபோது, ஆகாசவாணி பலராமா ஜயித தாரேயனறி உருககுமி ஜயிககவிலலையெனறு கூறினள. அதையுமநத உருக குமி கேளாமல பலராமரைப பாாதது, கேளீா பலராமா ! இநத ஆடடம புத திமானகளாடததககது உஙகளுககுக கானகநதிரிநது மாடுமேயககவும, கழுதையையுங, கொககையுங, கொலலவுந தெரியுமேயனறி சொககடடாடு டததெரியுமோ ? எனறு உருககுமியானவன சபைநடுவிற பரிகாசமாயச சொனனுன

அதுகேடட ஸ்ரீபலராமா கடுஞசினமடைநது, தமது கையிலிருநத கலபபையால அநத உருககுமியை அடிததுச சஙகரிததுப போடடார் அப போ கலிஙகதேசாதிபன வெகுவாயப பயநது சபையைவிட்டோடினுன அப போ பலராமா பினசெனறு அவனேபபிடிதது, சொககடடாடடத தெரியா தென று பரிகாசஞசெயத அவனுடைய பலலே உதிததுபபோடடாா. தன் னேப பரிகாசஞசெயயசசே கேடடுகொண்டிருநத அரசாகளேயுஞ சினு பினனமாக வடிதது, கைபோனபோகளும, காலபோன போகளும, மாாபுபி

ளந்தவர்களுமாகச் செய்து, திக்குவிதிக்குகளிற் சிதறிவிழும்படி யெறிந்தார். இவைகளைக்கண்ட ஸ்ரீகிருஷ்ணபகவான் தமது மைத்துனனான உருக்குமியை யேன் சங்கரித்தீரென்று கேட்டால் பலராமருக்குக் கோபமுண்டாகு மென்றும், அவனைச் சங்கரிக்கிறது புகழ்ச்சியாயிருந்தால் ஸ்ரீருக்குமணி தேவிக்குக் கோபமவருமென்றும், மகானுபாவனான அந்த ஸ்ரீகிருஷ்ணபகவான் மவுனமாகி, சகலயாதவர்களுடன் வாகனத்தின்மீது ஆரோகணித்துத் துவாரகைக்குச் சென்று சுகித்திருந்தனர்.

# அறுபத்திரண்டாவது அத்தியாயம்.

கலிவிருத்தம்

விந்தையாகிய விஷ்ணுவின் பேரனாம்
அந்தமானவ னநிருத்தனைப் பற்றிட
பந்தபாணாசுரன் பந்தனத்தினில்
தொந்தமாய் வைத்த சோர்பினைச் சொல்லுவாம்

ஸ்ரீகிருஷ்ண பகவானுக்குப் பேரனான அனிருத்தனென்பவன் பாணாசுரனால் பந்தனத்தில் வைக்கப்படுவதைச் சொல்லுகின்றது.

கேளீர் பரதவம்சோத்பவனான பரீக்ஷித்துமகாராஜனே! மகா பலியென்றொரு அசுரனிருந்தான். அவனுக்கு நூறுபேர் குமாரர்களுண்டாகினர். அவர்களில் முதல்வனான பாணாசுரனென்பவன் மிகுந்த பயபக்தியுடன் சிவனைப் பூஜித்தான், அவனது பூஜைக்குச் சிவன்மெச்சி, உனக்குவேண்டிய வரத்தைக் கேளென்று கூறினர். அப்போதக்கப் பாணாசுரனென்பவன் மிகுந்த களிப்புடன் அம்மஹாதேவனை நோக்கி ஒருவார்த்தை சொல்லுகின்றனன். கேளீர் எம்தாண்டவனான பரமசிவனே! நீர் பிரமதகணங்களுடன் எனது பட்டணத்திற்குக் காவலாளியாயிருக்கவேண்டுமென்று பிரார்த்தித்தான். இப்படி பிரார்த்திக்கின்ற பாணாசுரனுடைய கருத்தின்படி கண்ணுதலிசைந்து வரங்கொடுத்து, அவன்பட்டணத்திற் காவல் காத்துக்கொண்டிருந்தார்.

இப்படி யிருக்கையில் ஒருநாள் பாணாசுரனென்பவன் சிவபெருமானைக் குறித்து, உமதருளினால் அடியேனுக்குப் பலமுதலிய சகலசம்பத்தும் மென்மேலும் பெருகி உண்டாயிற்று, தேவரீர்தவிர மற்றயாவரும் எனக்கு நிகராக யுத்தஞ்செய்ய மாட்டார்கள். தேவரீர்கொடுத்த ஆயிரங்கைகளும் யுத்தஞ் செய்யவேண்டுமென்று விரும்புகின்றன. ஆதலால் லெம்பெருமானே! நேரிடுமே? என்று கூறுகின்ற பாணாசுரனுடைய வார்த்தைகளைக் கேழ்வியுற்ற பரமசிவனானவர் கடுஞ்சினமாகி, அந்தப் பாணாசுரனைப் பார்த்து, நீ எனனை

அகங்கொண்டு கேட்டமையால் உனது பட்டணத்தி லிருக்கின்ற கொடி எப்போதறுந்து கீழேவிழுகின்றதோ? அப்போ நீ யென்னிலும் அதிகமானவனுடன் யுத்தஞ் செய்து உனக்குக் காவபங்க முண்டாகப்போகின்ற தென்று தெரிந்து கொள்ளுக என்று கூறுகின்ற சிவபெருமானுடைய மொழியைக் கேட்ட பாணாசுரன் தனது அரண்மனைக்குச் சென்றனன்.

அப்பாலவனுக்கு உஷையென்றொரு குமாரத்தி பிறந்து, நாளொரு வண்ணமாக மிகுந்த ரூபலாவண்ணியத்துடன் வளர்ந்திருந்தனள் அவளொருநாள் தனது அந்தப்புரத்தில் நித்திரைசெய்து கொண்டிருக்கையில் தனது கனவில் ஸ்ரீகிருஷ்ண சுவாமியினது பவுத்திரனான அனிருத்தன் தன்னுடன் ஆலிங்கனஞ் செய்ததாகக் கண்டு நித்திரைதெளிந்து விழித்துப் பார்க்கையில் அந்தமணவாளனைக்காணாமல், அவன்மீது மயலாகிக் காதல்கொண்டு, உணவு நித்திரை முதலிய சுகத்தை நிவாத்தித்து வியசனப்படுகிறாள் இப்படி வியசனப்படுகின்ற அந்த உஷாதேவியை அவளது தோழியான சித்திரரேகையானவள் பார்த்து ஒருவார்த்தை சொல்லுகின்றனள் கேளாய் யென்தனயுள்ள தோழியே! உனது மெலிந்திருக்கிற சரீரத்தையும் நடக்கையும் பார்த்தால், கொழுனன்மீது விருப்பமுள்ளவளாயத் தோன்றுகின்றன அதனை யெனக்குக் கூறினால் உனது கருத்தின் வண்ணங் கூட்டுறவு செய்கிறேன் என்று கூறின கும்பாண்டனுடைய குமாரத்தியான சித்திரரேகையினது வார்த்தைகளைக் கேழ்வியுற்று, அவளைப்பார்த்து உஷாதேவி ஒருவார்த்தை சொல்லுகின்றனள்.

கேளாய் யென்தனயுள்ள தோழியே! உனக்குச் சொல்லத்தகாத வார்த்தை யாதொன்றுமில்லை ஆகிலும் ஒரு இரகசியமான வார்த்தை சொல்லுகிறேன்கேள் எனது கனவில் பசுமையான சரீரம் படைத்தவனும், தாமரை நிகர்த்த கண்ணுடையவனும், மஞ்சளாடையை மருங்கிற்றரித்தவனும், வாசுகிபோன்று உருண்டு திரண்டு நீண்டு எழுகுபோன்றிருக்கிற கைகளையுடையவனும், மடைந்தையர்களுடைய பாக்கியமாகிற உருவங்கொண்டிருக்கின்ற ஒருதிவ்ய புருஷன் தனது உதடாகிற அமுதத்தை எனக்குத்தந்து உண்ணச் செய்து, இப்போது யெங்கேயோ ஒளித்துக்கொண்டான் ஆதலால் யெனக்கு உணவு நித்திரை முதலிய சுகத்தில் விருப்பமில்லாம லிருப்பதால், என் தேகம் மெலிந்து கிருசமாகினேன் என்று கூறின உஷாதேவியினது வார்த்தைகளைக்கேட்ட சித்திரரேகை சொல்லுகின்றனள்

கேளாய் யென்தனயுள்ள சகியே! நீயாதொன்றுக்குஞ் சிந்தனைப்பட வேண்டியதில்லை உனது துக்கத்தை யான் ஆற்றுகிறேன் என்று தேற்றிய சித்திரரேகை யானவள் உடனே அவ்விடத்திலிருந்து வெளிப்பட்டு, பூமியிலுள்ள சகல அரசர்களையும் தேவதானவா முதலியவர்களையும் துவாரகாபுரத்தில் ஸ்ரீகிருஷ்ணபகவான் பிரத்தியுமனன் அனிருத்தன் முதலிய சகலயாதவர்களையும் படத்தி லெழுதிக் கொண்டுவந்து உஷாதேவிக்குக் காட்டினள், அவளு

தனைப்பார்தது, படங்களை யாவையு நிவாததிதது, பிரதநியுமனனுடைய படததைமாததிரம மாமனுரெனறு கருதி, அபபால தனது கினவினிறகணட அனிருததனது படததைபபாரதது நாணமுறறிருநதனள.

அததனைககணட சிததிரரேகையானவள இவளதுகினவிற றேனறியவன அனிருததனெனறு கருதி, உஷாதேவியைநோககி, இதோ அநதமகாபுருஷனை உனதருகிற சோபபிககிறேனெனறு கூறி, ஆகாயததிற கிளமபி துவாரகாபுரஞ்சென்று, திரஸகரிணியெனகிற விததையால அனிருததனைச சபபிரகூடமஞசததுடன தூககிககொணடு, சோணிதபுரமெனகிற பாணாசுரனுடைய பட்டணததில புருடனுற கணணெடுததுப பாரகக ஓவவாத உஷாதேவியினது அரணமனையிற கொணடுவநது சோதது, அவவுஷாதேவிககுக காட்டினள

அபபோ உஷாதேவியானவள மரணததை அடைநதவள பிழைததெழுநதிருபபதுபோல எழுநதிருநது பாரதது ஆநநதககடலி லாழநதவளாகி, அவனைக கினவினிற கணடநாளமுதல் காணுநிருநத விரகநதணிய ஆலிஙகனஞ்செயது, இரதிகரீடையில தனதிஷடததினபடி அவனுடன போகிததுச சுகிததிருநதனள அனிருததனும ரூபலாவணணியததிற சிறநத அமமாது சிரோமணியினது போகததில திருபதிமிகுதியாகி, இரவெனறும பகலெனறும இததனைநாளாசசுதெனறுந தோறறுமல மோகாநதகாரததில மூழகியிருநதனன

இபபடி யிருககையில அநத அநதபபுரததைக காககிற காவலாளிகள் அநத உஷாதேவியினது அஙகஙகளிலிருககினற விததியாசமான குறிகளையும் அதைத தெரியவொட்டாமல நாணததுடன மறைககினற செயலையுஙகண்டு கடுஞ்சின மடைநது, தாமாய அநதபபுரததைப பரிசோதிககக கூடாதென்று பாணாசுரனுடைய அணடையிறசென்று, அவனைச சாஷடாஙகமாகப பணிநது அஞசலி கூபபிககொணடு, அவனைபபாரத தொருவாரததை சொலலுகினறனர்கள் கேளீர மகாராஜனே! தேவரீர குமாரததியினுடைய அநதபபுரததைக காககச்செ◌லலி நேமிததபடி காததிருநதோம, இபபோ தவளுடைய அஙகஙகளின குறிகளைபபாரததால உமது குலததிறகு யோககியமாகயிருககவிலலை, அதை விசதமாய ஆராயநதுணர உமதாககினை யிலலாததினால தேவரீருககுத தெரியபபடுததினேம, எனறு கூறினாகள.

இபபடி கூறுகினற அநதபபுரக காவலாளிகளினது வாரததைகளைக கேழ்வியுறற பாணாசுரனனவன நமககும யிபபடிவாயககுமா வெனறு மன வருததததுடனெழுநதிருநது, தனது குமாரததியாகிய உஷாதேவியினது அரண்மனையிற பிரவேசிததுப பார்ககிறுன. அபபோது உலகஙகளுககுள் முககியமான அழகைவாயநதவனும பசுமபொன னிறமபோனற தேகததையுடையவனும பீதாமபரதாரியாய மகரகுணடலஙகளை அணிநது தெளிவு பொருநதிய புன்னகையுடையவனுயு மிருக்கினற அனிருத்தன் சவுக்தரிய

சிகாமணியான உஷாதேவியுடன் ஒரே ஆசனத்திலுட்கார்ந்து சொக்கட்டா னாடுவதைக்கண்டு, வெகுகாயிதாவுடன் கட்டுக்காவலா யிருக்கின்ற காவலாளி களுக்குந் தெரியாமல் வந்தானென்றும், இந்தக் கன்னிகையினது கற்பையு மழித்துக் கொஞ்சமேனும் பயமில்லாமல் சொக்கட்டானாடுகிறான் பார்த்தையா வென்று திகைத்து நின்றனன்

இப்படி சமீபத்தில் வந்து நிற்கின்ற பாணாசுரனைப்பார்த்து அநிருத்த னானவன் திடுக்கிட்டு சொக்கட்டானாடுவதை நிவர்த்தித்து அவ்விடத்திலிருந்த ஒருகதையைக் கரத்திற்றாங்கி யெதிரேநின்றான் அப்போ பாணாசுரனுடன் கூடவந்த ஜனங்கள் தங்களாயுதத்தினா லநிருத்தனை யடிக்க யத்தனஞ் செய்தார்கள். அவர்கள் யாவரையும் அவனடித்துத் துரத்திவிட்டான் அதைப்பார்த்த பாணாசுரனுக்குக் கோபமீறி, அநிருத்தனை நாகபாசத்தாற் கட்டிச் சிறைச்சாலையிற் போட்டுவிட்டான் அதனைக்கேட்ட உஷாதேவியா னவள் மிகவும் மனவருத்தமுற்றிருந்தாள்

# அறுபத்துமூன்றாவது அத்தியாயம்.

கலி விருத்தம்

உந்துகண்ணபிரானுடனேகியே
அந்தபாணாசுரனையுத்தஞ்செய்ச
சிந்தைகூர்ந்து சிவபெருமானுடன்
தொந்தவுஷ்ண சுரமுந்துதித்ததே

ஸ்ரீகண்ணபிரானானவர் பாணாசுரனோடெதிர்த்து அவனது ஆயிரங்கைக ளைத் துணித்ததும், சிவபெருமானும் உஷ்ணசுரமும் ஸ்ரீகண்ணபிரானைத் துதித்ததுஞ் சொல்லப்படுகின்றன

கேளீர் குருகுலோத்தமனான பரிக்ஷித்துமகாராஜனே! துவாரகாபுரத்தில் நித்திரைசெய்த அநிருத்தனைக் காணாமையால் அவனை நினைத்துக்கொண்ட ஸ்ரீகிருஷ்ணபகவான் முதலிய யாதவர்களும் ஸ்ரீருக்குமணிதேவி முதலிய மாதர்களும் நான்குமாதமாய் விசனப்பட்டுக்கொண் டிருக்கின்றார்கள் அந்தச் சமயத்தில் அவர்களண்டையில் மூன்றுகாலமுஞ் சொல்ல வல்லமையுடைய நாரதமாமுனியானவர் வந்தனர் அவரை யவர்கள்கண்டு விதிப்படிக்குப் பூசித்து ஆசனஞ் சமர்ப்பிக்க அவர் அதன்மீது உட்கார்ந்து, கேளீர் யாதவர் களே! சோணிதபுரத்திற் கதிபனான பாணாசுரனது குமாரத்தி உஷாதேவி யென்பவள் அநிருத்தனை அபகரித்துக் கொண்டுபோய் தனது மனமத்தாபத் தைச் சாந்தஞ் செய்துகொண்டிருந்தாள். அதுகேட்ட பாணாசுரன் அநி

ருத்தனைப்பிடித்து நாகபாசத்தால் கட்டிச் சிறைச்சாலையில் வைத்திருக்கின்றான் இது யானறிவேன் என்று கூறினார்

இப்படி நாரதமுனிவர் கூறிய வார்த்தைகளைக் கேழ்வியுற்ற பிரத்தியும்னன், சேகிதானன், சாத்தகி, கதன், சாம்பன், சாரணன், நந்தன், உபநந்தன் இவர்கள் முதலிய யாதவர்கள் பனிரெண்டு அக்குரோணி சேனைகளுடன் ஸ்ரீராமகிருஷ்ணனை முன்னிட்டுக்கொண்டு, இரதாரூடர்களாய் அதித்துறையாய்ப் புறப்பட்டுச் சோணித புரஞ்சென்று, அந்தப் பட்டணத்தை நான்குபக்கத்திலுஞ் சுற்றிக்கொண்டு, நந்தவனத்திலுள்ள தருக்களைத் துணித்து அகழைத் தூற்று மதிற் சுவரைப் பொடிப்பொடியாய் யிடித்தார்கள் இப்படி யிடிப்பதைப் பாணாசுரன் கண்டு கடுங்கோபங்கொண்டு தானும்பனிரண்டு அக்குரோணிசேனைகளைக் கூட்டிக்கொண்டு வெளிப்பட்டான் அப்போ உமாமகேஸ்வரனானவர் விநாயகன் சுப்பிரமணியன் முதலியவர்களோடு பிரமதகணங்களையுங் கூட்டவழைத்துக்கொண்டு, ஸ்ரீராமகிருஷ்ணர்களோடே யுத்தஞ்செய்ய வந்தார்

இப்படி பாணாசுரனானவன் சிவனுடைய சகாயத்தை யுத்தத்திற்கு வந்து, ஸ்ரீகிருஷ்ணபகவானுடன் உருத்திரனும், பிரத்தியும்னனுடன் சுப்பிரமண்ணியனும், ஸ்ரீபலராமருடன் பாணாசுரனுடைய மந்திரியான கும்பாண்டனும் கூபனும், சாம்பனுடன் பாணாசுரனும், சாத்தகியுடன் விநாயகரும், இப்படியாக யுத்தஞ்செய்தார்கள், இந்த யுத்தத்தைப்பார்க்க ஆகாயத்தில் பிரமன்முதலிய தேவர்களும் நாரதர்முதலிய தேவரிஷிகளும் வந்து பார்த்துக் கொண்டிருந்தார்கள் இப்படி பார்த்துக் கொண்டிருக்கையில் ஸ்ரீகிருஷ்ணபகவானானவர் சிவனோடுகூடவந்த சாகினி, டாகினி, பேதாள முதலிய பிரமதகணங்களை யாவையும் சின்னபின்னமாகச் சிதற அடித்தார்

அப்போ பார்வதிபதியானவர் தமது பிரமதகணங்களைத் துறத்தினதைப் பார்த்து கடுஞ்சினமடைந்து, ஸ்ரீகிருஷ்ணபகவான்மீது அனேகபாணங்களைப் பிரயோகஞ் செய்தார், அவைகளைப் பிரதி அஸ்திரங்களால் ஸ்ரீகிருஷ்ணபகவான் துணித்துப்போட்டு, அந்தச் சிவன்மீது பிரமமாஸ்திரத்தைப் பிரயோகஞ் செய்தனர். அவரும் அந்தப் பிரமமாஸ்திரத்தையே பிரயோகஞ் செய்து, உடனே வாயுவாஸ்திரத்தைப் பிரயோகித்தார் அதனை ஸ்ரீகிருஷ்ணபகவான் பர்வதாஸ்திரத்தால் அடித்துப்போட்டார், அதற்குச் சிவன் அக்கினியாஸ்திரத்தைப் பிரயோகித்தார் அதை ஸ்ரீகிருஷ்ணபகவான் வருணாஸ்த்திரத்தால் தடைசெய்தார் பின்பு சிவன் பாசுபதாஸ்திரத்தைப் பிரயோகித்தார் அதனை ஸ்ரீகிருஷ்ணசுவாமி நாராயணாஸ்த்திரத்தைப் பிரயோகித்துத் தடுத்துவிட்டு, மோகனாஸ்த்திரத்தைப் பிரயோகஞ்செய்து சங்கரரை மோகிக்கும்படி செய்தார்

அப்போ சம்புவானவர் வெகு மோகத்தை அடைந்து, இந்தவேளையில் இந்தக்காரியஞ் செய்யவேண்டுமென்று உணராமல் திகைப்பூண்டு மிதித்தவன்

போல மயங்கியிருநதார அபபடியிருக்கையில ஸ்ரீ கிருஷ்ணபகவான் அவரை விடடுப பாணாசுரனுடைய சேனையைத தமது ஆயுதஙகளால லடிததுபபோடடு பாணாசுரனுககெதிராக வநதார அபபோது பாணாசுரன சாததகியுடன யுத தஞசெயவதைவிடடு ஸ்ரீகிருஷ்ணபிரானுக கெதிராக ஓடிவநது, தனது ஆயிரஙகைகளால பாணவருஷஙகளை ஸ்ரீகிருஷ்ண பகவானமீதுவருஷிததது; சுவாமியினது திருவடிமுதல திருமுடி வரையில ஊசிநாடட யிடமிலலாமலடிததான அபபோ ஸ்ரீகிருஷ்ணபகவான தமது சாரஙகமெனகிற விலலைவளைததது, அதில னேக பாணஙகளைச சநதானஞசெயது, அவனவிடட பாணஙகள யாவையுந துணிததது, அவனுடைய ஐஞஞூறுதனுசையும இரததததிலிருககுஞ சாரதி குதிரை, கொடி, குததுககால, அசசுககள, நுககததடி இவைமுதலியதுகளையு முறிததுபபோட்டு, நாராசபாணததைப பிரயோகஞ செயது அவனது மாரபைபபிளநது, தமது பாஞசசனனிய மெனகிற சஙகததைப பூரிததார.

அதைப பாணாசுரனுடைய அனனையான கொட்டரியெனபவள கேட்டு, தனது புததிரனைப பிழைபபிகக வேணடுமெனறு வஸதிரமிலலாமல நிர்வாணமாகத தலையை விரிததுககொணடு ஸ்ரீகிருஷ்ணனுககும பாணாசுரனுககு நடுவில ஸ்ரீகிருஷ்ணபிரானைப பாரததுககொணடே வநது நினறாள அபபோ சுவாமி அவளைபபாராமல முகததைத திருபபிககொணடார அநதசசமயத் தில பாணாசுரன யுததபூமியைவிடடு, காலநடையாகப பட்டணததிற கோடிபபோயினன அபபோ உருததிரமூரததியானவர தாமும தமது பிரமதகணஙகளும அபஜயபபடட தறகு வியபபுடனிருககையில, அவரிடததி லுண்டான தாபசொரமானது மூனறுதலை மூனறுகாலுடன அதிக பயஙகரமாய வநது; ஸ்ரீகிருஷ்ணபகவானுடன யுததஞசெயது ஜயிககவேணடுமெனறு கருதி எதிரேசினறது இபபடி நிறகிறபோது ஸ்ரீகிருஷ்ணபகவானானவர தம திடததில நினறும சீதசொரததை யுணடுபணணி, சிவபிரானுடைய தாப சொரததுடன யுததஞ செயயசசொலலி யனுபபினார.

அநதச சீதசொரவேகததில தாபசொரம நிறகமாட்டாமல மிகவுந துனபததையடைநது யாம ஸ்ரீகிருஷ்ணபகவானைத தானே சரணமபுகாவிடில, சுகமுணடாகமாட்டாதெனறாலோசிததது, அதிவேகமாக ஓடிவநது, ஸ்ரீகிருஷ்ணஸசுவாமியை சாஷ்டாஙகமாகப பணிநது மிகவும பயபகதியுடன தோததிரஞசெயய ஆரமபிததது கேளீர ஜகதீசனே! அனநதசகதிமானான தேவரீரைச சேவிககினறேன சாவேஸவரனாய சகல ஜகதகாரணனா யிருககினற தேவரீர அடியேனிடததில கிருபைகூரநது, தேவரீருடைய ஒளியில நினறும விருததியடைநத சீதசொரததினுடைய தொநதிரை யிலலாமல அடியேனை இரக்ஷிததருளவேணடும காலரூபியாகியும, காமரூபியாயும, காமததினுணடான பல சொரூபியாகியும, சகல ஜகததுககும சாக்ஷியாகியும, சூததிரதாரியைபபோல ஜீவாததமாவைத திருபபுகிறவராகியும, மசசமுதலிய அவதாரங்களை யடைநது, யோகிகளையும், ரிஷிகளையும, சாதுககளையும, சமரக்ஷணஞ செயது, பூமிக்குபபாரமாயிருககினற ஜராசநதன் முதலியவர்களைச் சங்கரிக்

கிறதற்காக அவதரித்த தேவரீரைச் சரணமடைகின்றேன் என்று சொல்லுகின்ற சிவனுடைய தாபஜ்வரத்தைப் பார்த்து ஸ்ரீபகவானருளுவார்த்தை அருளிச்செய்கின்றார்.

கேளாய் தாபமே! உனது துதிக்கு யான் மெச்சினேன். இனி உனக்கு என்னுடைய சீதஜ்வரத்தினால் துன்பமுண்டாகாது. உனதிஷ்டத்தின்படி செல்லுக என்று கூறவும் அது சுவாமியைத் தெண்டன் சமர்ப்பித்துப்போட்டு சிவபெருமானிடத்தில் லயித்துப்போயது. அப்பால் பாணாசுரன் இளைப்பாறி வேறொரு இரதத்திலாரோகணித்துக்கொண்டு, சுவாமிக்கெதிரே வந்து நின்று பாணவருஷங்களை வருஷித்தான். அப்போ ஜகதீசனான சுவாமியானவர் சக்கிரப் பிரயோகஞ்செய்து, அவனது ஆயிரம் கரத்தையும் கண்டித்து விட்டார். அதைச் சிவபெருமான் கண்டு, ஸ்ரீ கிருஷ்ணபகவானண்டையி லோடிவந்து, தாம் பாணாசுரனுக்குக் கொடுத்தவரம் பொய்யாகப் போகிறதென்று பரதேவதையான ஸ்ரீகிருஷ்ணபிரானைத் துதிசெய்ய ஆரம்பித்தனர்.

கேளீர் சுவாமி ஸ்ரீகிருஷ்ணா! மூடஜனங்கள் தேவரீருடைய மாயையிலகப்பட்டு மோகிதர்களாகி, பரப்பிரம்மமான தேவரீரைமறந்து, அடியேன் முதலிய தேவதைகளைப் பரதேவதையென்று பிரமித்துப் பூசைசெய்து நிலையில்லாத சொர்க்கமுதலிய போகத்தை அடைகின்றார்கள். தேவரீரால் யாதொருவர் சம்பூர்ணமாக அனுக்கிரகிக்கப் படுகின்றார்களோ? அவர்கள் தங்களுடைய யோகபலத்தினால் இருதய கமலத்தில் சங்குசக்கிர கெதாபாணியாய்ச் சேவைசாதிக்கிற தேவரீரைக் காணுவார்களேயன்றி, மற்றவர்களப்படிக்குக் காணமாட்டார்கள். விராட்புருஷரான தேவரீருக்குச் சொர்க்கம் நாபியும், முகம் அக்னியும், திக்குகள் காதுகளும், பூமி திருவடிகளும், ஜலம் சுக்கிலமும், சந்திர சூரியர்கள் திருக்கண்களும், அடியேன் தேவரீருடைய கோபமும், சமுத்திரம் உதரமும், இந்திரன்முதலிய திக்குப்பாலகர்கள் திருக்கைமுதலிய அங்கங்களும், சகல ஔஷதிகள் சரீரத்தின் ரோமமும், ஆகாயம் சிரசும், மேகங்கள் தலைமயிர்களும், பிரமதேவன் புத்தியும், விசர்க்கம் பிரஜாபதியும், தர்மமே யிருதயமுமாகின்றன.

இப்படி மூவுலகையும் சரீரமாகப்படைத்த தேவரீர் அடியேன் முதலிய தேவர்களை இரக்ஷிக்கவேண்டி யிப்படிக்கு அவதரித்திருக்கின்றீர். ஆதிமூலப் பொருளாகியும், சுயம்பிரகாசராகியும், ஆப்தபாந்தவராகியு மிருக்கின்ற தேவரீருடைய திருவருளினால், நாநாவிதமான பாபயோனிகளில் ஜனித்த தோஷங்களைப்போக்கி, மேன்மையான மானிட ஜன்மத்தை அடைந்து மோக்ஷத்தைக் கிரகிக்கும்படியான பிராணிகளில் தேவரீருடைய திருவடியை மறவாமல் ஆராதனைசெய்து துதிக்கின்றவனே மேன்மையானவன். அவனுடைய ஜனனமும் சபலம், அவனது வம்சமும் உத்தமமாகும். அவனுக்கு நிகரான பாகவதோத்தமன் ஒருவனுங்கிடையான். சகலப் பிராணிகட்கும் இஷ்டமா யிருக்கின்ற ஆன்மாவுக்கொப்பான தேவரீரை விட்டு வேறொருதெய்வத்தைத்

தொழுகிறார்கள். கையிலிருக்கின்ற அமுதத்தை யெறிந்துபோட்டுப் பிரயாசைப்பட்டு விஷத்தைச் சம்பாதிப்பதுபோ லாவார்கள் அப்படிப்பட்ட மகிமையைவாய்ந்த தேவரீருடைய திருவடிபஜனை செய்கின்ற மகாயோகிகள் பரமபுருஷார்த்தமா யிருக்கின்ற மோக்ஷத்தை அடைகிறார்களென்று கருதி, அடியேனும் பிரமன் முதலிய தேவர்களும் தேவரீரைச் சரணமடைந்து மோக்ஷத்தை விரும்புகிறோம்

மேலும் இந்தப்பாணாசுரன் அடியேனுக்கு மிகவும் அன்பன் அவனுடைய நிமித்தத்தில் வெகுவாய் வரங்கொடுத் திருக்கின்றேன். அது பொய்யாகாமலிருக்கத் தேவரீர் நம் அனுக்கிரகித்து இரக்ஷிக்கவேண்டும் என்று துதிக்கின்ற உமாபதியான சிவனைப் பார்த்து வசுதேவகுமாரனான ஸ்ரீகிருஷ்ணபிரான் ஒருவார்த்தை அருளிச்செய்கின்றார் கேளீர் சங்கரரே உமது கருத்தின்படி இந்தப்பாணாசுரனை யானும் அனுக்கிரகித்தேன் மேலும் இவனுக்கு இரண்டாம் பாட்டனான பிரகலாதனுக்கு உனது வம்சத்தாரை யான் கொல்லுகிற தில்லையென்று வரங்கொடுத் திருக்கின்றேன். அதினாலும் நானிவனைச் சங்கரிக்காமல், இவனது கர்வத்தைப்போக்க ஆயிரங்கரங்களையுந் துணித்து நான்குகைகளை நிறுத்தினேன் அந்நான்கு கைகளோடு தேவர்களைப்போல் ஒருவராலும் ஜயிக்கக்கூடாமல், உமது பிரதமகணங்களுக்குள் முதல்வனாகி யிருக்கக்கடவனென்ன றனுக்கிரகஞ் செய்தனர் சுப்பிரமணியன் தன்னோடு யுத்தஞ்செய்கின்ற பிரத்தியும்னனால் பிரயோகிக்கப்பட்ட பாணங்கள் சரீரத்தைப் பிளக்க, அதனால் இரத்தங்களைப் பெருக்கிக் கொண்டு ஓடிப்போனான்

பாணாசுரனுடைய மந்திரிகளான கும்பாண்டனும் கிருபகர்ணனும் ஸ்ரீபலராமரோடு யுத்தஞ்செய்து, அவரது ஆயுதமான கலப்பையா லடிக்கப்பட்டு, சரீரங்கள் பிளந்து, இரத்தங்களை வாயினாலும் மூக்கினாலுங் கக்கிக்கொண்டு மூர்ச்சித்து விழுந்தார்கள் அப்போ பாணாசுரனுடைய சேனைகள்யாவும் சின்னாபின்னமாய் மூலைக்குமூலை ஓடிப்போயின அக்கால் பாணாசுரனானவன் சிதறிப்போன சேனைகளை ஒருமிக்கச் சேர்த்துப்போட்டு, தனது நகரத்தினுட் பிரவேசித்து, அனிருத்தனையும் உஷாதேவியையும் இரதத்தின் மீதேற்றிக் கொண்டு ஸ்ரீகிருஷ்ணபகவானண்டையில் விட்டு, சாஷ்டாங்கமாகத் தெண்டன்சமர்ப்பித்து, அடியேன்செய்த அபராதத்தை மன்னித்து அடியேனுடைய புத்திரியான உஷாதேவியை அங்கீகாரஞ்செய்து அடியேனை இரக்ஷித்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தான்

இப்படி பிரார்த்திக்கின்ற பாணாசுரனுடைய கருத்தின்வண்ணம் அவன் செய்த அபராதத்தைப் பொறுத்து, சிவபெருமானுடன் அவனுக்கு விடை கொடுத்து, தாம் தமது பவுத்திரனான அனிருத்தனையும் உஷாதேவியையும் அப்படியே இரதத்தின் மீதேற்றிக்கொண்டு சகலவாத்தியங்கள் முழங்க வேதியர்களாசீர்வதிக்க, தேவர்கள் புட்பமாரி சொரிய, அப்சரஸ்திரீகள் நடிக்க,

கந்தருவர் கானஞ் செய்ய, இது முதலிய வைபவத்துடன் த்வாரகைக்குச் சென்று அரண்மனை முதலிய பட்டணங்களையாவும் அலங்கரிப்பித்து, சாஸ்திரவிதியின்படி அநிருத்தனுக்கும் உஷா தேவிக்கும் விவாகமஹோற்சவம் நிறைவேற்றினார்.

# அறுபத்துநான்காவது அத்தியாயம்.

கலி விருத்தம்

ஆதவன் றவழுகின்ற வயோத்திமா நகர்க்குவேந்தை
வேதமாற் பூசுரன்றன் விரிவுளவோர் ஞானகப
போதவே சபிக்கக்கண்ட புண்டரீகாக்ஷன்பேர்
வேதனை தன்னைநீக்கி விளங்கிடும் வாறுசொல்வாம்

அயோத்தியா பட்டணத்திற் கரசனான நிருகமகாராஜன் அநேகம் பசு முதலிய தானஞ்செய்துகொண்டு வந்தவனை ஒருபிராமமணன் அநேககாலம் ஓணானாயிருக்கும்படி சபித்ததும், அதை ஸ்ரீக்ருஷ்ணபகவான் நிவாரணஞ் செய்து ஐசுவரியத்தினால் களித்திருக்கின்ற பார்த்திவர்களுக்குப் பிராமணர்களுடைய மகிமையைத் தெரிவித்துப் பிரமஸ்வத்தை அபகரித்தவனொருக்காலும் கடைத்தேற மாட்டானென்று சொன்னதையுஞ் சொல்லுகின்றன.

கேளீர் பரதவம்சோத்பவனான பரிக்ஷித்துமகாராஜனே! ஸ்ரீக்ருஷ்ண பகவானுடைய கிருபையினால் சகல யாதவர்களும் பயமற்றவர்களாய் த்வாரகாபுரத்திற்குச் சமீபத்திலிருக்கின்ற நந்தவனத்தில் விளையாடி இளைப்புற்று, தாகத்திற்குத் தீர்த்தம் வேண்டுமென்று வனமெல்லாந் திரிந்து, ஓரிடத்தில் பெரியதுரவு யிருக்கக்கண்டு, ஜலத்தைவிரும்பி ஆவலோடு கிட்டிப்பார்க்கையில் மலைபோன்ற தேகத்தையுடைய ஒரு ஓணானைக் கண்டு வியப்புற்று, பிரத்தியும்னன் முதலிய ஸ்ரீக்ருஷ்ணபகவானுடைய குமாரர்கள் யாவரும் மிகுந்த தயை கூர்ந்து, அந்த ஓணானை வெளிப்படுத்த அநேக வடங்கயிறுகள் முதலியவற்றால் கட்டித் தங்கள் பலங்கொண்டமட்டும் தூக்கிப்பார்த்து, அசக்கமாட்டாமலோடிவந்து ஸ்ரீக்ருஷ்ண பகவானுடன் சொன்னார்கள்.

அதைக்கேட்ட ஸ்வாமி அக்ஷணத்திற்றானே புறப்பட்டுப்போய் அந்த ஓணானைக்கண்டு, தமது இடதுதிருக்கையினால் லெளிதாக வெளியிலெடுத்து விட்டுவிட்டார். அந்த கரஸ்பரிசப் பிரபாவத்தினால் சாபத்தில் நின்றும் நீங்கினவனான அந்த நிருகமகாராஜன் தனது நிஜரூபத்தோடு கூடிய சரீரத்தை வாய்ந்து, தனது மணிமயமான கிரீடம் ஸ்வாமியினது திருவடியிற் படும்படியாய்த் தெண்டனசமர்ப்பித்து, களங்கமற்றவனாய் எதிரேநின்றான். இப்படி

நிற்கின்ற நிருகமகாராஜனை ஸ்ரீகிருஷ்ணபகவான் பார்த்து ஒருவார்த்தை அரு ளிசெய்கின்றார் கேளீர்மகாபுருடனே! உமது ரூபததைப பாாததால் தேவ தையைபபோல காணகிறது உமககு இபபடிபபட்ட நிகிருஷ்டமான ஜன்மம வரக் காரணமென்ன ? அதையெனககுச சொலலககூடுமானால விசிதமாய்ச் சொல்லும என்று கூறுகின்ற ஸ்ரீகிருஷ்ணபகவானைப பாாதது நிருகமகாரா ஜன் ஒருவார்ததை சொலலுகின்றான்.

கேளீர் தேவோததமனான சுவாமி! அடியேன் இட்சுவாகு வமசததிற் பிறநத நிருகமகாராஜாவென்று பெயரையுடையவன், தானஞ்செய்பவாக ளில் அடியேனைப பெரியவாகள் நினைககுமபடியாக, நறகுணமுடைய தலை யீறறுக கிடாரிகளாயும நலல அழகுளளதாயும காமதேனுவுக கொபபாய் பாலகறககத தககதுகளாயும, கொமபுகளுககு சுவாணப பட்டஙகளோடு குளமபுகளுககு வெள்ளிப பூண்களடிததும பரிசுததமான வெளளை வஸததி ரததினால அலஙகரிததும, பாலகறகக வெணகலப பாததிரததுடன எண ணிககையிலலாத பசுககளையும, பூமி, சொானம, இரதம, யானை, குதிரை, கன்னிகை இவை முதலியவைகளையும, உததமகுலததிற பிறநதவாகளாயும, நற்குணம நலலொழுகக முடையவாகளாயும, வைதிகநிஷடை ஆகிதாககினி உடையவாகளாயும், குடும்பிகளாயும, தரிததிராகளாயும, தவபபேறறுமை யுடையவாகளாயும, நானகுவேதம ஆறுசாஸததிர முதலியவைகளைக கறற வாகளாயும, பிரமமததினுடைய நிசசயததை நனறாய ஆராயந துணாநத வர்களாயும, பிரசிததாகளாயும, மனைவியாகளுட னிருககின்ற பிராமமணர் கட்கு உததமமான க்ஷேததிரததில நலலபுணணிய காலஙகளில் தானஞ் செயது கொணடிருநதேன

ஒருநாள தானஞ்செய்யும் பசுககூட்டததில அதறகு முநதினநாள் தானஞ்செய்த பசுககூட்டததில நின்றும ஒருபசுதபபிக கலநதது, அதுதெரி யாமல தானஞ்செயது போட்டேன அதை அநதப பிராமமணோததமன ஓட் டிக்கொணடு போகையில, பசுவைப பரிகொடுதத பிராமமணன அபபசு வைத தேடிககொணடு வருமபோது இநதககுமபலில தனது பசுவிருககக் கண்டு, அநதவேதியரை நோககி, உமககிபபசுவேது ? எனது மநதையில நின்றும யெபபோ திருடிககொணடுபோனீர் ? என்று கூறுகின்ற வேதியனை அநத வேதியன நோககி, நிருகமகாராஜன இபபோதான இநதப பசுககூட் டஙகளைத தானஞ்செயதான உமது பசுவை யான திருடவிலலை உமக்குச சநதேகமிருநதால நிருகமகாராஜாவினிடததில வநதால ருசுபபடுததுகிறேன் அப்படிககி ருசுபபடுததாவிடில ஒருபசுவுககுப பததுபசு தருகிறேனென்று வாதாடிக் கொணடுவநது, எனது சமுகததில அனேகனுள காததிருநது மென்னைககாணமற போகையாலவாகள கடுஞ்சினமடைநது, யாசகாகளா யிருக்கின்ற வெஙகளுககுத தரிசனங்கொடாமல அநதப புரததிலேயே யிருப் பாதால நீ இன்றுமுதல அனேககோடி வருடம் ஒருவர்கண்ணுக்குந் தென் படாத ஒரு பாழுங்கிணற்றில ஓணான் யிருக்கக்கடவா யென்று சபித்தார்கள்.

'இயான் அதுகேட்ட மாத்திரத்தில் அவர்கள் சமீபத்திற்குச் சென்று, அவர்களைச் சாஷ்டாங்கமாகப் பணிந்து, அவர்களுடைய திருவடிகளைப் பற்றிக்கொண்டு, ஒருபசுவுக்கு லக்ஷம்பசு தருகின்றேன்; எனது சாபத்தை நிவர்த்திசெய்ய வேண்டுமென்று வெகுவிதமாய்ப் பிரார்த்திக்கையில், அவர்கள் அடியேனிடத்தில் அன்புகூர்ந்து, பக்தவத்சலனான ஸ்ரீமந்நாராயணன் ஸ்ரீகிருஷ்ணபகவானாக அவதரிக்கப்போகின்றார் அவரது கரஸ்பரிசத்தினால் உனது சாபவிமோசன மாகுமென்று கூறி, அந்த விவாதப்பட்ட பசுவை வேறொரு பிராம்மணனுக்குத் தானஞ்செய்துபோட்டுப் போய்விட்டார்கள். பிறகு எனது புத்திரனுக்கு இராசசியபாரஞ்செய்யப் பட்டங்கட்டிப்போட்டு சாபத்தை அனுபவிக்கச் சித்தமாயிருக்கையில், பிணியால் தேகத்திற்கொரு உபத்திரவம் நேர்ந்து அதுமூலத்தில் யமதூதர்களால் அழைக்கப்பட்டு யமசபைக்குச் சென்று நிற்கையில், அப்போ யமதருமராஜன் என்னைநோக்கி, நீர் அநேக கோதான முதலியன செய்திருந்தாலும் பிராம்மணசாபம் நேர்ந்திருக்கின்றமையால் அந்தச்சாபத்தை முன்னே அனுபவிக்கின்றீரா? அல்லது தானஞ்செய்ததினா லுண்டான புண்ணியப்பயனை அனுபவிக்கின்றீரா வென்றுகேட்டார், அப்போ தடியேன் சாபப்பயனை முன்னே அனுபவிக்கின்றேனென்று சொன்னேன் தக்ஷணம் என்னைக் கீழ்த்தள்ளச் சொல்லிப்போட்டு, அந்தர்த்தானமாய்ப் போயினார்

பிறகு அடியேன் இப்படிப்பட்ட விகாரரூபமான ஓணானின் உருவங்கொண்டு, இந்தக் கிணற்றிலேதானே தேவரீருடைய திருவடியைத் தியானித்துக்கொண்டிருந்தேன் அந்த மகிமையினால் சனகாதியோகிகட்கும் காணக்கிடைக்காத அருந்தெய்வமான தேவரீருடைய சேவைகிடைத்தது, அடியேனைப் போல அதிருஷ்டசாலி ஒருவருங்கிடையாது, வாக்கினாலும், மனத்தினாலும், அளவிடப்போகாத மகிமையை வாய்ந்த திவ்வியசக்திமானான தேவரீர் கவைக்காகாத அடியேனிடத்தில் கிருபைகூர்ந்து சேவைசாதித்தபடியால், அந்தணர்சாபமும் அடியேனுக்கு விமோசனமாயது தேவோத்தமனே, சகல ஜகத்திற்கும் சுவாமியாய், புருஷோத்தமனாய், உத்தமசுலோகனா யிருக்கின்ற தேவரீர் துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனஞ் செய்வதற்காக தேவகீகர்ப்பத்தில் அவதாரஞ்செய் தருளினீர் அடியேனிடத்தில் கிருபைகூர்ந்து இரக்ஷிக்க வேண்டும் என்று ஸ்ரீகண்ணபிரானைத் தோத்திரஞ்செய்து, அநேகமுறை தெண்டனசமர்ப்பித்து அஞ்சலி கூப்பிக்கொண்டு நின்றான், அப்படி நிற்கையில் அங்கே மிகவும் வியப்புள்ள ஓர்விமானம் ஆகாயவீதியில் வர, அதுகண்ட ராஜன் சுவாமியிடத்தில் விடைபெற்று, அந்த விமானத்தின் மீது ஆரோகணஞ்செய்து, சகல யாதவர்களும் பார்க்கத் திவ்விய சரீரத்துடன் ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய அனுக்கிரகத்தினால் சொர்க்கலோகஞ் சென்றனன் அதைப் பார்த்த சகல யாதவர்களும் வியப்பை அடைந்தார்கள்.

அப்போ ஸ்ரீகிருஷ்ணபகவான் யாதவர்களைப்பார்த்து, கேளுங்கள் யாதவர்களே! உலகத்திலிருக்கின்ற வஸ்துக்கள் யாவும் தெரிந்தாலும், பிரம்ம

சொத்து ஒரு நாளும் செரிக்காத ஆலகாலமென்கிற விஷத்தினைப் புசித்தால் புசித்தவனைமாத்திரம் கொல்லும், அதற்கு மருந்து மகப்படும். பிரமசொத்தை யபகரித்தால் அபகரித்தவனையும், அவனது தாய் தந்தையர்களுடைய வர்க்கத்தையும் கொல்லும். அதற்கு மருந்து யாதொன்றுமில்லை. ஆதலால் நமது யாதவர்கள் யாவரும் பிரமசொத்தை விரும்பவேண்டுவதில்லை. பிராமணர்கள் துர்ப்பாஷையாய்த் திட்டினாலும், அடித்தாலும், அவர்களிடத்தில் சினங்கொள்ளாமல் பணியவேண்டுமே அன்றி, ஒன்றும் செய்யலாகாது. அந்தப் பிராமணனிடத்தில் எவன் அபராதஞ்செய்கிறானோ? அவன் எனக்குப் புறம்பானவன். ஆதலால் நீங்களெல்லோரும் சகலவித்த்தாலும் யானெப்படி பிராமணர்களைச் சேவிக்கின்றேனோ? அப்படியே நீங்களும் பணியுங்கோள். என்று ஸ்ரீகிருஷ்ணபகவானனவர் பிராமணர்களுடைய பிரபாவங்களை யாதவர்களுக்கு உரைப்பவர்போல உலகுக்குத் தெரியப்படுத்தி, சகல யாதவர்களுடன் துவாரகாபுரத்திற் கெழுந்தருளினார்

# அறுபத்தைந்தாவது அத்தியாயம்.

அறுசீரடி யாசிரிய விருத்தம்.

கண்ணனுலவிரகங்கொண்ட கற்புள்ள ஸ்திரீகள் தம்பால்
அண்ணனும்பலராமமேந்திரன் அவர்கள் தம்மிடத்திற்சென்று
தண்ணளிக்கிருபைசெய்து சமாதானஞ்செய்வித்தபின்
புண்ணியநதியைத்தம்மால் போக்கியவிபரஞ்சொல்வாம்

ஸ்ரீபலராமர் கோபிகைகளிடத்திற்குச் சென்று ஸ்ரீகிருஷ்ண சுவாமியினுடைய விரகத்தினால் துன்பப்படுகிற கோபிகைகளைச் சமாதானஞ் செய்ததும் யமுநாநதியை ஸ்நாநார்த்தமாய் தம்மிருப்பிடத்திற்குக் கலப்பையாகிற ஆயுதத்தினால் வரவழைத்ததும், பிறகு அவர்கள் துதிசெய்ததுஞ் சொல்லப்படுகின்றன.

சுகர்வாக்கியம்.

கேளீர் தருமசீலனான பரீக்ஷித்து மகாராஜனே! சகல யாதவர்களும் ஸ்ரீகிருஷ்ணபகவானது சகாயத்தினால் தேவர்களுக்கும் அரிதான ஐசுவரியமுடையவர்களாய் சுகமாக யிருக்குங்காலையில், ஸ்ரீகிருஷ்ணசுவாமியால் அனுப்பிவிக்கப்பட்டவராய ஸ்ரீபலராமரானவர் தமக்கிஷ்டர்களான கோபாலர்களையுங் கோபிகைகளையும் பார்க்கவேண்டுமென்று இரதாரூடராய்க் கோகுலத்திற்குச் சென்று, பிதாவான நந்தகோபரையும் மாதாவான யசோதாப் பிராட்டியாரையும் சாஷ்டாங்கமாகப் பணிந்து எதிரே

நின்றார். இப்படி நிற்கின்ற ஸ்ரீபலராமனை நந்தகோபரானவர் ஆலிங்கனஞ்செய்து, மடியிலே வைத்துக்கொண்டு, உடம்பெல்லாந் தடவி, மிகுந்த களிப்புடன் அவனைப் பார்த்து, வாராய் குழந்தாய்! யாதவர்களுக்கெல்லாம் இரக்ஷகனாகி இராமனென்கிற திருநாமத்தோடே விளங்குகின்ற நீ, உனக்குச் சகோதரனும் எங்களுக்குப் பிராணனுமிருக்கின்ற ஸ்ரீகிருஷ்ணனோடே சுகமாயிருந்து யாவரையும் இரட்சிக்கக்கடவாயென்று வாழ்த்தினார்கள். அப்பால் ஸ்ரீபலராமன் பெரியோர்களாயிருப்பவர்களைப் பணிந்து, சிறியவர்களால் பணியப்பட்டுப், சமானவயதுடைய கோபாலர்களால் ஆலிங்கனம் பண்ணப்பட்ட பிறகு, அவரைப்பார்த்து அந்தக் கோபாலர்க ளொரு வார்த்தை சொல்லுகின்றார்கள்.

கேளீர் பலராமரே! துவாரகாபுரத்தில் வசுதேவர், உக்கிரசேனர், ஸ்ரீகிருஷ்ணபகவான் இவர் முதலிய சகலயாதவர்களும், ஸ்ரீருக்குமணிதேவி முதலிய சகலமாதர்களும் சுகமாயிருக்கின்றார்களா? என்று க்ஷேமங்களை விசாரித்து, ஸ்ரீகிருஷ்ணபகவான் தங்களைப் பாலியத்தில் அநேக ஆபத்துக்களினின்றும் இரட்சித்தது முதலிய விளையாட்டுகளை நினைத்துத் துக்கித்துக்கொண்டு, அந்த ஸ்ரீகண்ணபிரான் எங்களை யெப்போதாவது நினைப்பாரோவென்று கேட்டார்கள். அப்போ கோபிகைகள் யாவரும் ஸ்ரீபலராமனைக் கண்டமாத்திரத்தில் ஆனந்தபரவசர்களாய் அவனைச் சூழ்ந்துகொண்டு, கேளீர் பலராமரே! துவாரகையில் வசுதேவர் தேவகி முதலியவர்கள் க்ஷேமமாக யிருக்கின்றார்களா? ஸ்ரீகிருஷ்ணபிரான் சகல ஸ்திரீகளோடே கூட இஷ்டமாய் விளையாடுகிற காலத்தில், எப்போதாவது பெண்களையும் தாய்தந்தையர்களான யசோதை நந்தகோபரையும் நினைக்கின்றாரா? நாங்கள் தாய், தந்தை, மாமன், மைத்துனன் இவர்கள் முதலியவர்களைத் துறந்து, நிலையில்லாத யிவருடைய சிநேகத்தை நம்பி மோசம்போயும், அவரிடத்தி லிருக்கின்ற அன்புமாத்திரம் எங்களைவிட்டு ஒழியவில்லை.

அந்த ஸ்ரீகிருஷ்ணபிரான் சனகாதியோகிகளையும் மோகப்படுத்துந் தன்மையுடையவராதலால், ஞானமில்லாதவர்களாயும் பேதைகளாயுமிருக்கின்ற நாங்கள் மோசம்போகக் கேழ்க்கவேண்டியதென்ன? அவரென்ன மோசக்காரராயிருந்தாலும் அவருக் கிணையாக ஒருவரையுஞ் சொல்லக்கூடாது. துவாரகாபுரத்திலிருக்கின்ற மாதர்கள் மெத்தவும் புத்திசாலிகளாதலால், எங்களைப்போல மோசம்போக மாட்டார்கள். சுகம் அனுபவிக்கிற அவர்கட்கும், துக்கம் அனுபவிக்கின்ற எங்களுக்கும், பொழுதுமாத்திரம் சமமாய்ப்போகிறது என்று சொல்லித் தங்களுடன் ஏகாந்தவார்த்தை சொன்னது அவர் கிரீடித்தது முதலியதுகளையு நினைத்துக்கொண்டு குரலைவிட்டழுதார்கள். அதைப்பார்த்த பலராமர் ஸ்ரீகிருஷ்ணசுவாமி சொன்ன வார்த்தைகளால் அவர்களைத் தேற்றி, பிரதக்ஷணஞ் செய்து நமஸ்கரித்து, ஸ்ரீகிருஷ்ணபகவான் மதுராபுரத்திற் கெழுந்தருளின பிறகு ஜநித்த கோபிகைகளோடே யமுனாதீரத்தில் பூரணகலைகளுடன் கூடிய சந்திரனை வாய்ந்த

தாய் மிகுந்த வாசனைபொருந்திய புஷ்பங்களினுடைய வாசனையுடன் தென்றலும் வீச மகாரமணீயமான வெண்மணற்குன்றினில் ஸ்ரீபலராமர் கிரீடிக்கின்றதை வருணன் தெரிந்துகொண்டு, தனது புத்திரியாகியும் அந்த ஆதிசேடனான ஸ்ரீபலராமருக்கு மனைவியாகியு மிருக்கின்ற வாருணியென்பவளை யமுனாநதி தீரத்திற்குப் போகச்சொல்லி அனுப்பினான்

அப்போது அந்த வாருணியானவள் யமுனை ஆற்றின் அருகிலிருக்கின்ற கடம்பவிருக்ஷத்தின் அருகிற் சென்று, பொதரிலிருக்கின்ற தேன்கூண்டானது பரிபக்குவகாலத்தில் வெளியினிற் பெருகுவதுபோல தேனுருவமாகப் பெருகினள். அந்தவாசனையுடனும் தாமரை ஓடைகளுடைய புஷ்பங்களின் வாசனையுடனும் தென்றல்வீச, அந்த ஆக்கிராணித்துக் கொண்டே அவ்வாறு உற்பத்தியான கடம்பமரத்தின் அருகிற்சென்று அந்தத் தேனைப் பானஞ் செய்தனர் இப்படி தமக்கு மனைவியான வாருணியென்கிற மத்தியத்தைக் கோபிகைகளோடு பானஞ்செய்து பெண்ணானைக் கூட்டங்களி னடுவில் விளங்குகின்ற ஐராவதம்போல நின்று கானஞ்செய்கின்ற ஸ்ரீபலராமரை ஆகாயத்திலிருக்கின்ற சகல தேவர்களும் பார்த்து வியப்புற்று புஷ்பமாரி சொரிந்தார்கள் துந்துமிமுதலிய அனேகவாத்தியங்கள் முழங்க தேவரிஷிகள் அந்த ஆதிசேடனுடைய பிரபாவங்களைச் சொல்லித் தோத்திரஞ் செய்தார்கள்

அப்போது கோபிகைகளுடன் மத்தியபானஞ் செய்து மதித்துக் கண்கள் சிவக்க அனேகவிதபுஷ்பங்களினால் அலங்கரிக்கப்பட்டு, நீலவஸ்திரமும் கவசகுண்டலமும், வைஜந்தியென்கிற புஷ்பமாலையுந் தரித்துப் புன்னகையுடன் விளங்குகின்ற ஸ்ரீபலராமர் அம்மடந்தைமார்களுடன் ஜலக்கிரீடைசெய்ய விரும்பி, பெருந்தூரத்திலிருக்கின்ற யமுனையைத் தமது அருகிலழைத்தனர் அதை அவள் கொஞ்சமேனும் லக்ஷியஞ் செய்யாமற் போனதையில் அது கண்ட பலராமர் கடுஞ்சினமடைந்து தமது கலப்பையைப் பிரவகிக்கின்ற யமுனாநதியிற்போட்டிழுத்தார். அந்த வேகம் பொறுக்கமாட்டாமல் அதித்துறையாக ஓடிவந்து, ஸ்ரீபலராமரைத் தெண்டன் சமர்ப்பித்து, அஞ்சலி கூப்பி ஒருவார்த்தை விக்கியாபனஞ் செய்கின்றனள்

கேளீர் சுவாமி உலகரக்ஷகரே! கியானமில்லாத பேதையான அடியேன் தேவரீருடைய பிரபாவத்தை அறியாமலிப்படிப்பட்ட அபராதஞ்செய்தேன் அதை மன்னித்துத் திருவுள்ளத்திற் கோபமில்லாமல் நடக்கவேண்டிய காரியத்தை யின்னபடியென்று ஆக்கியாபித்தால், அந்தப்படிக்கு நடந்துகொள்ளுகிறேன். என்று யமுனையால் பிரார்த்திக்கப்பட்ட ஸ்ரீபலராமரானவர் அவளைத் துன்பப்படுத்தாமல், அம்மாதர்களோடு அம்மகாநதியில் ஜலக்கிரீடை செய்து வெளியில் வருகிறார் அப்படிவருகிற ஸ்ரீபலராமருக்கு அவருடைய மனைவியான காந்தியென்பவள் நீலவஸ்திரங்களும் பூஷணங்களுங் கொண்டு வந்து சமர்ப்பித்து அலங்காரஞ் செய்தனள். சொர்ணத்தினால் அலங்கரிக்கப்பட்ட வெள்ளிமலைபோல விளங்கிக்கொண்டிருக்கின்ற ஸ்ரீபலராமர் அம்மடை

நதையர்களுடைய யிஷடததைப பூாததிசெயதனா அமமாதாகளும் சொற கலோகததிலும அடையபபடாத யினபததைப பலராம ராலடைநது, சதாகா லமும சுகிததிருநதாாகள

# அறுபத்தாறுவது அத்தியாயம்.

சந்தக் கலிவிருத்தம்

ஓதிடுமபவுணடரீக வாசுதேவனெனறிடும
ஆதவனிடததிறபஞச சாயுதஙகளுளளதால
நீதநினனிடததிருககு மாயுதஙகளுககென
தூதனெருவன சுவாமிபாலில வநதுசொலவ தாயினன

ஸ்ரீகிருஷணபகவானிடததில பவுண்டரீகவாசுதேவ னெனகிறவனுடைய தூதனவநது சுவாமியைபபாாதது, எமதாண . வனென பவுணடரீக வாசுதேவ னுடைய சஙகு சககிர முதலிய பஞசாயுதஙகளையும வாசுதேவனெனகிற பெய ரையும நீா வைததுககொண டிருககின றமையால அதை நிவாததிததுத தம மைபபணிநதா லனறி உமமைப பிராணனுடன வைககமாட்டோ மெனறு சொலலச சொனனுரெனறு கூற அதுகேடட ஸ்ரீகிருஷணபகவான அவ னுடன யுததததிறகுபோய ஜயிததாரெனறு சொலலபபடுகினறது.

கேளீா பரதசிரேஷடனென பரீக்ஷிததுமகாராஜனே ! குருதேசததிற கதி யனென பவுணடரீகனெனகிற அரசனென வன தான வாசுதேவனெனறுந் தனககு நிகரானவாகள உலாததில யாருமிலலை யெனறுங கருதி, புலியைப் பாாததுப பூனை சூடிககொணடது போல ஸ்ரீகிருஷண சுவாமியைபபோல் பாஞஜசனனியம எனகிற சஙகு, சுதரிசனம எனகிற சககிரம, கௌமோத கியெனகிற கதை, சாரஙகமெனகிற தனுசு நாநதகமெனகிற கததி, இவை முதலிய பஞசாயுதஙகளாடு ஆகாயததில பறககுமபடியான ஒருயநதிர கருடனும தஙகததினுற செயது, கவுஸதுப மெனகிற இரததினததைக் கழுததினிற பூணடுகொணடு, இபபடி நாநாவிதமாயிருககிற பகவதசின்னங் களைத தரிதது, தனனிடததிலிருககினற ஒருதூதனை அழைதது இநதபபிர காரஞ சொலலுகினறுன.

கேளாய தூதா ! நீ துவாரகாபுரஞ சென்று கிருஷ்ணனெனகிற கோ பாலனுடன் இதை யான சொனனதாகச சொலலுக அதாவது, நீ நநத கோபனுடைய புத்திரனுதலால உனது குலததிற் குரியதான மாடுமேய்க்குங்

தொழிலைவிட்டு, தின்றுகொழுத்துக் கண்டவனையெல்லா மடித்து, உலகத்தி லுள்ள மகாசனருடைய கற்பையழிக்க, உலகெலாம் பழிக்கும்படியான காரியங்களைச் செய்கிறாய். இதுவுமன்றி உலகத்திற் கேசவனென்ற வெனது வாசுதேவ நாமதேயத்தை உலகத்தாரைப்போல வைத்துக்கொண்டாலும், எனது பாஞ்சஜன்னியமென்கிற சங்கம், சுதரிசனமென்கிற சக்கிரம், கௌமோதகியென்கிற கதை, சாரங்கமென்கிற தனுசு, நந்தகமென்கிற கத்தி, கவுஸ்துபமென்கிற இரத்தினம், வைஜயந்தியென்கிற பூமாலை, ஆகாயத்தினிற் பறக்கும்படியான சொர்ணகருடன், இவைமுதலிய விருதுகளை நீயாய்ச் சிருஷ்டி செய்துகொண்டு யென்னைப்போ லாகவேண்டு மென்று கருதியிருக்கின்றாய்.

கொக்கானது எத்தனை வெண்மைபொருந்தியதா யிருந்தாலும் அன்னப் பறவைக் கிணையாகுமோ? அதுபோல வெனக்கிணையாவையோ? என்போ லுனக்கு ஈஸ்வரனென்கிற கணிசமுண்டாகுமோ? நீ யிப்படித் தகாதவேலை செய்துகொண் டிருக்கின்றமையால் உன்னைச் சிட்சிக்க யாருமில்லையென் றெண்ணவேண்டாம் யான் சித்தமாயிருக்கின்றேன் அதை யறிந்து உனது பிராணனிடத்தி லாசையுண்டா யிருந்தால், எனது வாசுதேவனென்கிற நாமதேயத்தையும் பஞ்சாயுதமுதலிய சகலவிருதுகளையு நிவர்த்தித்து இந்த வேலைகள் தெரியாமற் செய்தேனென்று என்னைப் பணிந்தால் உன்னிடத்தில் அனுக்கிரகித்து அந்தத் தப்பிதத்தை மன்னித்து இரட்சிக்கிறேனென்று சொன்னதாய் நீ போய்ச்சொல்லென்று தூதனுடன் சொல்லியனுப்பினான். அவனுமவ்வண்ணம் ஸ்ரீகிருஷ்ணபிரா னண்டையிற்சென்று அம்மொழியாவையுமுரைக்க, அதுகேட்டு அச்சபைதனிலிருந்த யாவரும் நகைத்தார்கள்.

அப்போ புன்னகையுடன் தூதனைப் பார்த்து ஸ்ரீகிருஷ்ணபகவா னொரு வார்த்தை அருளிச்செய்கின்றார்: கேளாய் தூதா! நீயெந்தவிருதை யென்னை நிவர்த்திக்கச் சொன்னாயோ? அதினுடைய மகிமையையும், எந்த வாசுதேவனென்கிற நாமதேயத்தை மாற்றிக்கொள்ளச் சொன்னாயோ? அதையும் நாளையுத்தத்தில் காண்பாய் யான் யுத்தத்திற்குச் சன்னத்தமாயிருக்கின்றேன். அவனையும் ஜாக்கிரதையாக வரும்படி யான்சொன்னதாகச் சொல்லென்று கூறினார் அதுகேட்ட தூதன் ஸ்ரீகிருஷ்ணபிரானைப் பிரதக்ஷணஞ்செய்து நமஸ்கரித்து, அவரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு, பவுண்டரீக வாசுதேவ னண்டையிற்சென்று, ஸ்ரீகிருஷ்ணபகவான் அருளிச்செய்த வார்த்தைகள் யாவும் உரைத்தனன் அதுகேட்ட பவுண்டரீக வாசுதேவன் நான்கு அக்குரோணி சேனைகளுடன் காசிதேசத்திற் கதிபனையுங்கூட அழைத்துக் கொண்டு யுத்தத்திற்கு வந்தான்

அதற்குமுன்னமே ஸ்ரீகிருஷ்ணபகவானும் சன்னத்தமாகப் புறப்பட்டு, சக்கிரம், கதை, கோதண்டம், இவைமுதலிய பஞ்சாயுதங்களைத் தரித்துக் கொண்டு, ஸ்ரீவத்சமென்கிற மறுவைத் திருமார்பினில் வாய்ந்தவராய், பீதாம்

பரதாரியாய வனமாலையால் அலங்கரிக்கப்பட்டவராய், கருடக்கொடியுடனிருக்கின்ற திவ்விய இரதமேறி, விலையில்லாத இரத்தினங்களிழைத்த கிரீடத்தையும் குண்டலத்தையுந்தரித்துக்கொண்டு வருகின்றார். இப்படி வருகின்ற ஸ்ரீகண்ணபிரானைக்கண்ட பவுண்டரீகனும் வேஷதாரியைப்போல தனது வாசுதேவலக்ஷணத்திற்குரிய பிருதுகளுடன் ஸ்ரீகிருஷ்ணஸ்வாமிக்கெதிரே வந்து நின்றான். அதுகண்ட ஸ்ரீகிருஷ்ணஸ்வாமி வியப்புடன் சிரித்துக்கொண்டிருக்கையில் பவுண்டரீக வாசுதேவனுடைய சேனையானது ஸ்ரீபகவான்மீது சூலம் கதை முதலிய ஆயுதத்தையும், நாராசமுதலிய பாணத்தையும் பிரயோகஞ்செய்தார்கள்.

அதற்கு ஸ்ரீபகவான் சொஞ்சமேனும் சலியாமல், தமது நாராசபாணங்களாலும், சுதரிசனமென்கிற திவ்வியாயுதத்தினாலும், அவர்களுடைய பாணங்கள் ஆயுதங்களியாவையும் சூர்ணித்து, அந்த நான்கு அக்குரோணி சேனைகளையுமாய்த்து அவர்களது தேர், குதிரை, சாரதி, கேடகம், இவைமுதலியதுகளைத் துணித்து, அவனைப் பாரியாயப் பூமியில் நிறுத்தி, அவனைப் பார்த்து ஒருவார்த்தையருளிச்செய்கின்றார். கேளாய் பவுண்டரீகனே! நீ முன்பு தூதனுடன் சொல்லியனுப்பிய வண்ணம் யான்செய்கிறேன். அதைக் கண்டுகொள்ளுக என்று அவனது சக்கிரமுதலிய ஆயுதங்களியாவையுந் துணித்து, கருடனையுந் தமதுகத்தியினால் கண்டித்து, அந்தப் பவுண்டரீகனையும் அவனுக்குச் சகாயமாய்வந்த காசிராஜனையுமாய்த்துப்போட்டு, சகல தேவகந்தருவ சித்தசாத்தியர் முதலியவர்களால் துதிக்கப்பட்டு துவாரகாபுரஞ்சென்றனர். அந்தப் பவுண்டரீகன் சர்வகாலமும் சுவாமியைத்தானே துதித்துக்கொண்டிருந்தமையால் 'யோகிகளுடைய பதவியை அடைந்தான்.

அப்பாலந்தக் காசிராஜாவின் குமாரனான சுதக்ஷணன் தனது தந்தை இறந்ததற்குச் செய்யவேண்டிய உத்தரக்கிரியைகளை நிறைவேற்றி, தனது தந்தையைக்கொன்ற ஸ்ரீகிருஷ்ணபகவானைக் கொல்லவேண்டுமென்று புரோகிதருடன் சிவபெருமானை உத்தேசித்துத் தவஞ்செய்தனன். அவனுக்குச் சிவன் பிரசன்னமாகினர். அவரை சுதக்ஷணன் பயபக்தியுடன் பணிந்து, தேவரீர் யென்றன்புள்ள தெய்வமே! என்றந்தையைக் கொன்ற ஸ்ரீகிருஷ்ணபகவானைக் கொல்லவேண்டும் அதற்குத்தக்க உபாயத்தை அனுக்கிரகிக்கவேண்டு மென்று கூறினன். இப்படிகூறிய சுதக்ஷணனுடைய வசனத்தைக் கேட்ட சிவபெருமானொருவார்த்தை அருளிச்செய்கின்றார். கேளாய் சுதக்ஷணா! தக்ஷிணாக்கினியில் அபிசாரவிதியினாலே ஓமஞ்செய்தால் உனது கருத்தின்படி பயனடைவாயென்றுகூறி அந்தர்த்தானமாகினர். பிறகு சுதக்ஷணனும் புரோகிதருடன் தட்சிணாக்கினியில் ஓமஞ்செய்தான்.

அதிலிருன்றும் ஒருபூதமானது சிகப்புக் கம்பளிபோல் தலைமயிரும், அக்கினிபோன்ற கண்களும், பயங்கரமான உருவமும், திகம்பரமாய தலையு

விரித்துக் கொண்டு சூலத்தைக் கரத்தினிற்றாங்கி ஒருபனைமரப் பிரமாணமான கால்களுடன் பூமிக்கடியிருந்து வெளிப்பட்டது. அந்தப் பூதத்தை சுதக்ஷணனபார்த்து, துவாரகாபுரத்தைத் தகிக்கச்சொல்லி அனுப்பினன். அதுகேட்ட அந்தப்பூதமானது அநேககோடிபிரம பிசாசுகளுடன் துவாரகாபுரத்தைச் சுற்றிக்கொண்டு எரிக்க, அதுகண்டு அவ்விடத்திலுள்ள ஜனங்கள் பயந்து. சபைதனில் சதுரங்கமாடிக் கொண்டிருக்கிற ஸ்ரீகண்ணபிரானண்டையிற் சென்று, ஜகதீசா! ஏதென்ன? யுகாந்தகாலம் போல ஒரு அக்கினியானது நமது பட்டணத்தைச் சுற்றிக்கொண்டு தகிக்கின்றது. ஆதலாலெங்களை இரட்சிக்கவேண்டும் என்று கிலேசப்படுகின்ற ஜனங்களைக் கண்ணபிரான் பார்த்து, அவர்கட்கு அபயப்பிரதானஞ் செய்து தமது வலதுபக்கத்தில் அஞ்சலிசெய்துகொண்டிருக்கின்ற சக்கிரத்தாழ்வாரை நோக்கி, கேளாயசுதர்சனா! நீ அந்த அக்கினியைப்போக்கி இவர்களுடைய துன்பத்தை நிவாரணஞ் செய்யென்று ஆக்கியாபித்தனர்.

அதுகேட்டு மகாபாக்கியமென்று சொல்லி, கோடிசூரியனை நிகர்த்த ஒளியினைவாய்ந்த அந்தச் சுதர்சனாழ்வான் வெகுவேகமாக ஓடிவந்து அந்தப் பூதத்தைச் சுற்றிக்கொண்டார். அப்போதந்தப் பூதமானது சக்கிரத்தாழ்வானுடைய வெப்பம் பொறுக்கமாட்டாமல் ஓடத்தொடங்க, அதைவிடாமல் பின்றொடர்ந்துபோய அந்தக் காசிராஜாவினது மைந்தனான சுதக்ஷணனையும், அவனது புரோகிதனையும், அங்குள்ள ஜனங்கள் யாவரையும், அந்தப் பூதத்துடன் தகித்துச் சாம்பலாக்கச் செய்துபோட்டு, அந்தச் சுதர்சனாழ்வான் செயப்பிரதாபத்துடன் யதாப்பிரகாரம் ஸ்ரீகண்ணபிரானுடைய சன்னிதானத்தில் வந்துசேர்ந்தனர்.

# அறுபத்தேழாவது அத்தியாயம்.

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

பாரியபலரா மேகதிரன ரைவதகபா வதத்தில
நாரியர் தங்களோடு நண்ணிடுஞ் சமயந்தனனில
சீரியதுவித னென்போன ஸ்ரீபலராமா தனனை
நேரினிற பரிகாசத்தால நிந்தித்ததனைச் சொல்வாம்

ஸ்ரீபலராமர் ரைவதகபாவதத்தில கோபிகைகளுடன் விளையாடும்போது வானர துவிதனென்பவன் ஸ்ரீபலராமரைப் பரிகாசஞ்செய்ததும், அவனை ஸ்ரீபலராமர் மாய்த்ததுஞ் சொல்லுகின்றன

கேளீர் இராஜசிகாமணியான பரிக்ஷித்து மகாராஜனே! பிராக்ஜ்ஜோதிடாதிபதியான நரகாசுரனுக்கு இஷ்டனாயும், சுக்ரீவனுக்கு மந்திரியாயும், மயிந்தனென்கிற வானரனுக்குத் தம்பியாயுமிருக்கின்ற த்விவிதனென்கிற வானரன் தனக்கு அன்பனான நரகாசுரனை ஸ்ரீகிருஷ்ணஸ்வாமி கொன்றாரென்றுணர்ந்து, அந்த விரோதத்தினால் நானாவிதங்களான தேசங்கள் பட்டணங்கள் முதலிய விடங்களெல்லாம் நெருப்புகளைப் போட்டுக் கொளுத்தி, சிலவிடங்களில் பருவதங்களைப்போட்டு நாசஞ்செய்கிறதான அக்கிருத்தியங்களை அனேகமாகச் செய்துகொண்டு, துவாரகைமுதலிய சகலதேசத்தையும் உபத்திரவித்து, சமுத்திரமத்தியிலிருக்கிற பட்டணங்கள் முதலியதுகளை முழுகடித்து, கோவர்த்தன பர்வதத்தில் ரிஷிகளுடைய ஆசிரமத்திலிருக்கின்ற மரங்களைமுறித்து, மானிடரைப்பிடித்து, குகைதனி லடைத்து. அக்குகையின் வழிதனைப் பாறைகளால் மூடி, அப்பால் ரைவதக பர்வதத்திற்குச் சென்று, கோபஸ்திரீகளுடன் விளையாடிக்கொண்டிருக்கின்ற ஸ்ரீபலராமரைக்கண்டு, ஒருமரத்தின் மீதேறி புஷ்பங்களை உதிர்த்து அட்டகாசஞ்செய்தனன்.

அதுகேட்ட கோபஸ்திரீகள் வியப்புடன் நகைத்தார்கள். அவர்களை அவ்வானரன் பார்த்துப் புருவங்களை நெறித்துக்கொண்டு, அவர்கள் யாவரையும் பரிகாசஞ்செய்து துடுக்குச்செய்யலுற்றான். அதைப்பார்த்து ஸ்ரீபலராமர் அவன்மீது ஒருகல்லை யெறிந்தனர். அதை அவன் தப்பித்துக்கொண்டு ஸ்ரீபலராமருடைய அருகினிற்சென்று, அவரிடத்திலிருந்த மத்தியத்தினுடைய குடத்தையுமுடைத்து, அவருடைய வஸ்திரத்தையும் பறித்து, கோபிகைகளுடைய ஆடையையும் பிடுங்கிச் சின்னாபின்னமாகக் கிழித்தனன். இதுகளைப்பார்த்த ஸ்ரீபலராமர் கடுஞ்சினமடைந்து, இனியிவனைச் சங்கரிக்காவிடில் உலகத்தை நாசஞ்செய்வானென்று கருதி, உலக்கையுங் கலப்பையுங் கரத்தினிற் றாங்கினர். அதுகண்ட அந்தத்துவிதன் வேகமாக ஓடிவந்து, ஒரு ஆச்சாமரத்தை வேருடன் பிடுங்கித் தனது பலங்கொண்டு சுழற்றி ஸ்ரீபலராமரது சிரசின்மீது மோதினன். அதைப்பலராமர் கரத்தினிற்றாங்கி, தமது சுநந்தமென்கிற உலக்கையால் அந்தவானரனுடைய சிரசிலடித்தார். அந்த அடியினால் தலைபிளந்து, இரத்தம் பெருகுவதையும் லட்சியஞ்செய்யாமல் வேறொரு விருக்ஷத்தைப் பிடுங்கிக்கொண்டு பலராமரை அடித்தான். அதையும் ஸ்ரீபலராமர் முசலத்தினாற் பிளந்து போட்டார்.

அப்போவானரன் கடுஞ்சினமடைந்து, தனது இரண்டு கரத்தினால் ஸ்ரீபலராமரைக்குத்தினன். அதையுமவர் லட்சியஞ்செய்யாம லிருப்பதுகண்டு பாறைகளைக்கொண்டு அவர்மீது கல்மழையாகப் பொழிந்தனன். அதையும் உலக்கையினால் சூரணித்து, கலப்பையையும் உலக்கையையுங் கீழேவைத்துப் போட்டு, வச்சிராயுதத்திற் கொப்பான தமது முஷ்டியினால் அந்தவானரனுடைய கழுத்தினி லோங்கிக்குத்தினர். அந்தக்குத்தினால் வானரனுக்குத் தலைபிளந்து, வாயினாலும் மூக்கினாலும் இரத்தங்களைப் பெருக்கிக்கொண்டு

பிராணனிழந்து அதமானான். அதைப்பார்த்த சகலரிஷிகளும் ஸ்ரீபலராமரைத் துதிசெய்தார்கள். தேவர்கள் புஷ்பமாரி சொரிந்தார்கள் துந்துபி முதலிய வாத்தியங்கள் முழங்கின. இப்படி ஸ்ரீபலராமரானவர் சகலசம்பிரமத்துடன் கோபிகைகள் சம்பந்தராய் கோகுலஞ்சென்று, சகலகோபாலர்களையுங் கோபிகைகளையும் சந்தோஷப்படுத்தி, அவர்களிடத்தில் விடைபெற்றுக்கொண்டு, இரதாரூடராய் சகலவிஜயவீர பராக்கிரமத்துடன் தமது துவாரகாபுரத்திற் கெழுந்தருளினார்.

# அறுபத்தெட்டாவது அத்தியாயம்.

கலி விருத்தம்

சூதுசெய்துரி யோதனராஜனும்
மாதுலக்ஷ்மணைக்கு மணஞ்செய்வதாய்
சோதித்தேசருஞ் சுயம்வரஞ்சாட்டிட
சேதசாம்பனுக்கு மணஞ்செய்தனர்

அஸ்தினாபுரத்திற் கதிபனான துரியோதன மகாராஜன் தனது குமாரத்தியான லக்ஷ்மணைக்குச் சுயம்வரஞ்சாட்டினதும், அதற்கு ஸ்ரீகிருஷ்ணபிரானுடைய குமாரன் சாம்பனென்பவன், சென்று அக்கன்னியைப் பலவந்தமாயெடுத்துக்கொண்டு போனதும், அவனைக் கவுரவர்கள் பிடித்துக் காவற்படுத்தியதும், ஸ்ரீபலராமரெழுந்தருளி அவனை விடுவித்துத் தமது பட்டத்தில் கட்டித்த துரியோதனனுடைய அஸ்தினாபுரி பட்டணத்துடன் கங்கையிற்கவிழ்க்க யத்தனித்ததும், அப்போ சகல கவுரவர்களும் ஸ்ரீபலராமரைப் பணிந்து துதிசெய்து அந்த லக்ஷ்மணையைச் சாம்பனுக்கு விவாகஞ்செய்து கொடுத்ததனுஞ் சொல்லுகின்றன.

கேளீர் புருவம்சோற்பவனான பரீக்ஷித்துமகாராஜனே! உமது கூட்டல் தனான திருதராஷ்டிரனுடைய மைந்தனான துரியோதனனுக்கு லக்ஷ்மணையென்கிற கன்னிகையிருந்தாள், அவளுக்குத் துரியோதனன் சுயம்வரஞ்சாட்டுகிறபோது, ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய பட்டமகிஷிகளில் ஜாம்பவதியினுடைய மைந்தனான சாம்பனென்கிறவன் சகலவரசர்களும் பார்த்திருக்கப் பலவந்தமாய் லக்ஷ்மணையைத் தூக்கிக்கொண்டேகினன் அதுகண்ட வீஷ்மன், துரோணன், துரியோதனன், இவர்முதலிய கவுரவர்கள் கடுஞ்சினமடைந்து, அச்சாம்பன் பாலனாயிருந்தாலும் நம்மை லக்ஷியஞ்செய்யாமலெவ்வளவு தைரியத்துடன் நமது கன்னியாரத்தினத்தை எடுத்துக்கொண்டேகினன்? இவனைக் காவற்படுத்த வேண்டும், என்று கருதி அவன் பின்றொடர்ந்து [illegible] வருவித்தார்கள். அப்போ சாம்ப

பின் கொடிய கோபங்கொண்டு, அக்கவுரவர்கள்மீது சரவருஷங்களை வருஷித்து நாநாவிதமான சங்கடத்தை யுண்டுபண்ணி, சிங்கமானது மான்கூட்டத்தைப் பார்ப்பதுபோல் பார்த்துக்கொண் டிருந்தான்.

இப்படி பார்த்துக்கொண் டிருக்கையில் அவனுடைய கரவேகத்தையுந் தைரியத்தையும் பராக்கிரமத்தையும் பார்த்து வியப்புற்ற கவுரவர்கள் அவனது சமீபத்திற்சென்று, ஒருவன் வில்லையும், ஒருவன் குதிரைகளையும், ஒருவன் கொடியையும், ஒருவன் சாரதியையும், இப்படி பலவாறாகச் சின்னபின்னஞ்செய்து, அவனைப் பிடித்துக் காவற்படுத்தினார்கள். அதைச் சகல வேதாந்த சாஸ்திரத்தின் தத்துவத்தை உணர்ந்து சொல்லவல்லவரா யிருக்கின்ற ஸ்ரீநாரதமாமுனிவர் கண்டு, துவாரகாபுரஞ்சென்று, இந்த விருத்தாந்தங்களை ஸ்ரீகிருஷ்ணபகவானுடனும் உக்கிரசேன மகாராஜாவுடனும் முறைப்படி அறிவித்தார்கள். உடனே அவர்கள் யுத்தத்திற்கு சன்னத்தரானார்கள். அப்போது ஸ்ரீபலராமர் அவர்களை நிறுத்திவிட்டு, உத்தவருடன் இரதாரூடராகி அஸ்தினாபுரஞ் சென்று, கவுரவர்களால் அர்க்கியபாத்திய முதலியவற்றால் பூஜிக்கப்பட்டு, திருதராஷ்டிரன் முதலிய பெரியோர்களைச் சாஷ்டாங்கமாகப் பணிந்து, அவர்களுடைய உத்திரவின்மீது ஆசனத்தி லெழுந்தருளி, திருதராஷ்டிரனைப் பார்த்து ஒருவார்த்தை அருளிச்செய்கின்றார்.

வாரீர் மகாராஜனே! நீர் மேன்மையான குலத்திற்பிறந்து, மிகவுந் தர்மசிந்தை யுடையவர்களென்று பெயர்பெற்ற பெரியோர்களான உங்களுக்கு நியாயஞ் சொல்லவேண்டுமோ? மிகவும் பாலனாகியும் ஒண்டிக்காரனாகியு மிருக்கின்ற சாம்பனுடன் யுத்தஞ்செய்து அவனைக் காவற்படுத்தலாமா? நீங்கள் யாதவர்களுக்குப் பந்துக்களும் இஷ்டர்களாயு மிருப்பதால், உங்களுக்குப் பொறுத்தும் சகலமாகுமென்று மன்னிக்கிறோம். இனி ஒரு நிமிஷமேனும் அட்டிசெய்யாமல் சாம்பனை அனுப்பிவிடச் சொல்லி, எமதாண்டவனான உக்கிரசேனமகாராஜா ஆக்கியாபித்தார் என்று ஸ்ரீபலராமர் அருளிச்செய்த வார்த்தைகளைக் கேட்டு வியப்புற்ற கவுரவர்கள் கடுஞ்சினமாகி, ஸ்ரீபலராமரைப் பார்த்து ஒருவார்த்தை சொல்லுகின்றார்கள்.

கேளீர் பலராமா! உக்கிரசேன மகாராஜா ஆக்கியாபித்தது வேரத்தின மிழைத்த கிரீடந்தரித்துக்கொண்டு சிரசின்மீது பாதரக்ஷையை வைத்துக்கொள்வது போ லிருக்கின்றது. சகலைசுவரியங்களும் பூரணமாய்ப் பொருந்திய யாதவர்கள் பாவிரீடத்திலும் பணிவிடைசெய்யக் காத்திருப்பவர்கள். இவர்களை யாங்கள் மேன்மைப்படுத்தி யானைமகாராஜாவுக்குக் குகதியை விவாகஞ்செய்து, சமபந்தியென்று உபசரித்து, போஜனம் பங்கலக்கமுதலிய உபசாரங்களைச் சமமாகச் செய்து, உபய சாமரங்கள் விசிறியாதிய சங்கங்கள், வெண்குடைகள், நவரத்தினமிழைத்த கிரீடங்கள், இவைமுதலியவை தரித்துக்கொண்டு, சிங்காதனத்தி லிருந்து அரசாக்ஷிசெய்ய அவைகளுக்கெல்லாம் உபேக்ஷை

செயது மேன்மைபபடுததியபடியால, பாம்புககுப பாலவார்த்து வளாத்தது போலாயிறறு இவாகள மெதத இழிகுலததோராதலால அககுலததிற குரிய தாக யெமமைததானே வளாகதுககொணடு இபபடிபபடட அறபமானவாாத்தைகளைச சொலலுமபடியாகிறறெம ஆதலாலிபபடிபபட்ட துஷடாகளுக்கு மகாராஜயோககியமான சிஙகாதனமுமம, வெணகுடையுமம, யோககியமலல. ஓ நண்பினாகளே ! நீஙகள் யாவருமபோய சீககிரததில யாவையுமபறிததுக் கொணடு வாருஙகள எனறு சொனனவாாததைகளை ஸ்ரீபலராமா கேழவியுற்று, மிகுநத கோபததுடன அககவுரவாகளைககுறிதது ஒருவாாததை அருளிசசெயகினறாா.

கேளீா கவுரவாகளே ! இபபோ நீங்கள கூறினது நிஜநதான கொடிய துஷ்டாகளான உஙகளை யாக்ததிறகுரிய பாததிரததை ஸபரிசிதத சுனகத்தை அடிபபதுபோல அடிககடி சிக்ஷிகக யததினஞசெயத சாவசகதிமானான ஸ்ரீகிருஷணபிரானைச சமாதானபபடுததி யாவரும ஒருமிததிருககவேணடுமெனறு யானே யிவவிடததிறகு ஒருமைபபாடு செயயவநதிருகக, எனது கருததை அறியாமறபோயினீா மேலும, தேவேநதிரனிருநது அரசாடசி செயகினற சுதாமமெனகிற சபையிலிருநது செஙகோலசெலுததுகினற உககிரசேன மகாராஜனுடைய ஆககினையை இநதிரன முதலிய திககுபபாலாகள சிரசாக வகிததிருகக, அபபடிபபடட மேனமையுளள உககிரசேனமகாராஜாவையும இழிவாகச சொனனீாகள அதுவுமனறி, ஜகதீஸவரனான ஸ்ரீ கிருஷணபகவான சுதாமமெனகிற சபையையுமம, தேவதா யோககியமாயும திருபபாறகடலிற பிறநததாயுமிருககினற பாரிஜாததருவையுமம, பூமியிற கொணடுவநது அனுபவிககினறாா

யானுமம, பிரமன, உருததிரன, ஸ்ரீ மகாலக்ஷமி, இவாள முதலியவாகளுமம, அவருடைய திருவடித தூளைச சிரசிலதரிததது, அவரது திருவடியிலுணடான கஙகாதீரததில ஸநானஞசெயது, அநதப பிரபாவததாலவாகள மேன்மையடைநதிருககினறாாகள அபபடிபபடட மகிமையினையுடைய அநத ஸ்ரீ கிருஷணபிரானையுமம, உககிரசேன மகாராஜாவையுமம, பலவாறாக நிநதிததபடியால, நீஙகள யாவரும வததததிறகுரியவாகளே யனறி வேறலல எனறு கடுஞசினமாய ஆதிசேடனாகிய ஸ்ரீபலராமா சீககிரமததி லெழுநதிருநது, இவாகளை லக்ஷியஞசெயது போாசெயயககூடாது இநத அஸதினாபுரததையே போததுக கஙகையிற கவிழததுபபோடுவோம எனறு தமது ஆயுதமாகிய கலபபையை அநத அஸதினாபுரததிறகுத தெனபுறம நாட்டிக கிளபபினாா. அபபோ அநத அஸதினாபுரம ஜலததின மீதிருககினற தெபபததைப போல் அசைவதைபபாாதது, துரியோதனாதிகள மிகவுந திகிலடைநது, இநதப பலராமரைச சரணமடைநது சமாதானஞசெயதாலனறி நமககுப பிராணன தக்கமாடடாதெனறு கருதி, யாவருமோடிவநது, ஸ்ரீபலராமருடைய திருவடிகளைபபறறித தெணடன சமாபிதது, அஞசலிகூபபிக கொண்டு துதிககின்றாாகள்.

ஞ்கேளீர் சுவாமி பலராமா! தேவரீருடைய திவ்விய சக்தியை யாங்களுணராமற்செய்த அபராதத்தை மன்னிக்கவேண்டும். சகல உலகுக்கும் ஆதாரமாகி சிருஷ்டிக்கவும், இரக்ஷிக்கவும், சங்கரிக்கவுமாக விருக்கின்ற தேவரீருக்கு நாங்கள் செய்யவேண்டியகாரிய மொன்றுமில்லை. அக்கியானத்தினாற்செய்த அபராதங்களை மன்னித்து இரட்சித்தருளவேண்டும், என்று வினவுகின்ற துரியோதனாதிகளிடத்தில் பலராமர் அருள்கூர்ந்து, தமது கலப்பையை வாங்கிப்போட்டார். இப்போதும் அந்த ஸ்ரீபலராமருடைய பிரபாவ மிப்படிப்பட்டதென்று தெரியும்படி, அந்த அஸ்தினாபுரத்திற் றென்றிசை கிளம்பினபடியே யிருக்கின்றது. அப்பால்வர்கள் சாம்பனையும் லட்சுமணை யென்கிற கன்னிகையையும் முன்னிட்டுக்கொண்டு, அவர்களுக்கு அங்கவணியாக சொத்தினுடைய ஆபரணத்தால் அலங்கரிக்கப்பட்ட இரண்டுலக்ஷம் யானைகளும் சாவாலங்காரங்களோடுங் கூடிய லக்ஷத்திருபதினாயிரங் குதிரைகளும், சூரியனைநிகர்த்த ஒளியினையுடைய ஆயிரம் இரதங்களும், நல்ல ரூபலாவண்ணிய சவுந்தரியவதிகளான ஆயிரம் ஊழியப்பெண்களும், அனேக ஆடையாபரணங்களுங் கொடுத்துச் சந்தோஷப்படுத்தினார்கள். ஸ்ரீபலராமர் அதுகளியாவையும் பெற்றுக்கொண்டு, தமது குமாரனை சாம்பனையும் லக்ஷ்மணையையும் இரதத்தின் மீதேற்றிக்கொண்டு, சகல கவுரவர்களாலும் துதிசெய்யப்பட்டு, துவாரகாபுரத்திற் கெழுந்தருளி, நடந்த விருத்தாந்தங்கள் யாவையும், ஸ்ரீகிருஷ்ண பகவானுக் குரைத்து, சாம்பனுக்கும் லக்ஷ்மணைக்கும் சகலமான ஜனங்களுங் கொண்டாடும்படியாக சாஸ்திரவிதியின்படி விவாகஞ்செய்து சுகித்திருந்தனர்.

# அறுபத்தொன்பதாவது அத்தியாயம்.

கலி விருத்தம்

ஏககாலத்தி லெஞ்சலிலாககண்ணன
மோகமாக விவாகமுடித்ததை
வேகமாகயாழ வல்லோனதைக்கேட்டு
சோகமுற்றுத் துதி நதைச் சொல்லுவாம

ஸ்ரீகிருஷ்ணபகவான் பதினாறாயிரத்து அறுநூறுமாதர்களை ஓரேமுகூர்த்தத்தில் விவாகஞ்செய்ததை தவத்திற்சிறந்த நாரதமாமுனிவர் கேழ்வியுற்று, அவர்கள் யாவரிடத்திலும் ஸ்ரீகிருஷ்ணபகவான் வாசஞ்செய்த ஆச்சரியத்தைக்கண்டு சேவித்துத் துதிசெய்த விருத்தாந்தங்களைச் சொல்லுகின்றது.

கேளீர் ஜனமேஜயனுக்குத் தந்தையாகிய பரிக்ஷித்து மகாராஜனே! ஸ்ரீகிருஷ்ணபகவான் நரகாசுரனை அதஞ்செய்து கொண்டுவந்த பதினாறாயிரத்து

அறுநூறு இராஜகன்னிகைகளை ஒரு முகூர்த்தத்தில் விவாகஞ்செய்ததை தபோநிஷ்டரான நாரதர் கேள்வியுற்று, அம்மடந்தையர்கள் யாவருடனும் வியாபித்திருக்கின்ற ஸ்ரீ கண்ணபிரானது ஆச்சரியமான செய்கையைக் கண்டு சேவிக்கவேண்டுமென்று கருதி, மிகவும் மனங்களிக்கத் தக்கதான தளிர்களாலும், புஷ்பங்களாலும், கனிகளாலும், பூரணமாய் நிறைந்திருக்கின்ற விருக்ஷங்களினது புஷ்பங்களிலிருக்குந் தேனையுண்டு மகிழ்ந்து ரீங்காரஞ் செய்கின்ற வண்டினங்களால் மலிந்தும், மிகவு மனதை அபகரிக்கத் தக்கதாயத் தொனிக்கிற குயில்கள், மயில்கள், தாமரையோடைகளிலிருக்கின்ற அன்னங்கள், இவை முதலியவைகளால் நிறைந்தும்; அனேக புஷ்பவாசனைகளுடன் வீசுகின்ற தென்றலுடனுங் கூடிய அநேக நந்தவனங்களை வாய்ந்தும், சொர்ணமயமாயும் நவரத்தினங்க ளிழைக்கத்தக்காயு மிருக்கின்ற ஒன்பதுலக்ஷம் உப்பரிகைகளும், படிகமயங்களான எழுலக்ஷம் உப்பரிகைகளும், வெள்ளியினுலுங் காரையினாலும் அனேக உப்பரிகைகளும், விசாலமான தெருக்களும், வித்தியாசமில்லாமல் நூல்பிடித்தது சொர்க்கத்திற்குச் சமானமாகச் சகல சம்பத்துக்களால் நிறைந்தும், இராஜவீதி முதலிய தெருக்களில் பனிநீர் சந்தன முதலிய வாசனைவஸ்துக்களைத் தெளித்தும், புஷ்பங்களிறைத்தும், தூபதீபங்கள் போட்டும், தோரணங்களுங் கொடிகளுமெடுத்துக் கட்டியும், நான்கு பக்கத்திலுந் திவ்வியாலங்காரங்களுடன் கூடிய துவாரகாபுரியைக் கண்டார்.

அந்தத் துவாரகாபுரத்தில் ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய மனைவியர்களின் வீடுகளிற் சிறந்தும், விசுவகர்மாவால் நிருமிக்கப்பட்டும், சூரியமண்டலத்திற்கு நிகர்த்த உயர்வினைவாய்ந்தும், உத்தமங்களான பவழஸ்தம்பங்கள் நாட்டியும், படிகமயங்களான போதிகைகள் வைத்தும், மரகதமயங்களான சுவர்கள் சமைத்தும், அதிக விப்புடைய மேற்கட்டுகள் கட்டியும், அதற்கு நான்கு பக்கத்திலும் முத்துக்களினால் ஜாலதொங்கவிட்டும், பச்சைகளினால் தளவரிசைசெய்தும், நவரத்தினமிழைத்த அனேககட்டில்களுக்கு முகமலினால் மெத்தை திண்டு தலையணைகள் போட்டும், திவ்வியமாகிய கண்ணாடிகள் கட்டியும், நல்ல உத்தம வம்சத்திற் பிறந்து மிகுந்த சவுந்தரிய சாலிகளாயும், சகலாபரண பூஷிதர்களாயும், யவ்வனவதிகளாயு மிருக்கின்ற ஸ்ரீருக்குமணி தேவியினது பரிசாரக ஸ்திரீகளால் நிறைந்தும், மிகவும் பலபராக்கிரமசாலிகளாயும், திவ்வியாபரணங்களைத் தரித்தும், திவ்வியாயுத பாணிகளாயுமிருக்கின்ற ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய பரிசாரகர்களால் மலிந்தும், நான்குபக்கத்திலும் நவரத்தின தீபங்களை வைத்தும், அதில் சாம்பிராணிப்புகைகள் சாளரத்தினால் வருதலை மயில்கள் கண்டு மேகங்களென்று பிரமித்து நடித்தும், இப்படி சகலசம்பத்துக்களுக்கும் நிதியாயிருக்கின்ற ஸ்ரீருக்குமணி தேவியினுடைய கிரகத்தில் வாசஞ்செய்கின்ற சர்வலோகேசுவரனான ஸ்ரீகிருஷ்ணபகவானை மிகவும் பயபக்தியுடன் சகல தர்மத்தையுமறிந்து உபதேசிக்கத்தக்க நாரதரானவர் சாஷ்டாங்கமாகச் சேவித்தார்.

அப்போ ஸ்ரீகிருஷ்ணபகவான் சகலப் பிராணிகளிலும் பிராமணர்கள்

மேலானவர்களென்றும், அவர்களுடைய மகிமைக ளிப்படிப்பட்டதென்றும யாவரும உணாநது பூஜிததுக கடததேற வேணடுமெனறு கருதி, அனேக ஊழியககாரரகள தமமை உபசரிககவும அதை நிவாததிதது, சபபரகூட மஞ சததிலிருநது எழுநதிருநது, தாமே நவரததினமிழைதத ஆசனம சமறபிதது அநத நாரதரை அதிலெழுநதருளப பணணிச சாஷடாஙகமாகச சேவிதது, அவருடைய திருவடியைவிளககி, அநதத தீாததததைச சிரசினில் புரோ க்ஷிததுககொணடு, அடியேன இனறைககுக்நான தனனியனுனேன அடி யேனுடைய திரேகம இனறைககுப பரிசுததமாசசுது எனறு சதபுருஷாளா னவாகள தாஙகளெவவளவு மேனமையுடையவாகளாயிருநதாலும காவத் தை அடையாமல பெரியோாகளைப பூஜிபபதுபோல பூஜிதது, புனனகையு டன் ஒருவாாததை அருளிசசெயகினறா

கேளீா பிரமமததையுணாநத நாரதமா முனிவரே! அபூாவமாய யாதுகார ணததிறகாக எழுநதருளினீா? உமமாலாகவேணடிய காரியததை அருளிச் செயயவேணடும எனறு விருமபுகிற ஸ்ரீபகவானை நாரதமுனிவாநோககி கே ளீா சாவாநதரியாமியான சுவாமீ! தேவரீா அடியேனுடைய கௌரவததைப் பாாததுப பூஜிததலல தேவரீா செயகிற பூஜையால மகிழசசிகொணடு அலஙகார மடைநது கெடடுப்போகுமபடி செயததுபோல தோனறுகினறது அடியேனுககு தேவரீரிடததி லிடைவிடாமல பகதியிருககுமபடி அருளசெய் யவேணடும எனறு துதிசெயது தணடம சமறபிதது விடைபெறறு, மற் றொரு கிரகததினிற பிரவேசிததாா, அஙகிடததில ஸ்ரீகிருஷணபிரான உத்த வரெனகிற மநதிரியுடன சதுரஙகமாடுவதைவிட டெழுநதிருநது, ஸ்ரீருககு மணி தேவியினுடைய கிரகததில பூஜிததது போல பூஜிதது, ஸ்ரீருககுமணி தேவியினது கிரகததினில வநததை அறியாதவரைபபோல க்ஷேமஙகளை விசாரிததாா.

அதுகேடட நாரதா வியபபுறறு, உததரஞ சொல மாட்டாமல பின் னொரு கிரகததிற சேகினா அஙகு ஸ்ரீகிருஷணபகவான தமது மனைவியு டனபுததிரனைத தாலாடடுவதைப பாாதது, மறறொரு கிரகததினிற சேகினர் அஙகு மனைவியோடு மஙகளஸநானஞ செயது அக்கினிஹோததிரஞ செயது அவாகள அமுதுசெயத சேடததைத தமது புததிராகளுடன அமுதுசெயய வும, மறறொருகிரகததில மநதிரிகளுடன மநதிராலோசனை செயதுகொணடி ருககவும, மறறொருகிரகததில புணணியகதைகளான இதிகாசபுராணஙகளை ரிஷிகளிடததில நினறுப கேடடுககொணடிருககவும, மறறொருகிரகததில அனேகமாதாகளுடன ஜலககிரீடை செயயவும, மறறொருகிரகததினில தமது மனைவியைப பககததில வைததுக கொணடு அவளை நாநாவிதமாயப பரிகா சஞசெயது கொணடிருககவும, மறறொரு கிரகததில ஸநானஞசெயது பரிசுத தமாய அநதணாகடகுத தானஞசெயது கொணடிருககவும, மறறொருகிர கத்தில் தாமததிறகுரிய காரியததை அனுஷடிததுக கொணடிருககவும, மற் றொருகிரகததில பிரமமததியானஞ செயயவும, மறறொருகிரகததில வசுதேவ

ருககுப பணிவிடைசெயயவும, பினனையொரு கிரகததில உயுததததிறகுச் சனனகமாக யிருககவுங கணடார

இபபடி பகவான செயலைக காணுநதோறும பரமஸவரூபரான அநத நாரதமகாமுனிவர பினனுமோரிடததிற சென று, அஙகே அநத ஸ்ரீகிருஷண பகவான தமது தமயனுகிய ஸ்ரீபலராமருடன அனபாகளுககு க்ஷேமததைக கோரிககொண டிருககவும, மறறொருவிடததில தமது குமாரததிககுங குமாரனுககும மணஞசெயவிததறகுத த தநதயிடம விசாரிததுககொண டிருககவும மறறொரு இலலததில தமது புததிரிகளை அவாகளுடைய வீடடிறகு அனுபபவேணடியததறகுரிய ஆடையாபரணஙக ளமைததனுபபவும, மறறொரு அகததினில யாகஞசெயது தேவாகளைப புகழசசெயயவும, மறறொருவீடடினில தடாகபபிரதிஷடை செயதுகொணடிருககவும, மறறொருவிடததினில தேவாலயப பிரதிஷடை செயயவும, மறறொருகிரகததினில மிகவும வேடடையாடி இளைபபுறறிருககவும, மறறொருவளவினில தமது மனைவியுடன சிஙகாதனததி லெழுநதருளியிருககவும, மறறொரு இலலததினில வீறறிருககையில அபமனைவிபால சாமரம வீசபபடடுககொணடும, இபபடி பலவாறுகக கிரகஙகடோறும ஸ்ரீகிருஷணபகவான சேவைசாதிபபதைக கணடு, ஸ்ரீபகவானுடைய யோகமாயையினது பிரபாவ மிபபடிபபடடதென று உணாநது வியபபுறறு, ஸ்ரீபகவானை நோககி, தேவரீருடைய அனுககிரக பலததினுல பிரமனமுதலிய சகல தேவாகளாலும அறிய வொணணுத தேவரீருடைய பிரபாவததை யான உணாநதேன தேவரீருடைய திவவியநாமததைக காணமபணணி, தேவரீருடைய கீாததியைப பரிசுததமாகிய ஸதலஙகளில விநியோகஞ செயதுகொண டிருககுமபடி அடியேனுககு அருளபுரிய வேணடும, என று சாஷடாஙகமாக தெணடமசமாபிதது விடைபெறறுச சொாககததிற கேகினா

# எழுபதாவது அத்தியாயம.

கலி விருத்தம்

கணணனுனே னனுஷடிககுஙகாமமும
துணணெனசசரா சநதன சிறையினில
நணணிடசசெயத ராஜரினறுனபமும
பணணிமநதிராலோ சனையுமபகருவாம.

ஸ்ரீகிருஷ்ணபகவான அனுஷடிககும் நிததியகாமஙகளையும், ஜராசந்தனற சிறையினில வைததிருககபபடட அரசர்கள தாஙகள் துன்பபபடுவதைத்

தூதன்மூலமாய் ஸ்ரீகிருஷ்ணபகவானுக்குத் தெரியப்படுத்தினதும், அப்பால் ஸ்ரீகிருஷ்ணசுவாமி மந்திராலோசனை செய்ததுஞ் சொல்லுகின்றன

கேளீர் பூபதியான பரீக்ஷித்து மஹாராஜனே! துவாரகாபுரத்தி னருகி னில் உத்தியானவனத்தி லிருக்கின்ற காலத்தையுணர்ந்த கோழிகள் விடிய ஆறுநாழிகைக்குக் கட்டியக்காரர்கள் அரசர்களைத் துதிப்பதுபோலக் கூவுகின்றதை ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய மனைவியர்கள் கேள்வியுற்று கடுஞ்சின மடைந்து, சர்வேசுவரனான ஸ்ரீகிருஷ்ணபகவானிடத்தில் தங்களுடைய விரகத்தைத் தணித்துக்கொள்வதற்கு முன்னமே அவருக்குப் பொழுது விடிவதைத் தெரியச்செய்து வெளிப்படுத்துகிறபடியால் உலகத்தாருக்கு நீங்கள் யாதொருதுன்பமுஞ் செய்யாம லிருக்கையிற்றானே அவர்களுங்களை மாய்க்கக்கடவார்களென்று கோழியைச் சபித்தார்கள்.

அக்காலையில் ஸ்ரீபகவான் சயனத்தைவிட் டெழுந்திருந்து, முதல் செய், கண்ணாடி, கருங்குரங்கு, பசு, எருது, இதுகளைத் தரிசித்து, கைகாலசுத்தி செய்து, ஸ்ரீபகவானைத் துதித்து, தடாகத்திற்சேக்கிப் பல்துலக்கி, ஸ்நானஞ் செய்யச் சங்கற்பித்து ஸ்நானஞ்செய்து, தேவரிஷி பிதுர்தர்ப்பணம் பண்ணி, திவ்விய பீதாம்பர மணிந்துகொண்டு, ஸாத்துவ புண்டரத்துடன் சந்தியா வந்தனமும் ஜபோப ஸ்நானமுஞ் செய்து, அக்கினிஹோத்திரமும் ஔபாசனமு நிறைவேற்றி, பிரம்ம யக்கிய முதலியதுகளைச் செய்து, மிகவும் வெண்மைபொருந்திய தேகத்தினைவாய்ந்ததாயும், கொம்புகளில் சொர்ண பூஷணங்களை அலங்கரித்ததும், சாதுவாயும், வெகுவாகப் பால்கறக்கத்தக்க தலையீத்துக்கிடாரியாயு மிருக்கின்ற பசுக்கள், மான்தோல், எள்ளு, இவை முதலியவைகளை அந்தணர்கட்குப் பதின்மூன்றாயிரத்து அறுநூற்றெட்டு வீடுகளிலிருந்து தானஞ்செய்து, அவர்களை வலம்வந்துபணிந்து, குருபூஜை தேவபூஜைகளைச்செய்து, தாம் சகலாலங்காரத்துடன் கூன், குருடு, மொண்டி, சப்பாணி, இவர்கள் முதலியவர்கட்குப் பூரிகள் கொடுத்து, பெரியோர்களான அந்தணர்கட்குச் சந்தனம், புஷ்பம், தாம்பூலம், இவை முதலியதுகளைக் கொடுத்தனுப்பி, நவரத்தின மயமாயிருக்கின்ற ஆசனத்திலெழுந்தருளியிருந்தார்

அந்தச் சமயத்தில் சாரதியான தாருகனென்பவன் சைன்னிய சுக்கிரீவ மேகபுஷ்ப வலாஹகமென்று சொல்லப்பட்ட நான்கு குதிரைகளையும் இரதத்தினிற் பூட்டிக்கொண்டுவந்து நிறுத்தி, சுவாமியினது அருகிற்சென்று சாஷ்டாங்கமாகப் பணிந்து, மிகவும் பயபக்தியுடன் இரதம் சன்னத்தமாயிருக்குதென்று கூறினன் அதுகேட்ட ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி யானவர் உடனே யெழுந்திருந்து, அந்தச் சூதனுடைய கையைப் பற்றிக்கொண்டு, அனேகரூபியான சுவாமி ஒருருவமா யிருந்து, சகல தையலார்களுடைய மனதை அபகரித்து, உத்தவர் சாத்தகிகளுடன் இரதமேறி, பசி, தாகம், சோகம், மோகம். கிழத்தனம், கோபம், இது முதலியதுகளை நிவர்த்திக்

குந் தன்மையை யுடையதாயும உககிரசேன மகாராஜனுக்கு அரசாட்சிசெய் வதறகுரியதாயு மிருககினற சுதாமமெனறிறசபையி லெழுநதருளி, உககிர சேனரை ஜயதமொனியால சநதோஷபபடுததி, நகஷததிரமததியில விளஙகு கினற பூரணசநதிரனபோல சகல யாதவாகள மததியில நவரததின சிஙகா தனததி லெழுநதருளி யிருநதாா

அப்படி யிருககையில அபபோ வநதிகள கடடியஙகூற, நாடகாள் நடிகக, காயகாகள பாட, ஹாசியககாராகள பரியாசவாாததைகளுரைகக, வாததியககாராகள சகல வாததியஙகளு முழகக, வேதியாகள வேதாநதஙக ளுரைகக, இபபடிபபடட நாநாவிதஙகளான செயகைகளைப பகவானபாாத துககொண டிருககையில ஒருநாளுஙகாணுத வேடமுடைய ஒரு புருடன ஸ்ரீபகவானைக காணவிருமபி துவாரபாலகருடன சொலலியனுபப, அவவண ணம சுவாமியோடுரைகக, அவரதுகேடடு அவனைவரவழைகக, அபபோ அநதப புருஷன சுவாமியைச சாஷடாஙகமாகப பணிநது கைகூபபி, ஜரா சநதனுல சிறையினில வைததிருககினற 'அரசாகள தாஙகள துனபபபடுவ தைத தேவரீருடைய சனனிதானததில விஞஞாபனஞ செயயசசொலலி அடியேனை அனுபபினாாக ளாதலால, அதைக கிருபைகூாநது கேடடருள வேண்டுமெனறு கூறுகினறனன

சேஷீா சுவாமி! தேவரீரைச சரணமடைநதவ னெனறு தெரியாமல, சமசாரமாகிற கானகததில புததிரன பெணடீா முதலியவாகளாகிற மிருகஙக ளாற பீடிககபபடடு, பொருள சமபாதிககிற ஆசையாகிற பலததினுல அநதக கானகமெலலாநதிரிநது விஷயஙகளாகிற புலிகளுககுப பயநது திகிலடைநது, சுருதி ஸமிருதிமுதலிய ஸ்ரீபாஞசராததிர சமஹிதையில தேவரீ ராககியா பிததிருககிற ஆசாரததிறகு விரோதமாயச செயயவேணடிய காமஙகளில விருபபமிலலாமல, துஷகாமஙகளைச செயதால காலரூபியாயிருககிற தேவ ரீா சஙகரிககபபோகிறீரெனறு தெரியாமல, சரீரபநதுவாயும நரகததைக கொடுககிறவாகளாயு மிருககினற புததிரன மனைவி முதலியவாகளிடததில விருபபமா யெததனையோ அகிருததியஙகளைச செயதோம இககாலததில யாவரும உதவுவாாகளிலலை

ஆதம பநதுவாயும மோகஷததை அருளுமபடியாயு மிருககினற தேவரீ ரடியேனகளிடததி லனபுகூாநது மோகஷததைக கிருபைசெயய வேணடு மெனறு சரணமடைகினறோம பெரியோாகளை இரடசிககவும துஷடாகளை சிகஷிககவும தேவகிகறபததி லவதரிதத தேவரீரைச சாாவகாலமுந தியானித துக்கொண டிருககினற அடியேஙகள கஷடபபடுவதையும, தேவரீருககுப புறமபான ஜராசநதனமுதலிய துஷடவரசாகள சவுககியமாக யிருபபதை யுமபாாத்து மிகவும ஆசசரியபபடுகிறோம ஆனுல பூாவததில யாஙகளசெயத கர்ம்மவினையை அனுபவிதது சாசுவதமான மோகஷததை அடைவோம, அவர்கள் பூர்வததில் ஐசுவரியததை விருமபிசசெய்த காமததிறகுரியபயனை

யிப்போ அனுபவித்து தேவரீரிடத்தில் புறம்பா யிருப்பதற்குரிய பயனைப் பின்னிட்டு அனுபவிக்கப் போகின்றார்கள்.

அடியேங்களுக்கிந்தச்சரீரத்தித்துத் தேவரீருடைய திருவடிசேவையின் பலத்தினால் களங்கமற்றவர்களாகி, அறசராதி மார்க்கமாய் வெளிப்பட்டு, ஒளியினாலும், பகலினாலும், சுக்கிலபக்ஷம், உத்தராயனம், வருஷம், இதுகளாலும் பூஜிக்கப்பட்டு, அப்பால வாயு, சூரியன், சந்திரன், வருணன், இவர்களால் பூஜிக்கப்பட்டு வழியனுப்ப சொற்கலோகஞ்சென்று, இந்திரன் முதலிய தேவர்களால் பூஜிக்கப்பட்டு அவர்கள் வழியனுப்ப பிரமலோகஞ்சென்று, அவரால் பூஜிக்கப்பட்டு வழியனுப்ப அப்பிரமனுக்கும் பிரவேசிக்க ஒண்ணாத அந்தகாரத்தினில் கோடி சூரியப் பிரகாசம்பொருந்திய விமானத்தின் மீதேறிக்கொண்டு, அண்டபித்தியைப் பேதித்துத் தாசாரணங்களையும் பிரகிருதிமண்டலத்தையுங் கடந்து விரஜாநதியினில் ஸ்நானஞ்செய்து, அம்மாநதியினுடைய ஸ்பரிசத்தினால் நிஸ்சேஷமாய் சமசாரக்லேசமற்று, தில்லமென்று பெயருடைய அரசமரத்தண்டையிற்சென்று, அநேககோடி அப்சரஸ்திரீகளால் அலங்கரிக்கப்பட்டுக் கொண்டு, ஸ்ரீமந்நாராயணரான தேவரீருக்குச் சரியான உருவமடைந்து, ஸ்ரீவத்சமென்கிற மறுவுமாத்திரமில்லாமல் ஆயிரங் குதிரைகள் கட்டின திவ்விய இரதமேறி, அநேக நித்தியசூரிகளாற் சூழப்பட்டு ஸ்ரீவைகுண்ட நகரஞ்சென்று, ஆனந்தமய சரீரத்துட னிருக்கின்ற தேவரீருடைய சாயுச்சியத்தை அடைவோம்

இப்படிப்பட்ட நித்தியானந்தமா யிருக்கின்ற மோக்ஷத்தை யடையாமல் நிலையில்லாத இம்மானிடதேகத்தை நிஜமென்று நம்பி, நானே அரசனென்றும், எல்லாம் எனது தனமென்றும், நானே பலசாலியென்றும், நானே சீமானென்றும், நானே குணவந்தனென்றும், துரபிமானியாகி, மிகவுங் கோறமாயிருக்கின்ற உதிரமாம்ச வெலும்பினால் நிரம்பிக்கப்பட்டுத் தினந்தோறுங் கழுவாவிடில் நாற்றமெடுக்கத் தக்கதாய் மேலுக்கும் பரிசுத்தமாகியதுபோல் காற்றையே ஆதாரமாகவாய்ந்த நிலையில்லாத இவ்வூத்தை உடலுக்கு மனைவி மைந்தர்களாலொருசவுக்கிய மிருப்பதாகப் பிரமித்து அவர்களை இரட்சிக்கக் கருதி, மதுபானஞ் செய்தது போல கிருத்தியமென்றும் அகிருத்தியமென்றும் முணராமல், அந்தச் சுகத்தை யுண்டுபண்ணிக் கொள்ளச் சுவர்களுக்கொப்பாய அயலானுக்குச் சுவாதீனப்பட்டும், இஷ்ட நிறைவேறும் லாசையும் ஒழியாமல் கெட்டலைந்தும், கூண்டுக்குள்ளிருக்கின்ற கிளியைப்போல இந்த ஜராசந்தன் போட்டபட்ட ஆஹாரத்திற்குக் காத்திருக்கின்றோம். யாங்கள் அரசாட்சி செய்யுங்காலையி லுண்டாயிருந்த மனைவி மைந்தா முதலியவர்கள் இந்த அவதிப்படுங் காலையிலிருந்தும், எங்களுக்கிப்போ சகாயஞ் செய்யாதவர்கள் இறந்தபின்பு சகாயஞ்செய்யப் போகின்றார்கள் ? ஆதலால் தேவரீர் அடியேங்களிடத்தில் கிருபைகூர்ந்து, தேவரீருடைய திருவடிகளில் இடைவிடாமல் பக்தியிருக்கும்படி கிருபைசெய்து, ஜராசந்தனென்கிற காமபாசத்தாற் கட்டப்பட் டிருக்கின்ற அடியேங்களைக் கஜேந்திராழ்வானை இரட்சித்தாற்

போல இரட்சிககவேணடும என்று அவவரசாகள கூறினவண்ணம் தூதன் விஞ்ஞாபனஞ செயதனன

அநதச் சமயததில சநதியாகால சூரியனை நிகாதத ஒளியினைவாயநத ஜடையினைபபடைதத ஸ்ரீநாரதமாமுனியானவா எழுநதருளினா அவரைக் கண்ட ஸ்ரீகிருஷ்ணபகவான சகலயாதவாகளுட னெழுநதிருநது சாஷடாஙக மாகப பணிநது அறகியபாததிய முதலியவறறால பூசிதது ஆசனமசமாபபிதத னா அதனமீதந நாரதமுனிவா எழுநதருளினபிறகு ஸ்ரீகணணபிரான அவரைநோககி தேவரீா சகல உலகததிலுள்ள விருததாநதஙகளை நனறு யுணாநதவராதலால, இபபோ பாணடவாக ளெஙகே யிருககினறாாகள ? அவாகளுடைய க்ஷேமததைச சொலலவேணடும, என்று ஒன்றுமறியாதவாபோல கூறினா இபபடி கூறுகினற ஸ்ரீகிருஷ்ணபகவானைப பாாதது ஸ்ரீநாரதா ஒருவாாததை விஞ்ஞாபனஞ செயகினறாா தேவரீருணராதவிருததாநத மொன்று மிலலாதிருநதும, அடியேனைக்கேடடபடியால தெரிநதமடடுககுங் கியாபகப படுததுகிறேன இநதிரபபிரஸததில பாணடவாகள சுகமாயிருககினறாாகள அவாகள இராஜசூயமெனகிற யாகததில தேவரீரைப பூசிகக வேணடுமென்று கருதியிருககினறாாகள

சகலஜகத பரிசுததராகிய தேவரீருடைய திருவடியின் கடைவிரலிலினின்று முணடான தீாததம சொாககலோகததில மநதாகினியென்றும. பூமியில கஙகையென்றும. பாதாளலோகததில போகவதியென்றும பெயாபெற்று மூன்றுகலததையும பரிசுததஞ.செயயுமபடியாயது இபபடிபபடட பிரபாவததையுடைய தேவரீா இராஜசூய யாகததில சேவைசாதிககிற போது, பிரமமனமுதலிய தேவாகள, ரிஷிகள, அநதணா, பரமபாகவ தோததமாகளான அனேக அரசாகள அடியேஙகள ஆகிய யாவருந தேவரீரைசசேவிததுப பரிசுததாகளாககக காததிருககினறோம. என்று விஞ்ஞாபனஞ செயதனா, இவவாறு விஞ்ஞாபனஞசெயத நாரதருடைய வாாததைகளை ஸ்ரீகிருஷ்ணபகவான கேழவியுறறு ஜராசநதனைச சீககிரமததில மாயகக வேணடுமென்று மனதில நிசசயிததது, தமககுப பநதுவாயும, மநதிரியாயும, திருககண்ணுயு மிருககினற உததவரைபபாாதது, இபபோதிநத இராஜதூதன் சொனனதும நாரதா உரைததது மஙகேடடிருநதீா, இனி நடககவேணடியதறகு ஆலோசிததுச சொலலவேணடு மென்று கேடடருளினா இபபடி சர்வஞ்ஞரான ஸ்ரீபகவானு லாககியாபிககபபடட உததவரானவா மிகவும வினயததுடன தலையை இறககிககொணடு, இரணடு கரததையும சிரசினிறகூபபி ஒருவாாததை விஞ்ஞாபனஞ செயகினறாா

---

# எழுபத்தோராவது அத்தியாயம்.

கலி விருத்தம்

அந்தவுத்தவ ராலோசனையினால்
இந்திரப்பிரஸ் தத்துக்கெழுந்தும்
கந்தவாண்டக வனத்தைக்காண்டவனால்
வெந்திடச்செய் தனையுமிளம்புவாம்

ஸ்ரீபகவானுடைய மந்திரியான உத்தவருடைய ஆலோசனையின் மீது ஸ்ரீகிருஷ்ணபகவான் இந்திரப்பிரஸ்தத்திற் கெழுந்தருளினதும், அர்ச்சுனனைக்கொண்டு காண்டவவனத்தை அக்கினிக்குத் திருப்திசெய்வித்து மயனால் தருமபுத்திரருக்குச் சபைநிருமித்துக் கொடுப்பித்ததுஞ் சொல்லுகின்றன.

கேளீர் அரசனே! புத்திமான்களிற் சிறந்த உத்தவரானவர் ஸ்ரீகிருஷ்ண பகவானது திருவுள்ளக் கருத்தையும் யாதவர்களுடைய அபிப்பிராயத்தையுந் தெரிந்துகொண்டு, ஸ்ரீபகவானைப் பார்த்து விக்கியாபனஞ் செய்கின்றார். வாரீர் சுவாமியே! பூமண்டலத்திலுள்ள சகல அரசர்களையும் ஜயித்தாலன்றி இராஜசூயஞ் செய்யக்கூடாதென்று கருதி தேவரீருடைய சகாயத்தை விரும்புகின்ற பாண்டவர்கட்குச் சகாயஞ்செய்கிற நிமித்தமாக, யாதவர்களால் ஜராசந்தனை ஜயிக்கக்கூடாதென்று பூர்வம் ஆகாசவாணி உரைத்ததும் பொய்யாகாமல், அவனை ஜயிக்கத்தக்க பலமுடைய வீமசேனனைப் பிராம்மண வேடத்துடன் அழைத்துக்கொண்டு சென்று, சேனையிற் பெருத்த ஜராசந்தனைச் சேனையில்லாமல் தனிமையாய் யுத்தத்திற்கு வரும்படி செய்து அவனைப் பட்டணம் விட்டு வெளிப்படுத்திப் போரினில் மாய்த்துச் சிறையினிலிருக்கின்ற அரசர்களுடைய துன்பத்தைப் போக்குவது அடியேனுக்கு யோக்கியமாகத் தோன்றுகின்றது.

இதுவன்றி சர்வஞ்ஞரான தேவரீருக்கு அடியேன் யென்ன விக்கியாபனஞ் செய்யப்போகின்றேன்? என்று நிர்தோஷமாகியும், சித்திகரமாகியும் சகல ஆபத்துக்களையும் போக்குகிறதாகியுமிருக்கின்ற உத்தவருடைய வார்த்தைகளைக் கேழ்வியுற்ற ஸ்ரீகண்ணபிரான் தாருகனைப் பார்த்து, இரதசன்னத்தஞ் செய்யச்சொல்லிக் கட்டளையிட்டு, ஸ்ரீருக்குமணிதேவி முதலிய மனைவியர்களை வாகனத்தின் மீதேற்றிக்கொண்டு, வசுதேவர் தேவகிதேவி பலராமர் முதலியவர்களிடத்தில் விடைபெற்று, தாருகனாற் கொண்டுவரப்பட்ட இரதத்தின்மீ தெழுந்தருளினார். இப்படி யெழுந்தருளுகின்ற சுவாமிக்கு ஜராசந்தனை வதைசெய்வதில் இச்சையுண்டாயிருக்கிறதென்கிற கருத்தையுணர்ந்த ஸ்ரீநாரதர் பிரதக்ஷிண நமஸ்காரஞ்செய்து சொர்க்கத்திற் கெழுந்தருளினார். பிறகு ஸ்ரீகிருஷ்ணபிரான் ஜராசந்தனால் துன்பப்படுகிற அரசர்களனுப்பிய

தூதனைப்பார்த்து, கேளாய் தூதனே! அந்தத் துராத்துமாவான ஜராசந்தனைச் சீக்கிரமத்திலேயே மாய்த்துப் போடுகிறோம். நீங்கள் யாதொன்றுக்குங் கொஞ்சமேனும் அச்சமில்லாம லிருங்கோள் என்று அருளிச்செய்தனர்.

இவ்வா றருளிச்செய்த ஸ்ரீகண்ணபிரானை அந்தத் தூதன் பிரதக்ஷிண நமஸ்காரஞ்செய்து விடைபெற்று, சிறையினிலிருக்கின்ற அரசர்களிடஞ் சென்று, ஸ்ரீகிருஷ்ணபகவான் அருளிச்செய்த வார்த்தைகள் யாவுமுரைத்தனன். அதனைக்கேட்ட அவ்வரசர்கள் சந்தோஷமடைந்து, சுவாமி எப்போ தெழுந்தருளப் போகிறாரென்று எதிர்பார்த்திருந்தார்கள். அப்பால் ஸ்ரீகிருஷ்ணபகவான் துவாரகாபுரத்திலிருந்து பிரயாணப்பட்டு, ஆநர்த்ததேசத்திலொரு இராத்திரி தங்கி, மறுநாள் சவ்வீரதேசத்திலிருந்து பிரயாணப்பட்டு, மூன்றுநாள் குருக்ஷேத்திரத்திற்குச் சென்று, திருஷ்டத்துவதி யென்கிற நதியைக்கடந்து, பாஞ்சாலதேசஞ்சென்று, அவ்விடத்தில் நின்றும் இந்திரப்பிரஸ்தத்திற் கெழுந்தருளினார். அந்தச் சங்கதியைக் கேட்ட தருமபுத்திரர் முதலியவர்கள் பிரமன்முதலிய தேவர்களும், சனகர்முதலிய யோகிகளும், நான்குவேதங்களுந்தேடிக் காணக்கூடாத அருந்தெய்வமான ஸ்ரீகிருஷ்ணபகவான் நமக்கு எளிதில் சேவைசாதிக்கக் கிடைத்ததென்று ஆனந்த பரவசர்களாகி, தமது இஷ்டர்களுடன் புரோகிதரான தவுமியாசாரியரை முன்னிட்டு, அர்க்கியபாத்திய முதலிய பூஜைக்குரிய வஸ்துக்களையும், பூரணகும்பங்களையுங் கைக்கொண்டு, வேதியர்கள் வேதபாராயணஞ் செய்யப் பதினெண் வாத்தியங்களுடன் எதிர்கொண்டு போனார்கள்.

அப்போது தருமபுத்திரர் ஸ்ரீபகவானைக்கண்டு, தமது இரண்டுகரங்களாலும் ஸ்ரீமகாலக்ஷுமிக்கு இருப்பிடமாயிருக்கின்ற திருமார்பைத் தமது மார்பினிற்படும்படியாக ஆலிங்கனஞ் செய்து, அதினால் சகல பாபங்களுந் தொலைத்து, சரீரமெல்லா மயிர்க் கூச்சிட்டு, ஆனந்த பரவசராய் மெய்ம்மறந்து பிரமித்திருந்தனர். வீமசேனனும் அவ்வண்ணஞ்செய்து பிரமித்திருந்தனன். பிறகு அர்ச்சுனனும் நகுலசகாதேவர்களும் கிரமமாக ஸ்ரீகிருஷ்ணபகவானைக் கண்டு, கண்களில் ஆனந்தஜலம்பெருகச் சேவித்தார்கள். ஸ்ரீகிருஷ்ணபகவான் தருமநந்தனையும் வீமசேனனையும் சாஷ்டாங்கமாகப் பணிந்து, அர்ச்சுனனை ஆலிங்கனஞ் செய்து, நகுலசகாதேவர்களால் சேவிக்கப் பெற்று பெரியோர்களான பிராம்மணர்முதலியவர்களை அவரவர்க்குத் தக்கபடி பூசித்தார்.

அப்போ சூதமாகதர்கள் சுவாமியைத் துதிசெய்ய, ஆகாசத்தில் யக்ஷகின்னரகந்தருவர் முதலியதேவர்கள் புட்பமாரிசொரிந்து துந்துபிவாத்திய முழக்க, அப்சரஸ்திரீகள் நடிக்க, மகாரிஷிகள் துதிக்க, வேதியர்கள் பின்புறத்தினில் வேதபாராயணங் கூறினர். அக்கால் பட்டணத்திலுள்ள ஜனங்கள் வீதிகளில் ஜலந்தெளித்து, ஆகாயமளாவிய துவஜங்களும், சொர்ணமயமான தோரணங்களுங்கட்டி, யாவரும் பரிசுத்தமாய் ஸ்நானஞ்செய்து, சர்வாலங்காரத்துடன் தம்பதிசமேதராய் பூரணகும்பங்களுங் கொழுக்கட்டை

களும் பழங்களு மெடுத்துக்கொண்டுவந்து, புண்ணியசுலோக சிகாமணியான ஸ்ரீகிருஷ்ணபகவானை எதிர்கொண்டார்கள் இப்படிப்பட்ட சகலசம்பிரமத்துடன் பாண்டவர்களோடு இரதகஜ துரக பதாதி சேனைகளால் நிறைந்திருக்கின்ற இந்திரப்பிரஸ்த நகரத்தின் இராஜமார்க்கத்தில் இரதத்தின்மீ தெழுந்தருளுகிற சுவாமியைக்கண்ட அங்குள்ள மாதர்கள் யாவரும் சாஷ்டாங்கமாகப்பணிந்து, புஷ்பமாரிசொரிந்து, ஒருவருக்கொருவர் இவ்வாறுசொல்லிக்கொள்ளுகின்றார்கள்

ஓ எமதுதோழிகளாகிய வனிதாரத்னங்களே! நாம் வியர்த்தமாய் ஸ்திரீஜன்மமெடுத்தது ஆருக்கென்னப் பிரயோஜனம்! இந்தப் புருஷனிற்சிறந்த ஸ்ரீகண்ணபிரான் ஆலிங்கனம் அதரபானமுதலிய காமலீலைகளைச்செய்ய இம்மடந்தையர்கள் பூர்வஜன்மத்தில் யெத்தனை தவஞ்செய்தார்களோ அறிகிலோம் இவர்களைப்போல் அனுபவித்தாலல்லவோ நாம் ஜன்மமெடுத்ததற்குப்பயன்? என்று, மாதர்களுரைப்பதைக் கேட்டுக்கொண்டே ஸ்ரீகிருஷ்ணபகவானானவர் தருமபுத்திரருடைய அரண்மனையிற் சென்று, அங்குள்ள ஜனங்களின் அதிகாரனுகுணமாகப் பூசிக்கப்பட்டு அந்தப்புரத்தினிற்பிரவேசித்து, அங்குள்ள மாதர்களாலும் பூஜிக்கப்பட்டு, தமது அத்தையான குந்திதேவியைக்கண்டு சாஷ்டாங்கமாகச் சேவித்தனர் அப்போதந்தக் குந்திதேவியானவள் ஸ்ரீகிருஷ்ணபிரானை இரண்டுகரத்தினலும் மடியினிலெடுத்து வைத்துக்கொண்டு, உச்சிமுகந்து ஆனந்தபாஷ்பம் உதிர்த்தனள்

அந்தச் சமயத்தில் திரோபதை, சுபத்திரை இவர்களால் ஸ்ரீகிருஷ்ணபகவான் நமஸ்கரிக்கப்பட்டு, அவர்களை மெத்த ஆதரவுடன் உபசரித்து, குந்திதேவியினது சமீபத்தில் யிருக்கின்ற நவரத்னமயமான சிங்காதனத்திலெழுந்தருளி யிருந்தனர் அப்பால் குந்திதேவியா லாக்கியாபிக்கப்பட்ட திரோபதை, சுபத்திரை, இவர்களிருவரும் ஸ்ரீகிருஷ்ணசுவாமியினது மனைவியர்கள் யாவரையும் நாநாவித பூஷணங்களாலும், வஸ்திரங்களாலும், சந்தனம், புஷ்பம், தாம்பூலம், இவைமுதலியதுகளாலும் உபசரிக்கப்பட்டுசுகமாகயிருந்தார்கள் இப்படி பாண்டவர்களாலும் குந்திதேவி முதலிய மாதர்களாலும் பூசிக்கப்பட்டு சகல மனைவியர்களுடன் ஸ்ரீகிருஷ்ணபகவான் இந்திரப்பிரஸ்தத்திலேயே சுகமாகயிருந்தார்

இப்படி யிருக்கையில் ஒருநாள் ஸ்ரீகிருஷ்ணனர்ச்சுனன் இரதத்தின்மீது ஆரோகணித்துக் கொண்டு, தேவேந்திரனுடைய நந்தவனமான காண்டவவனத்தை அக்கினிதேவனுக்குத் திருப்திசெய்வித்து, அந்த அக்கினிதேவனிடத்தில் நின்றும் அர்ச்சுனனுக்கு இரதமும் காண்டீவமென்கிற தனுசும் வாங்கிக்கொடுத்து, அந்தக் காண்டவவனத்திலிருந்த அசுர சிற்பியான மயனை அந்த அக்கினியில் நின்றுந் தப்பவைத்து, அவனால் தருமராஜாவுக்கு தேவராஜாவினுடைய சபைக்கு நிகர்த்த ஒருசபை நிருமித்துக் கொடுக்கச்சொல்லி அர்ச்சுனனுடன் சிலநாள் வாசஞ்செய்தருளினார்.

# எழுபத்திரண்டாவது அத்தியாயம்.

எழுசீரடி யாசிரிய விருத்தம்

உத்தவராலோசனையை நினைத்துக்கொண்டு
ஒன்றான கடவுளித் துராத்மாவாகப்
பெற்றசராசந்தனை வஞ்சனையினாலே
பீமசேனனைக்கொண்டு மாய்க்கவெண்ணி
ஒத்தபீமார்ச்சுனர்களோடு தானுஞ்சென்று
உயர்ந்தகுலவேதியராய வேடங்கொண்டு
யுத்தமதற்கெங்களுடன் தனிமையாக
ஒருவனேவரவேண்டுமென விசைத்தார்

ஸ்ரீகிருஷ்ணபகவான் உத்தவருடைய ஆலோசனையை நினைத்துக்கொண்டு துராத்மாவான ஜராசந்தனை வஞ்சனையால் வீமசேனனைக் கொண்டு மாய்க்கவேண்டுமென்று கருதி, தாமும் வீமார்ச்சுனர்களும் பிராமண வேடங்கொண்டு ஜராசந்தனைத் தனிமையாய் யுத்தத்திற்கு வரவேண்டுமென்று யாசித்ததைச் சொல்லப்படுகின்றது

கேளீர் மேதினீபதியான பரீக்ஷித்து மகாராஜனே! ஒருநாள் உமது பிதாமகனான தருமபுத்திரர் பிரமத்தையுணர்ந்த வேதியர்கள், ரிஷிகள், அனேக மகுடவர்த்தனர், சேனைத்தலைவர், படைத்தலைவர், பொருளுடைய அனேக வைசியர்கள், வீமசேனன் முதலிய தம்பிமார்கள், இவர்களுடன் சபையினில் கொலுவிருக்குங்காலையில், யாகத்திற்சிறந்த இராஜசூயமென்கிற மகாயாகம் எவ்விதமாக நிறைவேறப் போகுமென்று பலவாறாகச் சிந்தித்து, ஜகதீசுவரனான ஸ்ரீகண்ணபிரானாலாகவேண்டுமேயன்றி மற்றவர்களாலாகாதென்று நன்றாயுணர்ந்து, சபையிலுள்ள யாவருங்கேட்கக் ஸ்ரீபகவானைப்பார்த்து, ஒருவார்த்தை விக்கியாபனஞ் செய்கின்றனர்

கேளீர் சகலஜீவ தயாபரமூர்த்தியான சுவாமி! யாகத்தினிற்சிறந்த இராஜசூயமென்கிற மகாயாகத்தினால் சகலதேவர்களுக்குந் தேவராகியும் மோக்ஷத்தைக் கொடுக்கத்தக்கவராகியுமிருக்கின்ற தேவரீரைப் பூஜிக்கவேண்டுமென்று கருதியிருக்கின்றேன். மித்திருவென்றும் சத்துருவென்றும் பேதம் வையாமல் யாவரிடத்திலும் வாசஞ்செய்துகொண்டு, எவர்கள் எவ்விதமாக விரும்புகின்றார்களோ அவர்களுடைய கருத்துக்கிசைந்தபடி கற்பகத்தருப்போல கிருபைசெய்தருளுகிற தேவரீருடைய அருளுக்குப் பாத்திரனாயிருக்கின்ற அடியேனுக்கெந்தப் புருஷார்த்தத்தில் குறையிருக்கும்? ஆதலால் தேவரீர் கிருபைகூர்ந்து, சக்கிரவர்த்திகளாலுஞ் செய்யக்கூடாமலிருந்த யாகசிரேஷ்டத்தை நிறைவேற்றுவதாலுண்டாகிய செல்வச்செருக்கை மேன்பாடுசெய்து, தேவரீ

ருடைய அருளுக்குப புறமபான சிசுபாலன ஜராசநதன முதலிய வாசஞு டைய நிககிரகததையும யாவரு மறியததககதாகக கிருபைகூாநதருள வேண் டும எனறு விருமபுகிற தருமபுததிராைபபாாதது ஸ்ரீபகவா னெருவாாததை அருளிசசெயகினறுா.

கேளீா மகாராஜாவான தருமபுததிரரே ! உமககெபபோ இராஜசூயயா கஞசெயய யிஷடமுணடாயிறறே ? அபபவே இநதிரனமுதலிய தேவாக ளுககும சகல ரிஷிகணஙகள முதலிய அனபாகடகும எனககும சநதோஷ மாயிறறு இநத யாகஞசெயவதினுல உமககு மகததான கீாததியுணடாகப் போகிறது. நெடியகடலசூழநத லடசமயோஜனை விஸதாரமுடைய பூமணட லம யாவையும அரசுசெலுததுகிற சகல அரசாகளையும ஜயிதது, வருஷந தோறுங கபபஙகடடுமபடி சுவாதீனஞ செயதுகொணடால அநத மகாயாகம் நிறைவேறும ஜிதேநதிரியரான தேவரீருககு இநதிரனமுதலிய லோகபாலா களுடைய அமசஙகளாகியும, மகாபல பராககிரமசாலிகளாகியும, நினைதத மாததிரததில மூவுலகததையும ஜயிசக்ததககவாகளாகியு மிருககினற தமபி மாாகளும அடியேனும சுவாதீனமாக யிருநது, எநதவேலையி லெநதககாரி யததில ஆககியாபிககிறீரோ வெனறு காததிருகக உமககெநதக காரியததில் குறைவுவரும ?

எனனிடததில பகதியுளளவன தரிததிரனுயிருநதாலும மகததான ஒளி யிலைவாயநது, தேவாகள கொணடாடுமபடி மேனமையான ஸதிதியினி லிருபபானேயனறி கேவலம சாமானயனுக யிருககமாடடான. பகதியிற் சிறநதவராயும சகல சமபததுககளுககும இருபபிடமாயு மிருககினற உமககு இவவரசாகளை ஜயிதது சுவாதீனஞ செயதுகொளவது பெரியகாரியமலல அநத மகாயாகததிறகுரிய அலுவலகளை யெலலாஞகொணடே நிறைவேறறி கொளளும. எனறு ஸ்ரீகிருஷணபகவான அருளிசசெயத வாாததைகளைக் கேழவியுறறு மிகவுமகளிகூாநத தாமமபுததிர ரானவா சுவாமியினுடைய கடாக்ஷ பாாவையினுல ஒருவராலுங கணணெடுததுபபாாகக வொணணுத மகாபபிரபாவததை யுடைய பீமசேனனமுதலிய தமபிமாாகளில சகாதேவ னை அழைதது, அவனுடன சிலசேனைகளையுங கூடடித தெனறிசையில திககு விஜயஞ செயயவனுபபினா நகுலனையும சிலசேனைகளையுங கூடடி மேறறிசைக கனுபபினா அாசசுனனையும சிலசேனைகளையுங கூடடி வடதி சைககனுபபினா பீமசேனனையும சிலசேனைகளையுங கூடடி கிழததிசைக் கனுபபினா

அவாகள் அநதநத திசையிலிருககினற சகல அரசர்களையும் ஜயிதது வெகுவாகததனஙகளைத தருமபுததிரருககுக கொணடுவநது கொடுதது, வரு டநதோறுங கபபஙகொடுககுமபடி திடடஞசெயது வநததையும தருமபுததிர ருக குறைததாாகள அதுகேட்ட தருமபுததிரா மிகவுமகளிகூாநது, மகாப் பிரதாப சாலியான ஜராசநதனெருவன நமக்கு அடங்காம லிருக்கிறானே

அவனை யெவ்விதமாகச் சுவாதீனப் படுத்திக்கொள்ளுகிறது? என்று. வியாகுலப்பட்டுக் கொண்டிருக்கின்ற அந்தத் தருமபுத்திரரைக் கண்ணபிரான் பார்த்து ஒருவார்த்தை அருளிச்செய்கின்றார் வாரீர் உதிஷ்டிரரே! பீமசேனனையும் அர்ச்சுனனையும் என்னுடன் கூட்டினால் நான்போய் அந்த ஜராசந்தனை வென்று, உமதிஷ்டத்தை நிறைவேற்றுகிறேனென்றுரைத்தனர் இவ்வாறுரைத்த ஸ்ரீபகவானுடைய கருத்துக்கிசைந்த தருமநந்தனர் அப்படியே அனுப்பினார் உடனே பகவானானவர் அவர்களைக்கூட அழைத்துக்கொண்டு, தாங்கள் மூவரும் பிராம்மண உருவமாய் வேடந்தரித்துக்கொண்டு. கிரிவிருஜமென்கிற ஜராசந்தனுடைய பட்டணத்திற்குச் சென்று, வெகுதூரத்திலிருந்துவந்த அதிதிகளைப்போல் அந்த ஜராசந்தன் பூஜைசெய்யும் சமயத்தில் அவனிடஞ்சென்று இவ்வாறு பேசுவதானார்கள்.

கேளீர் மகாதயாளுவாயிருக்கின்ற ஜராசந்த மகாராஜனே! நீர் அதிதிகளுடைய கருத்தின்படி நிறைவேற்றி அனுப்புகிறகீர்த்தி உலகெல்லாம் வியாபித்திருக்கின்றது அதுகேட்டு யாங்கள் வெகுதூரத்திலிருந்து வந்தோம். உம்மைப்போல் அதிதிகளுடைய யிஷ்டத்தைப் பூர்த்திசெய்வார் யாருமில்லை. எமக்கிணையான அதிதிகளும் இதற்குமிஞ்சின காலமுங் கிடைக்கமாட்டா. உலகத்தில் புத்திரனையும், அரசர்களுக்குரிய கிரீடத்தையும், புதைத்துவைத்திருக்கிற தனத்தையுங் கேட்கக்கூடாது கேட்டாலுங் கொடுக்கக்கூடாது. பொறுமையுள்ள மனிதனுக்குப் பொறுக்கக்கூடாத காரியமென்பதும், துஷ்டனுக்குச் செய்யக்கூடாத அலுவலென்பதும், ஈகையுள்ளவனுக்குக் கொடுக்கக்கூடாத வஸ்துவென்பதும், ஞானியானவனுக்குச் சத்துருமித்துருவென்பதுங் கிடையாதாகையால் மகாதாதாவான உமக்கு யாவுங்கொடுப்பதற்கிசைவதாயிருக்கின்றமையால் இன்னவஸ்துவைக் கேட்கிறோமென்று முன்னதாயத் தெரிவிக்கவில்லை

ஐயாபிரபுவே! நிலையில்லாத இச்சரீரத்தைக் கொடுத்தாகிலும் சாசுவதமான கீர்த்தியைச் சம்பாதிக்கிறவர்கள் புருஷரிற் சிறந்தவர்கள் அவர்களாரெனில்? அரிச்சந்திரமகாராஜன் விசுவாமித்திரனுக்கு வாக்குக்கொடுத்துவிட்டு, அது பொய்யாகாமலிருப்பதற்காக இராச்சியத்தையும் சகலசம்பத்துக்களையுந் தோற்று, புத்திரனையும் மனைவியையும் விக்கிரயஞ்செய்து, தானுஞ்சண்டாளனுக்கு அடிமையாகிப் பணிவிடைசெய்து கொண்டிருக்கவும் சொன்ன பேச்சு தவறாமலிருப்பதற்காகத் தான்படுகிற துன்பத்தைக் கொஞ்சமேனும் லக்ஷியஞ் செய்யாமலிருந்த மகிமையால், தனது அயோத்தியா பட்டணத்திலுள்ள சகல ஜனங்களுடன் இந்திரலோகத்தை அடைந்தனன்

இதன்றி, ரந்திதேவனென்கிற புண்ணியவான் கானகத்தினிற் சஞ்சரித்துக்கொண்டு நாற்பத்தெட்டு நாள் ஜலபானஞ் செய்யாமலிருந்து ஒருநாள் கொஞ்சம் ஆகாரங்கிடைக்க அதனைத்தேவேந்திரன் யாசகனைப்போல வந்து கேட்கக், அவன் தனது சம்சாரத்துடன் உபவாசமாய் யாதைப்படுவதைக்

கொஞ்சமேனும் லக்ஷியஞ் செய்யாமற் கொடுத்துவிட்ட பிரயாவத்தினால், குடும்பசமேதனாய் சொர்க்கலோகஞ்சென்று பிரமலோகத்தை அடைந்தனன்.

இதன்றி, சிபிச்சக்கிரவர்த்தி அரசாக்ஷி செய்யுங் காலையில் ஒருமாடப்புறாவும் டேகையும் சச்சரவுபட்டு, அந்த மாடப்புறாவானது சிபிச்சக்கிரவர்த்தியைச் சரணமடைந்தது. அதைக் காக்கவேண்டுமென்று கருதியிருக்கின்ற சிபிச்சக்கிரவர்த்தியை நோக்கி டேகை சொல்லுகின்றது: கேளீர் மகாராஜாவான சிபிச்சக்கிரவர்த்தியே! யான் வெகுபசியோடே இப்புறாவைப் புசிக்கலாமென்று காதலாகிவந்தேன். அதைநீர் காக்கிறேனென்று உம்மிடஞ்சேர்த்துக் கொண்டமையால் யான் பசியுடன் மரணமடையவேண்டியிருக்கின்றது. அப்படியான இறப்பது உமக்குச் சம்மதமாயிருந்தால் உமதிஷ்டத்தின்படி செய்யும் என்றுகூறின டேகையைப்பார்த்து சிபிச்சக்கிரவர்த்தி சொல்லுகின்றான். கேளாய் டேகையே! அந்தமாடப்புறா என்னைச் சரணமடைந்தபடியால், எனது பிராணனுள்ள வரையில் யான் விடுகிலேன். உனது பசிதணிவதற்கு வேண்டிய மாமசத்தைத் தருகிறேன். அதைப்புசித்து உன்றிருப்பிடஞ் செல்லுக என்றுகூறின அரசனை அந்தடேகை பார்த்து, கேளீர்பிரபுவே! உமது கருத்தின்வண்ணம் யான் இசைகிறேன். அப்புறாவெவ்வளவு இடையிருக்கின்றதோ? அவ்வளவுமாமசம் உமது சரீரத்திலிருந்து கொடுத்தாலன்றி யான் புசியேன் என்று கூறவும் அரசன் அக்கருத்துக்கிசைந்து, அவ்வண்ணம் அம்மாடப்புறாவை ஒருதட்டினில்வைத்து, தனதுமாமசத்தை ஒருதட்டினில் வைத்து நிறுத்தான். அப்படி நிறுக்கையில் அப்போ மாடப்புறாவினது இடை அதிகமாயிருக்கக்கண்டு, பின்னுந்தனது சரீரத்தினிலிருக்கின்ற மாமசங்கள் யாவையுந் துணித்து வைத்தான். இப்படி வைக்குந்தோறும் போதாமலிருக்கையாலும் சரீரத்தில் மாமசமில்லாததினாலும் பிராணனை விடுவதே யோக்கியமென்று தனதுமைந்தனுக்கு மகுடஞ்சூட்டுவித்து இடசித்தனாகி, திராசுதட்டினில் அம்மாடப்புறாவுக்குச் சமதையாயத் தானே யுட்கார்ந்தனன். அப்போது இடை சரியாயிற்று. அரசன் அதுகண்டு டேகையைநோக்கி, இனி உன்திஷ்டத்தின்படி புசித்துப் பசியைத் தணித்துக்கொள்ளென்று கூறினன். அதுகேட்ட டேகை ஏழுகடலுக்கும் ஏழுதீவுக்கும் அரசனாகிய நீர் கவைக்காகாத இந்தமாடப்புறா நிமித்தத்தில் பிராணனை விடத் துணிவது நன்றாயிருக்கவில்லை. ஐயோ! எனக்கு நீர் அந்தமாடப்புறாவின் இடைக்குச்சரியாய எனது மாமசத்தைக் கொடுக்கிறேனென்று வாக்குத்தத்தஞ்செய்தபோதிலும், எனது சரீரத்தில் மாமசமுள்ளவரையில் தந்தேன். இல்லாததற்குயான் என்னசெய்வேன்? என்றுரையாமல் இப்படியுஞ் செய்வாருண்டோ? என்றுகூறின டேகையைப்பார்த்து அரசன் சொல்லுகிறான். நிலையில்லாத இச்சரீரத்தை நம்பிச் சாசுவதமாயிருக்கின்ற கீர்த்திக்கிடமான சத்தியத்தைவிட்டு என்னமேன்மை அடையப்போகின்றேன்? ஆதலால் சத்தியத்தினின்றும் அகலுகிலேன் என்றுகூறின சிபிச்சக்கிரவர்த்தியின் வார்த்தைகளைக் கேழ்வியுற்ற டேகையானது மிகவும் களிகூர்ந்து அவ்வரசனை நோக்கி, யாங்களிருவரும் இயமனும் அக்கினியுமென் றறியக்கடவீர். உம

னமைப பரிக்ஷிக்கவேண்டி இவவுருவமாகவநது சோதிததோம. உமதுசத்தி யததிறகு மெசசினோம எனறு தஙகள நிஜரூபததைத அடைநது எதிரில நினறனா. அநதசசமயததில சகலதேவாகளும பிரமமதேவனை முனனிட டுககொணடு வநது, சிபிசசககிரவாததியை அநேகவிதமாகக கொணடாடி, விமானததினமீதேறறிககொணடுபோய வழியனுபபி பிரமமலோகஞ சென்ற னர்கள

இதனறி, மகாபலிச சககிரவாததியினது யாகசாலையில ஸ்ரீமநநாராய ணன வாமனரூபமாய வநது, தனதுசகல ஐசுவரியததையும பரிதது இநதிர னுககுக கொடுககவேணடுமெனறு கருதி யாசகமாகக கேடடனா அதனைத் தனதுபுரோகிதரான சுககிரனலகெடடும தானும நனறுயுணாநதிருநதும அவ வேதியனுககு மூனறடிமண தருகிறேனெனறுரைதது, அவவணணம நடததிய பிரபாவததால வருணபாசததால கடடபபட டிருநதும முடிவில தேவேநதிர படடததிற குரியவனுய பெரியோாகளால துதிசெயயுததககதாகிய கீாததி யைச சமபாதிததான.

இதனறி, கானகததினில ஓாமரததினமீது மாடபபுராககள ஆணும பெணணுமாய வாசமாகி விளையாடிக்கொணடிருககையில அதை ஒருவேடன கணடு, அதுகளைககொனறு புசிபபோமெனறு அநேகநாளாய ஆகாரமிலலா மல அவவனமெலலாந திரிநது மூறசிதது அமமரததினடியில •விழுநதனன. அதுகணட ஆணபுராவானதுபெடடையைபபாாதது, கேளாய யெனகருவிழி யாளே ! இவவேடன நமமைககொனறு தனது பசியைததணிததுககொளள விருமபி வெகுநாளாய் இமமரததி னடிவாரததில காததிருநது தனது கோ ரிககை நிறைவேறாததால மூாசசிததுப பிராணனை விடுவதாயிருககினறுன. ஆதலால, யான அககினியிலவிழுநது யெனதுமாமசததா லவனைக காபபாறறு கிறேன எனறு கூறின ஆணபுராவைநோககிப பெடடைபபுரா சொலலுகி ன்றது. கேளீா யெனதனபுளள பறதாவே! உலகததில கறபுளள மஙகையா கள கணவனுடன உடனகடடையேறுவது சகஜமான தாமமாதலால, யானும உமமுடனயெனதுசரீரததை அககினியிலபோடடு, அநத மாமசததா லவ வேடனைக காபபாறறுகிறேன எனறுகூறின பெணபுராவினுடைய வாாததை யைக களிபபுடனகேடட ஆணபுராவானது அவவணணமிசைநது, இரணடு பக்ஷிகளும அககினியில விழுநது, தஙகளுடைய மாமசததால அவவேட னுககுத திருபதிசெயவிததது, அநத மகிமையால அவவிரணடு பக்ஷிகளும விமானததினமீதேறி சொாககலோகஞ் செனறதுகள பிறகு அவவேடனுக குஞ் கியானமவநது, அபபடிபபடட புராககளைப புசிததும பூமியிலிருக்கிற துவெனறுதானும அககினியிலவிழுநது, சகல பாவஙகளுந தொலைநது விமா னததினமீதேறிககொணடு சொாககலோகஞ்செனறனன

இதனறி முககலனென்கிற ஒருவேதியன் சமசாரததுடன் உபவாசமாய் வயலில உதிாநத நெறகளைபபொறுககி, அமாவாசைதினத்தில அந்த நெற்

களைக் குத்திப் பாகஞசெயது, பகவன் நிவேதனமான பிறகு அதிதிகளைவிசாரிதது, மீநத அனனததைத தாஙகள புசிபபுகதுகொளவாாகள அபபடிக்குமிகாவிட்டால பினனும உபவாசமா யிருநது, அமாவாசை வருகிறவரையில் நெறபொறுககிச சோதது அவவணணமே விரதமாக நடததிவநதார்கள். அதுகண்ட இநதிரன அமாவாசைகள தோறும அதிதியாகவநது, கொஞசமேனும அனனம மிஞசவொட்டாமல ஆறு அமாவாசை பக்ஷிததான அதற்குமவாகள கொஞசமேனும சளையாமல சநதோஷமாகக கொடுததுககொண்டு வநதாாகள அபபோ தேவேநதிரன சநதோஷிததது, அவவேதியரைக் குடும்பசமேதமாய அழைததுககொணடு சொறகததிற கேகினன

வாரீா மகாராஜனே! இபபடி வெகுபோ அனேகம பெரியோாகளைச் சநதோஷபபடுததி மேலானலோகததை அடைநததுபோல, நீரும வெங்களிஷடததை நிறைவேறறி மேனமைபெறும எனறு கூறின ஸ்ரீகணணபிரானுடைய வாாததைகளை ஜராசநதன கேழவியுறறு, இவாகளை எஙகேயோ கணடாறபோலிருககினறது இவாகள மூவரும விலபிடிதது காயபபுளள காஙகளை வாயநதவாகளா யிருககினறாாகள இவாகள க்ஷததிரியாளே அனறி அநதணரலல எனறு கருதினவன பினபு இவாகள யாவராயிருநது நமது பிராணனை கேட்டாலும கொடுககவேணடு மெனறு நிசசயிதது, அவாகளை நோககி கமபீரமா யொருவாாததை சொலலுகினறான கேளுஙகள் அநதணாகளே! உஙகள மனதிலெனன இஷடமிருககினறதோ? கேளுங்கள தருகிறேன. எனறு கூறின ஜராசநதனைப பாாதது கணணபிரா னொருவாாததை அருளிசசெயகினறாா

கேளாய ஜராசநதா! இவாகளிருவரும வீமாாச்சுனாகள் யான் வசுதேவகுமாரனான ஸ்ரீகிருஷ்ணன யாஙகளமூவரும உனனை யாசிபபதுயாதனில? நீ சேனையிலலாமல தனிமையா யுததஞசெய்ய வேணடுமெனறு கருதிவந்தோம எனறு கூறின ததைககேட்ட ஜராசநதன கோடையிடியிடிததாற போல் கெட்டியாயச சிரிதது, ஸ்ரீ கிருஷணபிரானைபபாாதது ஒருவாாததை சொல்லுகினறான் கேளாய கிருஷணா! எனனிடததில நீ அடிபடடது கணககேயிலலை தெபபல படமாட்டாமல மதுரையைவிட்டோடிபபோய சமுததிர மததியில துவாரகையெனகிற பட்டண மூணடு பணணி அதனில வாசஞசெய்கிறாயாதலால, பயநதவனான உனனுடன யான யுததஞசெயய மாட்டேன் இநத அாசசுனன மிகவும பாலனாய பலததிலெனக கிணையாகாதவனாதலால். அவனோடும யுததஞசெய்ய மாட்டேன இநத வீமன யெனககிணையாகததோறறுகினறமையால இவனோடு யுததஞசெயகிறே னெனறு கூறினன.

இபபடி கூறிய ஜராசநதன் உடனே தனது மைநதனான சகதேவனுக்குப் பட்டஙகட்டி, வீமசேனனுககொரு கதைகொடுதது, தானுமொரு கதையை எடுததுக்கொண்டு யுதததிறகு ஆரமபஞசெய்து, வலம்புரி இடம்புரியாயும், மண்டலாகாரமாயும், நாட்டியஞ்செய்பவாகள நடிப்பதுபோலும்

ஞோர் வீணைபாட, அப்சரமாதர்கள் நடனஞ்செய்ய, வந்திகள்புகழ, வேதியர்கள் சொஸ்திவாசனஞ்சொல்லிச் சூழ்ந்துவர, அரசர்களெல்லாம் சத்திரசாமர முதலாகிய பணிவிடைகள் செய்துவர, ஸ்திரீகளும் புருஷர்களும் மங்கல வஸ்துக்களைக் கையிலேந்திக் கோலாகலத்துடன்வர, துவசபதாகைகளும் நால்வகைச்சேனைகளும் சுற்றிக்கொண்டுவர, தமதுபத்தினியுடனே யாகசாலையினின்றும் புறப்பட்டுப் பரிசுத்தமாகிய நதியில் அவபிரதஸ்நானஞ் செய்து, வெகுதானங்கள் வழங்கி, யாவரும் சம்ராட்டென்று புகழும்படி விளங்கினார்.

கேளும் பரிக்ஷித்து மகாராஜனே! இவ்விதமாக அந்தராஜசூய யாகமென்னும் பெருங்கடலைக் கண்ணனென்னுங் கப்பலினாலேகடந்து தருமமும் புகழுமாகிய பொருள்களைத்தேடி வெகுசிறப்புப் பொருந்தி விளங்காநின்ற தருமபுத்திரமகாராஜன் யாவரையும் நோக்கி, உங்களாலே நான் இப்பெருமை பெற்றேனென்று உபசாரமாகச்சொல்லி, அவரவருக்குத் தக்கபடி பரிசுகொடுத் தனுப்பினார் பின்பு பீஷ்மாசாரியர், துரோணாசாரியர், கிருபாசாரியர், அசுவத்தாமர், பாகலிகன், சோமதத்தன், பூரிசிரவண், சல்லியன், துரியோதனன், அவன் தம்பிமார்கள், திரிதராஷ்டிரன், விதுரன், சகுனி, கர்னன், இவர்கள் முதலான பேர்களுக்கெல்லாம் வெகுசிறப்பாகப் பூசைசெய்து கொண்டாடி உபசரித்து, அனேகம்யானைகள், குதிரைகள், ஆடைகள், ஆபரணங்கள், முதலாகிய பரிசுகள் கொடுத்து அனுப்புவித்தார் அப்படியே பலராமர், வசுதேவர், அக்குரூரர், பிரத்தியுமனன், அனிருத்தன், சாம்பன், கதன், சாருதீக்ஷணன் முதலான யாதவர்களுக்கும் பூசைசெய்து பரிசுகொடுத் தனுப்பி வித்தார்

மேலும் துருபதன், பீஷ்மன், பாண்டியன், பகதத்தன், விராடன், சகதேவன், திருஷ்டகேது, முதலானோருக்கும் பரிசளித்தனுப்பினார் அன்றியும் தமது தம்பிமார்களை நால்வரையும், சாத்தகி, திருஷ்டத்யுமன், இவர்கள் முதலான பேர்களையும். தங்கள்தேசங்களுக்குப் போகின்ற அரசருக்கு வழிவிட்டு உபசரித்துவரும்படி கட்டளையிட்டார் அதின்படியே அவர்களும் வெகுதூரம் கூடப்போய் வழிவிட்டு உபசரித்து, அவர்களிடத்தில் விடைபெற்றுவந்தார்கள் அன்றியும் நாரதர், பருவதர், தவுமியர், இவர்கள்முதலாகிய மகாமுனிகளுக்குத் தேவோபசாரஞ்செய்து, தாமேகூடப்போய் வழிவிட்டுவந்தார் இவ்வண்ணமாக சகலதேசங்களையும் ஜயித்துக் கொணர்ந்தவைகளும், யாகத்திற்கு உலுபபையாக வந்தவைகளும், பொக்கசத்தி லிருந்தவைகளும், ஆகிய எல்லாப்பொருள்களையும் யாகத்திற்காகச் செலவுசெய்து, யாவரையும் அனுப்பிவிட்டு, ஸ்ரீகிருஷ்ணபகவானோடு தேரின்மேலேறிப் புரத்தையடைந்து, வீதிவலமாக மாளிகைசேர்ந்து களித்திருந்தார்

இப்படியிருக்கையில் கிருஷ்ணபகவான் தருமபுத்திரரைப் பார்த்து, இராஜாதிராஜனே! நீர் மகாநுபாவராதலால் படியினுமேல் இந்தப்பெரிய யாகத்தைத்

நிறைவேற்றி, சத்துருக்களில்லாமல் அகண்ட மண்டலாதிபராகி, உமது பிதாவின் குறையை நீக்கி, தேவசில்பியான விசுவகர்மாவினால் நகரமும், அசுரசில்பியான மயனால் சபையும் படைத்திருக்கின்றீர். தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் அருமையாயும் மேன்மையாயுமிருக்கின்ற உமது சம்பத்தைப்போல நான் எங்கும் காணகிலேன் என்று கூறுகின்ற ஸ்ரீபகவானைத் தருமபுத்திரர் நோக்கி, கேளீர் சுவாமி! ஸ்ரீகிருஷ்ணா! நான் கேவலம் அசேதனத்தோடொத்தவன். எனது தம்பிமார்களுக்கும் மற்றவருக்கும் என்ன மகிமையிருக்கின்றது? உமது கிருபாகடாக்ஷம் பெற்ற மகிமையொன்றிருந்தபடியினாலே மேன்மைகளெல்லாம் அடைந்தேன். உம்மைப் பூசிப்பதற்கும் உமது பெருமையைப் புகழ்வதற்கும் நான் வல்லவனோ? ஓ கிருபாசமுத்திரரே! என்று பதினாறாயிரத்து அறுநூற்றெட்டு மனைவியர்களுடன் புடைசூழ்ந்திருக்கிற சுவாமியைத் துதிசெய்தனர்.

அப்பால் சொர்க்கலோகத்தில் அப்சரமாதர்கள் புடைசூழ இந்திராணியால் பூஜிக்கப்பட்டு அரசாளுகிற தேவேந்திரன்போல இரண்டாவது லக்ஷ்மிக்கொப்பாய உபசரித்துக் கொண்டிருக்கின்ற துரோபதி சமேதரான தருமபுத்திரர் நவரத்தினமிழைத்த சிங்காதனத்தின் மீது உட்கார்ந்து, இராச்சியத்தைத் தருமவழுவின்றி வெகுபயபக்தியோடு நடாத்தி, வேதசாஸ்திரங்களையும், உலக இயற்கைகளையும், நீதிகளையும் நன்றாய்க் கற்றறிந்து சரியாய் நடக்கத்தக்க வேதியர்களைத் தமது சபையில் நிரந்தரமாகயிருக்கச் செய்து அவர்களின் அனுமதிப்படி குடிகளுடைய யோகக்ஷேமங்களை நடத்திவந்தார். இப்படியிருக்கும்போது காலங்களில் தப்பாமல் மழைபெய்து வந்தபடியால் பூமியெல்லாம் பயிர்நிறம்பி, யாவரும் குறைவற்ற செல்வமடைந்து, தத்தமது நெறிகளில் வழுவாது நடந்துவந்தார்கள். இப்படிக் கிருதயுகமென்னும்படி தருமத்தைப் பூரணமாக நடத்திச் சொல்லத்தரமில்லாத செல்வச்சிறப்போடு தருமபுத்திரர் அரசாக்ஷிசெய்து வந்தார்.

இப்படியிருக்க, துரியோதனனென்பவன் தருமபுத்திரருடைய இராஜசூயயாகங் கழிந்தவுடனே ஒருநாள் அவருடைய சபையைப் பார்க்கவந்து, அதினுடைய உயர்வையும், சிறப்பையும், பிரகாசத்தையும், நவமணிமயமாகிய வேலைப்பாடுகளையும், விசித்திரமயமாகிய விலாசத்தையுங்கண்டு ஆச்சரியப்பட்டு, அதில் ஓர்புறத்தில் படிக்கக்கல்லாற் செய்த ஒருதாமரைத் தடாகமிருக்க அதை நீர்போற்காணாமல் நிலம்போலக் காணப்பட்டபடியால் அதில் சாதாரணமாய்ப் போய் ஜலத்தினில் வீழ்ந்து, வஸ்திரங்களை நனைத்துக்கொண்டு பிரமித்துநின்றான். இப்படி நிற்பதைக்கண்ட சில யாதவர்களும், பீமசேனனும், துரோபதையுஞ் சிரித்தார்கள். அப்போ தருமபுத்திரர் அவர்களைப் பார்த்து, நகைக்கவேண்டாமென்று நிறுத்தினார். துரியோதனன் முதலானோர் மிகவும் விசனமடைந்து, நாணத்துடன் தலையைக் குனிந்துகொண்டு அஸ்தினபுரஞ் சென்றனர். ஸ்ரீகிருஷ்ணபகவான் பூபாரநிவர்த்தி செய்யக் காரணமிதுதானென்று தமக்குத்தாமே நிச்சயித்துக்கொண்டு ஒன்றும்பேசாது மவுனமாயிருந்தனர்.

# எழுபத்தாறுவது அத்தியாயம்.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

அருமையாக ருக்குமணித் தாயவளிட விவாகந்தன்னில்
பெருமைகொள் சால்வனென்னை பிரபலயாதவரை
விரைவிலோர் பூண்டிலலாமல் விளக்கிட வெண்ணங்கொண்டு
பிரத்தியும்னனை மூர்ச்சை போக்கிடச் செய்ததாமே

சவுனகராஜாதிபதியான சால்வன் ஸ்ரீருக்குமணிதேவியின் விவாகசமயத்தில் ஸ்ரீபலராமனால் அபஜயப்பட்டு, யாதவர்களென்கிற பூண்டில்லாமற் செய்வதற்குச் சிவனைக்குறித்துத் தவஞ்செய்து, அவரதுகிருபையால் ஆகாயத்தில் சஞ்சரிக்கும்படியான இரும்பினாற்பட்டணம் நிர்மித்துக் கொடுக்கப் பெற்று, அதில் சகலசேனைகளையும் அமைத்து துவாரகைக்குச் சென்று, ஸ்ரீகிருஷ்ணபிரானுடைய குமாரனை பிரத்தியும்னனுடன் போர்செய்து, தன் மந்திரியான த்யுமந்தசேநனால் மூர்ச்சிக்கச்செய்து, பின்புதெளிந்த விருத்தாந்தத்தைச் சொல்லப்படுகின்றது

## ஸ்ரீ சுகர் வாக்கியம்

கேளீர் பரதவம்சோற்பவனான பரீக்ஷித்து மகாராஜனே! ஸ்ரீகிருஷ்ண பகவான் ஸ்ரீருக்குமணிதேவியை ஆசுரவிதியினால் கிரகித்துக்கொண்டு துவாரகைக்குப்போகும்போது ஜராசந்தன் முதலியவர்களுடன் அபஜயப்பட்டு, அந்தப்பகையினால் யாதவர்களென்கிற பெயரைப் பூமியிலில்லாமற் செய்கிறேனென்று பிரதிக்கினைசெய்து, பசுபதியாகிய பரமசிவனைக் குறித்துப் புழுதியை ஆகாரஞ்செய்துகொண்டு, ஒருவருஷம் வெகு உக்கிரமான தவஞ்செய்தனன் அத்தவத்திற்கு மெச்சிய சிவபெருமான் அவனுக்குப் பிரத்தியக்ஷமாயினார். அப்போதவன் ஆனந்தக்கடலிலாழ்ந்தவனாகி, சாஷ்டாங்கமாகப் பணிந்து கைகூப்பித் துதிசெய்து நின்றான் அப்படி நிற்கிறவனைச் சிவபெருமான் பார்த்து, உன் இஷ்டத்தைக்கேள் தருகிறேனென்று கூறினார்

அதற்கவன், ஓ கருணைக்கடலான சுவாமீ! வெகுதுஷ்டர்களான யாதவர்கள் அனேகர் இருக்கின்றார்கள் அவர்களை மாய்ப்பதற்காக ஆகாயத்தில் சஞ்சரிக்கும்படியாயும், மூன்று யோசனை நீளமும் ஒருயோஜனை அகலமுமுள்ளதாயும், வெகு உயரமான மதில்களுள்ளதாயும், யக்ஷர், கின்னரர், கிம்புருடர், உரகர், இவர்கள் முதலிய தேவர்களாலும் அசுரர்களாலும் அபேத்தியமாய் ஒருவராலும் கண்டெடுத்துப் பார்க்கப் படாததாயும், இரதம், கஜம், துரகம், பதாதி, இவைமுதலாகிய சேனைகளை அமைந்து நினைத்தவிடத்தில் ஆகாயத்தில் சஞ்சரிக்கும் படியாயும், இரும்பினாலொருபட்டணம்

நிர்மிததுத தரவேண்டுமென்று வினவினன. இப்படி வினவுகின்ற சாலவனு டைய கருததுககுச சிவபிரானிசைந்து, அப்படியே பட்டணம நிர்மிததுக கொடுககசசொலலி அசுர சிலபியான மயனுககு ஆககியாபிததுப போட்டு அந்தர்த்தானமாயினர் மயனும சிவபெருமானுடைய ஆககினையின வண் ணம நிர்மிததுக கொடுததனன

அதைபபெறற சாலவன இனி சகல யாதவர்களையும வெலலலாமென்று தைரியமடைந்து, அதில நாலவகைச சேனைகளையும அழைததுககொணடு, துவாரகாபுரததினமீது தணடெடுததுவந்து, கோட்டைகள பேரிலும, கொத தளஙகள பேரிலும, நந்தவனததிலுள்ள தருககள பேரிலும, ஐந்திராஸதிரம யாமியாஸதிரம, வருணாஸதிரம, ஆககினேயாஸதிரம, குபேராஸதிரம, இவை முதலிய அஸதிரஙகளையும, சததி, சததி, கண்டகோடாலி, உலககை உழல தடி, கதை, இவைமுதலிய ஆயுதஙகளையும, ஓயவிலலாமல ஆகாயததில நின்றும வருஷிததார் இப்படி வருஷிககிறபோது அந்தத துவாரகா பட்ட ணததிலுள்ள ஜநஙகளகணடு, இதென்ன விபரீதகாலமோ வென்று மனங கலஙகி, திகைததபபி, திடுககிட்டேஙகி, திரிபுரதஹதை யெரிககுஙகாலையில உருததிரனைககணடு பயந்த ஜநஙகளைபபோல பயந்தார்கள இபபடியாவ ரும பயந்ததைப பாரதத ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய குமாரனை பிரத தியுமனன அவாகளைப பயபபடாதேயுஙகோளென்று தேற்றி, தாருகனுடைய குமாரனை இரததததைச சனனதம செயயசசொலலி ஆககியாபிததனன

அவனு மவவண்ணமாகக கொணடுவந்து நிறுதத அதினமீது பிரததியும னன ஆரோகணிததது, சாததகி, சாருதேஷ்ணன், சாமபன, அககுரூரன, பானுவநதன, கதன, இவாளமுதலிய சூராகளான யாதவசிரேஷ்டாகளுடன வெளிபபட்டு சாலவனோடெதிராததனன அபபோ சாலவன யாதவர்கள் மீதில மாயையை அனுசரிததது, அனேகபாணஙகளைப பிரயோகஞ்செயது விடுததனன பிரததியுமனன அதுகளயாவையுந தனதுமாயையால சூரிய னைககணட இருளைபபோல பறககடிததது, அவனுடைய சேனாதிபதியான சுததியுமனனமீது இருபததைந்து பாணஙகளை விடுததது மாாபைப பிளந்த னன அந்த தெபபல பொறுககமாட்டாத அததச சுததியுமனன உதிரஙகளைப பெருககிககொணடு மூறசிததுப பூமியில வீழந்தனன பினனும பிரததியும னன் நூறுபாணஙகளைப பிரயோகிததது, சாலவனுடைய படைகளைச சிதற வடிததது, அவனதுசாரதியைப பததது பாணஙகளாலும, குதிரையை மூன்று பாணஙகளாலும, அடிததது நோகசசெயதனன.

அபபோதிநதப பிரததியுமனனுடைய கரலாகவததைபபார்த்த தேவர் கள் துதிததது மலாசொரிந்தார்கள் அதை யாதவாகள கண்டு களிததது வியப் பை அடைந்தார்கள. அதைபபார்த்த சாலவன பொறாமைபபட்டு கடுஞ்சின மடைந்து, இவனுட னிப்படியுததஞ் செய்வதால பிரையோஜனமிலலை இவ னை மாயையால மோசபபடுததி வெலலவேண்டும, என்று கருதி அபபடியே

ஆகாயததில படடணத்தோடு கிளமபி, அனேக பாணவருஷஙகளை வருஷித்து உடனே பூமியிலவநது அனேககணைகளை விடுததான, அபபோ பிரததியும னன பததில கணைதொடுககிற சமயததில கணணுககுககாணாமல மறைநது, மே கததிலிருநது சரவருஷஙகளை வருஷிததான பிரததியுமனன பாணபபிர யோகஞ செயயுஞசமயததில ஒருபடடணததில அனேக சேனைகளுட னிருப பவனபோல தெனபடடு, திருமபவும அனேகபடடணஙகளில அனேகசேனை களோ டிருபபவனபோலுந தெனபடடான

அநதநத சமயததிறகுத தகுதியாய யாதவாகளுடன பிரததியுமனன பாணஙகளை விடுததுக கொணடுவநதான அதுகளைச சாலவன தபபிததுக கொணடு, பாவததததின மீதிலிருநது சிலகணைகளைப பொழிநதான அதறகு பிரததியுமனன பாணபபிரயோகஞ செயயுஞ சமயததில ஜலததில மறைநது அனேக கணைகளை யெயதான இபபடி நினறவிடததில நிலலாமல ஓடிமறைந து யுததஞசெயகிற சாலவனை யாதவவீராகள தெனபடுகிற விடததில சரவ ருஷஙகளை வருஷிததுயெயதாாகள அதுகள யாவையுஞ சாலவன தபபித துககொணடு. சூரியாககினிபோல பிரகாசம பொருநதிய விஷஙகளைக கககிக கொணடிருககிற அனேக பாணஙகளை யாதவாகளமீதில பிரயோகிதது மாயு மாய மறைநதனன அபபோ யாதவாகள இநத சாலவனை ஜயிததால சகல மேனமைகளும பெறலாம மரணததை அடைநதால வீரசொறகததை அடையலாம ஆதலால இவனுடன யுததஞசெயதால இரணடுவிததததிலும சவுககிய மிருககிறதெனறு கருதி நிலையாக நினறு யுததஞசெயயத தொடங கினாாகள.

அநதச சமயததில முனபு பிரததியுமனனுடைய பாணபபிரயோகததி னால் மூறசிததிருநத சுததியுமனனெனவன தெளிநதெழுநதிருநது, ஒரு கதை யைககரததிறறாஙகி ஓடிவநது, பிரததியுமனனுடைய மாாபினிலோஙகி அடித தான அநதவடியினால மாாபு நொறுஙகி மூறசிதத பிரததியுமனனை அவனது சாரதிகண்டு, இரததததைக திருபபிககொண டபபுறஞசெனறனன அநதச சுததியுமன னெனபவன தேவதானவ கநதருவாசுளாற சாவிலலாமல வரம பெறறு சாவோததம பவததை வாயநதவனுகி இரணடாயிரந துலாம எழுகி றறசெய்த கதையை எடுததுத தனது பலஙகொணடது ஓஙகி அடிததததறகு இநதப பிரததியுமனனனபடியால பிராணனோடேகூடி மூறசையடைநதான. மறறொருவனுனால சூரணமாயபபோய விடுவான. ஆதலால அநதப பிரததியும னன ஒரு முகூாததததிறகுமேல மூறசைதெளிநது, தனது சுராதியைப பாாததுச சொலலுகிறான

ஓ சாரதி, இபபடிபபட்ட சததுரு எதிரில் நிறகிறபோது யென்னை அப புறததிற கொணடுபோய் விட்டையே இது முகததான அபபிரதிஷ்டையலல லோ? யாதவவமசததிற் பிறநதவனில யெவனுகிலும யுததததிற பினவாஙகின துண்டோ? எனது புதைவனுககுச சநதோஷமவருமபடி யென்னைப் பேசு

பான் யஜமானனென்றெண்ணி இரதத்தைத் திருப்பிக்கொண்டு வந்ததையே இந்த யுத்தந்தீர்ந்து நமது நகரஞ்சென்றவுடன் ஸ்ரீகிருஷ்ணபகவானையும் ஸ்ரீ பலராமரையுங் கண்டு சேவிக்கும்போது அவர்கள் கேள்விக் கென்னவுத்தரஞ் சொல்லப்போகிறேன்? என்னது சகோதரர்கள், அவர்களுடைய மனைவியர்கள் முதலானோர் இதனைக்கேட்டால் நகைப்பார்களே என்று சொல்லுகிற பிரத்தியும்நனை அந்தச்சாரதிபார்த்து, ஐயா! தருமத்தினுடைய இரகசியத்தை அறிந்து நானிப்படிக்குச் செய்தேனே அன்றி, எனதிச்சையாய உமக்கு ஆயாசமவரும்படி நான்செய்யவில்லை யஜமானன் ஆபத்தை அடைந்திருக்கிற சமயத்தில் சாரதி இரக்ஷிக்கவேண்டும் சாரதியைச் சர்வகாலமும் யஜமானன் பாதுகாக்கவேண்டும் ஆதலால் இப்போ நீர் இளைப்படைந்திருந்தபடியால் அது தீருகிறவரையில் அப்புறத்திற் கொண்டுபோனேன் இனியென்னிடத்திற் கோபத்தைப் பாராட்டாமல் யெவ்விதமாக ஆக்கியாபிக்கின்றீரோ அவ்வண்ணம் நடக்கச் சித்தமாய்க் காத்திருக்கிறேனென்று விக்கியாபனஞ் செய்தனன்

# எழுபத்தேழாவது அத்தியாயம்.

அறுசீரடி ஆசிரியவிருத்தம்

அந்தநற் பிரத்தியும்நன் ஆச்சரியத்தியு மத்சேனனை
கொந்திட மாயத்துவிட்டுக் கோபால ராஞ்ரைப்போ
இந்திரப் பிரஸ்தத்திலிருந்து எழிலதுவாரகைக்கு நண்ணி
பொருந்துசாலுவன் றனோடு போர்புரிந்ததனைச் சொல்வாம்.

அந்தப் பிரத்தியும்நன் தியுமத்சேனனை மாய்த்ததும், ஸ்ரீகிருஷ்ணபகவான் இந்திரப்பிரஸ்தத்திலிருந்து துவாரகாபுரத்திற் கெழுந்தருளி சால்வனோடெதிர்த்துப் போர்செய்ததும், அவன் தனதுபட்டணத்துடன் மாய்ந்ததுஞ் சொல்லுகின்றன

## ஸ்ரீ சுகர் வாக்கியம்

கேளீர் குருவம்சோற்பவனான பரிக்ஷித்துமகாராஜனே! அந்தப் பிரத்தியும்நனானவன் இப்படிசொன்ன சாரதியைநோக்கி, அந்த தியுமத்சேனன் எவ்விடத்திலிருக்கின்றானோ? அவனருகில் இரதத்தை நடத்தென்று ஆக்கியாபித்தனன் அவனும் அவ்வண்ணம் அதிவேகத்துடன் அவன் சமீபத்திற் கொண்டுபோய் நிறுத்த, அப்போ தனது சேனைகளைமாய்த்த அந்த தியுமத்சேனனைக்கண்டு கடுஞ்சினமடைந்து, வில்லை வளைத்து நாணேற்றிட்டுக் குணத்தொனிசெய்து, எட்டு நாராசபாணங்களைப் பிரயோகித்து, நாலுபாணத்தால்

நான்கு குதிரைகளையும், ஒருபாணத்தால் சாரதியையும், ஒருபாணத்தால் தனுசையும், ஒருபாணத்தால் டெக்கபத்தையும், ஒருபாணத்தால் அந்த தியுமத்சேனனுடைய சிரசையும் அறுத்துத் தள்ளிப்போட்டான். அப்போது கதன், சாத்தகி, அக்குரூரன், இவர்கள் முதலிய யாதவர்கள் அந்தச் சால்வனுடைய படைகளை யேககாலத்தில் சின்னாபின்னமாக அடித்து ஆகாயத்தினின்று சமுத்திரத்தினில் விழச் செய்தார்கள்.

இப்படி இருபத்தொன்பதுநாள் தேவாசுர யுத்தம்போல் ஓய்வில்லாமல் மகத்தான யுத்தஞ்செய்து கொண்டிருக்கையில், தருமபுத்திரருடைய இராஜசூயயாகத்திற்குப்போன ஸ்ரீபலராம கிருஷ்ணர்களுக்குத் துவாரகாபுரத்தில் வாசஞ்செய்கிற யாதவர்கள் யாவரையும் சங்கரிக்கவேண்டுமென்று சால்வன் வந்து போர்செய்வதை யறியாதவர்களாகத்தானே இந்திரப் பிரஸ்தத்தில் சிலநாள் வாசஞ்செய்து, தருமபுத்திரரைப் பார்த்து ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி சொல்லுகின்றார்: ஐயா தருமபூபதி! நானிவ்விடம்வந்து நெடுநாளாயிற்று உமது உத்சவங்களை யெல்லாங் கண்களிக்கப் பார்த்தேன் அவ்விடத்தில் சால்வன்முதலிய துஷ்டர்கள் வந்து துன்பப்படுத்துவார்கள் ஆதலால் துவாரகைக்குச்செல்ல விடைதரவேண்டும், என்று சொன்ன ஸ்ரீகண்ணபிரானைத் தருமராஜனோக்கி, ஓ கருணாகடலே! உம்மைவிட்டுப் பிரிந்து நானிருக்க மாட்டேன். ஆகிலும் உமதுகருத்தையுந் தடுக்கமாட்டேன் என்று சொல்லிக் கண்களில் நீர்ததும்ப எழுந்து ஆலிங்கனஞ் செய்துகொண்டு, சரீரமாத்யந்தமும் புளகமரும்ப ஸ்தம்பம்போல் நின்றான்.

பின்பு கண்ணபிரான் அவருடன்கூட குந்தியிடத்திற்குச்சென்று தண்டனிட்டு, அத்தாய்! நீ புத்திரரால் வெகுசிறப்பைப்பெற்றாய் நான்போய்வருகிறேன் என்றுசொல்லி அவளிடத்தில் ஆசீர்வாதத்தோடு விடைபெற்றுத் துரோபதை சுபத்திரை யிடத்திற்சென்று, அவர்கள் பணிந்ததற்கு ஆசீர்வதித்து, அவர்களிடத்தும் மற்றபந்துக்களிடத்தும் விடைபெற்று, கிருதவர்மன் முதலிய யாதவர்களுடனே பாண்டவர்கள் சூழ்ந்துவரத் தேர்மேலேறிப் புறப்பட்டு, சிலதூரஞ்சென்று தருமபுத்திரரைப் பார்த்து, ஓ மகாராஜாவே! இராசசியத்தைச் செவ்வையாக ஆண்டு யாவரும் புகழும்படியிரும் என்று சில நீதிவசனங்கள் சொல்லி அனுப்பிவித்துத் துவாரகா புரிக்குப் போகின்றார் அப்படி போகும்போது மார்க்கத்தில் நாநாவிதமான உற்பாதங்களைக் கண்டு கலவரப்பட்டு துவாரகாபுரத்தினில் வந்து, அவ்விடத்தில் யாதவர்களில்லா திருப்பதையும் பட்டணத்திலுள்ள ஜனங்கள் கிலேசப்படுவதையும் பார்த்து, துவாரபாலகனுடைய வசனத்தினால் சால்வன்வந்து யுத்தஞ்செய்வது தெரிந்து, பட்டணத்தை இரக்ஷிக்கும்படி பலராமரை வைத்துப்போட்டு சால்வன் யுத்தஞ்செய்கிற விடத்திற் கெழுந்தருளினார்.

அவரைக்கண்ட பிரத்தியும்னன் முதலிய சகல யாதவர்களும் தரித்திரனுக்கு நிதிதென்பட்டாற்போல வெகுகளிப்பையடைந்தார்கள். சால்வனும்

சுவாமியைப்பார்த்து, ஓரேதரமாய் யாதவபூண்டைக் கருவறுக்கச் சமயம் வாய்த்ததென்று சந்தோஷத்தை அடைந்திருந்தனன் அப்போ ஸ்ரீகிருஷ்ண பகவான் தாருகனைப்பார்த்து, அந்த மாயாவியான சால்வனெங்கே யிருக் கின்றனோ? அவவிடத்திற்குச் சீக்கிரமாக இரதத்தைக் கொண்டுபோவென்று ஆக்கியாபித்தனர். அவனுமவ்வண்ணந் தனது சிக்ஷாபலத்தினாலே வெகுசீக் கிரமாக இரதத்தைக்கொண்டுபோய் நிறுத்த, அதுகண்ட சால்வன் கடுஞ்சி னமடைந்து, சுவாமியின் மீதில் அனேகபாணங்களைப் பிரயோகித்து, தாரு கன் மீது யமதண்டத்திற் கொப்பாயும் சர்வகாலமும் சத்துருக்களுடைய உதிரங்களாற் பூசப்பட்டு மிருக்கின்ற சக்தியைவிடுத்து வெகுகோபத்து டன் பிரயோகித்தனன். அதை சுவாமி ஆகாயத்தில் வரசசேதானே நூறு துண்டமாகக் கண்டித்து, சால்வன்மீதில் பதினாறுபாணங்களைப் பிரயோகஞ் செய்தனர்.

இப்படி கரலாகவமாயப் பிரயோகித்த ஸ்ரீகிருஷ்ண சுவாமியினது பாணங் களைச் சால்வன் துண்டித்து, ஒரு நாராசபாணத்தால் சுவாமியினுடைய கரத் திற்கிலக்காய விடுத்தான் ; அதினால் ஸ்ரீகிருஷ்ணபகவான் வெகுவருத்தமடைந் து, கரத்தினின்றிருந்த வில் கீழ் [illegible] ரம ஆறுயப்பெருக, இப்படி சங்கடப்படும்படி செய்ததைச [illegible] தவாகளும் பார்த்து ஹாஹாகாரஞ் செய்து முறையிட்டார்கள் சால்வனும் அவனுடன் கூடவந்த சேனைகளும் வெகுசந்தோஷத்தை அடைந்தார்கள் அந்தச் சமயத்தில் சால்வன் அட்ட ஹாஸஞ்செய்து ஒருவார்த்தை சொல்லுகிறான் கேளடா மூடனே கோபா லா! எனது தோழனை சிசுபாலனுக்கு பீஷ்மகன் குமாரத்தியான உருக்கு மணியை விவாகஞ்செய்து வைக்கவேண்டுமென்று அந்தச் சுயம்வரத்தில் வந்த நாங்களெல்லாரும் பார்த்திருக்க, கொஞ்சமேனும் பயமில்லாமல் அவ ளைத்தூக்கி இரதத்தில் வைத்துக்கொண்டு போனாயல்லவோ? அப்போ மன் னித்து விட்டுவிட்டோம்

அன்றியும் இராஜசூயயாகத்தில் சகல அரசர்களும் வந்திருக்க யாவ ரையும் அவமதித்து, ஹீனஜாதியிற் பிறந்தோமென்கிற நாணமுமற்று வெகு மானம் பெற்றாய் இதனால், சிசுபாலனை என்போலியதோழன் பக்கமில்லாத சமயத்தில் சங்கரித்தாய், அந்த அபிப்பிராயத்தினா லிப்போ யெந்தனருகில் வந்துகிட்டினாய், உன்னைச் சீக்கிரத்தில் யமபுரத்திற் கனுப்புகிறேன். என்று கூறிய சால்வனைநோக்கி ஸ்ரீகிருஷ்ணபகவான் புன்னகையுடன் சொல்லுகின் றார். அடா மூடப்பதரே! நீ வெகு அழகாயக் கொக்கரிக்கிறாய். உன் நடக் கையெனக்கு நன்றாய்த்தெரியும், நீ வாயினாலே பிதற்றுவதில் யான் பயப்பட மாட்டேன் கிரியையினாலே காட்டு, என்று தமது கவுமோதகியென்கிற கதை யை எடுத்துப் பூமியிலூன்றி, ஒருகிளம்பாய ஆகாயத்திற் கிளம்பி, சால்வ னுடைய மார்புக்குங் கழுத்திற்கு நடுவில் மோதி அடித்தார் அதினாலவன் மார்பு பிளந்து உதிரம் பெருகுவதை ஸ்ரீகிருஷ்ணபகவானுக்குத் தெரியவொட் டாமல் ஆகாயத்தில் பட்டணத்துடன் கிளம்பி, ஒருமுகூர்த்தம் மறைந்து,

மாயையால் ஸ்ரீகிருஷ்ணபகவானுக்குப் பிதாவான வசுதேவருடைய வேலைக்காரனைப்போ லொருவனைச் சிருஷ்டித்து, தேவகிதேவி அனுப்பினதாகச் சுவாமியின் சமீபத்திற் கனுப்பினான்.

அவன் ஸ்ரீகிருஷ்ண சுவாமியின் சந்நிதானத்திற்குவந்து கைகூப்பிக் கொண்டு சொன்னவார்த்தை யாவது தேவரீருடைய பிதாவான வசுதேவரைச் சால்வன் வந்து பாசத்தாற்கட்டிக் கொண்டுபோனான் அவரையெந்த விதத்திலும் விடுவித்துக்கொண்டு வரவேண்டுமென்று உமமுடன் உமது தாய் சொல்லச்சொன்னாள் என்று விக்ஞாபனஞ் செய்தான் அதுகேட்ட ஸ்ரீ கிருஷ்ணபகவான் வியந்து, அ! [illegible] மகா பலசாலியான பலராமரை ஜயித்து சால்வன் எனது தந்தையைப் பிடித்துக்கொண்டு போனானென்ற ருல, இதென்னமோ மகா ஆச்சரியமா யிருக்கிறது என்று சங்கையுற்றுக் கொஞ்சம் விசனத்துடன் பலவாறுகச் சிந்தித்துக்கொண் டிருந்தார் அப்படியிருக்கையில் ஆகாயத்தில் சால்வனனவன் வசுதேவரைப் பாசத்தினற் கட்டி சுவாமிக்கெதிராகக் கொண்டுவந்து, கேளடா கோபாலா! உனதுபிதாவான வசுதேவன் என்னுற் கட்டிக்கொண்டு வரப்பட்டான் நீ சூரனுனு லிவனைவிடுவித்துக்கொள் என்றுரைத்து அவர்பார்த்துக்கொண் டிருக்கையிற்றுனே கத்தியினுல் சிரசைக்கண்டித்துப் போட்டான்.

அப்போ ஸ்ரீகிருஷ்ணபகவான் சாதாரணமான மானிடன்போல விசனப்பட்டு, கொஞ்சநேரத்தில் அந்தச் சவுபமென்கிற நகரத்திலிருந்த சால்வனையும் அவனுல் வெட்டுண்ட வசுதேவருடைய சரீரத்தையுங் காணுமையால் ஈதெல்லா மாயையென்று நிச்சயித்து, இனிச் சால்வனை வைக்கக்கூடாது. சீக்கிரத்திலேயே சங்கரிக்கவேண்டும் என்றிருக்கையில் அந்தச் சால்வன் கண்ணுக்கெதிரே வந்துநின்று, ஸ்ரீகிருஷ்ணபகவான் பேரிலும் சாரதிமுதலிய சேனைகளின்மீதிலும் சரவருஷங்களைப் பொழிந்தான். அதுகண்டு ஸ்ரீபகவான் ஒரு அர்த்தசந்திர பாணத்தால் அவனுடைய கவசத்தை அறுத்து, தமது கதையால் அவனது சவுபமென்கிற பட்டணத்தைப் பொடிப் பொடியாகத் துண்டித்துப் பூமியில் தள்ளினார்

அப்போ சால்வன் பதாதியாய் ஒருகதையைக்கையி லெடுத்துக்கொண்டு ஸ்ரீகிருஷ்ணபகவானை மாய்க்கவேண்டுமென ரோடிவந்தான் அப்போ ஸ்ரீகண்ணபிரான் இரண்டர்த்தசந்திர பாணங்களைப் பிரயோகித்து, அவனதுகதையுடன் இருகரத்தையுந் துணித்து, திருவாழிப் பிரயோகத்தினுல் சிரசையுஞ் சேதித்தனர் அக்கால சகல யாதவர்கள் கொண்டாட, தேவர்கள் மலர்சொரிந்து துந்துபிவாத்தியம் முழக்க, அப்சரமாதர்கள் நடிக்க, இப்படிவெகு ஆடம்பரத்துட னிருக்கிறசமயத்தில் சால்வனுக்கும் சிசுபாலனுக்குந் தோழனும், ஸ்ரீகிருஷ்ணபிரானுக்கு அத்தையின் குமாரனுயும், மகாபராக்கிரம சாலியாயுமிருக்கிற தந்தவக்கிரன்கேட்டு, கடுஞ்சினத்தோடு ஸ்ரீகிருஷ்ண்பகவானை மாய்த்துத் தனது தோழன்மார்களுடைய கடனைத்தீர்த்துக் கொள்ள

வேண்டுமென்று ஒருகதையை எடுத்துக்கொண்டு காலநடையாக ஓடிவந்தான்

# எழுபத்தெட்டாவது அத்தியாயம்.

எழுசீரடி யாசிரிய விருத்தம்.

தந்தவக்கிரனையும் விதூரதனறனையும்
　சங்கரித்ததும் பலராமர்
அந்தமாந்தீர்த்த யாத்திரைபோன
　அவ்விடத்திற சூதறமேறகடிந்து
பந்துபோறறலையை யிருபிளவாக
　பணணதும மகாரிஷியானோர
முந்துசூதரை முனபோலபிழைக்க
　முனிந்திடச்செய்தது முரைப்பாம

ஸ்ரீகிருஷ்ணபகவான தந்தவக்கிரனையும விதூரதனையுஞ் சங்கரித்ததும் ஸ்ரீபலராமர் தீர்த்தயாத்திரை போனவிடத்தில சூதபுராணிகரிடத்தில், கோபித்துக்கொண்டு சிரசைத்துணடித்ததும, திருமபி மகரிஷிகளெல்லா மெபபோதுமபோலச் சூதரைப்பிழைப்பிக்கச் செய்ததுஞ் சொல்லப்படுகினறன

## கண்ணனுக்கும தந்தவக்கிரனுக்கும யுத்தம்

### ஸ்ரீ சுகர் வாக்கியம

கேளீர் சந்த்னுவ பெளத்ரனான பரிக்ஷித்துமகாராஜனே! சிசுபாலனுக்கும, சாலவனுக்கும, பவுணடரீகனுக்குந தோழனான தந்தவக்கிரனென்பவன தனது சினேகிதாகள யாவரையும ஸ்ரீகிருஷ்ணபகவான சங்கரித்ததைச் சகிக்கமாட்டாமல, கதையைக் கரத்தினிற்றாங்கி ஓடிவந்தான, இப்படி வருகிறவனைப் பார்த்தபகவான தாமும இரதத்தைவிட்டுக் கீழேகுதித்து, தமது கவுமோதகியெனகிற கதையை எடுத்துக்கொண்டு அவனுக்கெதிரே நின்றார். அவரைப் பார்த்த தந்தவக்கிரன கடுஞ்சினத்தோ டொருவார்த்தை சொல்லுகின்றான. கேளாய் அடா மூடனானவனே! இவவளவுகாலெனது கண்ணிலகப்படாமல திருடனைப்போ லொளித்திருந்தாய. இன்றையதினம யெனது கண்ணிற பட்டபடியால யெந்தன் குறையைத் தீர்த்துக்கொள்ளுகிறேன. இனி யுன்னை விடுகிறதில்லை. யெனது சினேகிதாகள போனவழி உன்னையும அனுப்பிவிடுகிறேன், நீ யெனக்கு அம்மான் மைந்தனாயிருந்து எனக்குத்தானே யித்

திர துரோகததைச செயதபடியால, அதறகுபபயனை யிபபோதே காணப் போகிறாய என்று தனது கதையாலோங்கி ஒரு அடி அடிததான.

ஸ்ரீ கிருஷ்ணபகவான தாமரைககொடியினு லடிககபபட்ட மததகஜம போல அதை லக்ஷியஞ செயயாமல, தமது கதையால அவனது மாாபினில ஓங்கி அடிததனா அதைதத தநதவககிரன சகிககமாட்டமல, மாாபுபிளநது, சரீர முழுதும நொருங்கி, வாயினால உதிரங்களைக ககிககொண்டு, தலையைபிரித து, கைகாலகளைப பரபபிககொண்டு மிருதனாயபபூமியில விழுநதனன சிசுபா லனைபபோல இவனும துவாரபாலக னாதலால இவனிடததிலும ஒருஜோதி உண்டாகி, ஸ்ரீகணணபிரானுடைய திருவடியில லயிததுபபோயிற்று, அதைச சகலயாதவாகளுந தேவ தானவ கருட கநதருவ சிதத சாததியா முதலியவர் களுங கணடு மிகவும வியபபை அடைநதாாகள அவன தமபியான விடூரதன தனது சகோதானிறநததைப பாாததுச சகிககமாட்டாமல, மிகவும சோகத தோடுங் கோபததோடுங கததி கேடயததை எடுததுககொணடு, ஸ்ரீகிருஷ்ண பகவானை நிலலு நிலலென்று திககரிததுககொண டோடிவநதான

அபபோ ஸ்ரீகிருஷ்ணபகவான வேகமாய சககிரபபிரயோகஞ செயது, அவனது சிரசைத துணிததுவிட்டாா அபபோ தேவரிஷிகளும பிரமமரிஷி களும ஆனநதககூததாட, அமபரததினி லுமபா மலாசொரிநதாட, யோகி களும வேதபாராயணஞ்கூற, சகலயாதவாகளும பதினெண வாததியங்களு டன புடைசூழ, இபபடி கோலாகலததுடன ஸ்ரீகிருஷ்ண பகவான எழுநத ருளுகிறபோது பூதனை முதல தநதவககிரன விடூரதன வரையில அசுராகளாத லால அவாகளைத தாமன்றி யாருங கொலலமாட்டாாகளென்று தாமேகொன று, இனியெவனாவது தபபியிருநதாலும அவனை யாரையாவதுகொணடு சங்கரிததுபபோடுவோம இனி ஆயுதமெடுககத தேவையிலலை என்று நிசச யிதது சகலஜநங்களாற துதிககபபடடுககொணடு துவாரகாபுரஞ் சோநது, உருககுமணி சததியபாமை முதலியவாகளுடன கூட சுகமாயிருநதனா

அநதச சமயததில பாணடவாகளும கவுரவாகளும யுததஞசெய்ய ஆரம் பிததிருபபதை தூதாமுகமாயக கேழ்வியுறற ஸ்ரீபலராமா, இங்கிருநதால யெவாகளுககாவது சகாயஞ செயயவேணடிவரும ஆதலால நாமிங்கிலலாம லிருபபதே யோககியமென்று கருதி, தீாதத யாததிரைககுபபோக யததனஞ செயது, அனேகா வேதியாகளையும பிரமமரிஷிகளையுங கூட்டிககொணடு பிரயாணபபட்டு, முதலில பிரபாச தீாததததில ஸ்நானஞ்செயது, தேவ ரிஷி பிதுருகணங்களை யுததேசிதது தாபபணஞ்செய்து, சரஸ்வதி நதிக்குச் சென்று பிரதூதகமெனகிற சரசிலும, பிநதுசரசிலும, திருணகூபமென்கிற சரசிலும, சககிரதீாததததிலும, ஸ்நானஞ்செயது, அவவிடததிற செய்ய வேணடிய தாபபணங்களைச செய்துபோட்டு யமுனையிலெததனை புண்ணிய தீாததங்க ளிருககின்றனவோ ? அதுகளிலும் கங்கையிலுள்ள தீாததங்களி லும் ஸ்நானஞ்செய்து, அனேக தானங்களை வேதியர்கட்குக் கொடுதது, சகல

ரிஷிகணங்களுடன் நைமிசாரணணியததில சவுநகாமுதலிய ரிஷிகள் சததிர யாகஞ செயதுகொண டிருககிற விடததிற கெழுநதருளினர்.

அவரைககண்ட சகலரிஷிகளு மெழுநதிருநது, சாஷடாஙகமாகப் பணிநது ஆசனம சமற்பிததது, அவா அதிலெழுநதருளின பிறபாடு அநதப் பிரமமரிஷிகளயாவருங கைகூடபபிககொண டிருககிறாகள அசசமயததில் ஸ்ரீபலராமா வியாசருடைய சிஷியனுயும உரோமமஹரிஷிககு மைநதனுயு மிருககினற சூதா தமககு எழுநதிருநது மரியாதை செயயாமல, உயாநத ஆசனததில அசட்டையாய உடகாாநதிருபபதைககணடு கடுஞசினமடைநது பிராமமண ஸதிரீயினிடததில க்ஷததிரியனுககுப பிறநத சஙகரஜாதியாகவுந தேரோடடுவதறகுரியவனுகவு மிருககினற இநதச சூததிரனுககு இநதரிஷி கள உயாநத ஆசனஙகொடுததது வேதவியாசராயப பாவனைசெயதுகொண டிருககினறாகளலலவாவெனறு யோசிததது, அநதரிஷிகளைபபாாததது, கண கள சிவகக, கைகளபதைகக, உதடுகளதுடிகக ஒருவாாததை அருளிச செய்கிறா

கேளீா பிரமமநிஷடாகளான மகரிஷிகளே! சஙகரஜாதியிறபிறநத யிவ னுககுஉயாநத ஆசனஙகொடுததுப பிரமமநிஷடாகளான நீஙகள தாழநத ஆதனததி லிருபபதினுலேயே, இவன சுவயம ஜாதியிற சிறநதவனுகவும இதி ஹாஸமுதலிய பதினெண புராணததையும மகாரிஷிகளான உஙகளுககு உபதேசிககிறே மெனறுங காவிததிருககிறுன வேஷதாரியானவன உததமப் பிராமமணனைபபோல யெமது மகிமைகளைக கணடுணாவனே? எவவளவு விததை கறறிருநதாலுஞ சாதிககுரிய புததியிருககுமே யனறி, யோககிய தையுணடாக மாடடாது தருமததை நிலைநிறுததுவதறகும, இபபடிபபட்ட துஷ்டாகளை நிககிரகிபபதறகும, அவதரிததிருககினற எமபோலியவாகளை அலக்ஷியஞசெயத இநதத துராததுமனைச சஙகரிககிறேன எனறு தமது திருககையிலிருநத தாபபததை அஸததிரமாக அபிமநதிரிததது, அநதச சூத னுடைய சிரசினிற பிரயோகிததனா அதனால சூதன பிராணனிழநது பூமி யிலவிழநதனன அதைச சகலரிஷிகளுஙகணடு மகாவிசனததை அடைநது ஸ்ரீபலராமரைபபாாதத தொருவாாததை சொலலுகினறாகள.

வாரீா ஸ்ரீபலராமரே! இநதச சூதா எஙகளுககுப புராணஞ சொலவதற காக இவருககுப பிரமமாசனமும் தீாககாயுவுங கொடுததது உயாநத ஆசனத தில வைததிருநதோம அவரை நீா சஙகரிததபடியால உமககுப பிரமமஹத தியாகிய மகாபாபமவநது சமபவிததது நீரே யீசுவரனுகவும, உமமையே வேதங்கள் ஸ்துதிககிறதாகவும, உமதாககினையே வேதமாகவு மிருநதாலும் அநத வேதததினுற சொலலபபட்டிருககினற பிரமமஹததி உம்மை யொனறுஞ் செய்யாவிடினும, அநதவேத நியமனபபடிககு நீா பிராயச்சிததஞ செய்துக் கொள்ளாவிடில் யாரும் பாபங்களுக்குப பிராயசசித்தஞ செய்துகொள்ள மாட்டார்கள். ஆதலால் உலக சமரக்ஷணாத்தமாக நீா பிராயசசிததஞ் செய்து கொள்ள வேண்டும்.

என்று கூறுகிற மகாரிஷிகளை ஸ்ரீபலராமர் பார்த்து, இந்தபாபத்திற்கென்ன பிராயச்சித்தம் விதிக்கவேண்டு மென்று இஷ்டமிருக்கின்றதோ? அதைச்சொல்லுங்கோள் அவ்வண்ணஞ் செய்கிறேன் என்று அருளிச்செய்த ஸ்ரீபலராமனை அந்தரிஷிகள் பார்த்து, இந்த ரோமஹர்ஷணருக்குத் தீர்க்காயுவும் பிரம்மதேஜசும் நாங்கள் கொடுத்திருக்கிறோம் அதுவும், நீர் பிரயோகித்த தாபபாஸ்திரமும் அந்த அஸ்திரத்தின் விவருக்கு நேர்ந்த மிருத்தியுவும் பொய்யாகாய் விருக்கும்படி தகுதியாயோசித்து நடத்தவேண்டும் என்று விக்ஞாபனஞ்செய்த மகருஷிகளை ஸ்ரீபலராமர் பார்த்து, உங்கள் கருத்தின் வண்ணம் அந்தச்சூதன் உக்கிரசிரவசென்று பெயருடையவனாகி, ஆயுளுள்ளவனாகவும் தேஜசுள்ளவனாகவும் ஞானியாகவு மிருந்து, உங்கள் கேள்விக்கு உத்தரஞ் சொல்லத்தக்கவனு யிருக்கக்கடவனென்று ஆசிகூறி யவரைப் பிழைப்பித்தனர்.

கேட்டீரோ பரிக்ஷித்துமகாராஜனே! பின்பு அவரும் நித்திரைவிழித்தவன்போ லெழுந்திருந்து, ஸ்ரீபலராமரைப் பிரதக்ஷணஞ் செய்து, சாஷ்டாங்கமாகப் பணிந்து கைகூப்பி எதிரில்நின்றுகொண்டு, புத்திஹீனனாய தேவரீருடைய மகிமையைமறந்து அபராதஞ்செய்ததை மன்னிக்கவேண்டும், உலகத்திற்குத் தந்தையான தேவரீர் பொறுத்துக்கொள்ள வேண்டும் என்று வெகுவிதமாகத் துதித்துப் பணிந்த சூதபுராணிகரிடத்தில் ஸ்ரீபலராமர் அருள்கூர்ந்து, அவருடைய தப்பிதத்தை மன்னித்து, அவருக்குவேண்டிய புத்திகளைச்சொல்லி, அந்த ரிஷிகளைநோக்கி, இந்தச் சூதனிடத்தில் நீங்கள் பிரம்மதேஜஸை ஆவாகனஞ் செய்திருப்பது தெரியாமல் சங்கரித்தபடியால் அந்த அபராதத்திற்கு உங்களுக்கு வேண்டுவதை விரும்புங்கோள் அதை நிறைவேற்றுகிறேன் பின்பு இந்தபாபத்திற்குப் பிராயச்சித்தம் விதியுங்கோள் என்று அருளிச்செய்த ஸ்ரீபலராமர் வார்த்தைகளைக் கேழ்வியுற்ற அம்முனிவர்களவரைப்பார்த்து இதனைச்சொல்லுகிறார்கள்.

வாரீர் யதுகுலசிகாமணி! வாதாபியென்றும், வில்வலனென்றும், இரண்டு இராக்கதர்களிருந்தார்கள் அவர்களை அகஸ்தியமாமுனிவர் மாய்த்து விட்டார் அவர்களில் வில்வலனென்கிற புத்திரனிருக்கின்றான். அவனெப்பொழுது முதிரங்களாலும், மலமூத்திரங்களாலும், மதுமாம்சங்களாலும், வேள்விகளின் குண்டங்களை நிரப்பி, எங்களை ஒருகருமங்களையுஞ் செய்யவொட்டாமல் விகாதஞ்செய்கிறான் அந்தப்பாபியைச் சங்கரித்தீரானால் எங்களுக்கு வெகுமேன்மைக் கிடமாயிருக்கும். என்றுகூறி பாபத்திற்குப் பிராயச்சித்தமுங் கூறினார்கள் அஃதெப்படி யென்றால்? பாரதவருடமென்று சொல்லப்பட்ட ஒன்பதினாயிரம் யோஜனைதூரத்தையும் ஒருதரம் பிரதக்ஷணஞ்செய்து, அதின் மத்தியிலிருக்கின்ற புண்ணியதீர்த்தங்களில் ஸ்நானமும் திவ்விய ஸ்தலங்களில் சென்று ஸ்ரீபகவானுடைய தரிசனமுஞ் செய்தால், உமதுபிரம்மஹத்திபாபம் நிவர்த்தியாகுமென்று சொன்னார்கள் அதனை ஸ்ரீபலராமர்கேட்டு, அவ்வண்ணஞ் செய்வதற்கிசைந்து மிகவும் சந்தோஷத்தை அடைந்திருந்தனர்.

# எழுபத்தொன்பதாவது அத்தியாயம்.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

வில்வலனைப பலராமா சங்கரித்துப
பலபலதீாத்தங்களிலும ஸநானஞ்செய்து
நலலதேசங்களையும சேவித்துபபின
நாட்டமுடனகுருக்ஷேத்திரந்தன்னில வந்து
மலலயுத்தஞ்செய்துரி யோதனனுமபீம
மகாராஜனதனையும வேண்டாமெனறோத
வலலவாகளிருவாகளு மதைக்கேளாமல
மனனினாதுவாரகையை நணணினரே

ஸ்ரீ பலராமா வில்வலனைச சங்கரித்து, சகல புண்ணிய தீாத்தங்களிலும் ஸ்நானஞ்செய்து, சகல திவ்விய தேசங்களையும சேவித்து, துரியோதனனும் பீமசேனனும கதாயுத்தஞ்செய்கிற குருக்ஷேத்திரத்திறகு வந்து, அவாகளைத் தாம யுத்தஞ்செய்ய வேண்டாமெனறு சொலலியுங கேளாமல யுத்தஞ்செய் வதைப பாாத்து, தைவகதிபெரிதெனறு துவாராகைக்குச சென்றதும சொல்

ஸ்ரீ சுகர் வாக்கியம்

கேளீா விசித்திரவீரிய குலோற்பவனான பரீக்ஷித்துமகாராஜனே ! இப் படி சகலரிக்ஷிகணங்களுடன பலராமா சமபாஷித்துக்கொண டிருக்கையில அந்த வில்வலனெனகிற அசுரனானவன பெருங்காற்று உருவமாகி, ஒருமு கூாத்தகாலம மலமூத்திரங்களையும மதுமாமசங்களையும அபரிமிதமாக அடித் துக்கொண்டு வந்து அந்தமகாரிஷிகளுடைய யாகசாலையை நிரப்பினான். அந்த துறகந்தங்களை அங்குள்ளரிஷிகள சகிக்கமாட்டாமல அப்புறம போய்விட் டாாகள. அப்போதந்த வில்வலன ஒரு சூலத்தைக் கையிலேந்திக்கொண்டு அஞ்சனமலைபோன்ற சரீரமும, சிகப்புகம்பளிபோன்ற மீசையும, யுகாந்த காலத்து இயமனபோல கோரரூபியாய ஸ்ரீபலராமரெதிரில நின்றான இப்படி நிற்கிற வில்வலனை ஸ்ரீபலராமாபாாத்து, அடாதுராத்துமாவான வில்வலா நீ யிப்படிக்கி ரிஷிகளுடைய வேள்விகளைக் கெடுத்துக் கொண்டிருக்கிறபடியால் கூறினா

அதுகேட்ட வில்வலன கொடியகோபங்கொண்டு, ஸ்ரீபலராமரைச சூலத் தாலொரு குத்துக்குத்தினான அதையவா சமாளித்துக் கொண்டு, தமது உலக் கையையுங் கலப்பையையு நினைத்தாா அவ்விரண்டு ஆயுதங்களும அருகில் வந்துநிற்க, அதுகளைக் கரத்தினிலேந்தி அந்த அசுரனுக் கெதிரிலவந்து அவன கழுத்தினில கலப்பையைமாட்டி, உலக்கையால்வன் தலையினமீதடித்

தார அவனது பொறுக்கமாட்டாமல அதிபயங்கரமாக வீறிட்டுப் பிராண னைவிட்டான. அதுகண்ட மகாரிஷிகள் யாவரும ஸ்ரீபலராமரை அநேகவித மாய்த்துதித்து, ஒருகுடத்தினில தீரத்தத்தை அபிமந்திரித்து, சகலபாபங் களுந்தொலைய அவருக்கு அபிஷேகஞ்செய்து, எப்பொழுதும வாடாமலும வாசனைபோகாமலு மிருக்கின்ற துளசிகளாலும புஷ்பங்களாலும கட்டின வைஜயந்தியென்கிற வநமாலையும, தாமரைப பூமாலையும, இரண்டு வஸ்திரங் களும, திவ்வியாபரணங்களும, வெகுமதி கொடுத்தாரகள

அதன் பினபு ஸ்ரீபலராமா அவாகளிடத்தில சிலவுபெறறுக கொண்டு, பிரமமரிஷிகளுடன பிரயாணபபட்டு, கவுசிகியென்கிறநதிக்குவந்து அவவிடத் தில ஸநானஞ் செய்து, சரயூநதியிலும பிரயாகையிலும ஸநானஞ்செய்து, தேவரிஷி பிதருதாபபணங் களைசசெய்து, பிரகலாத ராசிரமத்திற்குசசென்று ஹரிக்ஷேத்திரத்தைச சேவித்து, கோமதிநதியிலுங கண்டகிநதியிலும் ஸநா னஞ் செய்து, சாளக்கிராம ரூபமாயிருக்கிற ஏரியையுஞ் சேவித்து ஆராதனஞ் செய்து, கயையில கயா வரஜனைசசேவித்து, மகேந்திரகிரியில தவஞ் செய் கிற பரசுராமனைச சேவித்து, சபதகோதாவரியிலும பினாகியிலும ஸநானஞ் செய்து, பமபாநதியிலும பீமநதியிலு மூழ்கி சுபபிரமணணியனைக கண்டு, ஸ்ரீசைல மெனகிற பாவதத்திறகு வந்து, அவவிடத்தில பிரத்தியக்ஷமா யிருக் கிற சிவனைத்தரிசித்து, வெஙகடகிரியென்று பெயருடைய முக்திக்ஷேத்திரமா ன திருமலைக்கு வந்து, அவவிடத்திலுள்ள தீரத்தங்கள யாவிலும ஸநானஞ் செய்தார

கேட்டீரோ பரிக்ஷித்துமகாராஜனே! அநத வெஙகடகிரி யென்னுந தலத்தில அபரிமிதமான தனங்களை வேசியாகட்குத் தானஞ்செய்து, ஸ்ரீநிவாச னையும சேவித்து, கடிகாசலமெனகிற சோளசிஙக புர்த்திற கெழுந்தருளி நர சிஙக மூர்த்தியைத் தரிசித்து, காஞ்சி க்ஷேத்திரத்திற்கு வந்து திருவநந்தசர சில ஸநானஞ் செய்து, வரதராஜனைசசேவித்துத் திருவாராதனஞ் செய்து, காவேரிதீரத்தத்திறகுபபோய காவேரியில ஸநானஞ்செய்து, ஸ்ரீரஙகநகரத் திறகுச சென்று ஸ்ரீரஙகநாதனைச சேவித்து, அவவிடத்திலிருந்து விருஷபர் வதமென்கிற அழகா சன்னதிக்குப போய நூபுரகஙகையில ஸநானஞ்செய்து சுந்தரராஜனையும சேவித்து, தென மதுரைக்குபபோய் வைகைநதியில ஸ்நா னஞ்செய்து, அநதணாகட்குக கோதானமபணணி கிருதமாலையெனகிற நதியி லுந தாமபிரபரணியெனகிற நதியிலும ஸநானஞ்செய்து, பொதியமாமலை யில் அகஸதியரைககணடு சேவித்து, திருவநந்தசயனத்திறகுசசென்று ஸ்ரீ பதமநாபனைச சேவித்தார.

பினபு மேறகுசசமுத்திரத்தின ஓரமானகேரள தேசத்தையுந திருகறத தேசத்தையுந்தாணடி சிவசானனித்தியமாயிருக்கிற கோகரண க்ஷேத்திரத்திற குசசென்று, அவவிடத்திலிருக்கின்ற புணணியதீரத்தஙகளில ஸ்நானஞ் செய்து, திருநாராயண புரத்திறகுச சென்று செலவபபிள்ளை இராயரையும்

சேவித்து. திரும்பவும் பிரபாசதீர்த்தத்திற்குவந்து அவ்விடத்திலிருக்கின்ற வேதியர்களை யாவரையும் பணிந்து, பாண்டவர்களுங் கவுரவர்களும் யுத்தஞ் செய்து யாவருமாண்டபின்பு பீமசேனனுந் துரியோதனனும் கதாயுத்தஞ் செய்வதைக்கேட்டு குருக்ஷேத்திரத்திற்கு வந்தார், அவரைக்கண்ட பாண்டவர்கள் அர்க்கியபாத்திய முதலியவற்றாற் பூஜித்து ஆசனத்திலெழுந்தருளச்செய்தார்கள் பின்பு ஸ்ரீபலராமர் துரியோதனனையும் பீமசேனனையும் பார்த்து இந்த கதாயுத்த சிக்ஷையிருவருக்கும் சமமாயிருந்தாலும், பீமசேனன் பலத்தில் அதிகன் உபாயத்தில் துரியோதனன் அதிகன் ஆனதால் யுத்தஞ் செய்வதி லிருவரும் சமானமாகவே யிருப்பார், ஜயாபஜயமிருவருக்கும் சந்தேகமா யிருப்பதினாலே யுத்தத்தில் நின்றும் ஒழிவது நன்மை என்று பலராமர் அருளிச்செய்ததற்குத் துரியோதனனும் வீமசேனனு மிசையாமல் யுத்தஞ் செய்தார்கள்

அந்த யுத்தத்தில் பீமசேனன் துரியோதனனுடைய துடைமுறிய அடித்துப் பூமியில் தள்ளி, தனது பகைதீர அவனது மவுலியின்மீது உதைத்துக் கொண்டிருந்தனன் அதுகண்ட தருமநந்தனன் அந்த பீமசேனனைப்பார்த்து, கேளாய் பீமா! தெரியாதபுத்தியால் யோசிக்காம லிப்படிசெய்து விட்டாய் இனிமேலும் எந்தக்காலத்திலும் வேண்டாம் என்று இரங்கி இரு விழிகளிலும் ஜலம் தாரையாய்ப் பெருகியோட நின்று வாடித்தளர்ந்தார். அதை ஸ்ரீபலராமர் பார்த்து மனம்பொறாமல், மனந்தாளாமல், ஆறாதகோபம் மண்டிக்கொண்டு இப்படிச்சொல்லுகின்றார். அடா கொடும்பாபியாகிய பீமா! இவ்வுலகில் கதைப்போர் தெரிந்தவர்கள் பழித்துத் தூஷிக்கும் படிக்குத் தருமந்தப்பி முறைபுறண்டு இடுப்பின்கீழாகிய துடையி லடித்தாயே ஒருவேளை தப்பிப் பட்டதோவென்றுஞ் சொல்லக்கூடவில்லையே இரண்டுபேர் கதாயுத்தஞ் செய்யுங்காலையில் அரையின்கீழடிக்கலாகாதென்றும், சோர்ந்து நின்றுவிட்டா லப்போதுந் தொடலாகாதென்றும், நூல்களிற் பேசியிருக்க அதை உணர்ந்தவர்கள் மார்க்கந்தப்பி நடக்கக் கூசுவார்கள். நீ அச்சமுங்கூச்சமு நாணமுமற்றுச் செய்தபோதே எனக்கு வந்தகோபத்தை அடக்கிப் பொறுமையாயிருந்தேன்

இப்போதும் அந்தத் துரியோதனன் கீழேவிழுந்திருக்கிற காலையில் அவனது கிரீடத்தின்மீது நீ உதைக்கலாமோ? இப்படியாக வித்தை உனக்கெவன் கற்றுக்கொடுத்தான்? என்ன பலத்தைக் கண்டு இப்படிக்குச் செய்தாய்? இதோ அந்தத் துரியோதனனுக்குப் பதிலாய் நானே எதிர்த்து யுத்தஞ்செய்து உன்னைக் கொல்லுகிறேன், அப்பால் துவாரகைக்குச் செல்லுகிறேன் என்று கலப்பையைக் கையிலேந்திக் கொண்டு திடுக்கென்று வந்தார் இந்தப் பிரமாதத்தைக் கமலநாபனாகிய கண்ணன் கண்டு எதிர்சென்று அண்ணன் முன் நின்று, மண்ணின்மேல் வீழ்ந்து வணங்கியெழுந்து, வெள்ளை வண்ணனாகிய மூத்தோனைப்பார்த்து, அண்ணா! இவ்விடத்தில் வீமன் அடித்த கதையால் வீழ்ந்துவிட்ட துரியோதன மகாராஜன் பாண்டவர்களுக்

குச் செயத பொல்லாஙகுகளை இவவளவென றெணணததுலலையா. அக்கினி யிற பிறநத பேதையாகிய துரோபதையைச சபையேறறி, அவளுடைய துணியை யுரிநது பஙகபபடுததி வைததான அககாலததி லுஙகளைபபோ லொததவாகள கணணுற பாாததிருபபீாகளாகில, இபபோது வீமன உதைத் ததிலுங கோடிபஙகாக உதைதது அன்றைககே உயிரை மாய்தது விடு வீாகள்.

அநதக காலததில வேறுதிக்கிலலாமல, ஆதெய்வமேயென்று இரைநத ழுத அநத உததமியானவள அஙகிருநத இராஜகூட்டஙகளெலலாரு மறியும் படியாக, பீமனுடைய கதையால உனதுதுடை முறிநது இறககககடவா யெனறு சபிததிருககினறுள அநதப பதிவிரதையினுடைய சாபசசொல் லானது வீணபோகுமோ ? இதன்றி, பூாவததில ஒருமுனிவா இவன துடை முறிநது இறககும்படி சபிததிருககிறா இவனுககும வினைபபயனபடி அனு பவிககக கூடியது. ஆதலால பீமசேனனை வெறுபபதிற காரியமிலலை மேலும பாணடவாகளிபபோதுசெயத யுததததில இநதப பாவியாகிய துரியோதனன செயத கொடுமைகளை ஆாசொலலத தககவாகள ? அபிமனனனை ஒணடியாக வளைததுககொணடு. கோடிவீராள குவிநதுநினறு, நலல கைககாரனுகிய கர் ணன், துரோணுசாரி, இவாகளெலலாரு மறைநது மாறுபாடகப பினபககம வநது, விலலையுநதேரையு மழிதது, ஆளைமுழுககாடடி உயிாகலஙகி விழுக் காட்டியது தாமமோ?

இபபொழுதும இநதத துரியோதனன் விதிகிழிநது மாளாமல பீமசே னன் தொடைமேல அடிததிஞலேயா செததான ? வேறொரு விததகினல் சாகமாட்டானே ? ஆரெபபடிபோனுலும நமககென்ன ? நாம வநதவழியை நாம பாாபபோம எனறுரைத்த வாசுதேவனுடைய வாாததையைக கேட்ட பலராமா கொதிபபாறியடஙகி, குளிாநதஜலமபோல கோபமாறி, நெடிய தோமேலேறி, யுததபூமியைவிடடு தெயவகதி பெரிதென்று நினைதது நைமி சாரணணியததிறகுச செனறுா அககால அஙகுளள ரிஷிகள பலராமருக் குத தகுநத மரியாதையுடன் யாகஞசெயவிகக, அதறகவா மெசசி பிரமமக்ஞி யானததை அவாகளுககு உபதேசிதது, அவாகளுடன அவபிருத ஸ்நானஞ் செய்து, சநதோஷ மனமுடையவராய அவாகளிடததில சிலவுபெறறுக் கொணடு துவாரகாபுரிக்குச செனறனா.



# எண்பதாவது அத்தியாயம்.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

அந்தணர் குலத்துதித்த அரிய குசேலனென்போன்
சுந்தர துவாரகைக்குச் சுவாமியி னிடத்திற்சென்று
சிந்தையி லன்புகூர்ந்து சிறப்புடன் பூசைசெய்து
வந்தவரிளைப்பு நீக்கும் வாழ்வினை வழுத்துவோமே

ஸ்ரீகிருஷ்ணபகவானுக்குத் தோழனான குசேலனென்கிற மறையோன் ஐசுவரியத்தை விரும்பித் துவாரகைக்குச் சென்றதும், அவரை ஸ்ரீபகவான் சாஸ்திரவிதியின்படி பூஜித்து இளைப்பாறினபிறகு தாம் குருகுலவாசஞ் செய்தபோது செய்த காரியங்களையும் ஆசாரியனும் சிஷ்யனுமிருக்க வேண்டிய முறைமையை வெளியிட்டதையுஞ் சொல்லப்படுகின்றது.

கேளீர் உத்தரன் மருமகனான பரிக்ஷித்து மகாராஜனே! திருமாலுக்குத் தோழராகியும், பிரமத்தை நன்குணர்ந்தவர்களிற் சிறந்தவராகியும், மகா விரக்தராகியும், வஸ்துக்களி லாசையற்றவராயும், வெகு சாந்தராகியும், தவத்திற் சிறந்தவராகியு மிருக்கின்ற குசேலரென்கிற ஒரு பிராமணோத்தம ரிருந்தார். அவர் ஒருத்தரையும் யாசிக்காமல், தன்னடையாய் நேர்ந்த ஆகாரத்தினிடத்தில் வெகு ஆசையுடையவராகி, தருமத்தில் நின்றும் வழுவாது கிருகஸ்தாசிரமத்தை நடத்திவந்தார். அவருடைய மனைவி கற்புடையவர்கட்குள் சிறந்தவளாய், பர்த்தாவைப்போல அன்னமில்லாமல் இளைத்து, நரம்புக் கூடான சரீரத்தை வாய்ந்தவளாய், கட்டினு லுகிருப்படியான கந்தலாடையை உடுத்திக்கொண்டு வெகுதரித்திரத்தை அனுபவிக்கையிலும் கற்புவழுவாமல், கொழுநருடைய ஆக்கினையின்படி பணிவிடைசெய்வதில் வெகு வாஞ்சையுடையவளாய், பாகஞ்செய்கிற அன்னத்தைக் கணவனுக்கிட்டு, அப்பாத்திரம் அலம்பின தீர்த்தத்தைத் தான்புசித்து, எப்பொழுதும் உபவாசத்துடனிருக்கிறவள்.

ஆதலால், ஒருநாள் மூர்ச்சித்து விழுந்து, மெய்மறந்து, முகம்வாடி, கைதுவண்டு, காலலைந்து, மேனிகுலைந்து, நினைவுதப்பி, வெகுநேரமிருந்து தெளிந்தெழுந்திருந்து, இந்தத் தரித்திரத்தை எத்தனைநாளைக்கு நாம் அனுபவிக்கலாம்? யென்னசெய்தால் தரித்திரம் நிவர்த்தியாகும்? என்று யோசித்து, நாமிப்படிக்குப் புசிப்பில்லாமல் கஷ்டப்படுவதை மகானுபாவராகிய நம்மை அடிமைகொண்டவருக்குத் தெரியப்படுத்தினால் ஏதாவது கோபித்துக் கொள்ளுவாரோ? அதிக்மேலென தெரியப்படுத்தாமலிருப்பது சரியல்ல என்று மனத்தைத் திடப்படுத்தி, அரையினில் சொல்ப ஆடையும் அச்சமும் உடையவளாதலால் கணவன்முன் வராமல் சரீரத்தை மறைத்து, வெளியினில்

கொஞ்ச் முகக்தெரியும்படியாக மிகவும பயபக்தியுடனே ஒரு வார்த்தை சொல்லுகின்றாள

சுவாமி! தேவரீருககுத தோழராகியும, ஸ்ரீயபபதியாகியும, மகா பிரம் மண்ணியராகியும, மகா தாதாவாகியும, தயாளுவாகியும, உலகபூசசியராகியும், மகானுபாவராகியு மிருககினற ஸ்ரீ கணணபிரானைத தேவரீ ரொருககாலெ ழுநதருளி சேவிததால, சகல புருஷாாததஙகளும பெறலாமெனறு தோனறு கின்றன அபபால தஙகளுககிசைநதபடி நடததலாம எனறு வெருவினையமா யும, நயமாயும, பயபகதியுடன மெதுவாய உரைத்த மனைவியின வசனஙகளைக் கேழவியுறற குசேலரானவா சநதுஷட மனதுடையவராகி, இவள சொன்ன படி செயதால ஜகதீசுவரனுன வாசுதேவனுடைய சேவை நமககுககிடைககும் ஆதைககாடடிலும நமககெனன புருஷாாததம் வேணடும? ஆதலால துவார் கைக்குச செலலவேணடும எனறு நிசசயிதது அநதக கறபுடைய மஙகை யையப பாாதது இதனைசசொலலுகினறாா

பெணணே! வேநதனிடததிலும, சிசுவினிடததிலும, கடவுளிடததி லும, வெறுஙகையோடு போககககூடாது அநத ஸ்ரீ கிருஷணபகவான அரச னுயுங கடவுளாயு மிருபபதால, வெறுங்கையோடு காணலாகாது. அதறகுக் கிரகததிலேதாவது யிருககினறதா? வெனறு கேட்டனா. அதறகமமாது சிரோமணி இருககினறது தருகிறேனெனறு சொலலி, அநதக்ஷணததில் ரிஷிகளுடைய நானகு ஆசிரமததிறகேகி, நானகுபிடி அவல வாஙகிககொண்டு வநது, அதனைக சுறறிக கொடுகக வஸதிரமிலலாமல கிரகஙகடோறுந திரிநது அதறகு ஆதாரமய வைககக ஒருதுணடு சமபாதிதது அதனிலவைதது, அதன் மேல அநேககநதைகளைச சுறறி, அதனமேல மரவுரியைசசுறறித தனனுத் துன அநதணரிடததிற கொடுததனள அதையவா பெறறுககொணடு துவார் கைககுப பிரையாணமாயப போகையில, மகா தரிததிரனுகியும உபயோக மறறவனுகியு மிருககினற நமககு அநதச சாவேசுவரனுன ஸ்ரீ கிருஷ்ணபகவா னுடைய சேவையெபபடி கிடைககப்போகிறது? எனறு பலவாருகச சிநதித் துககொண்டபடியே துவாரகாபுரததினிற பிரவேசிததனா.

இப்படி பிரவேசிககும போது வீதிகளுடைய அலஙகாரததையும், அங்குள்ள மானிடா மடநதையாகளுடைய அழகையும், கடைவீதிகளுடை ய சிறபபையும, கோட்டை கொததளஙகளுடைய பநதோபஸதையும, இவை முதலிய செல்வசசெருககைக கண்களிககப் பாாதது, ஆனநதிததுக் கொண் டே மூன்றுகோட்டை வாசல்களையுந தாண்டி, ஸ்ரீ கிருஷணபகவானுடைய பதினாறுயிரதது அறுநூறறெட்டு மனைவியர்களின கிரகங்களிற்சிறநத ஒரு கிரகத்தினுட் பிரவேசிதது, அநேகமாயிரங் காவறகாரர்கள் காாததிருககை யில் தடைபடாமல் நாலாங்கட்டினுட் பிரவேசிததுப போயினா. அபபடிபோ கையில் அரததில் ஸ்ரீருக்குமணி தேவியுடன் நவரததின மயமான சப்பிரம டமஞ்சததின்மீது எழுந்தருளியிருக்கினற ஸ்ரீ கிருஷ்ணபகவா னிநத குசேல

ரைக்கண்டு எழுந்திருந்து, அதிவேகமாய் ஓடிவந்து, அவரைக் காடாலிங்கனஞ் செய்து, தமக்குத்தோழராயும் பிராம்மண சிரேஷ்டராயுமிருக்கின்ற அந்தக் குசேலருடைய சரீரசம்பந்தத்தினால் ஆனந்தபாஷ்பங்களை உதிர்த்து, தேகம் புளகிக்க அவர் கையைப்பற்றி அழைத்துக்கொண்டு தமது மெத்தையின் மீது உட்காரவைத்து, அர்க்கியபாத்திய முதலிய வஸ்துக்களைத் தாமே கொண்டுவந்து சாஸ்திர விதிப்படிக்குப் பூசித்தார்.

பின்னும் பரிசுத்தமான தீர்த்தத்தைக்கொண்டு அவரது திருவடிகளை விளக்கி, அந்தத்தீர்த்தத்தைத் தமது சிரசில் தரித்து, உத்தமமான ஸ்ரீ சந்தனாதி திவ்விய புஷ்பங்களாலும் அலங்கரித்து, நான்கு பக்கத்திலும் அகிற் தூபங்களைப் போட்டு, சுகந்த தைலத்தினால் தீபங்களை வைத்து, விடுதி புஷ்பங்களாலும் துளசிகளாலும் வெகுவாக அர்ச்சித்து, திவ்வியமான உண்டிகளை புசிப்பித்து தாம்பூலங் கொடுத்து, ஓ! எனது பிரியபாங்கவரே! நல்வரத்தாய் வந்து சேர்ந்தீரே! இதுவே போதுமானது என்று கூறி அந்தணர்களுடைய பங்மைகளையும் சிநேகிதர்களிடத்தில் செலுத்தவேண்டிய அன்பையும் வெளிப்படுத்தவேண்டி அவருடன் சமமாக உட்கார்ந்து, அவரது திருவடிகளைத் தமது மடியினில் வைத்துக்கொண்டு வந்த இளைப்புதீரும்படியாக வருடினார். அந்தச் சமயத்தில் ஸ்ரீ ருக்குமணி தேவியானவள் கண்ணன் செய்த உபசாரங்களுக்குத் தானும் உடந்தையாக வெகு விநயத்துடன் கைத்திய உபசாரமாகத் திருவாலவட்டம் சேவித்துச் சாமரம் வீசினாள்.

அதை அங்குள்ள மாதர்கள் கண்டு வியப்படைந்து, இந்தத்திகம்பரனை வேதியனால் பூர்வஜன்மத்தில் என்ன தவஞ் செய்யப்பட்டதோ தெரியவில்லை. தரித்திர சிரோமணியான இந்த மறையோன் யாவராலும் நிந்திக்கப்பட்டவனாயிருந்தும், சகல லோகபாலகனான மகாதேவனால் வசுதேவர் பூஜிக்கப்படுவது போல வெகு ஆதரவுடன் பூஜிக்கப்படுகிறார். இதென்ன மகிமையோ அறியோம் என்று ஒருவருக்கொருவர் சொல்லிக்கொண்டிருந்தார்கள். அப்போது கண்ணபிரான் அம்மறையோனை நோக்கி, நீர் குருகுலவாசஞ்செய்து சகல வித்தையுங் கற்றுணர்ந்து குருதக்ஷிணை கொடுத்தபின் உமக்குச் சரியொத்த மனைவி விவாகமாயிற்றா? தேவரீர் மண்ணாசை, பெண்ணாசை, பொருளாசை, அற்றவரென்றும், நானெப்படி ஒன்றிலும் சம்பந்தப்படாமலிருக்கிறேனோ? அப்படியிருக்கத் தக்கவரென்றும், நான் அறிவேன்.

உலகில் முதற்குரு பிதாவென்றும், இரண்டாவதுகுரு உபநயனஞ் செய்வித்துப் பிரம்மோபதேசஞ் செய்கிறவனென்றும், மூன்றாவதுகுரு பிரம்மக்ஞானத்தை உபதேசிக்கிறவனென்றும் சொல்லுவார்கள். அவர்களில் பிரம்மக்ஞானத்தை உபதேசிக்கிற ஆசாரியனாக நானேயிருந்து, வர்ணாச்சிரம ஆசாரந் தப்பாமல் நடத்துகிற சிஷ்யனுக்குக் ஞானோபதேசஞ் செய்து மோக்ஷத்தை அடையச் செய்வேன். இந்தச் சம்சாரமாகிற சமுத்திரத்தைத் தாண்டுகைக்குத் தெப்பம்போல் ஆசாரியன் உபகாரியாயிருக்க, சிலர் அதையறியாமல்

அகண்ட சாமபிராசசியததையுந துறநது, அநேக கோடிவருஷம வனததில
வெய்யல் கானலமழை யெனபதிலலாமல காறறையுஞ சலத்தையும் சருகுகளை
யும் ஆகாரமாகக கொணடு வருததபபடுவாாகள அபபடி வருததபபட்டுங்
கொஞசம் பிரமாத முணடானல அநேகஜனமஙகள ப்ோகப பிரஷடராகி, பூர்
வஜன்ம நினைபபுடன யோகிகளுடைய மாாககததை அனுசரிதது, அநேககால
விளமபனததினல மோக்ஷ மடைவாாகள

அபபடிபபட்ட பிரயாசமான மாாககததில பகதி செலுததுகிறவன்
புத்திமா னுகமாட்டான. ஒருஜனமததில தானே நலல ஆசாரியனைச சரணம
டைநது, அவருடைய கிருபையினல் சுலபமாய் மோக்ஷ மடைகிறவனதான இ
யானி அபபடிககு உபதேசிககுமபடியான குருகிடைபபதரிது அபபடிககுக்
கிடைததாலும அவனிடததில பகதிபிறவாது பகதிபிறநதாலும அதறகு அ
நேகவிதவிகாதம வரும. அபபடிககு விககினமிலலாவிடினும உபதேசமபெற
மனமவராது அபபடிககு மனமவநதாலும உபதேசிககிறே மெனகிறவாகளுங்
கிடையாா உபதேசிககிறேனெனறு ஒருவனேறபட்டால அவனுககுயோககிய
தை யிராது இபபடிககு அநேகவிதமான விகாதம வருமேயனறி சுலபமாயக
கிடைககாது கலியுகததில அநேகாகள டமபததை யனுசரிதது, தாஙகள்
மோக்ஷங கொடுபபவாகளாக எணணி, உதரபோஷணைககாக தனனிடததில்
பக்தியிலலாதவனை வரவழைதது அவனுககு உபதேசஞ செயவிதது, அதனல
தானுங்கெட்டு அவனையுங்கெடுபபான.

வாரீா அனபிறசிறநத நணபரே! அதில் சரியாயிருக்கிறவன நீறபூதத நெ
ருபபுபபோல ஒருததனுககுத தனயோககியத்தையைத தெரியபபடுததுவதில்
பிரயோஜனமிலலையெனறு தனது சகதியை வெளிபபடுததாமல, நீககடைக்
கோலி லிருககிற அககினியைக சடைநதாலனறி வேளிபபடாததுபோல தஙக
ளுடன சகவாசஞ செயதாலனறி தஙகளுடைய யோககியதையைத தெரியப்
படுததாாகள் அபடிபபட்ட மோக்ஷாதி காரிகளான கியானவானகளிடததில்
ஒரு வருடமாகிலும ஆறுமாசமாகிலும பணிவிடைசெயது மெயபபிதது உப
தேசமபெறறால, மோக்ஷம வருவதற கென்ன சநதேகம? குருயிருககவேண்
டிய கிரமம எபபடியெனறல? எபபொழுதும ஆசார முடையவனும, ஸ்ரீமந
நாராயணனை பரதேவதையெனறு நிசசயககியானமுடையவனும, பாபபமற்
றவனும, சகல வேதஙகளையும, வேதததினுடைய தததுவததையும, நனறுக
அறிநதவனும, பிரமமககியானியாயும, சாநதனும, சகலகுண முடையவனு
யும், சததியவாதியாயும, வாணததினுடையவும ஆசிரமததி னுடை யவுமான ஆ
சாரததை வழுவாதவனும, யோககியமான ஜீவன முடையவனும, டமபமற்ற
வனும, இநதிரியநிககிரகஞ செயதவனும, வேதாநத காலக்ஷேபததுடன
கூடினவனும, சகலஜீவராசிக ளிடததிலும அனபுள்ளவனும, சததுருமித
துருகக ளிடததில் சமபுததியுடையவனும, பாபஞ செயபவரிடததி லனபு
கூர்ந்து பிராயச்சிதத முதலியவைகளைச செய்விதது சனமாாககத தில்
கொண்டுவாரத தக்கவனும் சகலசாஸ்திரங்களையு மறிநதவனும், வணக்க

முள்ளவனும், படாடோபமாய் வெளிப்படத்திரியாதவனுமிருக்கவேண்டும்.

சிஷ்யக்கிரமம் எப்படியென்றால்? நல்லபுத்தியுடன் குருவுக்குப் பணிவிடை செய்கிறவனும், நல்லஜீவனத்துடன் கூடினவனும், பிரமமக்கியானத்தை அறியவேண்டுமென்கிற ஆவலகொண்டவனும், அகங்காரமற்றவனும், கர்வமில்லாதவனும் எப்போ குருவினுடைய அருள்பெருவோமென்று எதிர்பார்க்கிறவனும், இந்திரியநிக்கிரக முள்ளவனும், பொறாமை அற்றவனும் சொரசொரப்பானவனும், வணக்கமுள்ளனு மிருக்கவேண்டும் குருசிஷியர்களிப்படிக்கில்லாமல் ஆயிரம்வருஷம் வருத்தப்பட்டாலும் ஒன்றும் லபிக்கமாட்டாது அப்படிப்பட்ட குரு நானே அன்றி வேறில்லை எனக்கு எப்போ ஆரிடத்தில் கிருபை உண்டாகிறதோ? அப்போ அந்தக்கியானிகளான பெரியோர்களிடத்திற் பிரவேசித்து, அவர்களுக்குக் கியானோபதேசஞ் செய்து மோக்ஷத்தைக்கொடுப்பேன், உலகத்தில் பிராணிகள் பக்திசிரத்தையுடன் அன்புகூர்ந்து யென்னை ஆராதிப்பதுபோலகுருவினிடத்திலும் மானிடனென்றெண்ணாமல் ஆராதித்தார்களேயானால், சாசுவதமான மோக்ஷத்தை அடைவார்கள் அப்படிசெய்யாமல் கேவலம் மானிடனென்றெண்ணினால் அனேக கல்பகாலம் நரகத்தில் விழுந்திருப்பார், எனக்கு குருவினிடத்தில் அன்புகூர்ந்துபணிவிடைசெய்பவனிடத்தி லுண்டாயிருக்கிற அன்பு, ஆயிரம் வேள்வி செய்தவனிடத்திலும் பஞ்சாக்கினிமத்தியில் தவஞ்செய்தவனிடத்திலு மிருக்கமாட்டாது.

அப்படிப்பட்ட ஈசுவரசுவரூபியான குருசிசுரூஷை, பகவத கிருபையால் உமக்கு நிறைவேறினதல்லவா? நாமந்தக் குருவினிடத்தில் வாசஞ்செய்கிறபோது ஒருநாள் நம்மைக் குருபத்தினியானவள் எரிகரும்பு கொண்டுவரச் சொன்னதற்கு, காட்டிற்குப்போய் விறகுவெட்டி சூரியாஸ்தமனமாகிற சமயத்தில ஆளுக்கொருசுமை எடுத்துக்கொண்டு புறப்படுகையில், பிரளய கால சமுத்திரம்போ லிருளுடன மழையுங்காற்றுமிடியுமின்னலு முண்டாய் நடுக்கமெடுத்து, திக்குவிதிக்குகள தெரியாமல ஒருவர் கையை ஒருவர்பற்றிக் கொண்டு இராத்திரி முப்பது நாழிகையில் நனைந்து அலைந்தோமன்றோ? அப்படி அலைந்திருப்பதை மறுநாள் காலையில நமது குருகேழ்வியுற்று, நம்மைத் தேடிக்கொண்டு காட்டிற்குவந்து வருத்தப்படுகிற நம்மைப்பார்த்து வியப்படைந்து பாலர்ளான நீங்க ளென்னிமித்தமாக இஷ்டமான பிராணனைக்கூட வெண்ணிப்பாராமல், இப்படியும் பணிவிடையே பெரிதாகவெண்ணிச் செய்பவருமுண்டோ? உங்களிடத்திலெனக்கு மகத்தான சந்தோஷமாயிற்று உங்களுக்குச் சகலவேதங்களும், சாஸ்திரங்களும், உபநிஷத்துக்களுடன தெரிந்து, இகலோகத்திலும், பரலோகத்திலும், சகலபயன்களையும் சுலபமாக அடையக்கடவீர்கள் என்று அனுக்கிரகித்தாரே அதுகளையும் நமது தோழனமாகளையும் அந்த குருவினிடத்தில் கற்றுணர்ந்த கல்விகளையும் மறவாமல் நினைத்துக்கொண் டிருக்கிறீரா? என்று வினவுகிற ஸ்ரீகண்ணபிரானை ஸ்ரீதாமாவெனனும் பெயருடைய குசேலர்பார்த்து ஒருவார்த்தை விக்கியாபனஞ் செய்கின்றார்.

ஐயா! அன்னேயொத்த தென்னுள்ளமாந்த நண்பரே! சத்திய சங்கல்பனும் ஜகத்குருவாயிருக்கிற தேவரீருடைய கிருபை அடியேனுக்குப் பாலியத்தில் தானே வாய்த்தபடியால், அப்பொழுதே சகல அக்ஞானமும் பாபமும் விலகிப்போய் பரிசுத்தனுய இகத்திலும் பரத்திலும் அடையவேண்டிய புருஷார்த்தங்களைச் சுலபமாக அடைந்தேன் ஆனல் வேதசொரூபியான கருடபகவானே தேவரீருக்கு வாகனமாக யிருக்க, வேத சாஸ்திரங்களைக் கற்றுணாவதற்குக் குருகுலவாசஞ் செய்தீரென்பது மாத்திரம் உலக விளம்பனமா யிருக்கிறதேயன்றி வேறல்ல என்று ஒருவருக்கொருவா பாலியத்திற் செய்த கிருத்தியங்களையும், ஆசாரிய பணிவிடைகளையும், மற்ற காலக்ஷேபங்களையு நினைத்துக்கொண்டு சம்பாஷித்தார்கள்

# எண்பத்தோராவது அத்தியாயம்.

அறுசீரடி ஆசிரியவிருத்தம்

அந்தமாகிய குசேல வந்தணா கொண்டு வந்த
சுந்தரவவலே சுவாமி பிடிங்கியே வாயிற் போட
விந்தையா மாட கூட மேன்மையா மைஸ்வா யத்தை
தந்துபோ கென்றனுப்பத் தான் சென்றத் தனேச் சொல்வாம்.

ஸ்ரீ கிருஷ்ணபகவான் தமக்குச் சகாவான குசேலா தானகொண்டுவந்த அவலேகொடுக்க வெழுந்கப்பட்டிருந்தையில் தாமாய்வாங்கி ஒருபிடி பட்சித்து இரண்டாவதுபிடி படசிக்கப்போனதை ஸ்ரீ ருக்குமணிதேவி தகைந்ததும், அந்த ஒருபிடி அவல் பட்சித்ததற்கு இந்திரன் முதலிய தேவாகளுக்குந் துல்லபமான ஐசுவரியத்தைக் கொடுத்து அதை சொல்பமென றெண்ணி குசேலருடன் சொல்லாமல் அனுப்பினதும், அப்பால் குசேலா தமதாசிரமத்திற்கு வந்து பாாத்து ஆச்சரியத்தை அடைந்த விருத்தாந்தங்களையுஞ் சொல்லப்படுகின்றன

கேளீர் உத்தரானந்தனனை பரிக்ஷித்து மகாராஜனே! சாவபூதாந்தர்யாமியான சுவாமியானவா அந்தக் குசேலாகொண்டுவந்த அவலேத் தமக்குக் கொடுக்க வெழுக்கப்பட டிருப்பதையும், ஐயசுவரியநிமித்தமாய தம்மை ஒருக்காலும் பூஜிக்காம லிருப்பதையும், ஐசுவரியத்தைக் கொளுசமேனுஞ் சிந்தையில் வையாமலிருப்பதையுந் தெரிந்துகொண்டு, இவருக்கு இந்திரன்முதலிய தேவர்களுக்கும் அரிதான சம்பத்தைக் கொடுக்கவேண்டு மென்று நிச்சயித்து, அந்தக்குசேலரைநோக்கிப் புன்னகையுட னெருவார்த்தை அருளிச் செய்கிறூர்

ஐயா! அனபிறசிறநத நண்பரே! தேவரீா வெகுநாள்பொறுதது இவ்விடத திறமெழுநதருளின படியால, அடியேனுககேதாவது பலகாரஙகொணடுவநதிருககவேண்டுமே! எனனகொணடுவநதீா? விசேஷமாயக கொணடுவராததினால யெனனமாகக கொடுககிறதெனறு சஙகோசிககிறுபபோ லிருககின்றது எனக்கு வஸது விசேஷமெனறும, அலபமெனறும, பேதமிலலை. அவரவாகளுடையகருததினமீதி லெனககு திருஷடியேயனறி, பதாாததததிலடததில திருஷடி யிலலை அனபுடன ஒரு துளசிதளமாகிலும, ஒருபுஷபமாகிலும, ஒரு கனியாகிலும, பரிசுததமாகிய தீாததமாகிலும கொடுபபதை விருபபமா யஙகீகரிபபேனே யனறி, அனபிலலாமல அமுதததைக கொடுததாலும் அஙகீகரிககவே மாடடேன். எனறிபபடி வெகுவிதமாகசசொன்னா

இவவாறு வெகுவிதமாகச் சொலலியுங குசேலரானவா தாமகொணடுவநததைக கொடுகக வெழககபபடடுத தலையைக குனிநதிருபபதை சுவாமிபாாதது, அவாகையிலிருநத அவல முடிசசைத தானே இதெனன முடிசசெனறு பலவநதமாகவாஙகி, தமது மடியில வைததுககொணடு, அதையவிழததுபபாாதது, ஒய சகாவே! எனககுமிகவும இஷடமான இநத அவலைககொணடு வநதும யெனககுக கொடாமலிருநதீரலலோ? இநத அவல யெனது குக்ஷியிறபோனால, அநேககோடிப பிராணிகளைத திருபதிசெயவிககும எனறு சொலலி ஒருபிடி அவலை எடுததுப பக்ஷிதது, இரணடாவதுபிடி எடுததார்.

அப்போது ஸ்ரீருக்குமணி தேவியானவள ஒருபிடி அவலுககே இகததிலும பரததிலு முணடான சகலசமபததுககளு மிவருககுச சுவாதீனமாகப் போயிற்று இநத இரணடாவது பிடி அவலுககு நாமலலோ வசியமாகவேணடுமெனறு தடுததாள அபபடி தடுதததை சுவாமி நிவறதிதது, அநதககுசேலருககுக கொடுதத சமபதது அவாகொடுதத ஒருபிடி அவலுக கிணையாகாதெனறு தமககுளளே திருபதி யிலலாமையா லதை அவருடன சொலலாமல், ஒரு நாளவரை வைததிருநது, மறுநாளகாலையில வெகுதூரங கொணடுவநது வழியனுபபிச சேவிததுப போடடு துவாரகைககுச் செனறனா.

அபபாலநதக குசேலரும சுவாமியினாலனுபபி விககப படடவராய் மாாக்கத்தில வருமபோது, அநதப பிரமமணணிய தேவனானவன கணணபிரானுடைய கிருபையையும, அவருடைய அனபையும, அவா பலராமரை வெகு உபசாரததுடன பூஜிபபதுபோல தமமைப பூசிதததையும நினைதது, பிரமன் முதலிய சகல தேவாகளாலும அறியவொணணாத திருவடிககமலததையுடைய பெரிய பிராடடியாரானவா சாாவகாலமும வாசஞ்செயகிற திருமாாபில தரிததிராகளில முதலவனான யெனது மாாபும சோதது ஆலிங்கனஞ் செயயுமபடி பாககியம பெறறேனே இதைவிட புருஷார்த்தம் வேறுண்டோ ?

இதன்றி வாக்குக்கும் மனதிறகு மெடடாத மகிமையையுடைய நவரத்தினமிழைத்த சப்பிரகூட மஞசததினில, சூரியகாநதியின ஒளியினைவாய்ந்த

திண்டு தலைகணிகள் போட்டிருக்கிற மெத்தையின்மீது, மாணிடரில் நிகிருஷ்டனான என்னை உட்காரவைத்து, அனேக பரிசாரகர்கள் புடைசூழ்ந்திருக்க அவர்தாமே என் துகாலைவருடி, சந்தனபுஷ்ப தூபதீபங்களினா லுபசரித்துப் பூஜித்ததுமன்றி, சகலபாபமுங் கரிந்திரமும் விலகிப் போகும்படியான பார்வையையுடைய ஸ்ரீருக்குமணி தேவியாலும் அநேகவிதமாக உபசரிக்கப் பட்டோமே இவ்வளவெல்லாஞ் செய்த சுவாமியானவர் நமக்கேன் தனத்தைக் கொடுக்கவில்லை ?

ஏனென்றால் தனத்தைக் கொடுத்தால் நல்லபோஜனங்களைச் செய்து, அதனால் சரீரம் தத்து, காமமேலிட்டு, மூத்திரத்திற்கும் நாற்றத்திற்கு மிருப்பிடமாய வாயினால் சொல்லுதற்கும் ஒவ்வாத அசுத்தயான யோனியைப் பரமசுகமென்று நினைத்து, மாதர்களை வெகுவாய்ச் சிபாதிக்க விருப்பமுண்டாகி, தூண்டிமுள்ளி லிருக்கிற மாம்சத்தைக் கிரகிக்கவந்து மரணமடைகிற மீன் போல மாயையில் சிக்கிக் கெட்டுப்போகப் போகிறேனென்று திருவுள்ளத்திற் ஞேன்றிக் கொடாமலிருந்தாரே யன்றி உலோபத் தனத்தினாலல்ல

அன்றியும் ஜனகசக்கிரவர்த்தி முதலியவர்கள் யோகிகளைப்போல சமசாரத்திலேயே சமசாரபந்த மற்றவர்களாய் லாபநஷ்டத்தில் சமபுத்தியுடையவர்களாய ஞானியா யிருந்தபடியால், அவர்களுக்கு ஐசுவரியத்தைக் கொடுத்தால் கெட்டுப்போக மாட்டார்களென்று திரண்ட ஐசுவரியத்தைக் கிருபை செய்தருளினார் நம்மைப்போ லொத்த நிகிருஷ்டனுக்குச் சம்பத்திருந்தால் அந்தக் கருணைக்கடலான சுவாமியை நினைக்கும்படியாயிராது அதினால் கெட்டுப்போகப் போகிறேனென்று கிருபைகூர்ந்து தனத்தைக் கொடாமலனுப்பினார் என்று சந்தோஷமாகத் தமது ஆசிரமத்திற்கு வந்தார்

அப்போதங்கு ஆசிரமம் சந்திரசூரியாக்கினிகளுடைய ஒளியினை வாய்ந்த ஆயிரம் ஸதூபிகளையும், குபேரனுடைய சைத்திரரதமென்கிற நந்தவனம்போன்று நான்குபக்கத்திலும் நிறைந்த வனமும், இப்படி அலங்காரமாயிருக்கிறவனத்தில் மயில்கள் குயில்கள் முதலிய பட்சிகள் மனதை அரிக்கும்படி கூவுதலோடு அல்லி ஆம்பல் கருநெய்தல் தாமரைமுதலியதுகளோடும் அன்னப் பறவைகளோடும் பூரணமாய ஜலம் நிறைந்து வைடூரியம் போல தெளிந்திருக்கிற அனேக தடாகங்களும், சகலாபரண பூஷிதர்களாய அப்சரமாதர்களை நிகர்த்த ஊழியப்பெண்களால் வியாபிக்கப்பட்டும், இப்படி மிகவுந் தேஜோமயமா யிருக்கிற தமதாசிரமத்தைப் பார்த்தார்

இவ்வாறு பார்க்கவும் இதுயின்னதென்று அறியமாட்டாமல் பிரமித்து கொஞ்ச நிதானத்தின் பேரில் தமதாசிரமமென றறிந்துகொண்டு, மெல்லன அருகில்வருகின்றார். இப்படிவருகின்றவரை ஊழியப்பெண்கள் பார்த்து வேகமாக ஓடி, குசேலருடைய வரவை அவரது மனைவியோடுரைத்தனர். [illegible] அம்மா பதிவிரதையானவள், நமது மணவாளன் இதுவரை

யில் வெளியினில் போகாதிருந்தமையால் வெகுகஷ்டத்தை அனுபவித்தோம். இப்போ தொருதரம் அந்த மகானுபாவன் வெளிப்பட்டபடியால் அகண்டசாமராஜ்யத்தை அடைந்தோம் அப்படிப்பட்ட மகிமையையுடைய பாதத்தாவருகிறார்

என்று வெகுசந்தோஷமாய் சகல லக்ஷணத்துடன் விளங்குகிற ஸ்ரீமகாலக்ஷிமியைப் போல அறக்கியபாதத்தியத்திற்குரிய சாமக்கிரிகைகளை எடுத்துக்கொண்டு, அநேக தோழிப்பெண்கள் புடைசூழ ஸ்ரீருக்குமணி தேவியாலும் ஸ்ரீபகவானாலும் உபசாரமாய் அலங்கரிக்கப்பட்ட திருமேனியுடையவராய் சாக்ஷாத் தேவதையைப்போல சிறப்பாய் விளங்குகிற தனது நணவரைக்கண்டு சாஷ்டாங்கமாகச் சேவித்து, அர்க்கியபாத்திய முதலியவற்றால் பூஜித்து எதிரில் நின்றாள்

இப்படி நிறபவளை குசேலரானவர் தமது மனைவிதானென்று நிதானித்து, அவளுடன் இந்திரனுடைய கிரகம்போ லிருக்கிற தமது கிரகத்தினுள் பிரவேசித்து, சொர்ணத்தினால் சுவர்வைத்துப் பவழத்தால் கால்களைநாட்டி அனேக விசித்திரமாயிருக்கிற மெத்தைமேடைகளும் மாடமாளிகைகளும் அணி அணியாயிருப்பதையும், நவரத்தினமிழைத்த மஞ்சத்தின் மீதில் திவ்விய பீதாம்பரத்திற் கொப்பாகிய மெத்தை திண்டு தலைகணிகள் போட்டிருப்பதையும் பவழக்கால், நாட்டி முத்துச்சரங்களை ஜாலராகத் தொங்கவிட்டு தந்தத்தினாற்செய்து நவரத்தினமிழைத்த அனேக ஆசனங்களையும், சொர்ணக்காம்புடைய அனேகங்கொடைகளையும், அவ்வாறே விளங்கும் அனேக சாமரங்களையும், படிகமயமாயிருக்கிற சுவர்களில் அநேக இரத்தின தீபங்களையும் உடைத்தாய் விளங்குகிற தமது கிரகத்தைப் பார்த்து தாம் முன்னிருந்த இருப்பையும் நினைத்து, இப்படி தமக்குத்தமே யோசிக்கின்றார்

அந்தோ! இவ்வளவு சம்பத்து உண்டாகிறதற்கு நாமொன்றும் பிரயத்தனிக்க வில்லையே வியவசாயஞ்செய்கிற ஜனங்கள் தங்கள் கருத்தைச் சொல்லாம லிருக்கையிற்றானே மேகமான தெப்படி ஒரு வருஷத்திற்கு வேண்டிய ஜலத்தை இராக்காலத்தில் வருஷித்துச் சொல்லாம லிருக்கின்றதோ? அப்படியிந்த ஸ்ரீ கிருஷ்ணபகவானும் யெனது கருத்திற் கிசைந்தபடி நடத்தி, நாம் சொல்பமாய் ஒருபிடி அவல் கொண்டு போனதை மேருவாக எண்ணி நமக்கிவ்வளவு சம்பத்தைக் கொடுத்தும் அதற்கிணையாகாதென்று நம்முடன் சொல்லாம லிருந்துவிட்டார் கருணைக்கடலான அந்தச் சுவாமியை ஒருதரம் சேவித்தாலும், ஒருதரம் அவர் நாமத்தைக் கீர்த்தனஞ் செய்தாலும் அதையவர் வெகுவாக எண்ணிக் கடத்தேற்றத் தக்கவரேயன்றி வேறல்லர். என்று தமக்குள்ளே நிச்சயித்து, இந்தப் பகவானுக்கு அடியார்களா யிருக்கின்ற ஸ்ரீபாகவதர்களிடத்தி லிடைவிடாமல் நிரந்தரம் பக்தியிருக்க வேண்டுமென்று அந்தப் பகவானிடத்தில் தானே பக்திசெலுத்தி, முடிவில்தமது மனைவியுடன் ஸ்ரீ கிருஷ்ணபகவானுடைய மேலான பதவியை அடைந்தார்

# எண்பத்திரண்டாவது அத்தியாயம்.

அறுசீரடி யாசிரிய விருத்தம்

சகலபந் துக்களோடுஞ் சாந்திடுஞ் சியமந்தத்தில
பகலவன் கிரணத்திற்குப் பரிந்துஸ் நானத்திற்குப்போய்
தக்கதென் றுளிருமபஞ்ச பாண்டவா தங்களோற்கும்
பகவன் கோபியாகளுக்கும் பரிந்து கியானுபதேசஞ் செய்தார்

ஸ்ரீ கிருஷ்ணபகவான் சகல பந்துக்களுடன் சூரியகிரகணத்திற்குச் சியமந்த பஞ்சகமென்கிற புண்ணியதீர்த்தத்திற்கு ஸ்நானஞ்செய்யப் போனதும் அவ்விடத்தில் பாண்டவாகளும், கவுரவாகளும், இன்னம் சகல தேசத்த ரசாகளும், நந்தகோபாமுதலிய கோபாலாகளும், யசோதைமுதலிய கோபிகைகளும், சுவாமியைக் கண்டதும், அந்தக் கோபிகைகளுக்குச் சுவாமி கியானுபதேசஞ்செய்தது அதினலவாகள் மோக்ஷத்தை யடைந்ததுஞ் சொல லுகின்றன

ஸ்ரீ சுகா வாக்கியம்

கேளீா பறகுனபவுத்திரனன பரிக்ஷித்துமகாராஜனே ! ஸ்ரீகிருஷ்ணபக வான் துவாரகாபுரத்தில் சுகமாக வசிக்கிறபோது ஜோதிடரிற்சிறந்த கறகா சாரியரானவா சூரியகிரகணம் பூரணகிரணமாய வருகிற தென்று தெரியப் படுத்த, அதுகேட்ட ஸ்ரீபலராமகிருஷ்ணாகள் தமபதி சமேதாகளாய சகல யாதவாகளையும் புஷ்பகவிமானமபோன்ற இரதத்தினமீ தேறறிக்கொண்டு, சியமந்த பஞ்சகமென்கிற புண்ணியதீர்த்தத்திற்குச் சென்று, இரதம்விட்டி றங்கி, வேதியாகள மூலமாயச சங்கற்பித்துக்கொண்டு, அந்தப் புண்ணிய தீர்த்தத்தில ஸ்நானஞ்செய்து, உபவாசத்துடன அந்தணாகளுக்கு அநேக விதமான தானங்களைக் கொடுத்து திருப்திசெய்து, சுத்தமண்டல ஸ்நான மானபின்பு சகலரும போஜனஞ்செய்து ஒரு மரத்தி னிழலில வீற்றிருந்தா கள அத்தருணத்தில சகலதேசத்தரசாகளும வந்து சுவாமியைக் கண்டு கொண்டாாகள.

அப்போ குந்திதேவியானவள் தனது சகோதரனன வசுதேவா தேவகி முதலிய சகல யாதவாகளையுங் கண்டுகளித்து, வசுதேவரைப்பாாத்து, நாங் கள மகத்தான ஆபத்தை அடைந்திருக்குங்காலையில நீங்களென்னை விசாரிக் காம லிருந்தீாகள. தைவபல மிருக்குங்காலையில யாவரும சகாயப்படுவாாகள. தைவபலம விலகினுல யாவரும விலகிப்போவாாகள் நீங்களும அந்த தைவ பலத்தை அனுசரித்து சகாயப்படுகிறவாகளே அன்றி, எனது சுகதுக்கத் திற் குரியவரல்லீா. என்று சொலலுகிற குந்திதேவியைப்பாாத்து வசுதே வர் சொல்லுகிறாா. வாராய் அம்மணி ! எனது சகோதராகளுக்குள நாங்

உன்னிடத்தில் விசேஷ அன்புடையவனா யிருந்து, கம்சனால் நேர்ந்திருந்த துன்பத்தினால் உன்னை விசாரிக்கக் கூடாமையாயிருந்தேன். அதை மன்னிக்கவேண்டியது என்று சமாதானஞ்சொல்லிக்கொண் டிருக்கையில் பீஷ்மர், துரோணர், கிருபர், திருதராஷ்டிரன், துரியோதனன், முதலியவர்கள், பாண்டவர்கள், கேகயர்கள், விராடன், துருபதன், விதுரன், பீஷ்மகன், நக்னஜித்தன், இவர்கள் முதலிய சகல அரசர்களும் வந்தார்கள்.

இப்படிவந்த அரசர்கள் யாவரும் ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய சகல லட்சுமிவிலாச ஸ்தானமாகிய திருமேனியைக்கண்டு, தங்கள் மனைவியர்களுடன் சேவித்து, அந்தக் கண்ணபிரானால் பூஜிக்கப்பட்டு, அந்தச்சுவாமிக்கு எப்பொழுதும் ஊழியஞ் செய்துகொண்டிருக்கிற இந்த யாதவர்களுடைய பாக்கியத்தை யென்னசொல்லப் போகிறோமென்று உக்கிரசேன மகாராஜனை நோக்கி பிரமன்முதலிய தேவர்கள் இந்திரிய நிக்கிரகத்துடன் அனேககாலந் துதிசெய்தால் ஒருக்ஷணங்கூட காக்ஷிகொடாமல் ஆகாசவாணியைப்போல உத்தரஞ்சொல்லி மறைந்துபோகிற சுவாமியாயும், சகல உலகத்தையும் பரிசுத்தஞ் செய்யத்தக்க கங்கையைத் திருவடியிற் படைத்தவராயும், தமது வசனங்களே வேதமாக உடையவராயு மிருக்கிற இந்தக் கேசவனான ஸ்ரீகிருஷ்ணபகவான் நீர் நரகத்திற்குரிய சம்சாரத்திலிருந்தும் அவர் சுலபராய உமக்குச் சர்வகாலமும் ஏவற்பணி செய்யும்படி பூர்வத்தி லென்ன பாக்கியஞ் செய்தீரோ? என்று உக்கிரசேன மகாராஜாவையும் யாதவர்களையும் பலவாறாகத் துதித்துக் கொண்டிருந்தார்கள்.

அப்படி யிருக்கையில் நந்தகோபர்முதலிய கோபாலர்களும், யசோதை முதலிய கோபஸ்திரீகளும், ஸ்ரீகிருஷ்ண பகவானண்டையில் வந்தார்கள். அவர்களைக்கண்டு வெகு சீக்கிரமாக ஸ்ரீ ராமகிருஷ்ணர்கள் சகல யாதவர்களுடன் எழுந்திருந்து, எதிரில்வந்து சாஷ்டாங்கமாகத் தண்டன் சமர்ப்பித்து, அவர்களுடைய க்ஷேமங்களை விசாரித் தார்கள் அத்தருணத்தில் நந்தகோபர் வசுதேவரைக்கண்டு, ஒருவருக்கொருவர் ஆலிங்கனஞ்செய்து ஆனந்தபரவசர்களா யிருந்தார்கள் இப்படி யிருக்கையில் யசோதையானவள் ஸ்ரீகிருஷ்ணராமர்களைக்கண்டு, வெகு ஆவலுடன் அழைத்து மடியில் வைத்துக்கொண்டு அவர்களை வெகுநாளாய்க்காணாதிருந்த கிலேசத்தைவிட்டு வெகு சந்தோஷமாய் உச்சிமுகந்து முத்தாடி ஆனந்தித்துக்கொண் டிருந்தாள் அச்சமயத்தில் தேவகி ரோகிணிதேவிகள் இரண்டுபேரும் யசோதை அண்டையில்வந்து, நீ இந்தப் பிள்ளைகளிரண்டையும் உன்பிள்ளைகளாகப் பாவித்துக் காப்பாற்றினதற் கிணையாக நாங்க ளென்ன செய்யப்போகிறோம்? இவர்களுங்களை மாதாவாயும் பிதாவாயும் நினைக்கும்படி, இமைகள் கண்களை இரக்ஷிப்பதுபோல் பேதமில்லாம லெப்படி இரட்சித்தையோ அறிகிலோம்.

என்று சொல்லிக் கொண்டிருக்கையில் கோபிகைகள் யாவரும் ஸ்ரீகிருஷ்ணபகவானண்டையில் வந்து, தாங்களவரை வெகுநாளாய்க் காணும

விருநத விசனததை நிவற்றிதது, அவரைச சாஷ்டாங்கமாகச சேவிததுத் திருபதிபிறவாமல கணகொட்டாமல பாததிருநதாாகள் இபபடி பார்ததி ருககையில நடுவில இமைகொட்டவேணடி, ஐயோ ' பிரமமதேவன் நமக்கே னிநத இமைகொடடுதலைச சிருட்டிததானெனறு அவனை நிநதிதது, நேததி ராங்கததினுல தஙகள இருதயததி லிருககினற கமலததில அபபகவான் எழுநதருளி யிருககிறதாகப பாவனைசெயது தியானஞசெயதாாகள். அவர்க ளுடைய கருததைககணட ஸ்ரீகிருஷணபகவான அவாகளை யேகாநததில் அழைததுககொணடுபோய, அவாகளுககுச சநதோஷமவரும படியாயப் புனனகையுடன ஒருவாாததை அருளிசசெயகிறாா.

கேளீா எனதனபுளள தோழிமாாகளே ' வசுதேவா தேவகி முதலியவாக ளுடைய துனபததை நிவறதிகக மதுரைககுபபோய வரககூடாமல தடைபட் டிருநத யெனனை தூஷிககாதீாகள நாம யாவருந தெயவததிறகுச சுவாதீ னப படடவாகளேயனறி, சுதநதிராகளலல, நமமைக கூட்டிவைததது மிபபோ பிரிததுபபோட்டதுந தெயவசசெயலேயனறி நமமால வருகிறதலல, ஆகாயததில மேகமிலலாம லிருககையில வாயுவானவன ஒரு க்ஷணததிலே சோததுக கலைபபதுபோலும, ஆறறினில பலவாறுக வரபபடட திரணஙகள் சுழியி லொனறுசோநது பிரிவதுபோலும. மானிடசஞசாரமிலலாத காட்டி னில மானிடாகளைச சோககவேணடுமெனறு ஈசுவரனுக கிசசை யுண்டாகி னுல தக்ஷணம ஒரு பிரபுவினிடததி லாவேசிதது ஒரு நகரமாயச சிருஷடிப் பிதது தனகடையாய ஜனஙகளவநது சேருமபடிச செய்வான அநத ஜனங் களைப பிரிகக யிசசை உணடானுல ஏதாவதொரு பிரமாததை ஜனிபபிதது க்ஷணததில ஒருவரோடொருவா சேர வொட்டாமற செயவன்

இதனறி, ஒருவீட்டினில யஜமானனு யிருககிறவன தனககுவேண்டிய போது ஒருததனைப பிறபபிககசசெயயவும, பிறநதவனை வேணடாமெனறு சொலலவும, ஒருததனுககுப பிராணன போவதாயிருநதால அதைததடுகக வும வலலவனுவனே ? அபபடிககிலலாவிடினும வீட்டிலுளளவாகளுககுப பிணிவநது வருததமடைவதை இவன யேறறுககொளளுவனு ? அநத வியாதி யானதைக கொடுககவும பெறறுககொளளவுங கூடாமையா யிருநதாலும, ஒருததருககு இராஜீகமாய ஒரு ஆபததுவநதால அதைததான யேறறுக் கொளளுவனு ? இபபடியிருகக, யஜமான னெனபதற கெனனவடையாளம் அநத யஜமானனுனவன வெகு கஷடபபட்டு பொருள சமபாதிததுக கொண்டு வநதால, அதறகு மனைவி தானபாததியஸதியெனறும, மைநதன தானபாத் யஸதனெனறும, வெகுவாயச சொலலிககொண டிருபபாாகள அதைத் திருடன அபகரிததுக கொணடுபோனுல, கூலிவாஙகி வேலைசெயபவனுககுக் கூலிகொடாமல நிவாதிபபதுபோல அநத மனைவி மைநதாகள நலலவாாத தை சொலலி யழைததால வெகுப பிரயாசததுடன ஒருகரம யேனெனபார் கள் இரணடாவதுதரம கூபபிட்டால எபபொழுதும உன்னலைபபுததா. னென்று வெறுததுக கொளளுவாாகள.

இப்படிப்பட்ட மனைவி மைந்தாகளிடத்தில புருஷனானவன் என் மனைவி யெனமைநதனென்று அனபுசெலுத்தி, அவாகளால வெகுப பிரயோஜனத்தை அடைவதுபோல பிரமிக்கிறான அநதமனைவி யெஙகே யிருநதவள் ? இவனுக கெவவிதமாய்க கிடைததாள ? இதெல்லாம ஈஸவரனுடைய கட்டளையேயனறி நமமா லொன்றுமாகாது இநதபபுததிரனு மனைவியுந் தேகத்திதகுப பாததியஸதாகளேயன்றி ஆனமாவுககுப பநதுவாக மாட்டார்கள் உயிா போய்விட்டால உலகததாாமெசச ஒருதரம அழுவார்கள் ஆன்மாவுக்குப பநது ஸ்ரீமநநாராயணனுதலால, புததிமானானவன மகா பாகவதர்களிடததில அனபுசெலுததி, அவாகளுடைய அருளபெறறு மோக்ஷமடைய வேண்டுமேயனறி வேறேமார்ககமிலலை

சாவசக்திமானன ஈசுவரன என்னை உஙகளுடன கூட்டுறவுசெயது பிரிததுவிட்டாா உஙகளிடததிறகு யான வரவேணடுமெனறு வெகுவிதபிரயத்தினஞ்செயதாலும, நிரபபநதமான வேலையை ஜநிபபிககிறாா நானுஙகளிடத்தில் வராமலிருநததறகும ஒரு சுதுண இருககின்றது அதாவது, எனனை ஆதி மத்தியாநத மறறவனும முததொழிலுடையவனுமு மிருககிற ஈசுவரனென்றறியுஙகள எனனிடததில நீஙகள ஈசுவரனெனறு பகதி செயயாவிடினும் பாததாவெனறுவது பகதிசெலுததிய படியால சாசுவதமான பரமபததை அடைவீாகள எனறருளிசசெயததைக கேளவியுறற கோபிகைகளானவாகள் அநதச சுவாமியைநோககி, யோகசிரேஷடாகளான சனகாதிகளாலே தியானஞ் செயயததககவரான தேவரீருடைய சரணாரவிநதததில நின்றும் இடைவிடாமல பகதிபிறககுமபடி கிருபைசெயய வேணடுமெனறு பிராாததிதது, அநத தியானபபிரபாவததினுல ஸ்ரீ கிருஷ்ணபகவானுடைய திருவடிகளை அடைநதாாகள

# எண்பத்துமூன்றாவது அத்தியாயம்.

சந்தகலி விருத்தம்

திருநுதன்மனைவியராகியருகமணி தேவிகளமுதலானோர
புருவவிலாாநதிடுமபுணணியகிருஷணனைப புகழுடன்மணஞ்செய்த
அருமைசோககதைகளைதரெளபதையிடததினி லனபுடனதைக்கூற
தெரிவையமாருவரோடொருவாகளபுனனகை செயதிருநததைச்சொல்வாம்.

ஸ்ரீ கிருஷ்ணபகவானுடைய மனைவிகளான ஸ்ரீ ருககுமணிதேவி முதலியவர்கள, துரோபதைககு ஸ்ரீ கிருஷ்ணபகவான் தங்களை விவாகஞ்செய்த கதைகளைச் சொலலிககொண்டதை சொலலப்படுகிறது

கேளீர் பார்த்திவ பவுத்திரனை பரிக்ஷித்து மகாராஜனே ! ஸ்ரீகிருஷ்ண பகவான கோபிகைகளுககுக கியானேபதேசஞ் செய்தபினபு தரும புத்திரனடையிற சென்று அவாகளுடைய க்ஷேமங்களை விசாரிக்க, அபபோதவர்கள சுவாமியைநோககி, தேவரீருடைய திருவடித்தாமரைகளி லுண்டாயிருக்கிற தேனைப பாகவதாகள மூலமாயப பானஞ்செயகிற அடியேஙகளுக் கொருநாளும அமஙகள முண்டாகமாட்டாது என்று சொலலிக கொணடிருககிற தருணததில் அநத உததமசுலோக சிகாமணியான ஸ்ரீகிருஷணபகவான காதினில உறைககுமபடி துரோபதை யானவள ஸ்ரீ கிருஷண சுவாமியின மனைவியாகளான ஸ்ரீ ருககுமணிதேவி முதலிய வாகளைநோககி, உஙகள யாவரையும் சுவாமி யெவவிதமாக விவாகஞ் செயதருளினீரோ ? அதைவிசிதமாகத தெரியசசொலல வேணடு மென்று வினவினள இபபடி வினவிய துரோபதையை நோககி ஸ்ரீ ருககுமணிதேவி உரைககினறாள

அம்மா துரோபதா ! என்னைச சிசுபாலனுககு விவாகஞ்செயது கொடுக்கவேண்டுமென்று சகல அரசாகளும யததினமாயிருககையில, இநதப் பகவானனவா தனககுவைதத பலியைச சுறறிககொணடிருககிற ஆடுகளை லட்சியஞ்செயயாமல சிஙகமெடுததுக கொண்டு போவதுபோல யெனனை இராக்ஷசவிதியி லெடுததுககொணடு, தமது திருவடிபபணிசெயய அஙகீகரிததாரென்றாள. அபபால சததியபாமை சொலலுகிறாள அமமா பாஞசாலி ! எனது சிறியதகபபனான பிரசேனன சியமநதகமணி ஹாரததைக கழுததினிற பூணடு வேட்டைககேக, அவனைச சிஙகமகொன்று அமமணியைக கிரகிததுத தனது குகைககுசசெலல, அதனை ஓர் கரடி மாயததது அமமணியைத் தனது குகைககுக கொண்டுபோனது தெரியாத யெனது தகபபனான சத்திராஜிததன, தனனை ஸ்ரீகிருஷணபகவான அநத மணியைககேட்டுத் தான் கொடாமலிருநதபடியால தனது தமபியை மாயததுச சுவாமி அமமணியை அபகரிததாயச சொனனான்

இநத அபவாததைதககேட்ட பகவான் சகிக்கமாட்டாமல், அம்மணி சென்றவழியைத தெரிவிககச சிலரைக கூட்டிககொண்டு, அநத ஜாம்பவானிருககும குகையினுடசென்று அவனைவென்று, அவன மகள ஜாமபவதியை விவாகஞ்செயது, அவளுடன அமமணியைபபெறறு எனது தநதைககுக் கொடுததனா அது கணடென்றநதை இககணணனுடைய பகையாகாதென்று அம்மணியுட னெனனை விவாகஞ்செயது கொடுககப்பெறறாரென்றாள பினபு ஜாமபவதி திரௌபதியைப பாரதது, அமமா ! என றநதையான ஜாமபவநத னணடையில சியமநதகமணி நிமிததமாய் தனககடையாயெழுநதருளின கணணனைத தசரதன மைநதனென றுணராமல, போரினில் இக்கண்ணபிரானே ஸ்ரீராமனென்றறிநது சாஷ்டாஙகமாகப பணிநது, அநத சியமநதகமணியுடன் விவாகஞ் செய்துகொடுகக யென்னை அஙகீகரித்தாரென்றாள்

இப்பால் காளிந்தியானவள் திரௌபதியை நோக்கி, வாராய சகியே! கன்னிகைப பருவத்தில ஆதிமூலப பொருள என்னை மணமபுரிய வேணடு மென்று தவஞ்செய்த வென்னிடததில அருள கூர்ந்து, அர்ச்சுன சமேதராய் இரததினமீதேறிக்கொண்டேகி தாசியததிறகுரியவளாக வென்னை அங்கீக ரிததாரென்றாள. மிததிரவிந்தையென்துசுயமவரத்தில சகல அரசாகளையும அவமதிததுவென்னை இரததினமீதேறிக்கொண்டேகி விவாகஞ் செயது கொண்டாரென்றாள. சததியையானவள யெனதுபிதா தனவசததில வெகு கூர்மை பொருந்திய கொமபுகளை வாயந்திருக்கின்ற ரிஷபஙகளேழையும வென்றவனுக்கு கன்யகாதிரியைக கொடுக்கிறே னென்று பிரதிக்கினைசெய திருபபதுகேட்ட அரசாகள அபஜயபபட்டோட, கண்ணபிரான அவைகள் யாவையும வென்று என்னைத் தமது பணிவிடைக்குத திருவுளம பற்றினா ரென்றாள.

பினபு பததிரையானவள யெனதுமாமன மைந்தனான ஸ்ரீகிருஷ்ண பிரா னிடத்திலனபுகூாந்திருந்த வென கருததுக்கிசைந்தபடி என்றந்தை கன்னி காதானஞ்செயது கொடுததாரென்றாள. லக்ஷ்மணையானவ ளென்து சுயம வரததினில மச்சயந்திரங்கட்டி அதையெய்தவனுக்கு யென்னைக் கொடுக்கிறே னென்று கருதியிருந்த என்றந்தையின கருததினவண்ணம அந்த யந்திர தையெயது, சகல அரசாகளையும வென்று பணிவிடைக்கென்னை வரிததா ரென்றாள. மற்றககோபிகைகள ஸ்ரீகருஷ்ணபிரான நரகாசுரனைவென்று அவன சிறையினில வைததிருந்தபதினாறாயிரததறுநூறுபோகளாகிய எஙகளை ஓரே முகூாததததில விவாகஞ்செய்தா ரென்றாாகள.

# எண்பத்துநான்காவது அத்தியாயம்.

அறுசீரடி ஆசிரியவிருத்தம்

கோகுல கிருஷ்ணன் சேவை கொண்டிட ரிஷிக ளெல்லாம
மாகுரு க்ஷேததிரததில வநததும மகதைஸ வாய
யாகததை வாசுதேவ ரவாகளைக கொணடு செயது
வேகமா யவாகளில்லம புககிய விபரஞ சொலவாம

சகலபிரமமரிஷிகளும் ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய சேவாாததமாக குரு ... வசுதேவ ரவர்களைககொணடு யாகததை நிறை ... யும சகலபநதுக்களையும் பூஜித்து அவரவாகளிருபபிடததிற் கனுப்பியதும் சொலலுகின்றன.

## ஸ்ரீ சுகர் வாக்கியம்.

கேளீர் கிரீடிபவுத்திரனான பரிக்ஷித்து மகாராஜனே! ஸ்ரீ ருக்குமணிமுதலிய சகல மாதர்களையும் ஸ்ரீகிருஷ்ணபகவான் விவாகஞ்செய்ததை குந்தி, காந்தாரி, சுபத்திரை, துரோபதை, இவர்கள் முதலியவர்கள் கேட்டு ஆனந்தித்துக் கொண்டிருக்கையில், வியாசர், நாரதர், சியவநர், தேவலர், அசிதர், விசுவாமித்திரர், சதாநந்தர், பரத்துவாசர், கவுதமர், பரசுராமர், அவருடைய சிஷியர்கள், வசிஷ்டர், சாலவர், பிருகு, புலஸ்தியர், புலகர் அத்திரி, மார்க்கண்டேயர், பிரகஸ்பதி, திவிதர், சதுரர், பிரம்ம புத்திரர்களான ஷோடசப்பிரஜாபதிகள், சநகாதியோகிகள், அங்கிரசு, ஆகஸ்த்தியர், யாக்கியவல்கியர், வாமதேவர், இவர்கள் முதலியரிஷிகள், தாமத்தை நிலைநிறுத்துவதற்கவதரித்திருக்கின்ற ஸ்ரீராமகிருஷ்ணர்களைச் சேவிக்க வேண்டுமென்று குருக்ஷேத்திரத்திற்கு வந்தார்கள். அப்போது ஸ்ரீகிருஷ்ணபகவான் முதலிய சகல அரசர்களுங்கண்டு, வேகமாக எழுந்திருந்து எதிர்கொண்டுபோய் அர்க்கிய பாத்தியங்களால் பூஜித்து, ஆசனத்திலெழுந்தருளச்செய்து குசலங்கேட்டிருந்தார்கள். அக்கால் அந்தமகாசபையிலிருக்கிற யாவரையும் பார்த்து ஜகதீசுவரனான கண்ணபிரானொருவார்த்தை அருளிச்செய்கிறார்.

கேளீர் பிரம்மவித்துக்களான மகாரிஷிகளே! புண்ணிய தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்பவர்களும், விக்கிரகரூபியான பகவானைத் தரிசிப்பவர்களும், சீக்கிரத்தில் பயன்பெறார்கள். பாகவதர்களுடைய சேவைகிடைத்த க்ஷணம் சகல பாபங்களையும் போக்கி மகாமோக்ஷத்திற்குரியவர்களாவார்கள். அப்படிப்பட்ட ஸ்வரூபியான அடியார்களைப்பழித்து, ஔபாசன வைசுவதேவங்களால் அக்கினியையும், சந்தியாவந்தனாதி கர்மங்களால் சூரியனையும், இன்னமநேகமாக தேவர்களைப் பூஜித்தபோதிலும், ஒருக்காலும் பயனடைய மாட்டார்கள். பாகவதர்களைச் சாமானியமான மானிடரென்றும் அவர்கள் பணிகளைச் சாமானியமான பணிகளென்றும் நினைத்தவன் இரண்டுகால் கழுதையோடொத்தவன். மகாபாகவதர்களான உங்களுடைய சேவையெங்களுக்குக் கிடைத்தபடியால், நாங்கள் ஜன்மமடைந்ததற்கு இன்றைக்குத்தான் பயனடைந்தோம், என்று அருளிச்செய்த ஸ்ரீபகவானப்பார்த்து அம்மகாரிஷிகள் மனங்கலங்கி, வெகுநேரமாலோசித்து இதனைச் சொல்லுகிறார்கள்.

வாரீர் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியே! தேவரீருடைய அனுக்கிரகத்தினால் சகல வேதாந்தங்களையுணர்ந்திருந்தும், பானைமுதலிய பாண்டங்களுக்கு அநேகவிதமான பெயரிருப்பதினால் மண்ணென்கிற ஞானமற்றிருப்பதுபோல, யாங்கள் தேவரீரை எங்குநிறைந்த திருமேனியென்பதை மறந்து பிரமிக்கும்படி செய்தீர். இந்தயாதவர்கள் அருகிலிருந்தும் தேவரீருடைய அருளுக்குப் புறம்பாயிருப்பதினால், காக்ஷிக்கும் புறம்பாகவே யிருக்கின்றார்கள். அடியேங்கள் தொலைவிலிருந்தும் யாங்கள் செய்ததவப்பேற்றினால் தேவரீருடைய அரு

ளுக்குரியவாகளா யிருநது காட்சிககுப பாததிராகளானேம அபபடியிருக்க தேவரீா அருளிசசெயததில யாவரும பாகவதாகளிடததி லிவவணணம அனபுசெலுத்த வேண்டுமெனறு ஆககியாபிததது போலிருககிறது எனறு சொலலி சகல ரிஷிகளும சுவாமியைப பிரதகூஷணஞ்செயது தணடம சமறபிதது, இவரிடததில விடைபெறறுப பிரயாணமா யிருநதாாகள அககால வசுதேவர் அவாகளைப பிரதகூஷணஞ் செயது தணடனிடடு, அவாகளைப பாாதது, சகலகாமமததில நினறும விடுபடுவதற கெநதகாமஞ் செயயவேணடும? அதை யெனககுபதேசிகக வேணடுமெனறு கேடடனா.

இவ்வாறுகேட்ட வசுதேவரை மகாரிஷிகள பாாதது, சமீபததி லிருக்கிற சர்வசகதஞன ஸ்ரீகிருஷணபகவானைககேளாமல தஙகளைக் கேட்டதறகுச சநதேகப்படடுககொணடிருநதாாகள இவவாறிருககிறரிஷிகளை நாரதா பாாதது பிரமமததினுடைய தததுவததை யறிநத நமமைபபோலொததவாக ளிபபோது நத பகவதவாககியததைககேடடுப பிரமிததிருகக, அநதபபகவானை இநத வசுதேவா கேவலபபுததிரனெனறு பிரமிததிருபபதுமனறி அருகிலும வாசஞசெயகிறபடியால, அவரைககாடடிலும நமமைப பெரியோாகளென றெணணிககேட்ட கருததிறகும சுவாமி அஙகீகரித திருநதமையால, அவாகளிககு நாம உததரஞ் சொலலவேணடியதாக யிருககினறதெனறு கூறினா. பிறகு ரிஷிகளயாவரும அநத வசுதேவரைநோககி, மிகவும அனபோடு பகவதாராதனஞ் செயதுவநதா லதறகு மிஞசின காமம மொனறுமிலலை அநதக் காமஞ்செயவதி லொருபயனையும அபேடசியாமல பகவதபிரீதி செயதுப் போடடால மேனமையான பயன பெறலாம.

இதனறி அநதணா முதலிய நான்கு வாணததாரும மூனறு கடனுடன் பிறநதிருககினறாாகள அககடன தீாநதாலனறி மேனமைபெறாா அதாவது பிரமம சாரியாயிருநது குருவுககுப பணிவிடை செயது மெய்பபிககின்றது ரிஷிகளுடையகடன நறகுலததினி லொரு கனனிகையை விவாகஞ் செயது புததிரனைப பெறுவது பிதிாககளுடைய கடன அபபடி புததிரன் பெறுவது தெயவசசெயலாயிருநதாலும, காலததில விவாகஙகாப்பாதான முதலிய புருஷப பிரயததனஞ்செயது தெயவகதியால புததிரன பெறுவிடில் இவனிடததில தோஷமிலலை. பிதுருதேவதைகளும வாழததுவாாகள. யாகஞ் செய்து தேவாகளைச சநதோஷிபபிககினறது தேவாகளுடைய கடன. இம மூன்றுகடனில் உமக்கு ரிஷிகளுடைய கடனும பிதுருகக ளுடைய கடனும நிவாததியாயின. இனி யாகஞ்செயது தேவாகளுடைய கடனையு நிவறதித் துக்கொளளும. எனறுரைதத ரிஷிகளுடைய கருததிறகிசைநத வசுதேவர் அவர்களைநோககி, ஓ மகானகளே! நீஙகள ரிததுவிககுகளாக யிருந்து அநத யாகத்தை நடப்பிகக வேண்டுமெனறு சொல்லி நிருததிக்கொண்டனர்.

பின்பு வசுதேவர் யாதவர்களை யாகததிற்குரிய வஸ்துக்களைச் சேகரியுஞ் சேனென்னுக்கெவாயிக்க, அவர்களு மவ்வண்ணஞ்செய்க, எல்லா ரிஷிகளும்

வசுதேவருக்கு க்ஷவரஞ்செய்வித்து மையிட்டு, நவநீதம் பூசி, தீக்ஷை செய்வித்து, சாலாலங்கார பூஷிதர்களான மனைவியர்களுடன் அக்கினியில் ஓமம் முதலிய கிரியைகளை விதிப்படி முடித்து, பதினெண் வாத்தியங்களுடன் அவபிருத ஸ்நானஞ் செய்வித்தார்கள். யாதவர்கள் பாண்டவர்களுடன் வேதியர்கட்கு தக்ஷிணைகொடுத்து திருப்தி செய்வித்து, அவர்க ளாசீர்வதிக்கப் பெற்றுக் களித்திருந்தனர். வசுதேவர் ஸ்ரீகருமாணிக்க பிரானுடைய பிரபாவத்தினால் யாகமாகிற சமுத்திரத்தைத் தாண்டி, இராகுவினிடத்தில் நின்றும் விடுபட்ட சந்திரன்போல தெளிவு பொருந்திய முகமுடையவராயினர்

அப்பால் வசுதேவர் ரிஷிகளுக்கும் பாண்டவர்கள் முதலிய பந்துக்களுக்கும் ஆடை யாபரணங்களைக் கொடுத்து, அவர்களுடைய இருப்பிடத்திற்கனுப்பி, நந்தகோபரைநோக்கி, நீமகத்தான உபகாரஞ் செய்திருந்தும் மறந்துபோகிற யெங்களிடத்தில் அன்பு கூர்ந்து இந்த யாகத்தை நிறைவேற்றினதே போதுமானது என்று உபசரித்து சிலநாள் நிறுத்தினர். பின்பு நந்தகோபரும் அவன்சசேர்ந்தவர்களும் தங்களுக்கு வசுதேவ ராதியரால் வேண்டிய வெகுமதி செய்தனுப்பப்பெற்று, வெள்ளைவண்ணனையும் நீலவண்ணனையும் விட்டுப்பிரிய மனமில்லாதவர்களாகி, விசனத்துடன் சகலகோபால கோபிகைகளுடன் ஆய்பாடிக்குச் சென்றனர் யாதவர்களும் சகல சேனா சனத்துடன் இரதகஜ துரகங்கள் மீதேறிக்கொண்டு துவாரகா புரஞ் சென்றனர்.

## எண்பத்தைந்தாவது அத்தியாயம்.

கலி விருத்தம்

ஆசிலா ராம கிருஷ்ணர்கள் வசுதேவர் தேவகிகள் துதித்ததும்
மோசஞ்செய்கம்ச னான்முன்மரித்திடும்
தேசுலாம்பிள்ளைதன்னைத் தந்ததுஞ்சொலும்

ஸ்ரீ ராமகிருஷ்ணாக ளிருவரையும் வசுதேவர் தேவகிகள் துதித்ததும், கம்சனாலிறந்துபோன ஆறுபுத்திரர்களை விரும்பினதும், அவர்களை யவர்கள், கொண்டுவந்துவிட்டு வசுதேவர் தேவகி தேவிகளைச் சந்தோஷிப்பித்ததுஞ் சொல்லுகின்றனர்.

கேளீர் வேதவாசனன் பவுத்திரனான பரிக்ஷித்து மகாராஜனே! வசுதேவர் யாகஞ்செய்து துவாரகைக்குச் சென்றபிறகு ஒருநாள் ஸ்ரீ ராமகிருஷ்ணர்களிருவரும் வசுதேவரைச் சாஷ்டாங்கமாகச் சேவித்து, வெகுவிநயமாய்

THE KUPPUSWAMI SASTRI

துடனே நின்றார்கள் அப்படி நிற்கிற புத்திரர்களிடத்தில் பக்திகூர்ந்து, ரிஷிகளுடைய வார்த்தைகளை நினைத்துக்கொண்டு அவர்களைநோக்கி, நீர் அவதரித்தகாலையில் அடியேனுக்கு மூன்று ஜன்மத்தினுடைய காரணத்தைத் தெரியப்படுத்தி நிஜரூபத்தைக் காட்டிக்கொடுத்திருந்தும், மாயையால் மறைக்கப்பட்டு சமீபத்திலிருக்கிற தேவரீருடைய மகிமையைமறந்து, கேவலம் புத்திரனென்றே எண்ணி, நரகத்திற்குரியதாயும் அனேக ஜன்மங்களுக்கு இடமாயுமிருக்கிற இந்தச் சம்சாரத்தில் சிக்கி, நாமில்லாவிடில் இவர்களைக் காப்பாற்றுகிறவர்களில்லையென்று பிராந்திகொண்டு சுழலுகிறேன். எனக்குப் பிரமமகியான மிலலாவிடினும் சம்சாரத்தினிடத்தி லுண்டாயிருக்கின்ற ஆசையை ஒழிப்பித்துச் சீர்திருத்தி, முத்தியுண்டாகும்படி அனுக்கிரகிக்க வேண்டும் என்று சாஷ்டாங்கமாகச் சேவித்து விநயத்துட னிற்கிறார்.

இப்படி நிற்கிற வசுதேவரைக் கண்ணபிரான் பார்த்து, அன்பிற்சிறந்த என்னையாவே! அசையும்பொருள் அசையாப்பொருளாயிருக்கின்ற இந்தச் சமஸ்தப் பிரபஞ்சங்களிடத்திலும் சர்வாந்தரியாமியான ஈசுவரன் பரவியிருப்பதுபோல, என்னிடத்திலும் பரவியிருக்கின்றார். அப்படியிருக்க தேவரீர் என்னைச் சாக்ஷாத்தான ஈசுவரனென்று பாவனைசெய்து துதிப்பதுபோல யாவரிடத்திலும் பக்தி செலுத்துவீராகில், மோக்ஷத்திற்குரியவராவீர் என்று அருளிச்செய்த கருங்கடல் வண்ணனுடைய சுவாமிவார்த்தையைக் கேழ்வியுற்ற வசுதேவர் மனதிற்குள் களித்திருக்கையில், தேவகிதேவியானவள் ஸ்ரீகிருஷ்ணபிரானைநோக்கி! நீர் குருதக்ஷிணையாக இறந்து போனமைந்தனை குருவுக்குத் தந்ததுபோல, கம்சனால் இறக்கப்பட்டிருக்கிற புத்திரர்கள் ஆறுவரையும் பார்க்க விரும்புகிறேன், ஆதலால் கிருபைசெய்ய வேண்டுமென்று கேட்டுக் கொண்டாள். இவ்வாறு சொன்ன மாதாவின் வார்த்தைக்கு ஸ்ரீ ராமகிருஷ்ணர்களிருவரும் இசைந்து, பாதாளலோகஞ் சென்று, பலிச்சக்கிரவர்த்தியானவன் கொலுவிருந்தரசாக்ஷி செய்கின்ற மகாசபைக்கேகினர்.

அப்போ பலிச்சக்கிரவர்த்தி இவர்களைப்பார்த்து, வெகுகளிப்புடன் அர்க்கிய பாத்திய முதலியவற்றால் பூஜித்து, ஆசனத்தி லெழுந்தருளச் செய்து, அவர்களுக்குச் சர்வசொத்தையுந் தனதாவியையும் அர்ப்பணஞ்செய்து, மேகவண்ணனைப்பார்த்து, சகலவேதங்களுந் தேடிக் கண்டுபிடிக்க வொண்ணாத மகிமையை வாய்ந்த தேவரீர், மூடனுக்கு மரத்தினின்றிருக்கிற தேனபோல் வாய்த்தீர். சர்வ நிகிருஷ்டனாகிய தேவரீரைச் சேவிக்கக் கருத்துக்கொள்ளாத அடியேனிடத்திலன்புகூர்ந்து எழுந்தருளிய தேவரீரைச்சேவிக்க, இந்த அக்கியானக்கண் போக்கியமல்ல. தேவரீர் வாமனாவதாரஞ் செய்தருளி யாசகனைப் போல் அடியேனை யொருபிரபுவாக எண்ணி யாசிக்கிற சமயத்தில், மூடத்தனத்தினால் சொற்காதி போகத்தை விரும்பி தேவரீருக்குத் தானங் கொடுத்தேனே யன்றி, மோக்ஷத்தை விரும்புதற்குக் கியானமில்லாமற் போயிற்று. அந்தச் சொற்காதிபோகங் கிடைப்பதற்கும் இப்போது இருபத்தெட்டுச் சதுர்

யுகமாயிற்று இன்னும் நாற்பத்துமூன்று சதுர்யுக மாகவேண்டும். அப்பால் இந்திரத்துவம் கிடைக்கும்.

பின்பு அந்த இந்திரத்துவமும்போய் மகாலோகஞ் சென்று, பிரமனுடைய ஆயுள்வரையிலிருந்து, அப்பாலந்தப் பிரமனுடன் மோக்ஷ மடையும்படியான காலவிளம்பனமாச்சுதே அன்றி, சத்துருக்களாயிருந்தும் சீக்கிரத்தில் மோக்ஷமடைந்த சிசுபாலன் முதலியவர்களுக் கிணையாகாமல் மோசம் போயினேன். இனியாவது தேவரீருடைய திருவடியி லிடைவிடாமல் பக்தியிருக்கும்படி கிருபைசெய்யவேண்டும், என்று அநேகமுறை தெண்டஞ் சமர்ப்பிக்கின்ற பலிச்சக்கரவர்த்தியை ஸ்ரீ கிருஷ்ணபகவான் நோக்கி, சுவாயம்பு மன்வந்தரத்தில் மரீசிப் பிரஜாபதிக்கு ஊர்ணையென்கிற மனைவியிடத்தில் ஆறு புத்திரர்கள் பிறந்திருந்தனர். பிரமன் சரசுவதியைச் சிருஷ்டித்து மனைவியாகக் கொண்டதற்கு அவர்கள் பரிஹாசஞ் செய்ததபடியால், அசுரர்க ளாகும்படி பிரமன் சபித்தனன். அதனாலவர்கள் ஹிரண்யகசிபனுக்குப் புத்திரர்களாய்ப் பிரஹலாதனுக்குத் தம்பிகளாயப்பிறந்து, தந்தையைப் போல தாங்களும் அகண்ட சாம்பிராச்சியத்தை அனுபவிப்பதற்குத் தவஞ்செய்தார்கள்.

அசுரர்கள் அவர்களைப் பந்தித்துப் பாதாளத்திலழுத்தினார்கள், அவர்கள் ஆறுமனுவந்தரம் பாதாளத்திற்கிடந்து, ஏழாவது மனுவந்தரத்தில் நமது யோகமாயையால் கிரகிக்கப்பட்டார்கள். உடனே தேவகிகர்ப்பத்தின் வழியாகப் பிறப்பித்தேன். அவர்களைக் கம்சன் உடனே சங்கரித்தான். தேவகி தேவிக்குக் காட்டுவதற்கு இவ்விடத்திலேயே வைத்திருக்கின்றேன். அவர்களை நீர் கொண்டுவர வேண்டுமென்று ஆக்கியாபித்தனர். உடனே பலிச்சக்கிரவர்த்தி அவர்களாறுவரையும் அதிசீக்கிர மத்தில் சுவாமிசன்னதியிற் கொண்டுவந்து விட்டுப் பணிந்து நின்றனன். அவர்களை சுவாமி தேவகியிடத்திற் கொண்டுவந்து விட்டனர். தேவகிதேவியானவள் அப்புத்திரர்களைக் கண்டு களிப்படைந்து, பகவான் மாயையால் முலைகளிற் பால்சுரந்துவீச ஆவலுடன் அவர்களையெடுத்து மடியினில்வைத்து, உச்சிமுகந்து முத்தாடி முலை கொடுத்தனள். முன்பு சுவாமியின்று பானஞ்செய்திருந்த முலையை இப்போதிவர்கள் உண்ட பிரபாவத்தினாலும், அவருடைய திருக்கண்ணோக்கம் பலித்ததபடியினாலும் அவர்கள் சாபவிமோசனர்களாய திவ்வியதேகத்தை அடைந்து, வசுதேவர் தேவகிதேவி ஸ்ரீ ராமகிருஷ்ணர்களிடத்தில் விடைபெற்று தேவர்களைப்போல விமானரூடர்களாய்ச் சொர்க்கத்திற்குச் சென்றார்கள்.

# எண்பத்தாருவது அத்தியாயம்.

கலி விருத்தம்.

போர்விஜயன் யாத்திரைக்குப் புறப்பட்டு
சோர்விலாத் துவாரகைக்குச் சென்று
ஏர்பொருந்துஞ் சுபத்திரையெனு மின்னை
நேர்பெறக்கவர் யாணம் நிகழ்த்தினன்.

விஜயன் தீர்த்தயாத்திரைக்குப் புறப்பட்டு துவாரகாபுரஞ்சென்று வெள்ளைவண்ணனை அறியாமல் அவனுடைய சகாயத்தைச் சுபத்திரையை மணஞ்செய்ததை ரேவதீரமணன் கேள்வியுற்று கடுங்கோபமடைந்ததும், அவரைக் கண்ணபிரான் சமாதானஞ்செய்து சுபத்திரைக்கு அங்கனி முதலியதுகளை எடுப்பித்து அவர்களைச் சந்தோஷப்படுத்தியதும், அப்பால் மிதிலா பட்டணத்திற்சேர்ந்து சுருததேவனையும் பகுளாசுவனையுஞ் சந்தோஷிப்பித்ததையுஞ் சொல்லுகின்றன

## ஸ்ரீ சுகர் வாக்கியம்

இப்படி அருளிச்செய்கிற சுகயோகியைப் பார்த்து பரிக்ஷித்து மகாராஜன் கேட்கிறான் வாரீர் மகானுபாவரே! எனது பாட்டனான தனஞ்சயன் கண்ணபிரானுடைய சகோதரியான சுபத்திராதேவியை யெவ்விதமாக விவாகஞ்செய்தார்? அதை அடியேனிடத்தில் கிருபைகூர்ந்து தருளிச்செய்ய வேண்டும் என்று வினவுகிற அரசனைநோக்கி சுகமுனிவர் அருளிச்செய்கின்றார் அர்ச்சுனன் ஒரு காரணத்தினால் தீர்த்தயாத்திரைக்குப் பிரயாணப்பட்டு சகல புண்ணியதீர்த்தங்களிலும் ஸ்நானஞ்செய்து பிரபாசதீர்த்தம் வந்து சேர்ந்து, அதிலும் ஸ்நானாதிகளைச் செய்து அந்தணர்களைப் பூஜித்தனுப்பிவிட்டு அன்றிராத்திரி படுத்திருக்குங்கால், யாதவகுலத்தாரான கதனென்கிறவன் சுபத்திரையின் ரூப முதலானவைகளைக் குறித்துச் சொல்லியிருந்ததை நினைத்து, அவளைப்பார்க்கக் கருத்துக்கொண்டு, யாரும் தன்னை அறியாமலிருக்கச் சன்னியாசிவேஷத்துடன் பிக்ஷைசெய்துகொண்டு போனால் எவ்வித்திலும் கிருஷ்ணபகவான் மாளிகைக்குள்போய்ச் சுபத்திரையைக்காணலாமென்று மனதில் நிச்சயித்து, திரிதண்டமும், காஷாம்பரமும், கமண்டலமும், ஜபமாலையுமாக யோகிபோலாகினன்

அக்காலத்தில் மேகங்கள் ஆகாயமெல்லாம் படர்ந்து ஸ்ரீகிருஷ்ணபகவான் திருமேனிபோலக் கறுத்தும், அவர் திருக்கையிலிருக்கும் சக்கிரத்தின் ஒளிபோன்று மின்னியும், அவரது சங்கத்தொனிபோன்று யிடித்தும், அவருடைய சாரங்கமென்கிற வில்லில் நின்றும் புறப்படுகிற பாண தாரைகள்

போன்று வருஷதாரைகளை வருஷித்ததும், அவருடைய பேரருள்போல் பூமியெங்கும் ஜலப்பிரவாக நிறைந்துமிருந்தன. அப்போது அர்ச்சுனனுடைய மனது காமத்தி லமிழ்ந்ததுபோல தாமரைகள் நீரினில் அமிழ்ந்திருக்கவும், முன்னம் அழகினால் தன்னை வென்றிகொண்ட அர்ச்சுனனைக் காமனிப்போது சுபத்திரையென்கிற ஒரு அஸ்திரத்தினால் வென்றிகொள்ளப் போகிறானென்கிற மகிழ்ச்சியினாலே அவன்கொடியாகிய மீன்கள் துள்ளிக்கொண்டிருக்கவும் சாயலபற்றித் தங்களுக்குத் தோழியாகிய சுபத்திராதேவிக்கு அர்ச்சுனனென்கிற மகாபுருஷன் வாய்க்கப் போகிறானென்கிற சந்தோஷத்தினால் மயில்கள் நாத்தனஞ்செய்யவும், செந்தாழை, குடமல்லிகைகள்மலர்ந்து வண்டுகளுக்கு விருந்திடவும், ஆறுகள் பூரணவெள்ளங்களுடன் சமுத்திர நீரைத் தங்கள் வடிவமாக்கவும், பயிர்கள் கதிர்களின் பாரத்தினால் தங்கள் ஜீவனைக் காப்பாற்று மேகங்களைக் கும்பிடுவதுபோ லிருக்கவும், இவ்விதமாக மாரிக்காலமானது விளங்கியது

இப்படி. ஸ்ரீ நந்குமாளவில அர்ச்சுனன் ஓர் ஆலமரத்தின் பொந்தினிலுட்கார்ந்து கண்ணனை நினைத்தான் அப்போ கண்ணன் தாமொருவராய்ப் பிரபாசத்தீர்த்தத்திற்கு வந்து, அர்ச்சுனனைக் கண்டொருவருக்கொருவர் ஆலிங்கனஞ் செய்துகொண்டு, சந்தோஷத்துடன் மனோரம்மியமாகிய காடுகளும், அருவிகளும் மடுக்களும்பெரும்பாறைகளும், பொருந்திய பலவித மிருகங்களும் பக்ஷிகளும் வாசஞ் செய்யுமிடமாயிருக்கின்ற ரைவதகபர்வதத்திற் கொண்டுவந்தமைத்து, அவனை அங்கிருக்கும்படியாயும், ஒருவருடன் பேசாமலிருக்கும்படிக்கும், திட்டஞ்செய்து, இரகசியமாகத் துவாரகாபுரஞ் சென்றனர். சிலநாளைக்குப்பின் அந்த ரைவதகபர்வதத்தில் யாதவர்கள் வருடந்தோறுஞ் செய்கிற திருவிழா நேரிட்டது அம்மலையைச் சுற்றிலும் அழகான வீடுகளினாலும், தீபங்களின் வரிசைகளினாலும், இன்னும் பல அலங்காரங்களினாலும் கோடிசூரியப் பிரகாசமாய் விளங்குமம்மலையில், யாதவர்கள் மங்களஸ்நானஞ்செய்து நல்ல ஆடையாபரணங்களைத் தரித்து, வேதியர்கட்குப் பலவிதமான தானங்களை வழங்கி, திவ்வியபோஜனங்களைப் புசிப்பித்து, சந்தனபுஷ்பதாம்பூல முதலானவைகளுடன் வேடிக்கையாய் வாகனங்களி லேறிக் கொண்டு, அனேக ஜனங்களுடனே பல வாத்திய கோஷங்களோடும், சங்கீதங்களோடும், நாட்டியங்களோடும், நான்குபுறங்களிலும் சுற்றிவந்தார்கள்.

அக்கால பலராமர் ரேவதி தேவியென்கிற தன்மனைவியோடு மதுபானஞ் செய்து, மதத்தினால் கண்கள் சிவந்து சுழலமிடும்படி பலபேர்களுடன் சுற்றிவர, பிரத்தியும்னன் சாம்பன் முதலிய பேர்கள் வேடிக்கையா யிருக்க அப்போ ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியானவர் அனேக மாதர்களுடன் தாமுஞ் செய்யவேண்டிய தானமுதலியவைகளைச் செய்து, சந்நியாசிவேடம் பூண்டிருக்கிற அர்ச்சுனனைப் பார்த்து அங்கு உலாவிக் கொண்டிருந்தார். அச்சமயத்தில் திருவிழாவுக்காக அழகாகச் சிங்காரித்துக்கொண்டு சுபத்திரையானவள் தோழிமார்களுடனே அந்த மலையில் சஞ்சரிக்கக்கண்ட அர்ச்சுனனானவன் காமவிகாரமடையவே, கிருஷ்ணபகவான் அக்குறிப்பைஅறிந்து, அந்தக்

சன்னியாசியைப்பார்த்து, காட்டில் தவசியாய்ச் சஞ்சரிக்கின்ற உன்மனம் காமத்தில்மயங்குகின்றதுபோலிருக்கின்றது, இந்தப்பெண் சுபத்திரை யென்னும் பெயருடையயென்தங்கை, என்றந்தைக்கிந்தப்பெண்ணிடத்தில் மிகவும் அன்பாகையால், உனக்கிந்தப் பெண்ணிடத்தில் கருத்துண்டா யிருந்தால் சொல்லு எங்கள் தகப்பனுக்குச் சொல்லி உன்கருத்தின்படி நடப்பிக்கிறேனென்று சொன்னார்.

அத்தற்கார்ச்சுனன் சொல்லுகிறான். ஐயா! ஸ்ரீ கிருஷ்ணபகவானே! நீரென்ன வென்னைப் பரிகாசஞ்செய்கிறீர் நான்வந்தகாரியமே இதுவாயிற்றே! இந்தப் பெண்மணியைப் பார்த்து மகாதீரமுடைய தவசிகளும்மயங்குவார்களே! நான் மயங்குவதரிதோ! அவளெனக்கு மனைவியாவாளேயாகில் சகல மங்களங்களும் வந்தாற்போலேயாம் ஆதலா லென்னிடத்தில் பரிபூரணகடாக்ஷம் வைத்து, அவளை நான் கலியாணம் பண்ணும்படியாகிய வகையைச் சொல்லவேண்டுமென்று கேட்டான் அதுகேட்ட மாயோன் அவனைப்பார்த்துச்சொல்லுகிறார் ஓ அர்ச்சுனா! அரசர்கள்பெண்களை வலிமையினால் கொண்டு போகிறதுண்டு அதைப் பெரியோர்களும் ஒத்துக்கொண்டிருக்கிறார்கள். ஆதலால் வலிமையினாலெடுத்துக்கொண்டு போய்விடு அதற்குச் சமயமிருக்கிறது சொல்லுகிறேன் இப்படி நாம் செய்திருக்கிற நிச்சயத்தை யாரறியப் போகிறார்கள்? பின்பு பார்த்துக்கொள்வோம் என்று நிச்சயஞ் செய்து இந்தச் சேதியைத் தருமராசனுக்குத் தெரிவிக்கிற நிமித்தம் ரகசியமாய்ச் சிலமித்திரரை அனுப்புவிக்க, தருமராசன் முதலானவர்களும் இச்செய்திகேட்டு, நல்லகாரியம் அப்படியே நடக்கட்டுமென்றுசொல்லி யனுப்பிவித்தார்கள்.

இப்பால் ஸ்ரீ கிருஷ்ணன் அர்ச்சுனனை அவ்விடத்திலேயே யிருக்கச் சொல்லி நியமித்துப்போட்டு, தாம் முன்போல எல்லாருடனேயும் கூடிக்கொண்டு, திருவிழா கழித்தவுடனே துவாரகாபட்டணம் போய்ச்சேர்ந்தார். பற்குனனும் கிருஷ்ணன் தங்கையைக்கண்டது முதல் காமவேதனைகொண்டு, அழகாகிய சோலைசூழ்ந்திருக்கிற ஒரு பாறாங்கல்லின்மீது உட்கார்ந்து சுபத்திரையைத் தியானஞ்செய்துகொண் டிருந்தான் இப்படியிருக்க ஒருநாள் கிருஷ்ணன் வேட்டைக்குப் போயிருக்க, பலராமர், கிருதவர்மர், சாம்பன், சாரணன், பிரத்யுமனன், கதன், சாருதேஷ்ணன், விடூரதன், பானு, நிசிதன், விபுருது, இவர்கள் முதலாகிய சிலயாதவவீரர்கள் வேடிக்கையாய் அந்தப்பருவதத்திற்குப்போ யிருக்கும்வளவில் அவ்விடத்திலிருக்கும் அர்ச்சுன சன்னியாசியைக்கண்டு சந்தோஷப்பட்டு, அவர் பக்கத்திற்போய் மிகவும் வினயத்துடனே பணிந்து நின்றார்கள். அந்தச் சன்னியாசியும் அவர்களை ஆசீர்வதித்து உட்காருங்களென்று சொல்ல, அவர்கள்யாவரு மங்கிருக்கும் பாறைகளின்மீதில் உட்கார்ந்துகொண்டு, இவர்யாரோ மகானுபாவர் மிகவும் சாந்தமூர்த்தி என்று மனதில் எண்ணிக்கொண்டு இருந்தனர்.

அக்காலர்ச்சுன சன்னியாசி அவர்களைப்பார்த்து, என் யாதவவீரர்களே! க்ஷேமமா? என்றுகேட்டான். அதற்குப் பலராமர், சுவாமியினுடைய

அநுக்கிரகததினலே க்ஷேமநதான தேவரீர யாரோ? எவவிடததினின்றும ஏதறகாக இஙகே எழுநதருளினீர்? தெரியவிலலே ஆகையால அதை அருளிச செயயவேணடும என்று கேடகவும சனனியாசியானவன சொலலுகிருன். ஐயாபிரபுவே! நமககோரிடமென்றுணடா? பூமியெலலாம நமமுடைய வீடுந தான தீரததக்ஷேததிரஙகளே யெலலாம பாரததுககொணடு மழையாகை யால இவவிடமவநதிருககிறேன என்று சொலலக கேட்டபலராமா, ஆனல் சுவாமி! அடியேஙகள செயததவததால தேவரீர இவவிடம எழுநதருளியது. தேவரீர அனேகபுணணிய தீரததஙகளேயும ஸதலஙகளேயும கணடவராகை யால, அவைகளின சரிததிரம சொலலியருள வேணடுமென்று கேடடுக் கொணடனா அதறகுச சனனியாசி அநதச சரிததிரஙகளேயும, மறறும தரு மததுக கடுததஙகளேயும, தெயவபகதிககடுதத காரியஙகளேயும, எடுததுப் பிரசஙகிகக, அவையனேததுஙகேடட பலராமா இவா மகாபெரியவரென்று நினேதது, எழுநது வநதனமபணணிஞா பினபு மறற வாகளெலலாம கூடி, இவா மகா சனனியாசி. வெகுயோககியா, நாமசெயத புணணியவசததிஞல தான நமதுதேசததுககு வநதாா ஆகையால இவா இநத மழைககாலமெல் லாம சவுககியமா யிருககுமபடியாய நாம எநதவிடததிலே இருககச்செயய லாம என்று யோசிததுககொண டிருநதாாகள

அநத வேளேயில வேடடைககுப போயிருநத ஸ்ரீகிருஷண பகவான அவ் விடததுககு வநதாா அவரைபபலராமாகணடு, அபபா குழநதாய! இஙகே ஒரு சனனியாசி வநதிருககிருா அவா இவவிடததில மிகவும வருநதுகிருா அவரை நமது படடணததுள எவவிடததி லிருககச செயயலாம சொல லென்று கேடடனா அதறகுக கணணன், அணணு! நீரிருகக நான் சொலவ தெபபடி? உமககு எவவிடததில வைகக இஷடமோ? அவவி டததில வைககலா மென்று சொலலினா அதுகேடட பலராமா தமபி சொனன விநயவாககியததுககுச சநதோஷபபடடு பினபு சறறுயோசிதது, கிருஷணு! எனககுத தோறறுகிறதைச சொலலுகிறேன கேள, இவா நமது சுபததிரையினுடைய கனனிபாமடததில போஜனம பணணிககொணடு, நம முடைய தோடடததிலே கொடிகளிஞல கடடியிருககும அறைகளிலே இநத மழைககாலம கழிகிறவரைககும வாசஞ செயதுககொண டிருககடடும உனக் கெனன தோறறுகிறது சொலலுக யாதவாகளெலலாம உனசமமதியை எதிர் பாாக்கிருாகள என்றுசொலலவும கணணனவா, அண்ணு! உமமுடைய சமமதிககும உததரவுககும எதிரிலலே நீரோ எலலாமறிநதவா மகாபததியுள் ளவா எஙகளுககுப பெரியவா ஆகையால நானென்று மறுததுசசொலலக் கூடவிலலே ஆகிலும இபபடி செயவதில ஒரு குறைவுமவராம லிருபபதைக் குறிததுக கொஞசம் யோசிகக வேண்டியதாயத தோறறுகிற தென்று சொன்ஞர்

அதுகேட்ட பலதேவர் கிருஷ்ணு! சரிதான் நீ சொல்லுகிறது ஆனல் இந்தச் சன்னியாசி வெகுபடிததவ ராயும, வெகுயோககிய ராயும், சாந்த

மூர்த்தியாயும் காணப்படுகிறார். உள்ளமெப்படி யிருக்கிறதோ யாருக்குத் தெரியும்? ஆகையால் கண்ணே! நீ இவரை யழைத்துக் கொண்டுபோய்க் கன்னியா மாடத்தில் விட்டு, சுபத்திரைக்குச் சொல்லி அன்ன பானமுதலான உபசாரங்கள் பண்ணிவரும்படி திட்டம் பண்ணுக என்று சொல்லக்கேட்ட பகவான் ஆனால் அப்படியே செய்கிறேனென்று சம்மதித்து அந்தக்கபட சன்யாசியைக் கூப்பிட்டு அழைத்துக்கொண்டு, வழியில் ஒருவரோடொருவர் வேடிக்கையாய்ப் பேசிச் சிரித்துக்கொண்டே நடந்து, காரியமெல்லாம் சித்தமாய்ப் பயன்படுமென்னுஞ் சந்தோஷத்துடனே பட்டணத்துக்குட் சென்று முன்னம் அந்த அர்ச்சுனனைத் தன் வீட்டுக்கு அழைத்துக் கொண்டுபோய் தன்மனைவிகளாகிய உருக்குமணி சத்தியபாமைகளைக் கூப்பிட்டு, நாணமுற்றுத் தலைவணங்கி நகைத்துக்கொண்டு நிற்கிற அர்ச்சுனனைக் காட்டித் தானு நகைத்துக்கொண்டு, ஆ பெண்களே! இவரைப்பார்த்தீர்களா? இவர் மகா பெரிய சன்னியாசி மேலே தரித்துக் கொண்டிருக்கிற காஷாயத்துக்குச் சரியான ரூபம் உள்ளத்திலேயு முண்டு மகானுபாவர் சமயத்துக்குத் தகுந்தபடி யிருப்பார் இவரிடத்தில் கபடக்லேசங் கிடையாது இவரின்னாரென்று இதுவரைக்கு மொருவருக்குந்தெரியாது இவர் மெய்யான தனஞ்செயன். சந்தேகமில்லை

ஆகையால், இவருக்கு நீங்கள் மருமகனுக்குச் செய்யத்தக்க உபசாரங்களைச் செய்யவேண்டும் அண்ணாவின் உத்தரவின்படி சுபத்திரையின் கன்னியாமடத்தில் இவரை யிருக்கச்செய்து, சுபத்திரையைப் பணிவிடை செய்யும்படி நியமிக்கப்போகிறேன் என்றுசொல்லவே அந்த ருக்குமணி முதலான போகளெல்லாம் கொங்கை குலுங்கச் சிரித்துக்கொண்டு ஆ, ஆம், பார்க்கும்போதே தெரிகிறது, வெகுபெரியவர்தான் இப்படிப்பட்டவர் இனிகிடைக்கமாட்டார் சுபத்திரை நல்லபாக்கியம் செய்திருக்கிறாள் சந்தேகமில்லை இவரெப்படி யிருந்தாலு மிருக்கலாம் போலிருக்கிறது சன்னியாசத்துக்குப்பலன் கிடைத்தால் மறுபடி யில்லறத்தானைய விடலாம் ஐயா துறவியே! வாரும் உட்காரும் தாம்பூலம் போட்டுக்கொண்டு வெகுநாளாயிருக்குமே, இப்போ தாம்பூலம் போட்டுக் கொள்ளுகிறீரா? இனிப் பரவாயில்லை. வந்தகாரியம் பலிக்கும் காஷாயத்தைக் களைந்து நல்லவஸ்திரம் உடுத்திக்கொள்ளும் நாங்கள் வெளிப்படுத்துகிறதில்லை மறுபடி போகும்போது காஷாயங்கட்டிக் கொள்ளலாம் எங்கள் வீட்டிலேதான் முதலில் மருவுண்ணவேணும். ஆகையால் சாப்பிடும் பிக்ஷை இன்றைக்கு வேண்டாம்

எப்போதும் நீர் உயர்ந்த வேஷம்போட்டால் பெண்கிடைக்கிறது. அஃதெப்படி யென்றால், பிராமணவேஷம் போட்டபோது துரோபதிகிடைத்தாள் தபசிவேஷம் போட்டபோது நாகக்கன்னியும் பாண்டிய கன்னியும் கிடைத்தார்கள். அப்படியே இந்தச் சன்னியாசி வேஷத்துக்கும் பயன்கிடைக்கும். என்று பரிகாசமாய்ப் பேசவும் அர்ச்சுனன் புன்சிரிப்புகொண்டு, நீங்கள் சொல்வதெல்லாஞ் சரிதான் உங்கள் நாயகருடைய ஸ்நேஹபலத்தினாலே

தான எனககு யிபபடிபபடட சாமாாததியமே தவிர வேறிலலெயன றிவ விதம பலவிதமாயப பரிகாசபபேசசுகளைப பேசினன பினபு அநதக கணண னுடைய மனைவிக ளவனைபபாாதது, அாசசுன ! நெடுநாளாய உனனை எஙகள் வீட்டிலவரக காணவேணடுமெனறு ஆசைகொணடிருநதோம இனறைககுத் தான அதுபலிததது எனறு மிகவும அனபுடனே போஜனமுதலான உப சாரஙகளைச செயதாாகள பினபு கணணன அாசசுனனைக கனனியாமாடத துக கழைததுககொணடுபோய தன தஙகையை யழைதது அயயா சுபத திரா ! இவா மகாபெரியவா நமது தேசததுககு அதிதியாய வநதவா இவரை நீ உனமாளிகையில வைததுப பூசிததால மிகவுநலலது உனககுநலல பலன் கிடைககும

இபபடி தான முறகாலஙகளில நமது கனனியா மாடஙகளிலே வெகு பெரியோாகள வநது தவஞசெயது கொண டிருநதாாகள அவாகளை யெல லாம நமதுசநததியிற பிறநத அனேகமபெணகள பூசிததுவெகுநனமைகளைப பெறறாாகள ஆகையால இநதச சனனியாசியை நீ வெகு பயபகதிகளுடனே பூசிதது வரவேணடியதாய நமமுடைய அணணு நியமிததிருககிறா ஆகை யால நீ இநதப பெரியவா எநத வேளையில எனன சொலலுகிறாரோ ? அதைத தவறாமல தகுநதபடி போஜன முதலானவைகளால உபசாரஞ செய் துவரவேணடும இவருககுத தவஞசெயய நமது தோடடததிலிருககும கொடிகளால கடடியவீடு தகுநததா யிருககிறபடியினாலே, அஙகேயே வாசம பணணிககொண டிருககடடும எனறு சொலலககேடட சுபததிரை இசைநது அபபடியேசெயது இவாசநதோஷபபடுமபடி நடநதுகொளளுகிறேனெனறு சொனனாள அதுகேடட யாதவகுலதிலகராகிய கிருஷண மூாததியானவர் அநதக கபடசனனியாசியைத தோடடததிறகு அழைததுபபோய இருகக வேணடிய விடஙகளையும காணபிதது, சுபததிரையையும பணிவிடைககு அவ ரிடததில ஒபபுவிதது, சனனியாசி யிருபபிடததில உததரம பெறறுததிருமபி, இசசெயதியைத தமயனாருககும அறிவிததாா

பினபு அநத அாசசுனனனவன் தினநதோறும விடியற காலமுதல் இராததிரி சயனிததுககொளளுகிற வரைககும சுபததிரையினாலே வேணடிய வுபசாரஙகள செயயபபடடுவருஙகாலததில, இடைவிடாமல சுபததிரையைப பாாததுககொணடிருபபதினாலும, அவளோடுபேசுகிறதினாலும, அவளுடைய நடை சிரிபபு பேசசு முதலாகிய செய்கைகளைக காணபதினாலும, அவ ளைக காண்பதறகு முனனிருநததைவிட அதிகமாககாமததீயானது எழுமபி அநதப பாணடு குமாரனுடைய மனதை யெரிககவே நாழிகைககு நாழி கை தேகமானது இளைதது வெளிததுத துவணடுபோயிறறு இவவாறாகக் காமநோயினாலே மிகவும் வருத்தமடைநது, மிகுநத தாபததைச் சகிக்கமாட் டாமல பெருமூசசுவிட்டு, நீரிலமிழ்ததிய சுரைக்காயைப்போல எவ்வளவு அடக்கினாலும அடங்காமல் தனது கபடமவெளிககுவர அதை யெல்லாம் வெவ்வேறு பாவனையினுல் மறைததுக்கொண்டு, தன்வேஷத்திற்குத் தகுந்த

படி ஸ்ரீஹரீ! மாதவா! கோவிந்தா! என்று ஸ்ரீகிருஷ்ணபகவானையே கூவிக் கொண்டிருந்தான்.

அந்தச் சுபத்திரை மனதிலே அர்ச்சுனன் பேரிலேயே நெடுநாளாய்க் காதல்கொண்டிருந்தாள். அதேனென்றால், வசுதேவருடைய குமாரர்களில் ஒருவனாகிய கதனென்பவன் முன்னொருகால் பாண்டவர்கள் பிறந்ததையும், அர்ச்சுனனுடைய ரூபம், சாமர்த்தியம், பெருமை, முதலானவைகளையும் சுபத்திரைக்கு நன்றாய்ச் சொல்லியிருக்கிறான். அன்றியும் அந்த யாதவர்களுக்குள்ளே ஒருவரோடொருவர் வீரவாதம் பேசுங் காலத்திலே அந்த அர்ச்சுனனே எனக்கு நிகரல்லவே நீ எவ்வளவென்றும், வில்வித்தை கற்குங்காலத்தில் நான் அர்ச்சுனனுக்கு அதிகமாகிறேன் பாரென்றும், எவனாகிலும் சவுரியத்தினால் கெருவமடைந்தால் அப்போது அவனைப் பார்த்து நீயென்னடா அர்ச்சுனனாக நினைத்துக் கொண்டாயோ வென்றும், வில்வித்தை கற்கிற பிள்ளைகளை ஆசீர்வதிக்குங்கால் அர்ச்சுனனுக்குச் சமானமாகக் கடவாய் என்றும் அவ்விடத்தில் பேசுவார்கள். இவைகளையெல்லாம் சுபத்திரை பலதரம் கேட்டிருக்கிறவளாகையால், புருஷர்களுக்குள் அர்ச்சுனனே உயர்ந்தவனென்று எண்ணி, அவனையே விவாகம் பண்ணிக்கொள்ள வேண்டுமென்று நினைத்திருந்தாள்.

ஆதலாலே குருதேசத்தினின்று யாராகிலும் வந்தால், அவர்களை அர்ச்சுனனுடைய சரித்திரங்களைச் சொல்லச்சொல்லிக்கேட்டு, அவர்கள் சொல்லுமளவில் மனதில் மிகவுங் களிப்படைவாள். அன்றியும் வெண்மையான வஸ்துவைக்குறித்து யாராகிலும் அர்ச்சுனமென்கிறசொல்லைச் சொல்லும்போது அதையுற்றுக்கேட்பாள். இன்னும் யாராகிலுந் தவசிகள் சோதிடர் குறிசொல்வோர் முதலானபேர்கள் வந்தால் அவர்களுக்கு உபசாரஞ் செய்து, நான் நினைத்திருக்கிற காரியம் கூடிவருமா வராதா வென்று கேட்டு, அவர்கள் கூடிவருமென்று சொல்லுமளவில் அர்ச்சுனனை விவாகஞ் செய்துகொண்டது போலவே களித்திருப்பாள். இப்படிக்கெல்லாம் ஜாக்கிரத்திலும், சொப்பனத்திலும், அர்ச்சுனனைப் பாவனையினாலே கண்டு, அவனிடத்திலேயே மனமழுந்தியிருப்பவளன்றோ? ஆனபடியினாலே தினந்தோறும் கபட சன்னியாசியை யுற்றுப்பார்க்குமளவில் தான் கேட்டிருக்கிறபடியும், சொப்பனத்தில் காண்கிறபடியும், இவனுடைய ரூபமிருப்பதினாலும், கைகளில் நாணிரைச்சலாலுண்டாகிய காய்ப்பு காணப்படுகிறபடியினாலும், அர்ச்சுனன் தீர்த்த யாத்திரையாய்ப் பிரபாசமவரைக்கும் வந்திருக்கிறானென்று கேட்டிருப்பதினாலும் அந்த யாதவப்பெண்ணின் மனதிற் சந்தேக முண்டாயிற்று.

அப்படியிருக்க ஒருநாள் இந்தச் சன்னியாசியானவன் காலையில் ஸ்நானஞ்செய்து ஆசனத்திலுட்கார்ந்துகொண்டு ஜெபம் பண்ணியிருக்குங் காலத்திலே, வசுதேவருடைய மகளாகிய சுபத்திரைபோய் நமஸ்காரஞ்செய்து சுவாமி! தேவரீர் வெகுதேசங்களையும் நதிகளையும் மற்று மனேகங்களையும் கண்டவரானபடியினாலே, அவைகளின் சரித்திரங்களைச் சொல்ல வேண்டும்

மென்று கேட்டாள். அர்ச்சுனனும் மிகவும் சந்தோஷித்து, சாம்பாரவை முதலாகிய விலாசங்களுடனே அனேகங் கதைகளையெல்லாஞ் சொல்லி வந்தான். அப்படி சொல்லிவரும்போது நடுவில் குருதேசத்துச் சங்கதி வருமளவில் சுபத்திரையானவ ளவனைநோக்கி, சுவாமி! அவ்விடத்தில் முன் காண்டவப் பிரஸ்தமென்றும் இப்போது இந்திரப் பிரஸ்தமென்றும் பெயருடைய பட்டணத்தில் எங்கள் நல்லத்தை குந்திதேவி யென்பவளைக் கண்டீரா? அவளும் அவளுடைய குமாரர்களும் க்ஷேமமா யிருக்கிறார்களா? அவர்களில் துரோபதிக்காக ஏற்பட்ட நிபந்தனையின்படி அர்ச்சுனனுக்குத் தீர்த்தயாத்திரை நேரிட்டதாமே. அந்த மகாபுருஷன் மகாசவுக்கியமா யிருந்தவர் நெடுநாளாய வனாந்தரங்களில் திரிந்து கஷ்டப்பட்டுக்கொண்டு இந்த மழைகாலத்திலே எங்கேயிருக்கிறார்? தேவரீரும் தீர்த்தயாத்திரை வந்தவ ராகையால் அவரை யெங்கேயாகிலும் கண்டதுண்டா? அல்லது கேட்ட துண்டா? இதுகளையெல்லாம் தயைசெய்து சொல்லவேண்டு மென்று கேட்டுக் கொண்டாள்.

அப்படி கேட்கும்போது அர்ச்சுனன் குறிப்பினாலே அவளுக்குத் தன்னிடத்தில் ஆசையிருப்பதையறிந்து, மிகுந்த காமவெழுச்சியினால் உடம்பெல்லா மயிர்க்கூச்சடைந்து, தேகநடுக்க முற்றதொனி தழுதழுக்கச் சிறுநகைப்புடனே சொல்லுகின்றான்: அடி யதுகுலத்தோர் தவத்தினா லுதித்த மின்னரசே! உங்கள் அத்தையாகிய குந்தியைக் கண்டேன். க்ஷேமமா யிருக்கிறாள். அவள் புத்திரர் முதலான பேர்களும் க்ஷேமமாயிருக்கிறார்கள். அந்த அர்ச்சுனனோ? தீர்த்தயாத்திரை முடிந்தும் இன்னும் தன் தேசம்போய்ச் சேரவில்லை. ஆனாலெங்கே யிருக்கிறானென்றால்? இப்போது துவாரகா பட்டணத்திலேயே சன்னியாசி வேஷம்பூண்டு ஒருவருக்குந் தெரியாமல் வாசஞ் செய்துகொண் டிருக்கின்றான். அடிபொற் கொடியே! நீ தினம் பார்த்துக் கொண் டிருக்கச்சேயும் அவனையறியாம லிருக்கிறாய். என்று சொல்லக் கேட்ட சுபத்திரை திடுக்கிட்டாற்போல பெருமூச்செறிந்து, முகத்தை வணங்கிக்கொண்டு, தரையைக்காலால் கீறிக்கொண்டு நின்றாள்.

இப்படி நிற்கு மவளைக்கண்ட அர்ச்சுனன் மிகவன்புடனே நோக்கி, அடி பூங்குழலே! நான்தான் அர்ச்சுனன். உனக்கெப்படி என்னிடத்தில் கருத்திருக்கிறதோ? அப்படியே யெனக்கும் உன்னிடத்தில் பதின்மடங்கதிகமாய கருத்தமைந் திருக்கிறது. உனது பணிவிடைக்குக் காத்திருக்கிறேன். நல்ல நாளிலே தருமவிதிப்படி சாவித்திரி யென்பவளைச் சத்தியவா னென்கிறவன் விவாகஞ்செய்து கொண்டதுபோல உன்னை விவாகஞ் செய்துகொண்டு, உன்னுடன் கூடி வாழ்வேன். என்று சொல்லிக்கொடிகளால் கட்டிய அறைக்குள்ளே பிரவேசித்தான். பின்பு சுபத்திரையானவள் மிகவு மதிகலங்கிமெய் துவண்டு, தனது பள்ளியறைக் குள்ளேபோய் கட்டிலின்மீது சயனித்துக்கொண்டு, மூர்ச்சை யடைந்தவள்போல ஒன்றுந்தெரியாம லிருந்தாள். இப்படியிருக்க ஸ்ரீகிருஷ்ண மூர்த்தியானவர் இச்செய்தியை யெல்லாம் தமது பேரறிவினால் அறிந்து, சுபத்திரைக்கும் அர்ச்சுனனுக்கும் போஜனமிடும்படி

ருக்மணி தேவியை யனுப்பினார். அவளும் இருவருக்கும் போஜனத்தைக் கொணர்ந்து பரிமாறி, இவ்விருவருடைய மனோவியாதியை முற்றுமறிந்து போனாள். அர்ச்சுனனும் அந்தக் கொடியறையிலேயே யிருந்துகொண்டு உன்மாதம்பிடித்தவன்போலிருந்தான்.

இப்படி யிருக்குமளவில் சூரியன் அஸ்தமனத்தை யடையவே, அர்ச்சுனனையும் சுபத்திரையையும் மோகமென்பது கௌவிக் கொண்டது போல இருளானது பூமியைக் கௌவிக்கொண்டது. அதைப்பார்த்தால் ஒருவன் மிகுந்த புண்ணியஞ்செய்து சுவர்க்கலோகமடைந்து மகாபோகங்களை யெல்லா மனுபவித்து, அந்தப்புண்ணியம் நீங்குமளவில் மறுபடியும் அவனைப்பிறவிப் பாவம் சூழ்வதுபோ லிருந்தது. உடனே ஆகாசத்தில் நட்சத்திரங்கள் புறப்பட்டன. அதைப்பார்க்குமளவில் சுபத்திரையின் தேகத்து வெப்பம் வீசி ஆகாயத்தில் கொப்புளங்கள் புறப்பட்டது போலத் தோற்றிற்று. அதனால் குளிர்ச்சியும் வெண்மையுமுடைய கிரணங்களை வீசி இருளைக் கதாரக்கி யடித்துக்கொண்டு சந்திரன் உதயமாகியதைப் பார்த்தால், முகத்தினழகினாலே தன்னை ஜயித்தவளாகிய சுபத்திரையைத் தன் தோழனாகிய மன்மதன் மிகவும் வருத்துகிறானே இத்தருணத்தில் நாமும்போய் வருத்தி அவள்முகத்தை வாட்டச்செய்ய வேண்டுமென்று வந்ததுபோலத் தோன்றிற்று.

இவ்வாறாகச் சந்திரன் உதித்து நிலவுவிளங்குமளவில் அந்த யதுகுலப் பெண்ணானவள் மன்மதன் பிரயோகிக்கிற புஷ்பபாணங்களினாலே தேகமெல்லாம் துளைக்கப்பட்டு, சகிக்கமாட்டாமல், தான் சயனித்திருக்கின்ற புஷ்பசயனமெல்லாம் கருகிப் போகும்படியாகிய தாபத்தை யடைந்து, மூக்கினுனியில் அணிந்திருக்கிற ஆணிமுத்து நீலமணிபோ லாகும்படியாகிய பெருமூச்சு விட்டுக்கொண்டு, தன்னைத் தொந்தரவு செய்கிற மன்மதனையும் அவனுடைய தோழனாகிய சந்திரனையும் குயில்களையும் மலய மாருதத்தையும் சோலைகளையும் தூஷித்து மெய்சோர்ந்து மூர்ச்சித்துக் கிடந்தனள். இப்படி கிடக்கவே இவளுடைய தோழிமார்களெல்லாம் இதைக்கண்டு விசனமடைந்து தேவகீதேவிக்கு அறிவித்தனர். அந்த அம்மனும் ஓடிவந்து மிகுந்த துயரத்துடனே மகளைப்பார்த்து, பெண்ணே! நீயேன் இப்படி வருந்துகிறாய்? உனக்குண்டாகிய வியாதிக்குத்தக்குந்த சிகிச்சை செய்விக்கிறேன். தைரியத்தை யடைந்திரு.

மேலும் நீ இப்போதிருக்கிறபடி இன்னம் சிலநேரம் இருப்பாயேயாகில், நாங்களெல்லாம் பெண்ணை இழப்பதுமன்றி உயிரையு மிழப்போம். ஆதலால் மகளே! கொஞ்சம் தைரியமடைந்து உயிரைக்காப்பாற்று. உன்கருத்தை உன்னண்ணன்மார் தகப்பனார் முதலானவர்களுக்குத் தெரிவித்து அப்படியே நடத்துகிறேன். துயரப்படாதே என்று சொல்லி வசுதேவரிடத்திற்கு வந்து, ஏகாந்தத்தில் அவரைப்பார்த்து, கேட்டீரோ? நமது தோட்டத்தில் வந்திருக்கிற சன்னியாசி அர்ச்சுனனென்று தெரியவருகிறது. அதினாலே நம்முடைய

சுபத்திரை அவனிடத்தில் காதலாலே மிகுந்த வருத்தமடைந்திருக்கின்றாள். ஆகையாலே இதற்குத் தகுந்தயோசனை செய்யவேண்டுமென்று சொன்னாள். வசுதேவரும் அதை அக்ரூரன், ஆகுகன், கிருஷ்ணன், இவர்கள் முதலாகிய பேர்களுக்குத் தெரிவித்தார். அதுகேட்ட உக்கிரசேனன், அக்ரூரன், கதன், சினி, கிருஷ்ணன், பிருதுசிரவன், தேவகி, ரோகிணி, ருக்குமணி, சத்தியபாமை, இவர்களெல்லாங்கூடி நன்றாயோசித்து, இரகசியமாகப் புரோகிதரை யழைப்பித்து, இதையவருக்கும் அறிவித்து, அவர் யோசனையையும் கேட்டுக்கொண்டு பன்னிரண்டாவது நாளில் முகூர்த்தம் வைத்துக்கொண்டார்கள்.

பின்பு கிருஷ்ணன் இந்தப்பெண்ணை அர்ச்சுனனுக்குக் கொடுக்கப் பலராமர் உத்தவர் முதலான பேர்களுக்குச் சம்மதியில்லாமையால், அவர்கள் இச்செய்தி யறியாதிருக்க வேண்டியதற்காக யோசித்து ஒரு விளம்பரம் செய்து பறைசாற்றுவித்தார். அதாவது, நம்முடைய சுபத்திரைக்குத் தேகத்தி லென்னமோ தெய்வீகமாய உபத்திரவம் உண்டாயிருக்கிறபடியினாலே, சமுத்திரத்தினடுவிலிருக்கிற தீவில் சிவனுக்கு முப்பத்துநான்கு நாள் மகா வுற்சவம் நடக்கப்போகிறது. அதற்காக இன்றைக்கு நாலாநாளே யாவரும் தங்கள் குடும்பங்களுடனே அந்தத்தீவு போய்ச் சேரவேண்டியது. அன்றியும், யாதவர்களும் தங்கள் தங்கள் சேனைகளுடனே போய்ச் சேரவேண்டியது என்பதைக் கேட்ட ஸ்ரீபலராமர் முதலாகிய சகலயாதவர்களும் பட்டணத்திலிருக்கும் ஜனங்களும் வஸ்திராபரணங்களைப் பூண்டு, குதூகலத்துடனே அழகாகிய சீலைகளைக்கட்டிய கொடிமரங்களுடனே கூடி நல்லயந்திரங்களுடைத்தாய உட்காரவும் படுக்கவும் விளையாடவும் உபயோகமாயிரா நின்ற இடங்களையுடைய கப்பல்களின்மேலேறி, அந்தத்தீவு போய்ச் சேர்ந்தார்கள்.

இப்படியிருக்கச் சுபத்திரையானவள் கண்ணனிடத்திற்கு வந்து, அண்ணா! நம்முடைய தோட்டத்திலிருக்கிற சன்னியாசி இன்னம் பன்னிரண்டு தினங்களிவ்விடத்திலேயே இருக்கப் போகிறாராமே, அவருக்குச் சிசுருஷை யார் செய்வார்களென்று கேட்டாள். அதற்குக் கண்ணன், அம்மணி! உன்னையல்லாது யார் செய்வார்கள்? நீயே செய்யவேண்டுமென்று சொல்லிப் பேரிகைமுதலாகிய வாத்தியங்களுடனே புறப்பட்டுக் கப்பலேறி, ஏழுயோஜனை அகலமும் பத்துயோஜனை நீளமுமுள்ள அந்தத்தீவை யடைந்து, எல்லாருடனே கூடி அவ்விடத்துத் திருவிழாவை நடத்தினார். அப்போது சகலமான பேர்களும் தானதர்மங்களைச் செய்து, வேடிக்கையாய்த் தோட்டங்கள், அணைகள், குளங்கள், வாவிகள், முதலான இடங்களிலே வாசஞ்செய்து, திருவிழாப் பார்த்துச் சந்தோஷமடைந்து கொண்டிருந்தார்கள். இவ்வாறாக முப்பத்துநாலுநாள் அங்கேவுற்சவம் நடந்துகொண்டிருந்தது. இப்படியிருக்க், அர்ச்சுனனவன் காரியம் சித்தியாயிற்றென்று மனதிற் சந்தோஷ மடைந்து, சுபத்திரையைப் பார்த்து ஒரு வார்த்தை சொல்லுகின்றான்.

அடி தேன்மொழியே! இபபொழுது உன தகபபனர் முதலிய யாவ ரும திருநாள பாாககப போயிருககிறாாகள. இநதசசமயததிலேதான நாம் விவாகம செயது கொள்வதுயுகதம ஆனுல விவாகஙகளைப பெரியோர் கள எட்டுவிதமாய பேசியிருககிறாாகள. எனனுடைய பநதுககளோ தேசாந தரததி லிருககிறாாகள ஆகையால அநத எட்டுவித விவாகஙகளுளளும் ஐநதாவதாகிய காநதருவ மெனபதுதான நமககு இபபோது இசைநததாய்க் காணகிறது அனறியும, கனனிகையை ஒருவனுககுக கொடுபபதறகு முறை யே தகபபன, உடன பிறநதான, தாயாா, அமமான, தகபபனுடன கூடப் பிறநதவன, ஆசாரியன, இவாகளெலலாம அதிகாரிகளா யிருககிறாாகள் அன்றியும பெரியோாகள விவாகமுறமைமையைக குறிததுச சொலலியதைக் கொஞசஞ சொலலுகிறேன கேள

அஃதெபபடி யெனறால, பெணணைப பெறறவன் யோககியனை யழைதது விதிப்படி கனனிகையைக கொடுததால, அநதககனனிகை பததினியெனகிற பெயருடையவளாகிறாள ஒரு பெணசாதி மரிததபின தனனையும தனனை அடுததபோகஙகளையும காபபாறறுகிற நிமிததம தானே யொருபெணணைத தேடிக கலியாணஞ செயதுகொண்டால, அநதபபெண பாரியையெனறு பெயருடையவளாகிறாள பிளளைககுத தகபபனுனவன குலமுதலான யோக்கியதை யுளள கனனிகையைத தேடி விவாகஞ செயவிததால, அநதக கன்னிகை தாரமயெனறு பேருடையவளாகிறாள சநததி நிமிததமாக ஒரு வன் ஒரு பெணணை விவாகஞசெயது கொணடால, அவள வசியையெனறு பெயரையுடையவளாகிறாள அன்றியும, அவளுககு ஜாயை எனகிறபேரு முணடு இபபடியிருககிற படியினுலே ஆசையுளள பெணணை ஆசையுளள புருஷன் ரகசியமாயச சேருகிறது தருமமாயிருககிறது

அடி மான்விழியே! இபபோது நான சொலலுகிற காநதருவ விவாகமா னது அககினிமுனபாகச சடஙகுகள நடததிச செயதுகொளளத தககதா காமற போனுலும, நீ தயைசெயது அதை அஙகீகரிககவேணடும ஏனென் றால், உறசவததிறகுப போயிருககிற போகளெலலாம வாராமலிருபபதறகு முனனமே நலலநாளொனறிருககிறது உததராயணம, வைசாகமாசம, சுக்லபக்ஷம, ஹஸ்தநக்ஷததிரம, திரிதியைதிதி, மகரலககினம, பவகரணம், மைததிரமுஹூர்ததம, இதைகளெலலாம கலியாணததிறகு எடுதத முகூாததங் கள், இவையெல்லாம இன்றிராததிரிக கிசைநதிருககினறன சூரியபகவா னும் அஸ்தமயததுக்குச சமீபததிருககிறாா ஆகையால, நீ மனதைப பெரிது பண்ணவேண்டும. ஸ்ரீ கிருஷணபகவானே சருவமுமறிநதவாதான, ஆனுல் இந்தவிஷயததை யறிநதிருககிறாரோ இலலையோ தெரியவிலலை என்றிவவித மாகப் பற்குனன தருமசஙகட மடைநது காமனுல வருததபபட்டுப புலம்பா நின்ற என்னைக்காபபாறற என்னயோசிக்கிறாயோ சொல்லடி என் கண்ணே! என்று கேட்டான்.

## அர்ச்சுனனுக்கும் சுபத்திரைக்கும் திருக்கலியாணவிபவம்.

இவ்வாறு அர்ச்சுனன் சொல்லக்கேட்ட சுபத்திரை கண்ணனை மனதில் நினைத்து, ஒன்றுஞ் சொல்லாமற் கண்ணீர்மல்க நின்றுகொண்டிருந்தாள் அர்ச்சுனனும் பரிதாபத்துடனே கொடிவீடுசென்று தன் பிதாவாகிய இந்திரனை நினைத்தான் இப்படி அர்ச்சுனன் நினைத்தமாத்திரத்திலே தேவேந்திரனானவன் இயமன், வருணன், குபேரன், அக்கினி, வாயு, சூரியன், சந்திரன், அட்டவசுக்கள், ஏகாதசருத்திரர், சித்தர், சாத்தியர், கின்னரர், கிம்புருடர், முதலாகிய சகலதேவர்களோடும், நாரதர், வசிட்டர், முதலாகிய ரிஷிகளோடும், சசிதேவிமுதலாகிய தேவஸ்திரீகளோடும் கூடி, ஐராவதத்தின் மீதி லேறிக்கொண்டு தன்மகனிருக்கு மிடம்வந்து சேர்ந்தான் ஸ்ரீகிருஷ்ணபகவானும் சுபத்திரையின் நினைவையறிந்து, அக்ரூரன், ஆகுகன், கதன், வசுதேவன், தேவகி, ரோகிணி, ருக்குமணி, சத்தியபாமை, முதலாகியவர்களை அழைத்துக்கொண்டு, பலராமர் முதலானபேர்கள் தூங்கிக்கொண்டிருக்குந் தருணத்திலே புறப்பட்டு அவ்விடம் வந்து சேர்ந்து, தேவேந்திரன் முதலான பேர்களைக்கண்டு நமஸ்காரஞ் செய்து நலவரவு கேட்டனர்

அப்போது தேவராஜன் முதலானவர்களும் க்ஷேமவிடைகொடுத்து ஸ்ரீகிருஷ்ணனைப் பார்த்து, நல்லது என்சாவகாசம் பண்ணுகிறீர், சீக்கிரத்தில் காரியத்துக்கு யத்தினப்படவேண்டும் என்று சொல்லவே, ஸ்ரீகிருஷ்ணபகவான் தம்முடையவர்களைக்கொண்டு கலியாணத்துக்கு வேண்டிய சகல சாமக்கிரியைகளைச் சித்தப்படுத்தி, தேவர்களுக்கு விண்ணப்பஞ் செய்தனர். தேவராஜன் தன் மகனுக்கு மங்களஸ்நானஞ் செய்வித்து, நவமணிகளிழைத்துப் பளப்பளென்விளங்கும் கிரீடம், தோள்வளை, ஆரங்கள், வளைகள், முதலான பலவாபரணங்களாலும் திவ்விய பீதாம்பரங்களாலும் அலங்காரஞ் செய்து, நாரதர், வசிட்டர், முதலான மகா முனிகளைக்கொண்டு சுபச்சடங்குகளைச் செய்வித்தான் ஸ்ரீகிருஷ்ணபகவானும் தன் தங்கைக்கு நல்ல அலங்காரஞ் செய்வித்துச் சித்தம்பண்ணினர் அப்பால் சகல வாத்திய முழக்கங்களுடனே பெண்ணையும் பிள்ளையையும் கலியாணமண்டபத்து நடுவே ரத்தினங்களழுத்திய பொற்பீடத்தி லுட்காரவைத்து, காஸ்யப மகாமுனிவர் விதிப்படி அக்கினியை வளர்த்தி ஓமஞ்செய்ய, வசிட்டர் முதலாகிய ரிஷிகளெல்லாம் மந்திரங்களைக் கோஷிக்க, நாரதர்முதலாகிய ரிஷிகளெல்லாம் சபையாய் வேதிகையைச்சூழ்ந் துட்கார்ந்திருக்க, அருந்ததி முதலாகிய ரிஷிபத்தினிகளும், இந்திராணி முதலாகிய தேவபத்தினிகளும், இருபுறத்தும் மங்கள வாழ்த்துக் கூறி நின்றார்கள்.

அக்கால் தேவகி, ருக்குமணி, சத்தியபாமை, சாம்பவதி, இவர் முதலாகிய யாதவபத்தினிகளிற் சிலர் பாலிகைகளில் விரைகளை விதைத்துப் பால் கலந்த நீரிடவும், சிலர் பூரணகும்பங்களும் தீபங்களுமேந்தி மங்கலப் பாடல்களுடனே சூழ்ந்துவரவும், தேவதுந்துபி முதலாகிய பதினெட்டு வாத்தியங்

பகவானைப் பிரதிபாதியாநின்ற ருக்குவேத எசுர வேதங்களால் அந்தச சூரியனை ஸ்தோத்திரஞ்செய்து கொண்டிருக்கிறார்கள் கந்தருவாள அந்தச் சூரியனைக்குறித்து கானஞ்செய்து கொண்டிருக்கிறார்கள், அப்சரஸ்திரீகள் அவருக்கெதிர நாத்தனம பண்ணுகிறார்கள், நாகஙகள ரதத்தைத திடமாகக் கட்டிககொண் டிருக்கிறதுகள எக்ஷாள ரததகைககட்டி சன்னுகஞ்செய்து கொண்டிருக்கிறார்கள. பலசாலிகளா யிருக்கிற ராக்ஷசாள பினபககததிலிருந்து ரததைதத தளளிககொண டிருக்கிறார்கள மிகவும நிாமலாளான வாலகிலலியா ளென்னபபட்ட அறுபதினுயிரம பிரமமரிஷிகள மாததோறும அவருககெதிா முகமாயிருந்துகொண்டு விபுவான அந்தச் சூரியனை ஸ்தோத்திரம பணணி நின்று கொணடிருக்கிறார்கள்

வாரீர் பிரம்மமுனியே ! ஜனனமரண மிலலாதவராயும சர்வ நியநதாவாயும பகவானுயுமிருக்கிற ஸ்ரீ ஹரியானவர் இந்தபபிரகாரம கல்பங்கள்தோறும் தமது ஆதமாவை அநேக ரூபமாக விபாகஞ்செய்து இநத லோகததைப பரிபாலனஞ்செயது கொணடிருக்கிறா

# பன்னிரண்டாவது அத்தியாயம்.

மட்டு விருத்தம்

அநததுவாதசஸ கநதததின்ரததமும
ஙிநதையாயசசஙகிர மாகவிளமபினா

துவாதச ஸ்கநதததினுடைய அாததமும சஙகிரமாகச சொல்லப படுகின்றது

## சூதர் வாக்கியம்.

பகவத் பக்தி ரூபமான தர்மத்தின் பொருட்டும் சர்வக்ஞரான ஸ்ரீ கிருஷ்ணபகவான பொருட்டும பிராமமணுள் பொருட்டும் பிரணாமஞ்செய்து சாஸ்வதங்களான இநதபபாகவத புராணததிற சொலலபபட்ட அாததங்களைச சொல்லுகிறேன.

வாரீா சௌனகாதி முனிவாகளே ! சீவாளுககுப் புருஷஜன்மததில ஸ்ரவண முதலானதறகு யோக்கியமான யாதொரு சரிததிரததைககுறிதது உங்களால் நான்பிரசனஞ் செய்யப்பட்டேனே ஸ்ரீமகா விஷ்ணுவினுடைய அததியறபுதமான இந்த சரிததிரமானது உங்களுக்கு நமமாற் சொலலபபட்டது. இந்தப புராணததில் ஙியான அயிஸவரியாதி ஷாட்குணணிய பூரணராயும்

சர்வபாபங்களையும் போக்கடிக்கிறவராயும் சர்வநியந்தாவாயும் சகல ஜீவராசியாயுமிருக்கிற ஸ்ரீஹரியானவர் சாட்சாத்தாகச் சொல்லப்படுகிறார்.

இந்தப் புராணத்தில் நிர்குணமாயும் பிரபஞ்சத்தினுடைய உற்பத்தி லயங்களுக்கு ஆஸ்ரயராயுமிருக்கிற பரப்பிரமமும் அந்தப் பரப்பிரமத்தினுடைய ஞானமும் அந்த ஞானசாதனமுஞ் சொல்லப்படுகின்றது. இந்தப்புராணத்தில் பிரசித்தியான பகவத்பக்தி யோகமும் அதினாலுண்டாகப்படாநின்ற வைராக்கியமுஞ் சொல்லப்படுகின்றது.

இந்தப் புராணத்தில் பிரதமஸ்கந்தத்தில் பரீட்சித்து மகாராஜனுடைய ஜன்மமுதலானதும் பிற்பாடு நாரதோபாக்கியானமும் பிரமமஞோத்தமரான சுகப்பிரம முனிக்கும் பரீக்ஷித்து மகாராஜனுக்குஞ் சம்வாதஞ் சொல்லப்படுகின்றது.

இரண்டாவது ஸ்கந்தத்தில் பிரமநாரத மகாமுனி சம்வாதமும் அர்ச்சிராதி மார்க்க கதியும் பகவதவதாரங்களும் பிரகிருதிகாரியமான மகத்தத்துவ முதலாய் விராட்ரூபமுஞ் சொல்லப்படுகின்றது.

மூன்றாவது ஸ்கந்தத்தில் விதுர உத்தவசம்வாதமும் விதுர மயித்திரேயருடைய சம்வாதமும் புராண சங்கிரகமும் சிருஷ்டியும் சிருஷ்டிக்குப் பூர்வம் மகாபுருஷரான பரமாத்துமாவினுடைய கேவலாவஸ்தானமும், பிரகிருதி குணங்களுடைய சஞ்சலரூபமான சிருஷ்டியும், மகத்தத்துவ அகங்காரமுதலான பஞ்ச பூதங்களுடைய சிருஷ்டியும் பிற்பாடு பிரமாண்டத்தினுடைய சிருஷ்டியும் ஸ்தூலசூட்சும சிருஷ்டியான காலத்தினுடைய ஸ்வரூபமும், பிரளய சமுத்திரத்தில் நின்றும் பூமியினுடைய உத்தாரணமும், இரணியாக்ஷனுடைய வதமும், சுவாயம்பு மனுவுக்குச் சென்காளான ஆத்தநாரிரூபமான புருஷனுடைய உற்பத்தியும், தாம் பத்தினிகளுடைய சந்தானமும், கர்த்தமப் பிரஜாபதியினுடைய சந்தானமும், பகவானான கபிலமகாமுனியுடன் தேவஹூதியினுடைய சம்வாதமுஞ் சொல்லப்படுகின்றது.

நாலாவது ஸ்கந்தத்தில் மரீசிமுதலான நவப்பிரமாக்களுடைய சந்தானமும் தக்ஷயெக்கியவிநாசமும் துருவசரித்திரமும் பிருதுவின் பரிசீசுவினுடைய சரித்திரமுஞ் சொல்லப்படுகின்றது.

ஐந்தாவது ஸ்கந்தத்தில் நாரதருடைய சம்வாதமும் பிரியவிரதனுடைய சரித்திரமும் பிற்பாடு தீவுகள் சமுத்திரங்கள் வருஷங்கள் நதிகள் இதுகளுடைய வானமும் பின்பு நாபி பரதன் ரிஷபன் இவர்கள் சரித்திரமும் மலைகள் நதிகள் இதுகளுடைய வானமும் சோதிர்கணங்களான ஸ்தானமும் பாதாள நகரங்களினுடைய ஸ்தானமுஞ் சொல்லப்படுகின்றது.

ஆறாவதுஸ்கந்தத்தில் பிரசேதங்களில் நின்றும் தெக்ஷப் பிரசாபதியினுடைய ஜன்மமும் தேவர்கள் அசுரர்கள் நரர்கள் மிருகங்கள் நாகங்கள்

பக்ஷிகள் முதலானதுகள் யாதொருவராலுண்டாயினதோ அந்தத் தக்ஷ கன்னிகைகளினுடைய சந்ததியும் விருத்திராசுரனுடைய ஜனன மரணமுஞ் சொல்லப்படுகின்றது.

ஏழாவது ஸ்கந்தத்தில் இரணியாசுரனுடைய மரணமும் மகானுபாவரான பிரகலாதருடைய சரித்திரமுஞ் சொல்லப்படுகின்றது.

எட்டாவது ஸ்கந்தத்தில் மனுவந்தரங்களுடைய சரித்திரமும் கஜேந்திரமோக்ஷமும் மனுவந்தரங்கள் தோறும் ஸ்ரீஹரியினுடைய அயக்கிரீவ அவதார முதலான அவதாரங்களும் ஸ்ரீஹரியினுடைய மச்சிய கூர்மாதி அவதாரங்களும் தேவதைகளுக்குத் அமிர்த நிமித்தியமாக க்ஷீராப்தி மதனமும் தேவாசுர யுத்தமுஞ் சொல்லப்படுகின்றது.

ஒன்பதாவது ஸ்கந்தத்தில் ராஜவம்ஸ வர்ணனமும் இக்ஷ்வாகு வம்ஸத்தில் சத்தாவ்யினனுடைய ஜன்மமும் இளை உபாக்கியானமும், முத்ரோ உபாக்கியானமும், சூரியவம்ஸ சரித்திரமும், சகா, தன்சு, கன்னியன், சையாதி, ககுத்ஸதன், கட்டுவாங்கன், மாந்தாதா, சவுபரி, சகரன் இவர்களுடைய சரித்திரமும் ஸ்ரீராமருடைய சகல பாப நிவாரணமான சரித்திரமும், நமியினுடைய சரித்திரமும் ஜனகருடைய உற்பத்தியும் பரசுராமருடைய க்ஷத்திரிய சங்காரமும் சந்திர வம்ஸமான அசாமிளன், யயாதி, நகுஷன், துஷ்டியந்தன், பரதன், சந்தனு, பீஷ்மர் இவர்களுடைய சரித்திரமும் யயாதியினுடைய ஜேஷ்டபுத்திரனை எதுவினது வம்ஸவர்ணனமும் யாதொரு வம்ஸத்தில் வசுதேவருடைய கிரகத்தில் ஜகத்பதியான ஸ்ரீகிருஷ்ண பகவானவதரித்த அந்த எதுவம்ஸ சரித்திரமுஞ் சொல்லப்படுகின்றது

பத்தாவது ஸ்கந்தத்தில் ஸ்ரீகிருஷ்ணபகவான் கோகுலத்தில் விர்த்தியையடைந்ததும் அசுரத்துவேஷியான அந்தப்பகவானுடைய சமஸ்தலீலைகளும் பூதனையினுடைய பிராணனுடன்கூட ஸ்தன்னியபானமும், சகடாசுரமர்த்தனமும், திருணாவர்த்த சங்காரமும், பகாசுரன், வச்சாசுரன், அகாசுரன், இவர்களுடைய சங்காரமும், பிரம்மாவுக்கு மாயதரிசனமும், தேனுகாசுரன் பிரலம்பாசுரன் இவர்களுடைய சங்காரமும், காட்டுத்தீயினின்றும் கோபாலரை ரக்ஷித்ததும், காளியனிக்கிரகமும் மகாசாபத்தினின்றும் நந்தகோபனை விடுவித்ததும், கோபிகாகன்னிகைகளினுடைய விரதசரியையும், பிராமண ஸ்திரீகளுக்குப் பகவத்பிரசாதமும், பிராமணருடைய வசனமும், கோவர்த்தனகிரியைத்தரித்ததும், தேவேந்திரன் காமதேனு இவர்கள் ஸ்ரீகிருஷ்ணபகவானுக்குப் பட்டாபிஷேகம் பண்ணினதும், கோபஸ்திரீகளுடன்கூட ராத்திரியில் ராஜக்கிரீடையும், சங்கசூடன், அரிஷ்டன், கேசி இவர்களுடைய வதமும்; அக்குரூரர் கோகுலத்துக்கு வந்ததும், பிறபாடு ஸ்ரீராமகிருஷ்ணரை மதுராபட்டணத்தைக் குறித்துப் புறப்பட்டதும், கோபஸ்திரீகளுடைய பிரலாபமும், மதுராநகரதரிசனமும் ரசகன், முஷ்டிகன், சாணூரன், கம்சன்

முதலானபேர்களுடைய வதமும மிருதனாயிருநத ஆசாரிய புததிரனை மறுபடியும அழைபபிததுககொடுததும மதுராபட்டணததில வாசமபண்ணுகினற ஸ்ரீஹரியானவா உததவா பலராமா இவாகளுடன கூடிககொண்டு யாதவாகளுககுச சுகததைசசெய்தும சராசநதனுடன வரபபட்டசேனைகளை அநேகநதரம நாசஞசெயததும, காலயவனனுடைய வதமும், குசஸதலிபட்டண நிாமாணமும, பாரிஜாதபஹரணமும, தேவலோகததில நின்றும் தேவசபையை யழைபபிததது்ம், யுததததில் சததுருககளை ஜயிததுருககுமணியை யபகரிததது்ம, யுததததில ருததிரனை ஜயிததது்ம, நரகாசுரனைச சஙகரிததுக கனனிகைகளை யபகரிததது்ம, சிசுபாலன, பவுண்டிரீகன் சாளுவன, தநதவககிரன, சமபரன, திவிதன, பீடன, முறன, பஞசசேனன, இவாகள முதலானபோகளுடைய பிரபாவமும இவாகளுடைய வதமும காசிபட்டண தகனமும பாணடவாகளை வைததுக கொணடு பூபாரததை தீாததது்ஞ சொலலபபடுகினறது

பதினோராவது ஸகநதததில பிராமமணசாப வியாசததினால் யாதவகுலத்திணுடைய உபசஙகாரமும ஸ்ரீகிருஷணருககும உததவருககும சமவாதமும் அநதச சமவாதததில ஆததுமககியானஞ சொலலபபட்டிருககிறதும வாஞரம தாம நிசசயமும பிறபாடு பகவான யோகபபிரவாகததினால மனுஷிய சரீரததை அநதாததானஞ செய்ததுஞ சொலலபபடுகினறது.

பன்னிரண்டாவது ஸகநதததில யுககளுடைய லட்சணமும யுகானுரூபமான விருததிகளும் கலியுகததில மனுஷியாகளுககு உண்டாகினற தாமததினுடைய அதிககிரமும நான்குவிதப பிரளயமும பரமபாகவதனான பரிக்ஷதது மகாராஜனுடைய மோக்ஷமும வியாசமகாரிஷியினுடைய வேதவிபாகமும மாாககணடேய சரிததிரமும விராட்டு புருஷ ரூபமும ஜகதரக்ஷகனான சூரியனுடைய ரூபவிபாகமுஞ சொலலபபடுகினறது

வாருஙகள பிராமமணோததமாகளே! உஙகளால் யாதொரு அாததத்தைககுறிதது இவவிடததில் நான கேழககபபட்டேனோ அதெல்லாஞ சொலலபபட்டது பகவானுடைய லீலாவதார சரிததிரஙகளும சமஸ்தமுஞ சொல்லப பட்டதுகள். பதிதனாயிருநதாலும, கிணறு முதலானதில விழுநதாலும, படிகள்முதலானதில இடறி விழுநதாலும, துககிதனாயிருநதாலும் தும்மினாலும, பரவசனாயிருநதாலும, புருஷனானவன ஸ்ரீஹரி எனறு வாககவுச்சரியாநினறு கொண்டு சகல பாபஙகளில நின்று விடுபடுவன் புருஷனால் கிரகிககப்படாநினறும கேழ்ககபபடாநின்று மிருககிற பிரபாவததை யுடையவராயும பகவானாயுமிருககிற அனநதரானவர் அந்தப் புருஷனுடைய சித்தததில பிரவேசிதது சமஸ்த விசனஙகளையும நாசமபண்ணுவாா.

எபபடியானால் சூரியனானவன் அநதகாரததை நாசமபண்ணுதல போலும சகல விசனஙகளையும் போகக்டிபபா. யாதொரு வசனங்களில் பகவா

ளுன ஸ்ரீஹரியானவர் கீர்த்திக்கப்படவில்லையோ அந்த வசனங்கள் அபத்தமான வர்ணங்களையுடையதுகளாயும் அசத்துக்களாயும் அசத்தான கதைகளையுள்ளதுமாகவிருக்கும் யாதொரு வாக்கினால் ஸ்ரீஹரியினுடைய குணங்களானதுகள் வர்ணிக்கப்படுகிறதோ அந்த வாக்கே சத்தியமாகவும் மங்களமாகவும் புண்ணியமாகவும் இருக்கிறது. பகவானுடைய குணோதயத்தை யுள்ளதான அந்த வாக்கே புதிது புதிதாய் ருசிப்பிரதமாய் மதுரமுள்ளதாய் இருக்கிறது அதுவே அடிக்கடி மனதிற்கு மனோரசப்பிரதமாக இருக்கிறது உத்தமசுலோகரான பகவானுடைய குணானுவர்ணனம் யாதொன்றுண்டோ அதுவே மனுஷியர்களுக்குச் சோகமாகிற சமுத்திரத்தை யுலர்த்திப் போடுகிறதாக இருக்கிறது யாதொருவாக்கானது விசித்திரங்களான பதங்களை யுடைத்தாயிருந்தாலும் ஸ்ரீஹரியினுடைய ஜகத் பவித்திரமான கீர்த்தியை ஒருவிடத்திலாகிலும் வர்ணிக்கவில்லையோ அந்த வாக்கானது காக்கத்திற்குச் சமானமான மனுஷியர்களுக்கு ரமிக்கிற ஸ்தானமாகவிருக்கும் அமரங்களுக்குச் சமானமான யோனிகளால் சேவிக்கப்படமாட்டாது எந்த வாக்கில் அச்சுதரானவர் வர்ணிக்கப்படுகிறாரோ அந்த வாக்கிலேயே நிர்மலர்களான சாதுக்கள ரமிப்பதனாலும் சுலோகங்கள் தோறும் அபத்தங்களை யுடையதாயிருந்தாலும் யாதொரு பிரபந்தத்தில் அந்தப் பகவானுடைய எச்சோடே கூடிக்கொண்டிருக்கிற நாமங்கள் வர்ணிக்கப்படுகின்றதுகளோ அந்தப் பிரபந்தமே ஜன சமூகங்களினுடைய பாபத்தை நாசஞ்செய்யும்

யாதொரு காரணத்தினால் சாதுக்களானபேர்கள் அந்தப்பிரபந்தத்தில் அந்தருடைய நாமங்களை கேளாநின்றும் கானம்பண்ணாநின்றும் சொல்லாநின்றுமிருக்கிறார்களோ ஆகையினால் அந்தருடைய குணங்களை வர்ணிக்காநின்ற அந்தப்பிரபந்தமே உத்தமம் நிவர்த்தி மார்க்கத்தைப் பிரகாசிப்பியாநின்றும் அக்கியான நிவர்த்தகமாயுமிருக்கிற கியானமும் அச்சுதரிடத்தில் பக்தியில்லாமலிருந்ததேயானால் அந்தக் கியானமும் பரமாத்துமானுபவத்தையுண்டாக்குகிறதாகச் சோபிக்கமாட்டாது ஆகையினால் யாதொரு கர்மமானது சர்வோத்தமமா யிருந்தாலும் அனுஷ்டான காலத்திலேயும் பலானுபவகாலத்திலேயும் துக்கரூபமான அந்தக்காம்மானது ஈஸ்வரார்ப்பணமாகப் பண்ணப்படாமற்போனால் சோபியாது என்கிறதற்குக் கேட்கவேண்டியதென்ன? வர்ணாசிரம ஆசாரங்கள் தபசு வேதாத்தியயன முதலானதுகளில் மகத்தான சிரமமானது எச்சோடே கூடிக்கொண்டிருக்கிற சம்பத்துக்கே சாதனமாயிருக்கும் பகவானுடைய குணகீர்த்தனம் சிரவணம் ஆதரவு முதலானதுகளால் அந்த ஸ்ரீதரரின் பாதபத்மங்களுடைய அனுபவமானது உண்டாம் ஸ்ரீகிருஷ்ணபகவானது பாதாரவிந்தங்களுடைய அனுபவமானது பாவங்களை நாசம்பண்ணும் சுகத்தையும் பரமமான பக்தியையும் பரமாத்துமானுபவத்தையும் வைராக்கியத்தையும் உண்டாக்கும்.

[illegible] பிராமணோத்தமர்களே! யாதொரு காரணத்தினால் நீங்கள் சமஸ்த பிராணிகளுக்கும் சேவிக்கத் தக்கவராயும் தனக்குவேறே தெய்வமில

லாதவராயும் ஈசராயுமிருக்கிற ஸ்ரீமந்நாராயணரை அந்தக்கரணத்தில் பிரவேசித்து அடிக்கடி உபாசிக்கிறீர்களோ ஆகையால் மகா புண்ணியத்தைச் செய்தவர்களாகா நிற்கிறீர்கள் பூர்வத்தில் பரீக்ஷித்து மகாராஜனுடைய பிராயோபவேசத்தில் அவனுடைய சதஸில் சமஸ்த மகாரிஷிகளும் கேட்டுக்கொண்டிருக்கையில் என்னால் சுகப்பிரம்மரிஷியினுடைய முகத்தில் நின்றும் பரமார்த்தம் தத்துவமானது கேழ்க்கப்பட்டது ஆகையால் நானும் தன்னியனாகா நிற்கிறேன்

வாருங்கள் பிராம்மணோத்தமர்களே! கீர்த்திக்கத்தக்கதான மகாசரித்திரத்தையுடையவரான ஸ்ரீ வாசுதேவருடைய சமஸ்தபாபங்களையும் நாசம் பண்ணுகின்ற மகாத்மியமானது நம்மாலுங்களுக்குச் சொல்லப்பட்டது. யாதொரு புருஷனானவன் வாசுதேவரிடத்தில் அசஞ்சலமான புத்தியையுடையவனாய் ஒரு யாமமாகட்டும் க்ஷணகாலமாகட்டும் இந்தப்புராணத்தில் ஒரு சுலோகம் அரைச்சுலோகம் காற்சுலோகம் அரைக்கால் சுலோகத்தையாகிலும் கேழ்க்கப்படுகிறானோ யாதொரு புருஷனானவன் சிரத்தையுடையவனாய்க் கேழ்க்கிறானோ அந்தப்புருஷனானவன் தன்னாத்துமாவைப் பாவனமாகப் பண்ணுவன் ஏகாதசி துவாதசியிலாவது இந்தப் புராணத்தைக் கேழ்க்கிற புருஷனானவன் மகாபுண்ணியத்தைச் செய்தவனாவன் மகாபாவியான புருஷனானவன் உபவாசத்துடன் பரிசுத்தமாயிருந்துகொண்டு இந்தப் புராணத்தைப் பாராயணம் பண்ணுகிறவனுக்கும் கேழ்க்கிறவனுக்கும் இந்தப்புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிற சமஸ்ததேவர்களும் ரிஷிகளும் சித்தர்களும் பித்ருதேவர்களும் மனுக்களும் ராசாக்களும் சமஸ்த இஷ்டங்களையும் கொடுப்பார்கள் யாதொரு பிராம்மணனானவன் ருக்குவேதம் எசுர்வேதம் சாமவேதம் அதுகளை அத்தியயனம் பண்ணி மதுகுலியை இருதுகுலியை என்னப்பட்ட பலத்தையடைகிறானோ இந்தப் புராணத்தைப் பாராயணம் பண்ணுகிறவன் அந்தப் பலத்தையடைவன் பிராமணனானவன் பரிசுத்தனாயிருந்துகொண்டு இந்தப்புராணத்தை அத்தியயனம்பண்ணி பகவானுடைய யாதொரு பரமபதமுண்டோ அந்தப்பரமபதத்தை யடைவன் பிராம்மணனானவன் இந்தப்புராணத்தை அத்தியயனம்பண்ணி உத்தமஞானத்தை யடைவன் ராஜாவானவன் இந்தப் புராணத்தைப் பாராயணம் பண்ணி பூமியையடைவன், வைசியன் பாராயணம்பண்ணி தனசம்ருத்தியை யடைவன், சூத்திரன் சகலபாவத்தின் நின்றும் விடுபட்டு பரிசுத்தனாவன். சகல வேதார்த்தசாரமான இந்தப் புராணத்தை யாதொருவரிடத்தில் நின்றும் பக்தியுடன் கேழ்வி செய்தானோ முன்னே பாராசரர் முதலான ரிஷிகளைப் பூசித்து பிற்பாடு அந்தக்குருவை பரமாத்துமாவென்கிற புத்தியினால் பசுக்கள், வஸ்திரங்கள், பூமி, சுவர்ணங்கள், ஆபரணங்கள், இதுகளால் தன்னுடைய சக்தியினால் பூசிக்கக்கடவன். பாபசமூகங்களையும், நாசம்பண்ணுகின்றும் சகலலோக நாயகராயுமிருக்கிற, ஸ்ரீஹரியானவர் எந்த புராணங்களில் அடிக்கடி கீர்த்திக்கப்படவில்லையோ அது சாரமற்றதே விஸ்வரூபியாயும்

சகல ஜகத்துக்களுடைய பாவத்தைநாசம் பண்ணுகின்ற அந்தப் பகவானானவர் இந்தப் புராணத்தில் கீர்த்திக்கப்படுகிறார். ஜனம்குணிபராயும் அநந்த கல்யாணகுண பரிபூரணராயும் ஜகத்தினுடைய சிருஷ்டி ஸ்திதி சம்காரங்களுக்குக் காரணமான சக்திகளை யுடையவராயும் பிரம்மா, உருத்திரன், இந்திரன் முதலான தேவர்களாலும் கரையறியக்கூடாத ஸ்தோத்திரத்தை யுடையவராயுமிருக்கிற அந்த அச்சுதரை நான் பிரணாமம் பண்ணுகிறேன். சித்தை யடையாநின்ற பிரகிருதி புருஷன், மகத்தத்துவம், அகங்காரம், பஞ்சமகா பூதங்கள் இந்தரூபமான தம்முடைய சக்திகளால் தம்மிடத்திலேயே பண்ணப்பட்ட ஸ்தாவரசங்கரூபமான பிரபஞ்சத்தினுடைய சிருஷ்டி முதலானதை யுடையவராயும் ஸ்வரூபராயும் தேவோத்தமராயும் அநாதியாயுமிருக்கிற பகவானுக்குப் பிரணாமம் பண்ணுகிறேன். சுவாத்துமானுபவசுகத்தில் பரிபூரணமான மனதை யுடையவராயும் அந்த ஆனந்தத்தினாலேயே பிராகிருத விஷயசக்கியானத்தை தூரவருகிறதாயிருந்தாலும் பிரமரிஷியானவர் ஸ்ரீஹரியினுடைய மனோக்கியங்களான லீலைகளால் இழுக்கப்பட்ட ஆத்துமானுபவ சுகத்தில் தயிரியத்தை யுடையவராய் பரமார்த்த பிரகாசமாயும் சகலபாபத்தையும் நாசம்பண்ணுகின்றுமிருக்கிற ஸ்ரீபாகவத புராணத்தைக் கிருபையினாலே அருளிச்செய்தாரோ அந்த சுகப்பிரமரிஷியைப் பிரணாமம் பண்ணுகிறேன்.

# பதின்மூன்றாவது அத்தியாயம்.

கலி விருத்தம்,

பாரினுற்ற பதினெண்புராணத்திற
சாரசிரந்தசங் கதிகளீனைத்தையும்
ஓதுமிந்தப் புராணத்தையோதுவோர்
சேருநற்பதமுஞ் செப்பினாரரோ

பதினெண் புராணங்களுடைய கிரந்த சங்கியையும் இந்தப் புராணத்தைச் சிரவணஞ் செய்தற்குப் பலமுஞ் சொல்லப்படுகின்றது

## சூதர் வாக்கியம்.

வாருங்கள் சவுனகாதிமகாரிஷிகளே! பிரமமா, வருணன், இந்திரன், ருத்திரன், தேவர்கள் சமஸ்தமானபேரும் யாதொரு பரமாத்துமாவை திவ்வியங்களான ஸ்தோத்திரங்களால் ஸ்துதி செய்கிறார்களோ வேதாங்கம் உபநிடதம் இவைகளுடன் கூடியிருக்கிற நாலு வேதங்களாலும் கானஞ்செய்கிறார்களோ யோகீஸ்வரர்கள் தியானத்தில் நிச்சலமாய் பரமாத்துமநிஷ்டராயு

யிருக்கின்ற மனதினால் யாதொரு பரமாத்தும ஸ்வரூபத்தினுடைய அந்தத்தை அறியார்களோ அந்தப் பரமாத்துமாவுக்கு நமஸ்காரஞ் செய்கிறேன். சமுத்திரத்தைக் கடைகிறகாலத்தில் சுழலுகின்ற யாதொரு மந்தரபருவதத்தைத் தடாந்து விடாமல் சுட்டினபடியினால் சமுத்திரத்தினுடைய மலைக்குகைக்குச் சரியாக நிறைந்திருக்கிற ஜலத்தினால் இப்போதும் ஒழிவில்லாமல் சுழன்றுகொண்டு சலித்துக்கொண் டிருக்கையானது விட்டபட வில்லையோ பகவானுடைய முதுகில் சுழலுகின்ற மந்தரமாகிய அந்தப் பர்வதத்தினுடைய சிலைகளாலே உராய்ந்து சொரிகிறதினால் மிகவுஞ் சுகத்தைப்பற்றி நித்திரை செய்கின்ற கூர்மரூபியான அந்தப்பகவானுடைய சுவாச வாயுக்களானதுகள் நம்மை ரக்ஷிக்கக் கடவதுகள். வாருங்கள் சவுனகாதிரிஷிகளே! பதினெண் புராணங்களுடைய கிரந்த சங்கியையும் இந்தப் புராணத்தினது சிரவண பாராயணங்களுக்குப் பலத்தையுங் கிரமத்தையுஞ் சொல்லுகிறேன் கேழ்க்கக்கடவீர்கள் வாமபுராணம் பதினாயிரங் கிரந்தமாகும், பாத்தும புராணம் ஐம்பத்தொன்பதினாயிரங் கிரந்தமாகும், ஸ்ரீவிஷ்ணுபுராணம் இருபத்துமூவாயிரம் கிரந்தமாகும், சைவபுராணம் இருபத்தினாலாயிரங் கிரந்தம், ஸ்ரீமகா பாகவதம் பதினெண்ணாயிரங் கிரந்தமாகும், நாரதபுராணம் இருபத்தையாயிரங்கிரந்தமாகும், மார்க்கண்டேயபுராணம் பதினாயிரத்து நானூறுகிரந்தமாகும், பவுஷியபுராணம் பதினாலாயிரத் தைந்நூறு கிரந்தமாகும், பிரமகைவர்த்தம் பதினெண்ணாயிரங்கிரந்தமாகும், லிங்கபுராணம் பதினாயிரங்கிரந்தமாகும், வராகபுராணம் இருபத்து நாலாயிரங் கிரந்தமாகும், ஆக்கினேய புராணம் எண்பத்தோராயிரம் கிரந்தமாகும், ஸ்காந்தபுராணம் லக்ஷங்கிரந்தமாகும், வாமனபுராணம் பதினாயிரங் கிரந்தமாகும், கூர்மபுராணம் பதினேழாயிரங்கிரந்தம், மச்சியபுராணம் பதினாலாயிரங் கிரந்தமாகும், காருடபுராணம் பத்தொன்பதினாயிரங் கிரந்தமாகும், பிரமாண்டபுராணம் பன்னீராயிரங் கிரந்தமாகும் இந்தப்பிரகாரம் பதினெண்புராணங்களும் நான்குலக்ஷங் கிரந்தங்களென்று சொல்லப்படுகின்றது

இந்த நான்குலட்சங் கிரந்தங்களில் ஸ்ரீமகா பாகவதம் பதினெண்ணாயிரங் கிரந்தமென்று சொல்லப்படும் இந்தப் பாகவதமானது பூர்வத்தில் நாபிக்கமலத்தி லெழுந்தருளியிருக்கின்ற பிரமமாவுக்குப் பரமபுருஷரால் சமுசாரத்தில் பயந்திருக்கிற போகளிடத்தில் கிருபையா லருளிச்செய்யப்பட்டது இந்தப்புராணமானது ஆதியிலும் மத்தியிலும் அந்தத்திலும் பக்திவயிராக்கியங்களைப் பிரகாசிப்பிக்கின்ற பகவானுடைய லீலாவதார கதாமிர்தரசங்களை யுடையதாய் மிகுந்த சுகத்தைச் செய்கின்ற இந்தப்புராணமானது சர்வவேதாந்த சாரமாயிருக்கின்றது சீவாத்துமாவை பிரகாசிப் பிக்கின்றது. ஒன்றாகிய பரமாத்துமாவை பிரகாசிப்பிக்கின்றது அந்தப் பரமாத்துமாவில் நிஷ்டையை யுடையபேர்களுக்குப் பரமபதப் பிராப்தியைப் பிரகாசிப்பிக்கின்றது இந்த ஸ்ரீபாகவத புராணத்தை யாதொருவன் புரட்டாசி மாதத்தில் பவுர்ணமியில் சுவர்ணமயமான சிம்மப்பிரதமையோடேகூட தானஞ்செய் கிறானே அவன் பரமபதத்தை யடைவன் உத்தமமான ஸ்ரீபாகவதமானது

பெரியோர்களுடைய கோஷ்டியில் எந்தமட்டுக்கும் காணப்படாமலிருக்கின்றதோ அந்தமட்டுக்குமே மற்றபுராணங்கள் கிரகிக்கப்பட்டு விளங்கும் சகல வேதாந்தசாரமும் ஸ்ரீபாகவத புராணமென்று சொல்லப்படுகிறது. இந்த ஸ்ரீ பாகவதத்தினுடைய கதாமிர்தரசத்தினால் திருப்தனாயிருக்கின்றவனுக்கு மற்றொருபுராண சிரவணத்தில் ஆசையுண்டாகிறதில்லை நதிகளுக்குள்ளே கங்கையைப்போலும் தேவர்களுக்குள்ளே அச்சுதனைப்போலவும் விஷ்ணுபக்தர்களுக்குள்ளே ருத்திரனைப்போலவும் சகல புராணங்களிலும் இந்த ஸ்ரீபாகவதம் உத்தமமாயும் பாகவதர்களுக்குமிகவும் இஷ்டமாயுமிருக்கும்

இந்த பாகவதத்தில் நித்தியனும், முக்தனும் சுத்தனும் ஞானஸ்வரூபனுமிருக்கின்ற பரமாத்துமா நிரூபிக்கப்படுகிறார் இந்தப் பாகவதத்தில் ஞான வைராக்கிய பக்திகளோடேகூட நிவர்த்திமார்க்கமானது காணபிக்கப்படுகின்றது இந்தப் பாகவதத்தைக் கேள்விசெய்கிறவனும் பாராயணம்பண்ணுகிறவனும் அர்த்தவிசாரம் செய்கிறவனும் மிகுந்த பகவத்பக்தியை யுடையவனும் முக்தனும் பரம்பதத்தை யடையவன் பரமாத்துமக்ஞானப் பிரகாசமாய ஒப்பில்லாமலிருக்கிற இந்தப் பாகவதமானது யாதொரு பரமாத்துமாவால பிரம்மாவுக்கு அருளிச் செய்யப்பட்டதோ பிரம்மரூபியான யாதொரு பகவானால் வியாசருக்கு அருளிச் செய்யப்பட்டதோ வியாசரூபியான யாதொருபகவானால் சுகயோகீஸ்வரருக்கு அருளிச் செய்யப் பட்டதோ சுகப்பிரம்மரிஷி பரமாத்துமாவால பரிக்ஷித்து மகாராசனுக்குக் கிருபையாலருளிச்செய்யப்பட்டதோ சத்தியக்ஞானாநந்த ரூபியாயப் பாபமில்லாதவனும் சுகரூபியாயிருக்கின்ற அந்தப் பரமாத்துமாவை எப்போதும் தியானஞ்செய்கிறேன்

சர்வாந்தரியாமியாய சர்வசாக்ஷியா யிருக்கின்ற அந்தப் பகவானுக்கு நமஸ்காரஞ் செய்கிறேன் யாதொரு பகவானனவர் கிருபையால இந்தப் பாகவதத்தைப் பிரம்மாவுக்கு அருளிச் செய்தாரோ அந்தப் பகவானுக்குப் பிரணாமஞ் செய்கிறேன் யாதொரு சுகப்பிரம்ம ரிஷியானவர் சமுசாரமென்கிற சர்ப்பத்தினால கடிக்கப்பட்டு வியாகுலனாயிருக்கின்ற பரிக்ஷித்து மகாராஜனைத் துன்பத்தில நின்றும் விடுவித்தாரோ அந்தப் பரப்பிரம்ம ஸ்வரூபியான சுகயோகிக்கு நமஸ்காரஞ் செய்கிறேன்.

வாழி விருத்தம்.

அறியபல தலமுவாழி யகிலமுவாழி அதிலுள்ளவாலயமு மடியாரவாழி
உரியமுனிவர் பெற்குருமுறாவாழி ஒதுசந்தர்சூரியரோ டுடுக்கள்வாழி
கரியகுழன மாதுமையாள்பாகனவாழி கண்ணனவனண்ணனொடு தேவர்வாழி
பிரியமுடனிதைபடிக்குமபெரியோர்வாழி பண்புடனச்சுதனிவிட்டோர்வாழி

பன்னிரண்டாவது ஸ்கந்தம் முற்றிற்று.

# நூதன புத்தக விளம்பரம்.

## விநாயக பராக்கிரமம்.

இதனால் கல்வி கேள்விகளிற் சிறந்த கனவான்களுக்குத் தெரிவிப்பதாவது — இது வேதாகம புராணேதிகாசங்களை யாதாரமாகக் கொண்டு தெளிவான தமிழ்நடையில் சாயவேதோவோத கிருஷ்டமான (சிவபராக்கிரமம் முதலிய அரிய பெரிய நூல்களின் ஆசிரியரும் ஸ்காந்த முதலிய அநேக நூல்களின் உரையாசிரியருமான) சைவஸ்ரீ மதி பாநுகவியவர்களால் அழகாக வெழுதப்பட்டது இதுகாறும் வெளிவாராதது படிக்கப் படிக்க இனிமையைத் தருவது, பார்ப்பதற்கழகான 72 படங்களை யுடையது விநாயகப் பெருமான் உலகரக்ஷணார்த்த மியற்றிய பராக்கிரமங்களை யறிதற்குத் தக்க நூலிதுவேயாம் ஒவ்வொருவரும் வாங்கிவாசிக்க வேண்டுமென இதற்கமைத்துள்ள குறைந்த விலை ரூ **1 4 0** வி பி தபால்சார்ஜ் பிரத்தியேகம்

## திருவிளையாடற் புராணவசனம்.

இப்பூவுலகின்கண் கல்வி கேள்விகளிற் சிறந்த கனவான்களுக்கு அறிவிப்பது யாதெனில் —

சகலத்திற்கும் முதற்கடவுளாகிய சிவபிரான் பாமரர்கள் உய்யும்பொருட்டு பரமகாருணிகராய் திருவாலவாய் என்னும் மதுரையில் சோமசுந்தரக் கடவுளாய் விளங்கி ஆடின 64 திருவிளையாடலின் திவ்விய சரித்திரங்களை இதுகாறும் அநேகம் அச்சுக்கூடத் தலைவர்கள் ரப்புகடிதத்தில் திருத்தமின்றி அச்சிட்டிருக்கின்றார்கள். அப்பிரதிகளை பார்வையிடுவது மிகவும் கஷ்டமாயிருப்பதால் அநேகர் வேண்டுகோளின்படி கடவுளருள்பெற்ற பரஞ்சோதி மகாமுனிவர் திருவாய் மலர்ந்தருளிய மூலகிரந்தத்திற்கிணங்கச் சுத்தப்பிரதியாக நல்ல கிளேஸ் கடிதத்தில் ஆங்காங்கு விசித்திர திருவுருப்படங்களுடன் பார்வைக்கு வெகு அழகாயும், கைக்குள்ளடக்கமாயும் திருத்தமாயும் [illegible] பக்கங்களுள்ளதுமாய் அச்சிட்டிருக்கிறது கிளேஸ் கடிதம் கலிகோ பயிண்டு ரூபா **1 8 0**

## 63 நாயன்மாருடைய திவ்விய சரித்திரமாகிய
## திருத்தொண்டர் பெரியபுராண வசனம்.

சைவசமயிகளியாவரும் நற்பேறடையும் பொருட்டு, திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள், திருநாவுக்கரசு சுவாமிகள், சுந்தரமூர்த்தி சுவாமிகள், ஆகிய சமயாசாரியர் மூவரும், தனியடியார்கள் அறுபதின்மரும், தொகையடியார்கள் ஒன்பதின்மரும் ஆகிய திருத்தொண்டர்கள் எழுபத்திருவருடைய சரித்திரங்களை இதுகாறும் அநேக அச்சுக்கூடத்தலைவர்கள் அச்சிட்டிருக்கிறார்கள் அப்பிரதிகளை பார்வையிடுவது மிகவும் கஷ்டமாயிருப்பதால் சிலர் வேண்டுகோளின்படி கடவுளருள்பெற்ற ஸ்ரீசேக்கிழார் சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய மூலகிரந்தத்திற்கிணங்க நாயன்மார்கள் பலஸ்தலங்களில் திருவாய் மலர்ந்தருளிய தேவாரப் பதிகங்களை முதலுங் கடையுமாய்ச் சுத்தபாடமாக்கி, பெரியபுராண செய்யுட்டோத்திரங்களும், மற்றும் சைவர்களுக்குபயோகமான முக்கியமான சில விஷயங்களுடனும், ஆங்காங்கு அவரவர்கள் விசித்திர திருவுருப்படங்கள் 90-ருடனும், சுத்தப்பிரதியாக கிளேஸ்கடிதத்தில் பார்வைக்கு மிகவும் அழகாயும், கைக்குளடக்கமாயும், திருத்தமாயும் அச்சிட்டிருக்கின்றது

கிளேஸ்கடிதம் காலிகோ பயிண்டு விலை ரூபா **1 8 0**

இதில் குறித்த புத்தகமாவது, இதரமான புத்தகங்களாவது, அவிழ்தங்களாவது, ரப்பர்ஸ்டாம்பு முத்திரைகளாவது, வாசனை திரவியங்களாவது, ஜாமன்சில்வர் நகைகளாவது, இதர சாமான்களாவது கெடியாரங்களாவது அடியிற்குறிப்பிட்ட விலாசத்திற் கெழுதி பெற்றுக்கொள்ளலாம் கேட்லாக் வேண்டியவர்கள் ½-அணா ஸ்டாம்பு அனுப்பினால் கேட்லாக் அனுப்பப்படும்

**பூ. மு. இராஜு முதலியார் அண்டு சன்ஸ்.**

**ரூபி அச்சுக்கூடத்தலைவர், 14, கந்திரப்பிள்ளைவீதி, புரசை, சென்னை**